த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—729

# இந்தியக் குடியரசு தலைவர்

ஆசிரியர்
இரா. இரவிச்சந்திரன், எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், அரசியல்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—November, 1976

T. N. T. B. S. (C.P.) No. 729



# THE PRESIDENT OF INDIAN REPUBLIC

R. RAVICHANDRAN

Price Rs. 6-95

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

*Printed by :*

MANI PRINTERS,
26/1, Medavakkam Tank Road,
Madras-600010.

# பதிப்புரை

இந்தியக் குடியரசு தலைவர் என்ற இந் நூல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 729ஆவது வெளியீ டாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 764 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத் தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப்படுகிறது.

மேலாண்மை இயக்குநர்
*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்*

# பொருளடக்கம்

# 1. இந்தியாவிற்கேற்ற அரசாங்கம்பற்றிய விவாதம்

1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் நாள் இந்திய நாடு ஒரு சுதந்திர நாடாக மலர்ந்தது. இந்தியச் சுயாட்சிச் சட்டத் தின்படி (Indian Independence Act, 1947) நாட்டின் ஆட்சிப் பொறுப்பு இங்கிலாந்து நாட்டு மன்னரிடமிருந்தும் அந் நாட்டுப் பாராளுமன்றத்திலிருந்தும் நம் நாட்டு அரசியல் நிர்ணய சபைக்கு (Constituent Assembly) மாற்றப்பட்டது. நம் நாட்டிற்குப் பொருத்தமான வகையில் புதிய அரசியல் சாசனம் ஒன்றை உருவாக்கும் வரையில் 1935ஆம் ஆண்டு நம் நாட்டில் அமலாக் கப்பட்ட இந்திய அரசு சட்டம் (Govt. of India Act, 1935) சூழ் நிலேக்கு ஏற்றவாறு தேவையான திருத்தங்களுடன் அரசியல் சட்டமாகக் கருதப்பட்டது. எனவே, 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் நாள் முதல் 1950ஆம் ஆண்டு சனவரி மாதம் 25ஆம் நாள் வரையில் அரசியல் நிர்ணய சபை புதியதோர் அரசியல் சாசனத்தை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருந்தது. இந்தப் புதிய அரசியல் சட்டம் உள்நாட்டு விஷயங்களில் சுதந்திர முடைய கூட்டாட்சி அரசு தன்மையையும் (Federal in character) ஒரு குடியரசின் தன்மையையும் கொண்டிருந்தது. ஏனெனில், குடியரசின் ஆட்சித்தலைவர் பரம்பரை மன்னரைப்போல் அல்லா மல் மக்களின் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்படுகிறுர். இந்த ஆட்சித்தலைவர் நாட்டின் மிக உயர்ந்த ஆட்சிப்பதவியை வகிப் பவர் மாத்திரம் அல்லாமல் நாட்டின் ஒருமைப்பாட்டிற்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறுர். குடியரசு அரசிய லமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்பு இந்தியத் துணைக் கண்டத்தில் பல பெரியவையும் சிறியவையுமான இராஜ்ஜியங்கள் இருந்தன. அவற்றையெல்லாம் ஒன்றுக இணைத்துக் குடியரசின் அதிகார எல்லேக்குக்கீழ்க் கொண்டுவந்து எல்லாவற்றிற்கும்

பொதுவாகக் குடியரசு தலைவரை ஆட்சித் தலைவராக 1950ஆம் ஆண்டு சனவரி மாதம் 26ஆம் நாள் முதன் முதலாக ஏற்படுத்தியது இந்திய வரலாற்றில் சிறப்பு அம்சமாகும்.

சுதந்திரம் பெற்ற பின்னர் இந்தியாவிற்கென அரசியலமைப்பொன்றை வரைவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட பொழுது, இந்தியா எத்தகைய அரசாங்க முறையைப் பின்பற்ற வேண்டும் என்பதுபற்றிப் பல கருத்துகள் நிலவி வந்தன. அவற்றுள் இங்கிலாந்து நாட்டில் உள்ளதுபோல் பாராளுமன்ற அரசாங்க முறை பின்பற்றப்பட வேண்டுமா, அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ளது போல் தலைவர் முறை அரசாங்கம் பின்பற்றப்பட வேண்டுமா என்ற கருத்துகள் அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்களாலும் மற்றவர்களாலும் பரவலாக விவாதிக்கப்பட்டன. இவ்விரு அரசாங்க முறைகளிலும் நன்மைகளும் உண்டு; தீமைகளும் உண்டு. நன்மை தீமைகளை, சாதக பாதகங்களைத் தீவிரமாக ஆராய்ந்தபின்னர், இந்தியாவிற்குப் பாராளுமன்ற அரசாங்க முறையே பொருத்தமானதாக இருக்குமென்று அரசியல் நிர்ணய சபை முடிவு செய்தது. இதற்கான காரணங்கள் என்னவென்பதை அடுத்துப் பார்க்கலாம்.

பாராளுமன்ற ஆட்சிமுறையை ஏற்றுக்கொண்டதற்கான காரணங்களுள் முக்கியமானவை :

(1) பாராளுமன்ற ஆட்சிமுறையில் நமக்கு ஏற்கெனவே உள்ள அனுபவம்.

(2) இக்கட்டான சூழ்நிலைகளில், நிலைமைக்கேற்ற தகுதி வாய்ந்த தலைவர்களை இந்த ஆட்சிமுறை கொடுக்க வல்லது என்ற நம்பிக்கை.

(3) பாராளுமன்ற முறையையுடைய மக்களாட்சியில் பாராளுமன்றத்திற்கும், அதன் விருப்பத்தைச் செயல்படுத்தும் செயற்குழுவிற்கும் (Executive) நிலவக்கூடிய சுமுகமான உறவு.

(4) அமெரிக்க நாட்டின் ஆட்சி முறையில் குறைந்த பொறுப்பில் அதிக நிதானத்துடன் கூடிய உறுதியான, நிலையான அரசு செயல்பட வழிசெய்கிறது. ஆனால், பாராளுமன்ற ஆட்சி முறையில் பொறுப்பு அதிக அளவில் பரிணமிக்கிறது. இம் முறை அரசின் பொறுப்புணர்ச்சியைத் தினமும் அவ்வப்பொழுது கணிக்க வழிசெய்கிறது. தினந்தோறும் சட்டசபைகளில் கேள்விகள், தீர்மானங்கள், ஆட்சித்தலைவர், அமைச்சர்கள் பேச்சுகளின் பேரில் விவாதங்கள்மூலம் பாராளுமன்ற உறுப்பினர்கள் அரசின் நடவடிக்கைகளைக் கண்காணித்து அல்லது கணித்து வருகிறார்கள். ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் தேர்தலின்

பொழுதோ அல்லது இடைத்தேர்தல் காலங்களிலோ, அரசு மக்களுக்குச் செய்த நன்மை தீமைகளைக்கொண்டு வாக்காளர்கள் (Electorate) அரசின் நடவடிக்கைகளைக் கணிக்கிறார்கள். அரசின் நடவடிக்கைகள் மக்களை அதிருப்தி கொள்ளச் செய்தால், அத்தகைய அரசை மாற்றி, புதியதோர் அரசாங்கத்தை உருவாக்க மக்களுக்கு உரிமை உண்டு. இந்த உரிமையை மக்கள் தேர்தல் காலங்களில் நேரிடையாக உபயோகிக்கிறார்கள். மற்றக் காலங்களில் அரசு செவ்வனே செயல்பட்டதா செயல்படுகிறதா என்பதை, தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகள் பாராளுமன்றத்தில் கவனித்துக் கொள்வார்கள். தினந்தோறும் மாநில அரசாக இருந்தால் சட்டசபையிலும், மத்திய அரசாக இருந்தால் பாராளுமன்றத்திலும், அரசு பொறுப்புடன் செவ்வனே செயல்பட்டதா என்ற கணிப்பு அமெரிக்க நாட்டின் ஆட்சி முறையில் இல்லாமல் போனபோதிலும், நம் நாட்டைப் போன்ற பெரிய துணைக்கண்டத்திற்கு மிகமிக அவசியம் என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்வார்கள்.

(5) இந்தியாவிற்குப் பொருத்தமானமுறை, பாராளுமன்ற அரசாங்கமுறை என்பதற்கான முடிவிற்குப் பொதுவாகப் பலரும் எடுத்துக்காட்டும் மற்றுமொரு முக்கிய காரணம் இந்திய அரசியல் நிர்ணய சபையைத் தலைமை தாங்கி நடத்திச் சென்ற தலைவர்கள், அறிஞர்கள் இங்கிலாந்து நாட்டோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக இருந்ததோடு மட்டுமல்லாமல், அதனுடைய நிலையங்களிலும் நடவடிக்கைகளிலும் மிகுந்த ஆர்வமும், ஈடுபாடும் உடையவர்களாக இருந்தார்கள் என்பதாகும். எடுத்துக்காட்டாக, பாரதத்தின் முதல் பிரதம அமைச்சராக விளங்கிய பண்டித ஜவஹர்லால் நேரு, மிகச் சிறந்த சட்ட நிபுணர் என்று கருதப்பட்ட டாக்டர் அம்பேத்கார், திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் போன்ற மேதைகள் இங்கிலாந்து நாட்டுக் கல்லூரிகளில் பயின்று பட்டம் பெற்றவர்கள்; அந்நாட்டுப் பழக்க வழக்கங்களில் மூழ்கி எழுந்தவர்கள்; அதோடு மட்டுமல்லாமல், அந்த நாடு அரசியல் துறையில் பெற்றிருந்த முதிர்ச்சியையும் வலிமையையும் நன்கு உணர்ந்தவர்கள். ஆகவே, அரசியல் சட்டத்தை உருவாக்குவதற்கான பொறுப்பை இவர்கள் மேற்கொண்ட பொழுது இங்கிலாந்து நாட்டு அரசு முறையை இந்தியாவும் பின்பற்ற வேண்டும் என்று கருதியதில் தவறில்லை. பாராளுமன்ற அரசாங்கமா தலைவர்முறை அரசாங்கமா என்ற கருத்துகளைப் பற்றிய விவாதங்கள், அரசியல் நிர்ணய சபையின் நடவடிக்கைகள் பலவற்றிலும் மலிந்து காணப்படுகின்றன. இவற்றைப் பற்றிய கருத்துரைகள் திரு. S. N. பானர்ஜி

(S. N. Banarji), திரு. R. N. ஸ்பான் (R. N. Spann) போன்ற அறிஞர்கள் எழுதிய நூல்களில் காணப்படுகின்றன.

**பாராளுமன்ற அரசு முறைக்குத் தேவையான அம்சங்கள்**

சட்டசபையைக் (Legislative) கொண்ட அரசு என்றால் சட்டசபையால் நடத்தப்படும் அரசு என்பது பொருள் அன்று. சட்டசபையே அரசை நடத்த வேண்டும் என்பதும் நோக்கமன்று. சட்டசபையைக் கொண்ட மக்களாட்சி என்றால், அரசின் செயல்களைச் சட்டசபையில் உள்ள மக்களின் பிரதிநிதிகள் விழிப்புடன் கண்காணித்து மக்கள் எல்லாரின் நல்வாழ்வை உத்தேசித்து, விருப்பு வெறுப்பில்லாமல் சீர்தூக்கிப் பார்க்கும் ஓர் அரசுமுறை என்பது பொருள். மக்கள் ஆட்சி முறையின் அடிப்படை அம்சங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:

1. சட்டசபையைக் கொண்ட மக்கள் ஆட்சியின் நவீன அமைப்பில், ஆட்சித்தலைமையில் எல்லா அதிகாரங்களின் பிரதிநிதியாகவும், நாட்டின் ஒற்றுமைக்கு ஓர் உதாரணமாகவும் அவ்வப்பொழுது மாறிடும் அரசியல் கட்சியின் ஆட்சியினால், பாதிக்கப்படாத பிரதம ஆட்சித்தலைவர் ஒருவர் (Chief Executive Authority) இருத்தல் வேண்டும். இவ்வாட்சித் தலைவர் ஓர் அரசராகவோ அரசியாகவோ (இங்கிலாந்து நாட்டைப் போல்), ஓர் குடியரசு தலைவராகவோ (பிரான்சு நாட்டைப் போல்), ஓர் ஆளுநர் - தலைவராகவோ (Governor-General) (கானடா, நாட்டைப் போல்) இருக்கலாம்.

2. அமைச்சரவைதான் (Cabinet) உண்மையிலேயே நாட்டை ஆள்கிறது அல்லது அரசு நடத்துகின்றது. இந்த அமைச்சரவை ஒரு கட்சியைச் சேர்ந்த பிரதிநிதிகளைக் கொண்டதாகவோ பல அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளைக்கொண்ட கூட்டு அமைச்சரவையாகவோ இருக்கலாம். சட்டசபையில் அதிகப் பிரதிநிதிகளைக் கொண்ட அரசியல் கட்சியே அமைச்சரவை அமைக்க உரிமை பெற்றது. எந்த ஓர் அரசியல் கட்சியும் அதிகப் பிரதிநிதிகளைக் கொண்டு இல்லாமல் இருந்தால் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட அரசியல் கட்சிகள் கூட்டாகச் சேர்ந்து அமைச்சரவை அமைக்கலாம். பேஜாட் (Bazehot) என்ற ஆங்கிலேய அரசியல் நிபுணர், சட்டசபையையும் (Legislative) செயற்குழுவையும் (Executive) இணைக்கும் ஒரு கருவி அமைச்சரவை என்றுகருதுகிறார். அமைச்சரவை அரசின் (Cabinet Govt.) முக்கிய அம்சம் பிரதம அமைச்சரின் உன்னத நிலை ஆகும். அரசின் ஒருமைப்பாட்டிற்கு அவர் ஓர் எடுத்துக்காட்டு. அமைச்சரவை பிரதமரால் தேர்ந்தெடுக்கப்படுகிறது - வழிகாட்டப்படுகிறது.

அவருடைய மேற்பார்வைக்கும் வார்த்தைகளுக்கும் கட்டுப் பட்டுத்தான் அமைச்சரவையே செயல்படுகிறது. ஜான் மார்லே (John Morley) என்பவர் குறிப்பிட்டபடி, 'பிரதமர், அமைச் சரவை வளைவின் அடிக்கல்' (Prime Minister is the Key-Stone of Cabinet Arch) என்ற போதிலும், அதன் உறுப்பினர்கள் எல்லாருக்கும் சம உரிமை, சம அந்தஸ்து, சமநிலை என்று இருந்தாலும் சில அசாதாரண சமயங்களில் அவையின் முடிவுகள் ஒருவருக்கு ஒரு வாக்கு என்ற அடிப்படையில் அமைந்த போதிலும் பிரதமருக்கு அமைச்சரவையின் தலைவர் என்ற முறையில் ஒரு தனிச் செல்வாக்கு இருக்கத்தான் செய்கிறது.

அமைச்சரவையின் பதவிக்காலம், சட்டமன்றம் எவ்வளவு காலத்திற்கு நீடிக்கின்றதோ அதைப் பொறுத்துள்ளது. எங்கெங்கு மேல்சபை, கீழ்சபை என்று இரண்டு சபைகள் இருக் கின்றனவோ அங்கெல்லாம் கீழ்ச் சட்டசபையின் முழுமையான ஆதரவைப் பொறுத்தே உள்ளது. அதாவது சட்டசபையின் முழு நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும்வரையில் அமைச்சரவை பதவியில் நீடிக்கும். அந்த நம்பிக்கையை இழக்க நேரிடின், ஒன்று அமைச்சரவை பதவி விலகவேண்டும்; அல்லது பிரதம அமைச்சர், ஆட்சித்தலைமையில் உள்ள அரசரையோ, குடியரசு தலைவரையோ சட்டசபையைக் கலைக்கும்படி சிபாரிசு செய்ய வேண்டும். இந்தச் சூழ்நிலையில் நிலைமைக் கேற்றபடி அரசரோ, குடியரசு தலைவரோ தேவையானதைச் செய்யவேண்டும்.

இங்ஙனம், அமைச்சரவை அரசில் (Cabinet form of Govt.) சட்டசபையின் வேலைகளும், தீர்மானங்களை நிறைவேற்றும் அதிகாரிகளின் வேலைகளும் (Executive function) ஒருங்கிணைக்கப் பட்டு உள்ளன. எனவே, இவை இரண்டின் உறவு நெருக்கமாக வும் ஒன்றை ஒன்று சார்ந்ததாகவும் உள்ளதென்பது தெளிவா கிறது

அமைச்சரவை அரசாங்கத்தின் மிகச் சிறந்த அம்சம் சட்ட சபைக்கு அதாவது பாராளுமன்றத்திற்கு அமைச்சரவை கூட்டுப் பொறுப்புடையதாக இருப்பதேயாகும். இதனைக் கீழ்க்கண்டவாறு விளக்கலாம். அமைச்சரவையில் உறுப்பினர்கள் எல்லாரும் பிரச்சினைக்கு இடமில்லாமல் ஒரே குரலில் ஒருவரைப்போல் ஒருங் கிணைந்து செயல்படுவார்கள். அமைச்சர்கள், அரசியல் நீரில் மூழ்கினாலும் ஒன்றாகத்தான் மூழ்குவார்கள், மிதந்தாலும் ஒன்றா கத்தான் மிதப்பார்கள். அமைச்சரவைக் கூட்டங்களில் கருத்து வேற்றுமைகள் இருக்கத்தான் செய்யும். அப்படி இருந்தும் ஒரு

முடிவு என்று எடுத்துவிட்டால் அதற்கு மாறான கருத்தைச் சொல்வதற்கு எந்தத் தனி அமைச்சருக்கும் உரிமை கிடையாது. சட்டசபையிலோ, தொகுதியிலோ பொதுக்கூட்டங்களிலோ, ஒரே குரலில்தான் பேசவேண்டும். தீர்க்கமுடியாத கருத்துவேற்றுமை அமைச்சர்களுக்குள் இருக்குமானால், ஒன்று அமைச்சரவை இராஜிநாமா செய்யவேண்டும் அல்லது கருத்து வேற்றுமையுடைய அமைச்சர் பதவி விலகவேண்டும். அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பின் தன்மையை சாலிசுபெரி பிரபு (Lord Salisbury) என்பவர் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார்:

'அமைச்சரவையில் எடுக்கப்பட்ட முடிவுகள் ஒருமனதாக எடுக்கப்பட்ட முடிவுகள் என்று கொள்ளவேண்டும். அமைச்சரவையில் எடுக்கப்பட்ட முடிவுகளுள் ஒருவருக்கோ, பலருக்கோ கருத்துவேற்றுமை இருந்தது என்றோ அமைச்சரவை முடிவுகளுக்குத் தாங்கள் பொறுப்பில்லை என்றோ வெளியில் சொல்வதற்கு இடமே இல்லை. அப்படிக் கருத்துவேற்றுமை கொண்ட அமைச்சர்கள் பதவி விலகாத வரையில் அமைச்சரவையில் எடுக்கப்பட்ட முடிவுகள் எல்லாரையும் கட்டுப்படுத்தும். அமைச்சரவை தன் கூட்டுப் பொறுப்பைச் சட்டசபைக்கு இந்த முறையில்தான் நிலைநாட்ட முடியும்.'

பாராளுமன்ற அரசுக்கு அடிப்படையாகச் சில முன் தேவைகள் உள்ளன. இங்கிலாந்துப் பாராளுமன்றத்தின் கூட்டுக் குழு 1934ஆம் ஆண்டு இந்திய அரசியல் சீர்திருத்தங்களின்படி (The Joint Committee of Parliament on the Indian Constitutional Reforms, 1934) நான்கு முன்தேவைகளை வைத்தது. அவைகளாவன :

(1) அதிக ஆதரவுள்ள அரசியல் கட்சி அரசை அமைத்து நிருவாகம் செய்வது.

(2) குறைந்த ஆதரவுள்ள கட்சி, எடுக்கப்பட்ட முடிவுகளுக்கு ஏற்றாற்போல் நடந்து கொள்வதற்குச் சம்மதம் தெரிவிப்பது.

(3) பரந்த கொள்கைகள் ரீதியில் பிரிக்கப்பட்ட அரசியல் கட்சிகள் இருப்பது.

(4) சூழ்நிலையையும் கட்சிக் கொள்கைகளையும் நாட்டு நலத்தின் கண்ணோட்டத்தில் சீர்தூக்கிப் பொதுமக்கள் ஆதரவைப் பெற எந்த ஆளும் கட்சியும் புரட்சிகரமான அல்லது தீவிரமான கொள்கைகளை அமல் செய்வதில் எச்சரிக்கையுடன் நடந்து கொள்வதின்மூலம் சீரானமுறையில் அரசு நடத்தச் செய்வது.

**பாராளுமன்ற அரசு முறைக்கும் தலைவர் முறை அரசுக்கும் உள்ள வேறுபாடு**

இந்திய அரசியல் சாசனம் அமைத்த பாராளுமன்ற ஆட்சி முறைக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைவர்முறை அரசாட்சி முறைக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. அமெரிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்கள் மான்டெஸ்கு (Montesqueu) என்ற அரசியல் சிந்தனையாளரின் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கியுள்ளார்கள். அன்னாரின் கருத்துப்படி, 'அரசின் மூன்று முக்கியப் பிரிவுகளும்—செயற்குழு, சட்டத்துறை, நீதித்துறை (Executive, Legislative, Judiciary) - ஒன்றை ஒன்று சார்ந்து செயல்படாமல் தனித்தனியே இயங்கினால்தான் எந்த ஒரு பிரிவும் அதிகாரங்களைத் தவறான வழியில் பயன்படுத்தாமலும் கொடுங்கோல் ஆட்சித்தன்மை இல்லாமலும் தங்கள் கடமைகளைச் செவ்வனே செய்யமுடியும்' என்பதாகும். ஆகவே, சட்டமன்ற ஆட்சியில் உள்ளதுபோல் (செயற்குழுவிற்கும் சட்டத்துறைக்கும் நெருங்கிய தொடர்பும் ஆதரவும் இருப்பது) இல்லாமல் அமெரிக்கத் தலைவர்முறை அரசாட்சியில் இரண்டையும் பிரித்தே வைத்துள்ளனர். ஆகவே, தீர்மானங்களை நிறைவேற்றும் செயற் குழுவிற்கும் சட்டம் இயற்றும் துறைக்கும் உள்ள தொடர்பின் தன்மையில், நம் நாட்டிற்கும் அமெரிக்க நாட்டிற்கும் அடிப்படை வேறுபாடு இருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

முதலாவதாக, அமெரிக்க நாட்டின் பிரதான தலைவர், பாராளுமன்ற ஆட்சிமுறையின்கீழ் உள்ளபடி பெயரளவில் தலைவர் என்று இல்லாமல், உண்மையிலேயே அதிகாரங்களைச் செயலில் காட்டும் தலைவர். இதன்படியாக அமெரிக்கக் குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்களை, அவர் தம்முடைய விருப்பப்படி நடைமுறையில் உபயோகிக்கலாம். இரண்டாவ தாக, குடியரசு தலைவர் சட்டசபையின்கீழ் அதன் விருப்பப்படி செயல்படுபவர் அல்லர்; அரசியல் ரீதியாகவே தம் கொள்கைகளை அமல் செய்வதில் சட்டசபைக்கு அடங்கியவரும் அல்லர். பாராளுமன்ற அரசு முறையில், எந்த ஒரு செயலுக்கும் செயற் குழு, பாராளுமன்றத்திற்குப் பொறுப்பு வாய்ந்ததாகச் செயல்படு கிறது. ஆனால், அமெரிக்க ஆட்சி முறையில் குடியரசு தலைவர் தம் செய்கைகளுக்குப் பாராளுமன்றத்திற்குப் பொறுப்பானவர் அல்லர். அமெரிக்க அரசியலமைப்பு, குடியரசு தலைவர் ஒரு தேர்தல் கல்லூரியின் (Electoral college) மூலமாகத் தேர்ந் தெடுக்கப்படவேண்டும் என்று குறிப்பிட்டிருந்த போதிலும், குடியரசு தலைவர் தேர்தல், மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக் கும் தன்மையைக் கொண்டுள்ளது. இதைச் சற்று விரிவாகச்

சொல்ல வேண்டுமானால், அரசியலமைப்பின்படி, குடியரசு தலைவர் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதாவது, ஒவ்வோர் அங்கநாடும், தான் சட்டமன்றத்தில் (Congress) எத்தனை அங்கத்தினர்களைப் பெற்றிருக்கிறதோ, அதற்குச் சமமான எண்ணிக்கைப் பிரதிநிதிகளை, குடியரசு தலைவர் தேர்தல் கல்லூரிக்குத் தேர்ந்தெடுக்கும். அக் கல்லூரி உறுப்பினர்கள் பின்பு குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள். இது அரசியலமைப்புக் கூறும் முறை. ஆனால், குடியரசு தலைவர் இப்பொழுது மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகிறார் என்று சொல்லுமளவுக்கு வளர்ந்துவிட்டிருக்கிறது. இதற்குக் காரணம் தேர்தல் கல்லூரி கூடிக் குடியரசு தலைவரையும் துணைக் குடியரசு தலைவரையும் தேர்ந்தெடுக்கு முன்னமே யார் யார் அப் பதவிகளுக்கு வருவார்கள் என்பது திட்டவட்டமாகக் கூற முடிகிறது. இது எவ்வாறெனில், அரசியற் கட்சிகள் குடியரசு தலைவர் பதவித் தேர்தலுக்கு நாள் குறிப்பிடு முன்பாகவே தங்கள் வருடாந்தரக் கூட்டத்தில் இரு பதவிகளுக்குமான தங்கள் கட்சி வேட்பாளர்களைக் குறிப்பிட்டுவிடுகின்றன. தேர்தல் காலத்தில், வாக்காளர்கள், குடியரசு தலைவர், துணைக் குடியரசு தலைவர் பதவிகளுக்கெனப் போட்டியிடும் வேட்பாளர்களின் தகுதி, செல்வாக்கு ஆகியவற்றின் அடிப்படையில் தேர்தல் மன்றத்திற்கான பல்வேறு கட்சிகளின் பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுக்கின்றனர். எந்தக் கட்சி அதிக இடங்களைத் தேர்தல் கல்லூரியில் பெற்றிருக்கிறதோ, அந்தக் கட்சியின் வேட்பாளர்களே முறைப்படி குடியரசு தலைவராகவும் துணைக் குடியரசு தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் என்பது திண்ணம். தேர்தல் மன்றம், மக்கள் விருப்பத்திற்கெதிராக வேறெவரையும் தேர்ந்தெடுக்க முடியாது என்பதும் நமக்குப் புலனாகிறது.

குடியரசு தலைவராகப் பதவி வகிக்கும்பொழுது சட்டமன்றத்தில் (Congress) உறுப்பினராக இருக்க அவரால் முடியாது. ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள்தான் அவரால் குடியரசு தலைவராகப் பதவி வகிக்கமுடியும். அவருடைய பதவிக்காலம் முடியுமுன்னரே அவரைப் பதவியிலிருந்து விலக்கச் சட்டமன்றத்தால் முடியாது. மூன்றாவதாகக் குடியரசு தலைவர் தம் விருப்பப்படி யாரை வேண்டுமானாலும் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளலாம். அமைச்சரவையின் எந்தத் தனி நபரும் அரசியல் ரீதியாகக் குடியரசு தலைவருக்குத்தான் பொறுப்புள்ளவரே தவிர, சட்டசபைக்கோ, அமைச்சரவையில் இருக்கும் மற்ற எந்த அமைச்சருக்கோ பொறுப்புள்ளவர் அல்லர். குடியரசு தலைவரோ அமைச்சரவை உறுப்பினரோ சட்டசபை நடவடிக்

கைகளில் பங்கெடுத்துக்கொள்ளவோ, வாக்களிக்கவோ உரிமை யுடையவர்களல்லர். ஏனெனில், அவர்கள் சட்டசபை உறுப்பி னர்கள் அல்லர்.

இப்படியாகத் தலைவர்முறை ஆட்சிமுறையை அமைச்சரவை ஆட்சியுடன் ஒப்பிடும்பொழுது, அமைச்சரவை ஆட்சியில் சட்டத் துறை (Legislative) ஆட்சி அமைப்பின் உச்சியில் இருந்து அரசின் மற்ற இரண்டு பிரிவுகளையும் தன் அதிகாரம் பெற்ற 'ஏஜென்டுகள்' என்ற நிலையில் வைத்து இருப்பதும் அதற்கு நேர்மாறாகத் தலைவர்முறை அரசு ஆட்சியில் சட்டத்துறையும் செயற்குழுவும் சிரமமான இணைப்பில் ஆனால், தனித்தனியே, ஒன்றை ஒன்று அடக்கி ஆளும் அதிகாரம் இல்லாமல் இயங்குவதும் நமக்குத் தெரிகிறது. ஆகவே, அமெரிக்க முறையில், ஆட்சியின் பொறுப்புகள் பிரிக்கப்பட்டு எந்த ஓர் இடத்திலும் வைக்க முடியாதபடி இக்கட்டான நிலையில் உள்ளன.

இந்திய அரசியல் சாசனத்தில் உள்ள அநேகச் சரத்துகள் நமது ஆட்சிமுறை மத்திய அரசிலோ, மாநில அரசிலோ தலைவர் முறை அரசாங்கம் இல்லை என்பதைத் தெளிவாகக் காட்டி உள்ளன. அமைச்சரவை (Cabinet) என்ற சொல் இந்திய அரசியல் சாசனத்தில் உபயோகப்படுத்தப்படாவிட்டாலும் அமைச்சர் குழு (Council of Ministers) என்ற சொற்றொடர் அரசியல் சாசனத்தின் 74ஆவது விதிப்படி சேர்க்கப்பட்டுள்ளது. இதன்படி குடியரசு தலைவர் தம் கடமைகளைச் செவ்வனே செய்வதற்கு ஓர் அமைச்சர் குழு பிரதம அமைச்சரின் தலைமையில் ஆலோசனைகள் வழங்கவும் உதவிகள் செய்யவும் செயல்படும். அரசியல் சாசனத் தின் 75ஆவது விதிப்படி பாராளுமன்றத்தின் இரண்டு சட்டசபை களில் இருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர் குழு பிரதம அமைச்சரின் தலைமையில் ஒருமனதாகச் செயல்படவும் மக்கள் சபைக்கு அல்லது பாராளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடன் நடந்துகொள்ளவும் வழிசெய்கிறது. மக்கள் சபைக்குக் கூட்டுப் பொறுப்புடன் நடக்கவும் பிரதம அமைச்சர் தலைமையில் அமைச் சர்களின் குழு ஒருங்கிணைந்து செயல்படவும் பல விதிகளின் சாராம்சம் மேற்சொன்ன அரசியல் சாசனத்தின் 75ஆவது சரத்தில் அடங்கியுள்ளது. அந்த விதிகளின்படி (1) பிரதம அமைச் சரின் பரிந்துரையின்பேரில் மற்ற அமைச்சர்களைக் குடியரசு தலைவர் நியமிப்பார். (2) குடியரசு தலைவரின் விருப்பத்தைப் பொறுத்து அமைச்சர்கள் பதவியில் இருப்பார்கள். (3) அமைச்சர் குழு, மக்கள் சபைக்குக் கூட்டுப்பொறுப்புடன் நடந்து கொள்ளவேண் டும். (4) அமைச்சர் பதவி ஏற்கும்போது பதவிப் பிரமாணமும்

அரசு ரகசியப் பிரமாணமும் எடுத்துக் கொள்ளவேண்டும். (5) ஓர் அமைச்சர் பதவியேற்ற 6 மாத காலத்திற்குள் சட்டசபை உறுப் பினராக ஆகாவிட்டால் அமைச்சர் பதவியில் இருந்து விலகிவிட வேண்டும். இங்ஙனம், இங்கிலாந்து நாட்டின் பழக்கத்தில் உள்ள ஆனல், அரசியல் சாசனத்தில் சேர்க்கப்படாத பல அம்சங்களும், அமைச்சரவை செயல்படும் முறைகளும் இந்திய அரசியல் சாசனத் தில் சேர்க்கப்பட்டுச் சட்ட ஆட்சி (Rule of Law) அந்தஸ்துக்கு உயர்த்தப்பட்டு இருக்கின்றன. மேலும், இங்கிலாந்து நாட்டில் கடைப்பிடிக்கப்படும் ஆனல், இந்திய அரசியல் சாசனத்தில் சேர்க் கப்படாத பல்வேறு அரசியல் பழக்கங்களும் வழக்காறுகளும் நம் நாட்டு அரசியல் முறையிலும் கடைப்பிடிக்கப்படுகின்றன என்று நம்பப்படுகிறது. இதைத் தவிர, இந்திய அரசியலமைப்பைப்பற்றி நமது தலைமை நீதிமன்றம் (Supreme Court) கீழே குறிப்பிட்ட கருத்தைத் தெரிவித்துள்ளது.

'நமது அரசியல் சட்டம் உள்நாட்டு விஷயங்களில் சுதந்திரம் உடைய மாநிலங்களின் அமைப்பாக இருப்பினும் இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்ற அரசு முறையைத் (British Parliamentary System) தழுவி இருக்கிறது. இதன்படி செயற்குழு (Executive) அரசு கொள்கைகளை உருவாக்கி அவற்றைச் சட்டமாக்குவதில் அடிப்படைப் பொறுப்பு இருப்பினும் இவ்விதப் பொறுப்புகளுக்கு முன்னோடியாக உள்ளது, சட்டத்துறையின் நம்பிக்கைக்குச் செயற்குழு தொடர்ந்து பாத்திரமாக உள்ள நிலைதான்.'

ஏன் மறைமுகத் தேர்தல் ஏற்றுக்கொள்ளப்பட்டது?

ஜனநாயக அரசு உள்ள நாடுகளில் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுப்பதில் 3 முறைகள் கையாளப்படுகின்றன.

(அ) மக்களால் நேர்முகத் தேர்வு (Direct Popular Election)

(ஆ) தேசியப் பாராளுமன்றத்தினுல் தேர்வு (Election by National Parliament)

(இ) தேர்வுக் கல்லூரியினுல் மறைமுகத் தேர்வு (Indirect Election by Electoral College)

(அ) நேர்முகத் தேர்வு அயர்லாந்து நாட்டிலும் தென் அமெரிக்கக் குடியரசு நாடுகளிலும் பழக்கத்தில் உள்ளன. இன்னும் 1848-ல் லூயி நெப்போலியன் (Lowis Nepolean) என் பவர் இரண்டாவது பிரான்சு குடியரசு அமைப்பில் குடியரசு தலை வராக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டார். வெய்மர் குடியரசு காலத்தில் ஜெர்மனி நாட்டிலும் ஆட்சித் தலைவரை மக்களே நேராகத் தேர்ந்தெடுக்கும் முறை கடைப்பிடிக்கப்பட்டது. இன்று

நேர்முகத் தேர்வு அயர்லாந்து நாட்டிலும் (Eire) பல தென் அமெரிக்க நாடுகளிலும் பழக்கத்தில் இருந்து வருகிறது.

(ஆ) தேசியப் பாராளுமன்றத்தினுல் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை பர்மாவின் அரசியல் சாசனத்தில் கூறப் பட்டு இருக்கிறது. குடியரசு தலைவரைப் பாராளுமன்றத்தின் மூலம் தேர்ந்தெடுக்கும் முறை 3ஆவது 4ஆவது பிரான்சு நாட்டுக் குடியரசு அமைப்புகளிலும் கடைப்பிடிக்கப்பட்டது.

(இ) மூன்ருவது முறையான, தேர்வுக் கல்லூரியின் மூலம் குடியரசு தலைவரை மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கும் முறை ஐக்கிய அமெரிக்க நாட்டுச் சாசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன்படி அமெரிக்கக் குடியரசு தலைவர் ஒரு பிரத்தியேகத் தேர்வுக் குழுவினுல் (Electoral College) தேர்ந்தெடுக்கப்படுகிருர். எனினும், அரசியல் கட்சிகள் அங்குத் தோன்றிய பிறகு குடியரசு தலைவர் தேர்வு முறையில் மாறுதல்கள் ஏற்பட்டு மறைமுகத் தேர்வுமுறை கடைப்பிடிக்கப்படினும், அநேகமாக நேர்முகத் தேர்வின் தன்மையைக்கொண்டுள்ளது.

நமது நாட்டில் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை சட்டசபை உறுப்பினர்களின் வாக்கு முறைக்கும் ஒருவிதமான தேர்வுக் கல்லூரி முறைக்கும் பொதுவாக அமைந்துள்ளது.

அரசியல் சாசனத்தின் 54ஆவது சரத்துப்படி (1) தேர்ந்தெடுக் கப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர்களும், (2) தேர்ந்தெடுக்கப் பட்ட மாநிலச் சட்டசபை உறுப்பினர்களும், கூடிய தேர்வுக் கல்லூரியினுல் நமது குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

இப்படி இந்த முறையில் மக்கள் நேர்முகமாகக் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்காமல் மக்கள் தங்கள் பிரதிநிதிகள்மூலம் அமெரிக்கக் குடியரசு தலைவர் தேர்வு போல் மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் அமெரிக்காவில் உள்ளது போல் பிரத் தியேகமான தேர்வுக் கல்லூரியினுல் அன்று. மற்ருெரு குறிப்பிடத் தக்க வேறுபாடு என்னவெனில், அமெரிக்க ஜனுதிபதி நேர்முக வாக்களிப்பு முறையினுல் (Straight voting system) தேர்ந்தெடுக்கப் படுகிருர் என்ருல் இந்தியக் குடியரசு தலைவர் தேர்வு முறை அரசியல் சாசனத்தின் 55ஆவது சரத்து 3ஆவது பிரிவின்படி ஓர் ஒற்றைமாற்று வாக்கைக் (Single Transferable vote) கொண்ட விகிதப் பிரதிநிதித்துவ முறையைக் கொண்டிருக்கிறது.

இந்தியக் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை சுயமான ஒன்று. நாமே வகுத்துக் கொண்டதாகையால் வேறு எந்த நாட்டிலும் இம் முறை அமலில் இல்லை. நமது அரசியல் நிர்ணய சபையில் வெகுவாக விவாதிக்கப்பட்ட விஷயங்களுள் இதுவும் ஒன்று. அரசியல் நிர்ணய சபையின் அநேக உறுப்பினர்கள், பாராளுமன்றம் மற்றும் மாநிலச் சட்டசபைகளின் உறுப்பினர்கள் கொண்ட தேர்வுக் கல்லூரி (Electoral college) சரியானமுறையில் மக்களின் முடிவைத் தெளிவுபடுத்துவதாக இல்லை என்பதால், மக்களே நேர்முகமாகக் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுப்பதன்மூலம் குடியரசு தலைவர் ஜனநாயக அமைப்பில் உண்மையான மக்களின் பிரதிநிதி என்று அமையும் என்று வாதாடினபோதும் இந்தக் கருத்து ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அரசியல் நிர்ணயசபை (Constitutional Assembly) மறைமுகத் தேர்வு முறையை முடிவாக ஏற்றுக்கொண்டதற்குச் சில முக்கியக் காரணங்கள் உள்ளன :

(1) அமைச்சரவை முறை அரசைக் கொண்ட நாட்டில் (Cabinet System of Government) நாட்டின் பெயரளவு பிரதான அதிகாரி (Titular Chief Executive) தம் பணிகளைச் செவ்வனே முடிக்க நுட்பமும், அனுபவமும், தகுதியும் உடையவராக இருத்தல் அவசியம். ஏனெனில், குடியரசு தலைவரின் வேலைகளுள் ஒரு கணிசமான பகுதி பாராளுமன்றத்தாலும் மற்றும் சில நிறுவனங்களாலும் நியமிக்கப்பட்டுள்ளது. வாக்காளர்களுள் ஒரு சிலர்தாம் குடியரசுதலைவர் தேர்வில் நிற்கும் நபரின் தகுதியைச் சீர்தூக்கிப் பார்க்கும் ஆற்றல் உள்ளவர்களாய் இருக்கிறார்கள்.

(2) எல்லா வாக்காளர்களும் குடியரசு தலைவரை நேர்முகமாகத் தேர்ந்தெடுப்பது என்றால் குடியரசு தலைவர் தேர்தலில் நிற்கும் நபர் இந்தியத் துணைக்கண்டத்தின் ஒரு பகுதியிலிருந்து மற்ற எல்லாப் பகுதிகளுக்கும் சென்று தம் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடுவது என்பது சாத்தியக் கூறு இல்லை மேலும், நேர்முகத் தேர்தலில் அரசியல் கட்சிகளே தங்கள் கட்சி நபர்களைக் குடியரசு தலைவர் தேர்வில் நிறுத்துமானால் வீண் கட்சிப் பூசல்களும் குழுச் சண்டைகளும் உருவாக ஏதுவாகும். மேலும், கட்சிப் பிரதிநிதி என்ற நிலை தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசு தலைவருக்கு ஏற்படுமானால் தம் கட்சியின் கண்ணோட்டத்திலேயே எல்லா அரசு கொள்கைகளையும் சீர்தூக்கிப் பார்ப்பார். இதனால் கட்சிச் சார்பற்ற, மேலும் எல்லா அரசியல் பிரிவினரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஒரு குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் எண்ணம் நிறைவேறாமல் போகும். முடிவாகக் கோடிக்கணக்கான வாக்காளர்கள் பங்குகொண்டு குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும்

ஒரு தேர்வு இயந்திரத்தை (Electoral Machinary) அமைத்துச் சுமுகமான முறையில் வெற்றிகரமாகக் குடியரசு தலைவர் தேர்தலை நடத்துவது என்பது முடியாது.

(3) மேலும், மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட குடியரசு தலைவர் இந்திய அரசியல் சாசன அமைப்பில் வந்த வெறும் அரசு தலைவர் (Constitutional head) என்று தம்மைக் கருதிக் கொள்ளாமல், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தால் தமக்குத்தான் உண்மையான அதிகாரம் இருக்கிறது என்று கருதலாம். அப்படிக் கருதிச் செயல்பட்டால் அரசின் தீர்மானங் களை நிறைவேற்றும் உண்மையான அதிகாரங்களைக் கொண்ட அமைச்சரவைக்கும் குடியரசு தலைவருக்கும் வீண் தகராறு ஏற்பட்டுக் குழப்பங்கள் உருவாகி அரசின் நடவடிக்கைகள் செய லற்று விடும்.

உதாரணமாக, இத்தகைய நிகழ்ச்சியாக பிரான்சு நாட்டில் 1848ஆம் ஆண்டு லூயி நெப்போலியன் (Lowis Nepolean) குடியரசு தலைவராக மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது அவர் தம்மைத்தாமே பேரரசாக (Emperor) ஆக்கிக் கொண்டு குடியரசு அரசியல் அமைப்பை நிராகரித்துவிட்டார். இந்தவித அசம்பாவிதம் மறுபடி நேர்ந்துவிடாமல் இருக்க பிரான்சு நாட்டு மக்கள் தாங்கள் பின்பு வகுத்துக் கொண்ட அரசியல் அமைப்பில் குடியரசு தலைவர் மக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கும் முறையை மாற்றி அமைத்துக்கொண்டார்கள்.

கொடுக்கப்பட்ட அதிகாரங்களை (மாநிலங்களைப் பொறுத்த வரையில்) அமல்படுத்தவும் சம்பிரதாயமான கடமைகளைச் செய்யவும், நம் குடியரசு தலைவர் பாரபட்சம் இல்லாத முறையில் நடந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்திலும், இந்தியத் துணைக் கண்டத்தின் ஒருமைப்பாட்டுக்கு ஓர் உதாரணமாக அவர் விளங்க வேண்டும் என்ற அபிப்பிராயம் மலரவும் மேற்சொன்ன தேர்வுக் கல்லூரியின் மூலமான மறைமுகத் தேர்வு முறை ஒரு மனதாக அரசியல் நிர்ணயசபையில் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

குடியரசு தலைவர் பதவி அரசியல் கட்சிப் பூசலுக்கு அப்பாற் பட்டதாக இருக்க வேண்டுமானால் அதிக உறுப்பினர்களைக் கொண்ட அரசியல் கட்சி, சிறுபான்மைக் கட்சிகளை மனமுவந்து கலந்து ஆலோசித்த பிறகுதான் குடியரசு தலைவர் பதவிக்கு நிறுத்தும் நபரை நியமிக்க வேண்டும் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். இது விரும்பத்தக்கது. ஏனெனில்,

குடியரசு தலைவர் தேர்தலில் அரசியல் சட்டப்படி பாராளுமன்ற உறுப்பினர்களின் வாக்குகள் மற்ற எல்லா மாநிலங்களின் சட்ட சபை உறுப்பினர்களின் வாக்குகளுக்குச் சமமாக இருக்க வேண்டும் என்ற நிலை இருப்பினும் மத்திய அரசு நடத்தும் அரசியல் கட்சிக்கு மாறுபட்ட கட்சிகள் மாநில அரசுகளை நடத்தும் பொறுப்பில் இருந்தால் மத்திய அரசை நடத்தும் கட்சியின் பிரதிநிதியை மாநிலங்கள் தோற்கடித்துவிடலாம். இப்படிப்பட்ட நிலை மத்திய மாநில அரசுகள் ஒரே அரசியல் கட்சியினால் நடத்தப்படும் வரை ஏற்படாது. ஆனால், நீண்ட காலமாக மத்திய அரசு பொறுப்பில் இருக்கும் காங்கிரசுக் கட்சி ஆரோக்கியமான சம்பிர தாயத்தைக் குடியரசு தலைவர் தேர்தல் வகையில் உருவாக்கிக் கடைப்பிடிக்காவிட்டால் குடியரசு தலைவர் தேர்வு எதிர் காலத்தில் கடும் போட்டிக்கு உள்ளாக நேரிடும். பிராந்திய விசுவாசம், மொழிச் சார்பில் ஏற்படும் பற்று ஆகியவை இந்த விஷயத்தில் அமைதியான, மனக்கலக்கமில்லாத சிந்தனைக்கு இடம் தராது.

**மாநிலத்தின் சட்டசபை உறுப்பினர்கள் குடியரசு தலைவர் தேர்தலில் சேர்க்கப்பட்டதன் காரணம்**

குடியரசு தலைவரை நேர்முகமாகத் தேர்ந்தெடுப்பதில் உள்ள குறைகளை ஓரளவுக்கு நீக்குவதற்காகப் பாராளுமன்றத் தின் இராஜ்ஜிய சபை, மக்கள் சபைகளின் உறுப்பினர்கள் மாத்திரம் குடியரசு தலைவர் தேர்தலில் கலந்துகொண்டால் போதுமானது என்ற மற்றோர் ஆலோசனையையும் அரசியல் நிர்ணய சபை நிராகரித்ததற்குக் காரணம் இந்த முறையில் தேர்ந்தெடுத்தால் குடியரசு தலைவர் அதிகப்படி உறுப்பினர் களைக் கொண்ட அரசியல் கட்சியினால் தேர்ந்தெடுக்கப்படுவதால் சுதந்திரமாகவும் பதவிக்கேற்ற கௌரவத்துடனும் நடந்து கொள்ள முடியாது என்பதால்தான்.

மேலும், பாராளுமன்றத்தில் அதிகச் செல்வாக்கு உள்ள கட்சி தான் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் என்பதால் பாராளுமன்ற உறுப்பினர்கள் மாத்திரம் குடியரசு தலைவர் தேர்தலில் கலந்து கொண்டால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசு தலைவர் அதிகச் செல்வாக்கு உள்ள அரசியல் கட்சியினால்தான் தேர்தலில் வெற்றி பெறுவார் என்றநிலை ஏற்பட்டு, ஆளும் கட்சியின் பிரதிநிதியாகத் திகழ்வாரே தவிர நாட்டின் பெரும் ஆட்சித்தலைவர் என்ற செல்வாக்கு இல்லாமல் போகலாம். மேலும், ஆளும் கட்சியைச் சேர்ந்தவராதலால் குடியரசு தலைவருக்கும் ஆளும் கட்சிக்கும் கொள்கைரீதியில் கருத்து வேற்றுமையே இருக்கமுடியாது. மேலும்

அத்தகைய ஜனாதிபதி ஆளும் கட்சியின் கருத்தைத்தான் பிரதி பலிப்பார்.

இக் காரணங்களால் அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்கள் குடியரசு தலைவர் பதவி பரந்த அமைப்பில் (Broad-based) அமைய வேண்டும் என்பதற்காகப் பிரச்சினையில்லாத ஒரு நடு மார்க்கத்தைத் (Middle course) தேர்ந்தெடுத்தார்கள். குடியரசு தலைவர் தேர்வுக்கான தேர்தல் கல்லூரி (Electoral college) எல்லா மாநிலங்களின் சட்ட சபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு விரிவாக்கப்பட்டு மக்களின் பிரதிநிதிகளால் மறைமுகத் தேர்வின்மூலம் தேர்ந்தெடுக்கப்படுவதால் அவர் ஒரு குறிப்பிட்ட தொகுதியின் பிரதிநிதியாக இல்லாமல் நாட்டின் பிரதிநிதியாகத் திகழ்வார். இந்த முறையினால் குடியரசு தலைவர் அதிக உறுப்பினர்களைக் கொண்ட மத்திய ஆளும் கட்சியின் பிரதிநிதியாக இருக்கத் தேவையில்லை. மேலும், இந்த முறையில்தான் குடியரசு தலைவர் உண்மையில் ஒழுக்கநெறிச் சுதந்திரத்துடனும் (moral independence) கொடுக்கப்பட்ட அதிகாரத்துடனும் பதவியில் இடையூறுகள் ஏதுமின்றிச் செயல்பட முடியும்.

# 2. குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் விதமும் அப் பதவியைப்பற்றிய சில உண்மைகளும்

குடியரசு தலைவர் தேர்தல் முறை இந்த விதத்தில்தான் இருக்கவேண்டும் என்று அரசியல் சாசனத்தில் சொல்லப்பட்டு இருக்கிறது. அரசியல் சாசனம் குடியரசு தலைவர் தேர்தலுக்கு இரண்டு அடிப்படைக் கொள்கைகள் மூலம் வழி செய்கிறது. ஒன்று, நாட்டின் எல்லா மாநிலங்களுக்கும் கூடியவரை ஒரே சீரான பிரதிநிதித்துவம் கொடுப்பதன் மூலம் எல்லா மாநிலங்களும் ஒரே மாதிரியான தகுதியைப் பெற்றிருக்கின்றன என்பதைக் காட்டுவது. இரண்டு, எல்லா மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் இடையேயும் சமத்துவநிலையை உருவாக்கி ஒரு நெருக்கமான முக்கிய உணர்ச்சியை வளர்ப்பது. இந்தக் குறிக்கோளை அடையக் குடியரசு தலைவர் தேர்தல் முறை சிக்கலாக்கப்பட்டு இருக்கிறது.

மாநிலங்களுக்கிடையே ஒரே சீரான பிரதிநிதித்துவ அளவைப் பெறுவதற்கு மாநிலச் சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்த உறுப்பினர்கள் மாநிலத்தின் மொத்த மக்கள்தொகையைச் சட்டசபை உறுப்பினர்கள் எண்ணிக்கையால் வகுத்ததில் வரும் ஈவை 1000-த்தால் வகுத்தால் என்ன கிடைக்கிறதோ அத்தனை வாக்குகளை குடியரசு தலைவர் தேர்தலில் போடலாம். மிகுதி உள்ளது 500-க்கு அல்லது அதற்குமேல் இருந்தால் இன்னும் ஒரு வாக்குக் கிடைக்கும்.

சுலபமான முறையில் இதைக் குறிப்பிடவேண்டும் என்றால் தேர்வுக் கல்லூரி உறுப்பினராக உள்ள மாநிலச் சட்ட சபை உறுப்பினர் பின்கண்ட வகையில் அநேக வாக்குகள் பெறலாம்.

$$\left.\frac{\text{மாநிலத்தின் மொத்த மக்கள் தொகை}}{\text{தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை உறுப்பினர்கள்}}\right\}$$ இதை 1000த்தால் வகுப்பது.

500க்கு மேற்பட்ட தொகை கிடைத்தால் மற்றொரு வாக்குக் கிடைக்கும். வரைவு அரசியல் சாசனத்தின் 44ஆவது சரத்தும் அரசியல் சட்டம் 55ஆவது சரத்தும் ஒன்றே. (Draft Constitution and constitution of India) இதன்படி (1) பம்பாயில் மக்கள் தொகை 2084840 என்றும் பம்பாயில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை 208 என்றும் வைத்துக் கொள்வோம் (ஒரு லட்சம் மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதி என்ற முறையில்). ஒவ்வோர் உறுப்பினரும் எத்தனை வாக்குகளைக் குடியரசு தலைவர் தேர்தலில் செலுத்தலாம் என்பதைக் கணக்கிட மக்கள் தொகையைச் சட்ட மன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையால் வகுக்கவும். கிடைக்கும் ஈவு எண்ணிக்கையை 1000த்தால் வகுக்கவேண்டும். இந்த உதாரணத்தில் ஈவு எண்

$$100239 \quad \frac{100239}{1000} = 100.$$

ஒவ்வோர் உறுப்பினருக்கும் 100 வாக்குகள் கிடைக்கும். (மீதம் வரும் 239, 500க்குக் குறைவாக இருப்பதால் அதை விட்டு விட வேண்டும்)

(2) வேறு ஒரு மாநிலத்தின் மக்கள்தொகை 1,292,938 என்று வைத்துக்கொள்வோம். இந்த மாநிலத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை 130 (10000 மக்கள் தொகைக்கு ஓர் உறுப்பினர்) மேற்குறிப்பிட்ட வகையில் வகுத்

$$\frac{1,292,938}{130} = 9945$$

தால் 1000த்தால் ஈவு எண்ணை வகுத்தால் ஓர் உறுப்பினருக்கு 10 வாக்குகள் கிடைக்கும்.

மேலே குறிப்பிட்ட முறைப்படி மாநிலங்களின் உறுப்பினர்களுக்குக் கிடைத்த மொத்தவாக்குகள் 79940 என்று வைத்துக் கொண்டு பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட இரு சபைகளின் இரு உறுப்பினர்களின் எண்ணிக்கை 750 ஆகக் கொண்டால் ஒவ்வொரு பாராளுமன்ற உறுப்பினருக்கும் கிடைக்கும் வாக்குகளைக் கண்டறிய, மாநிலங்களுக்குக் கிடைத்த மொத்த வாக்குகளின் எண்ணிக்கையைப் பாராளுமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையால் வகுக்கவேண்டும்.

$\frac{74940}{750} = 99\frac{23}{25}$. ஆக 100 வாக்குகள் கிடைக்கும். குடியரசு

தலைவர் தேர்தலுக்குச் சென்ற மக்கள் தொகையின் கணக்கெடுப்பின் புள்ளி விவரங்களை எடுத்துக் கொள்வார்கள்.

விகித பிரதிநிதித்துவம் (Proportional Representation)

அரசியல் சாசனம் 55 (3) சரத்துப்படி விகித பிரதிநிதித்துவ ஒழுங்கு முறையில் ஒற்றை மாற்று வாக்கு மூலம் குடியரசு தலைவர் தேர்தல் அமையவேண்டும் ('The Election of the President should be on the basis of Proportional representation by means of single transferable vote') இப்படி அமையும் தேர்தல் முறையைத் தாமஸ் ஹேர் (Thomas Hare) என்பார், ('The Machinary of Representation)' என்ற குறிப்பிலும் 'The Election of Representatives (1859) என்ற தமது புத்தகத்திலும் புகழ்ந்துரைத்து மற்ற நாடுகளும் இம் முறையைத் தேர்தலில் கடைப்பிடிக்கவேண்டும் என்று பரிந்துரைத்து இருக்கிறார். ஜான் ஸ்டுவர்ட்மில் (John Stewart Mill) என்ற அரசியல் சிந்தனையாளரும் கூட, 'ஏற்கெனவே பழக்கத்தில் இருக்கும் முறைகளைவிடச் சில முக்கிய அம்சங்களில் இந்தத் தேர்தல் முறை மிக உயர்ந்தது. என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

விகித பிரதிநிதித்துவ முறையின் அடிப்படைத் தத்துவம் சிறுபான்மையினருக்கு நியாயப்படி கிடைக்க வேண்டிய நன்மைகளைக் கிடைக்கும்படி செய்வதற்கும், நாட்டின் அரசியல் வாழ்க்கையில் சிறுபான்மையினருக்குக் கிடைக்க வேண்டிய பங்கு கிடைப்பதற்கும் ஆகும். 'விகிதாச்சார பிரதிநிதித்துவத்தின் முக்கிய நோக்கம் வாக்காளர்களின் ஒவ்வோர் அபிப்பிராயப் பிரிவிற்கும் (Every Division of opinion among Electors) தேசீய, மாவட்ட, வட்டச் சபைகளில் அவர்களுக்கேற்ற பிரதிநிதித்துவம் கொடுப்பதுதான்' என்று கில்கரைஸ்ட் (R. N. Gil Christ):என்ற அரசியல் சிந்தனையாளர் கருதுகிறார்.

சாதாரண நேரடித் தேர்தல் போட்டியில் அதிகப்படியான வாக்குகளைப் பெற்ற வேட்பாளர் வெற்றி பெற்றதாகக் கருதப்படுகிறார். ஆனால், போட்டியிட்ட மற்ற வேட்பாளர்களுக்குக் கிடைத்த வாக்குகளைக் கூட்டினால் வெற்றி பெற்றவருக்குக் கிடைத்த வாக்குகளைக் காட்டிலும் மிக அதிகமாக இருக்கும். ஆகவே, வெற்றி பெற்றவர் அதிகப்படியான வாக்காளர்களின் ஆதரவைப் பெற்றுள்ளார் என்று கருதமுடியாது.

உதாரணமாக மேற்கு வங்காளத்தின் மிதுனபுரித் தொகுதிக்கு முன்பு நடந்த தேர்தலின்போது, P. C. ஜானு என்ற காங்கிரசு கட்சியைச் சேர்ந்தவர் வெற்றி பெற்றார். அவருக்குக் கிடைத்த

வாக்குகளை மொத்த வாக்காளர்களின் எண்ணிக்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் கீழ்க்கண்டவாறு குறைந்திருக்கும்.

| | |
|---|---|
| (P. C. Jana, Congress) திரு. ஜானு | 15,320 |
| (Bhupal Panda, Communist Party) திரு. பூபால் பாண்டா | 14,926 |
| (I. C. Mahapatra, Jansangh) திரு. மகாபாட்ரா | 5,204 |
| (K. L. Bera, K.M.P.P.) திரு. பேரா | 3,184 |
| மொத்த வாக்காளர் எண்ணிக்கை | 38,634 |

மொத்த வாக்காளர்களுள் 23,314 பேர் காங்கிரசு கட்சியின் வேட்பாளருக்கு எதிராக வாக்களித்திருந்தாலும் 15,320 பேர் ஆதரவுபெற்ற காங்கிரசு கட்சி வேட்பாளர் தேர்ந்தெடுக்கப் பட்டதாக அறிவிக்கப்பட்டார்.

விகித பிரதிநிதித்துவ முறையைக் கடைப்பிடிப்பதினால் இத் தகைய ஒரு தவறு ஏற்பட வழியில்லை. விகித பிரதிநிதித்துவ முறையைக் கடைபிடிப்பதனால் எல்லாக் கட்சிகளுக்கும், எல்லா அரசியல் எண்ணங்கள் அல்லது கொள்கைகளுக்கும், வாக்காளர் களுக்கிடையே அவரவருக்குள்ள பலத்தின் அல்லது ஆதரவின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சபையில் இடம் கிடைக் கும். விகித பிரதிநிதித்துவ முறையின் மிகச் சிறந்த அம்சம் ஒற்றைமாற்று வாக்குமுறையாகும்.

### ஒற்றை மாற்று வாக்கு முறை இயங்கும்முறை (Working of the single transferable vote)

விகித பிரதிநிதித்துவ முறையில் ஒரே ஒரு மாறும் வாக்கு இருக்கும். இதன்படி ஒவ்வொரு வாக்காளருக்கும் எத்தனை உறுப் பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருப்பினும் ஒரு வாக்குத் தான் கிடைக்கும் உதாரணமாக 6 இடங்களுக்குத் தேர்தல் நடத்த வேண்டியிருந்தால், வாக்காளர்கள் 6 வாக்குகளைப் பதிவு செய்யாமல் வாக்குப் பதிவு செய்யும் தாளில் (Ballot Paper) முதல் விருப்பத்தையும் (First preference) அடுத்தடுத்து அவர் விருப் பத்தையும்ஒன்றன்பின் ஒன்றாகவும் குறிப்பார். சாதாரண நேரடித் தேர்தலில் (Direct Election) அதிக பட்சம் வாக்குகளைப் பெற்ற வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஆனால், விகித பிரதி

நிதித்துவ முறையில் எந்த வேட்பாளர் தேவையான வாக்குகளின் பங்கைப் பெறுகிறுரோ அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவராக் கருதப் படுகிருர். வாக்குகளின் பங்கைக் கண்டுபிடிக்க எத்தனேயோ முறைகள் இருப்பினும் சர்வ சாதாரணமான முறை தொகுதியில் தேர்வு செய்யப்பட வேண்டிய மொத்த இடங்களால் செல்லத்தக்க வாக்குகளே வகுத்து ஒன்றைச் சேர்த்துக் கொள்வது. அதேபோல் சவிலும் ஒன்றைச் சேர்த்துக் கொள்வது. உதாரணமாகச் செல்லு

$$\left(\text{Quota}\ \frac{\text{total number of votes cast}}{\text{Total number of seats to be filled} + 1} + 1\right)$$

$$\text{பங்கு}\ \frac{\text{இடப் பட்ட மொத்த வாக்குகளின் எண்ணிக்கை}}{\text{நிரப்ப வேண்டிய இடங்களின் மொத்த எண்ணிக்கை} + 1} + 1$$

படியாகும் 100 வாக்குகள் இருந்து 4 இடங்களேப் பூர்த்தி செய்ய வேண்டும் என்ருல் 100ஐ, 4 + 1 ஆல் வகுத்தால் 20 கிடைக்கும். இத்துடன் 1ஐ சேர்த்துக் கொண்டால் பங்கு 21 என்று வரும். இந்தப் பங்கை நிர்ணயித்த பிறகு எந்த வேட்பாளருக்கு 21 வாக்குகள் கிடைக்கின்றனவோ அவர் தேர்ந்தெடுக்கப்பட்டவ ராகக் கருதப்படுகிருர். தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளரின் அதிகப்படி முதல் விருப்ப வாக்குகள் அவருக்கு உபயோகம் இல்லாததால், தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளரின் மொத்த வாக்குகளில் உள்ள இரண்டாவது விருப்பத் திற்கேற்ற விகிதாச் சாரத்தில் மற்ற வேட்பாளர்களுக்கு மாற்றப்படுகின்றன. இந்த முறையில் இரண்டாவது விருப்பம் தெரிவிக்கப்பட்ட வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால் அவருக்குக் கிடைத்த இரண்டாவது விருப்பத்தைத் தள்ளிவிட்டு அவருக்குக் கிடைத்த வாக்குத்தாளில் உள்ள மூன்ருவது விருப்பத்தைச் சேர்த்துக் கொள்வார்கள். இதில் உள்ள முக்கிய அம்சம் வாக்குகள் வீணுகாமல் உபயோகப்படும்படி ஆக்கப்படுகின்றன. நேரடித் தேர்தல் முறையில் வெற்றி பெற்ற வேட்பாளருக்குக் கிடைக்காத வாக்குகள் வீணுகின்றன.

### அடிமட்டத்தில் உள்ள வேட்பாளர் தள்ளப்படுதல்

எல்லா இடங்களுக்கும் இரண்டாவது எண்ணிக்கையிலேயே தேர்வு முடிந்துவிட்டால் தேர்தல் முடிவடைந்ததாகக் கருதப் படும். தேர்ந்தெடுக்கப்படவேண்டிய எல்லா வேட்பாளர்களுக்கும் கிடைக்கவேண்டிய வாக்குகளின் பங்கு (தேர்ந்தெடுக்கப்பட்ட வேட்பாளர்களின் அதிகப்படியான முதல் விருப்ப வாக்குகளே விகிதாச்சாரப்படி பகிர்ந்து கொடுத்த போதிலும்) நிர்ணயித்த அளவிற்குக் (Quota) குறைந்திருந்தால், குறைந்தபட்ச முதல் விருப்ப வாக்குகளேப் பெற்ற வேட்பாளர் தள்ளப்பட்டு

அவருடைய வாக்குகள் தேர்ந்தெடுக்கப்படாத வேட்பாளருக்கு விருப்பப் பதிவுக்கேற்ப மாற்றப்படுகின்றன. இந்த முறையில் எஞ்சியுள்ள இடங்கள் பூர்த்தி அடையாவிட்டால் கீழ்மட்டத்தில் உள்ள வேட்பாளரின் பெயர் மறுபடி தள்ளப்படுகிறது. இவருக்குக் கிடைத்த வாக்குகள் மேலே குறிப்பிட்ட முறையில் எஞ்சியுள்ள வேட்பாளர்களுக்கு மாற்றப்படுகின்றன. ஆக, எல்லாத் தேர்வுக்கான இடங்களும் நிறைவு செய்யப்படும் வரை இந்த முறை கையாளப்படுகின்றது.

எத்தனை இடங்களை நிறைவு செய்ய வேண்டி இருப்பினும் இந்த முறைப்படி ஒரு வாக்காளருக்கு ஒரு வாக்கு என்ற நியதி இருந்தாலும் அந்த ஒரு வாக்கு மற்ற வேட்பாளருக்கு மாற்றப் படுவது இதன் விசேஷ அம்சம் ஆகும். மேற்கூறிய காரணத்திற்காகத்தான் இது 'ஒற்றை மாற்று வாக்கு முறை' (Single transferable vote system) என்று அழைக்கப்படுகின்றது.

விகித பிரதிநிதித்துவத்தேர்தல் முறை எந்தெந்தத் தொகுதிகளுள் ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமோ அங்கெல்லாம் செயற்படுத்தலாம். மேலே குறிப்பிட்ட முறைப்படி உபரிவாக்குகள் எஞ்சியுள்ள வேட்பாளருக்கு வினியோகம் செய்யப்பட்டுத் தேவையான எண்ணிக்கையைப் பெறும்வரை கையாளப்படுகிறது. இந்திய அரசியல் சட்டத்தின் கீழ்ப் பாராளுமன்ற இராஜ்ஜியசபை (Rajya Sabha), மாநிலங்களின் மேல் சபை (Upper House) உறுப்பினர்களும் இந்த முறைப்படி தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள் [Art. 80 (4)].

### இந்தியக் குடியரசு தலைவர் தேர்தலில் விகித பிரதிநிதித்துவம் இயங்கும் விதம்

இந்தியக் குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தலில் ஒருவரைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளதால் இந்திய அரசு இதற்கான தேர்தல் முறையை வகுத்துள்ளது. இந்திய அரசு வகுத்துள்ள முறை ஒரே ஓர் உறுப்பினர் தொகுதி ஒன்று விட்ட ஒன்று வாக்கு முறை (Alternative vote in a Single member Constituency) என்று கூறப்படுகின்றது. கீழே குறிப்பிட்ட உதாரணம் இந்த முறையை விவரிக்கும்.

செல்லுபடியாகும் மொத்த வாக்குகள் 20,000 என்று கருதி அ, ஆ, இ, ஈ, என்ற நான்கு வேட்பாளர்கள் போட்டியிடுவதாக வைத்துக் கொள்வோம். இந்த நான்கு பேரும் பின்கண்ட வாக்குகளைப் பெற்றார்கள்.

அ : 7000 வாக்குகள்
ஆ : 6000 ,,
இ : 4000 ,,
ஈ : 3000 ,,

சாதாரணத் தேர்வு முறையில் அதிக வாக்குகளை வாங்கிய 'அ' வெற்றி பெற்றதாகக் கருதப்படுவார். ஒன்று விட்ட ஒன்று வாக்கு முறையின் கீழ் அதிகப்படி முதல் விருப்ப வாக்குகளை (alternative vote system) ஒரு வேட்பாளர் பெற்றிருந்தாலும் இரண்டாவதாக அதிகப்படி வாக்குகளைப் பெற்றவர் தேர்ந் தெடுக்கப்படலாம். மேற்குறிப்பிட்ட உதாரணத்தின் வாக்கு களின் பங்கு (Quota) :

$$\frac{20.000}{1+1}+1=10,001.$$

விகித பிரதிநிதித்துவ முறையின்கீழ் 10,001க்குக் குறை வான வாக்குகளை வாங்கியவர் தேர்ந்தெடுக்கப்படமாட்டார். எந்த ஒரு வேட்பாளர் 10,001க்குக் குறையாமல் முதல் விருப்ப வாக்குகளைப் பெறுகிறாரோ அவர் உடனடியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டு விடுவார். இரண்டாவது விருப்ப வாக்குகள் மூன்றாவது விருப்ப வாக்குகள் கணக்கெடுக்கத் தேவையில்லை. ஆனால், மேலே காட்டியபடி எந்த வேட்பாளரும் முதல் விருப்ப ஓட்டு களின் பங்கைப் பெறாவிட்டால் இரண்டாவதும் அதற்குக் கீழும் உள்ள விருப்பங்களைக் கொண்ட வாக்குகளைக் கணக்கெடுத்துக் குறித்த வாக்குகள் பங்கைப் பெற்றவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். 1952-ல் அமலாக்கப்பட்ட குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தல் விதிகள், முதல் விருப்பங்கள் அல்லாதவற்றைக் கணக் கெடுக்கும் முறையினை விவரித்து உள்ளன.

முதல் கணக்கெடுப்பிலோ அதற்குப் பிறகு வரும் கணக்கெடுப் பிலோ எந்த ஒரு வேட்பாளரும் அவருக்குக் கிடைத்த வாக்கு களின் மொத்த எண்ணிக்கை, பங்கு (Quota)க்குச் சமமாகவோ, அதிகமாகவோ இருக்கின்றனவோ அவர் அல்லது கணக்கெடுப்பில் தொடர்ந்து வந்துகொண்டிருக்கும் வேட்பாளர் வெற்றி பெற்ற வராகக் கொள்ளப்படுவார். கணக்கெடுப்பு முடிவில் எந்த வேட்பாளரும் வெற்றி பெற்றவராகக் கருத இயலாவிட்டால்

(1) எந்த வேட்பாளர் அதுவரையில் மிகவும் குறைந்த வாக்குகளைப் பெற்றாரோ அவர் பெயரை நீக்கி விடவேண்டும்.

(2) அவருடைய வாக்குத்தாள்களைக் கொண்ட கட்டிலும் உப கட்டிலும் உள்ள வாக்குத்தாள்களைச் (Ballot Papers)

சோதித்துக் காலியாகாத வாக்குத்தாள்களை உப கட்டுகளில் அடுத்துவரும் விருப்பத்திற்கேற்ப ஒழுங்காக வைத்து, ஒவ்வோர் உப கட்டிலும்உள்ள வாக்குகளைக் கணக்கெடுத்து அந்த வேட்பாள ருக்கு வாக்குகளைச் சேர்த்து முடிவாகக் கணக்கில் சேர்த்த வாக்குத் தாள்களை ஒரு தனிக் கட்டாகக் (Bundle) கட்டவேண்டும்.

(3) அப்படி மாற்றப்பட்ட பிறகு எந்த வேட்பாளராவது கிடைக்க வேண்டிய வாக்குப் பங்கைப் பெற்றுரா என்று மேலே நம்பர் ஒன்று (1) பிரிவில் குறிப்பிட்டபடி இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வேட்பாளர்கள் ஒதுக்கப்பட வேண்டியிருந்து ஒரே சீரான வாக்குகளைப் பெற்றிருந்தால் குறைந்த பட்ச முதல் விருப்ப வாக்குகளை வாங்கியவரை எடுத்து விடவேண்டும். ஆனுல், ஒரே அளவு முதல் விருப்ப வாக்குகளை இருவர் பெற்றிருந் தால் சீட்டுப் போட்டுக் குலுக்கி ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். உப கட்டில் (Bundle) உள்ள எல்லா முடிவடைந்த வாக்குகளையும் தனியாக ஒதுக்கிவைக்கவேண்டும். இந்த வாக்குகள் மறுபடி சேர்க்கப்படமாட்டா.

ஆக, இந்த முறைப்படி வாக்குகளின் பங்கு (Quota of votes) எந்த ஒரு வேட்பாளர்க்கும் கிடைக்காவிட்டால் வாக்குகளை மாற்றிக் கொடுக்கும் முறையில் குறைந்த முதல் விருப்ப வாக்கு களைப் பெற்றவர் தேர்தல் களத்திலிருந்து அகற்றப்படுகிருர். அதிகப்படி முதல் விருப்ப வாக்குகளைப் பெருதநிலை ஏற்பட்டால், இரண்டாவது விருப்ப, மூன்ருவது விருப்ப வாக்குகளைக் கணக் கெடுத்துக் குறைந்த பட்ச வாக்குகளைப் பெற்றவர் அகற்றப்பட்டு முடிவில் வாக்குப் பங்கு அல்லது நிர்ணயித்த வாக்குகளைப் பெற்ற வர் யாரோ அவர் தேர்ந்தெடுக்கப்படுவார். குறைந்த வாக்கு களைப் பெற்ற வேட்பாளர்கள் ஒவ்வொருவராக அகற்றப்பட்ட பிறகும் வாக்குகள் பங்கு எந்த வேட்பாளர்க்கும் கிடைக்கா விட்டால், மேற்கூறிய முறையில் அகற்றப்பட்ட பிறகு எஞ்சி நிற்கும் வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்டவராகக் கருதப்படு வார். (குடியரசு தலைவராகவோ துணைத் தலைவராகவோ).

மேலே குறிப்பிட்ட வகையில் 'ஈ' தான் முதலில் அகற்றப் படுவார். அவருக்குக் கிடைத்த 3000 முதல் விருப்ப வாக்குத் தாள்கள், அவற்றில் இரண்டாவது விருப்பம் குறிப்பிட்டபடி மற்ற அ, ஆ, இ என்ற மூன்று வேட்பாளர்களுக்கும் பிரித்துக் கொடுக்கப்படும்.

அ வின் சார்பில் கிடைத்த இரண்டாவது விருப்ப வாக்குகள்— 500

ஆ வின் சார்பில் கிடைத்த இரண்டாவது விருப்ப வாக்குகள்— 1000

இ யின் சார்பில் கிடைத்த இரண்டாவது விருப்ப வாக்குகள்— 1500

இவை முதல் விருப்ப வாக்குகளுடன் ஒவ்வொருவருக்கும் சேர்க்கப்படும். இப்பொழுது

| | | | | |
|---|---|---|---|---|
| அ வின் | மொத்த வாக்குகள் | 7000 + 500 | = | 7500 |
| ஆ வின் | ,, ,, | 6000 + 1000 | = | 7000 |
| இ யின் | ,, ,, | 4000 + 1500 | = | 5500 |

ஆக, இரண்டாவது எண்ணிக்கையில் 'இ'க்குக் குறைந்த பட்ச ஓட்டுகள் அல்லது வாக்குகள் கிடைத்ததால் அவர் பெயர் நீக்கப் பட்டு அவருடைய 5500 வாக்குகளில் உள்ள மூன்றுவது விருப்பத் திற்கேற்றுற்போல் அந்த வாக்குகள் 'அ' வுக்கும் 'ஆ' வுக்கும் பகிர்ந்து கொடுக்கப்படும்.

அ வுக்குக் கிடைத்த மூன்றுவது விருப்ப வாக்குகள்— 2200

ஆ வுக்குக் கிடைத்த மூன்றுவது விருப்ப வாக்குகள்— 3300

ஆக ஆவின் மொத்த வாக்குகள் 7500 + 2200 = 9700

அ வின் மொத்த வாக்குகள் 7000 + 3300 = 10300

ஆகவே, 'ஆ' தேர்ந்தெடுக்கப்பட்டவராக அறிவிக்கப்படு வார். 'ஆ' வுக்குக் கிடைக்க வேண்டிய வாக்குகள் பங்குக்கு மேல் கிடைத்திருக்கின்றன. இந்த உதாரணத்தில் 'அ' வை விட 'ஆ' குறைந்த முதல் விருப்ப வாக்குகளைப் பெற்ற போதிலும் 'ஆ' வே வெற்றி பெற்றவர் ஆவார். வாக்குகளின் பங்கு ஒருவருக்குக் கிடைத்துவிட்டால் போதுமானது. நான்காவது விருப்ப வாக்கு களைக் கணக்கெடுக்கத் தேவையில்லை. இப்படி வெளிப்படையாக அசாதாரணத் தேர்தல் முடிவு நியாயம்தான் என்று கொள் வதற்கு முக்கிய காரணம் விகித பிரதிநிதித்துவம் மூலம் 'அ' வை விட அதிகப்படியான வாக்குகளை 'ஆ' பெற்று, அதிகப்படியான வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவராகக் கருதப்படுவது தான். மக்கள் பிரதிநிதித்துவ (தேர்தல் முறை, தேர்தல் விண் ணப்பங்கள்)-விதிகள், 1951-ன், 3ஆவது அட்டவணை [Sch. III of the Representation of the Peoples (Conduct of Election & Election Petitions) Rules, 1951] குறித்தபடி, சட்டமன்ற மேல்

சபைத் தேர்வுக்கான ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்பினர் தொகுதித் தேர்தலில் (For the multi-member Constituencies is the case of the council Elections) வாக்குகளை எண்ணும் முறையையும், குடியரசுதலைவர், துணைத்தலைவர் தேர்தல் விதிகள், 1952-ன் அட்டவணைப்படி (Schedule to Presidential and Vice-Presidential Election Rules; 1952) குடியரசு தலைவர் தேர்வுக்கான ஒரே ஓர் உறுப்பினர் தொகுதித் தேர்தலில் (For the Single member Constituency of Presidential Election) வாக்குகளை எண்ணும் முறையையும் ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்த்தால் முதலில் சொன்ன தேர்தலில் விகித பிரதிநிதித்துவ முறைப்படி மிகுதி வாக்குகள் (Surplusvotes) மேலிருந்து கீழுக்கு மாற்றப்பட்டுத் தேர்தல் நடத்தப்படுகிறது என்பதும் பின்னர்ச் சொன்ன தேர்வில், அத்தகைய முறை தலைகீழாக மாற்றப்பட்டு மிகுதி வாக்குகள் கீழிருந்து மேலுக்கு மாற்றப்பட்டுத் தேர்தல் நடத்தப்படுவதும் தெரியவரும். இந்த இரண்டு விதி தேர்தல் வழிகளையும் ஒரே விதமாக அரசியல் சட்டம் கருதுவது கண்டனத்திற்குரியது என்று சில அரசியல் வட்டாரங்களில் கருதப்படுகிறது.

1952 முதல் இதுவரை 5 குடியரசு தலைவர் தேர்தல்கள் நடந்துள்ளன. இந்தத் தேர்தல்கள் மேலே குறிப்பிட்ட முறையில் தான் நடத்தப்பட்டன. தாற்காலிகப் பாராளுமன்றம் என்று கருதப்பட்ட அரசியல் நிர்ணய சபை குடியரசு தலைவராக டாக்டர் இராஜேந்திர பிரசாத்தை ஒரே மனமாகத் தேர்ந்தெடுத்ததின் பேரில் அவர் ஜனவரி 26, 1950 முதல் தாற்காலிகக் குடியரசு தலைவராகப் பணியாற்றிப் புதிய அரசியல் சட்டம் அமலுக்கு வந்த பிறகு மேற்படி முறையில் முதல் குடியரசு தலைவராக மே மாதம் 6ஆம் தேதி 1952-ல் பதவிப் பொறுப்பை ஏற்றார்.

1952-ல் முதன் முதலில் நடத்திய குடியரசு தலைவர் தேர்தலில் வேட்பாளர்களாக ஐவர் போட்டியிட்டனர்.

1. Dr. இராஜேந்திர பிரசாத் — காங்கிரஸ்
2. Prof. K. T. ஷா — இடதுசாரி கட்சிகள் கம்யூனிஸ்ட் ஆதரவு
3. L. G. தட்டே — இந்துமகா சபை
4. ஹரிராம் — சுயேச்சை
5. K. K. சட்டர்ஜி — சுயேச்சை

அவர்களுக்குக் கிடைத்த ஆதரவும் வாக்குகளும் பின் குறிப்பிடப் பட்டுள்ளன.

| வ. எ. | வேட்பாளர்களின் பெயர் | கிடைத்த வாக்குகள் | ஆதரவாளர்கள் | |
|---|---|---|---|---|
| | | | பாராளுமன்ற உறுப்பினர்கள் | மாநிலச் சட்ட சபை உறுப்பினர்கள் |
| 1. | டாக்டர். இராஜேந்திரபிரசாத் | 507400 | 539 | 2357 |
| 2. | Prof. K. T. ஷா | 92827 | 83 | 478 |
| 3. | திரு. L. G. தட்டே | 2672 | 4 | 9 |
| 4. | திரு. ஹரிராம் | 1954 | 2 | 9 |
| 5. | திரு. K. K. சட்டர்ஜி | 533 | — | 5 |
| | செல்லாத வாக்குகள் | 10527 | 9 | 64 |
| | மொத்த எண்ணிக்கை | 615913 | 637 | 2922 |

டாக்டர் இராஜேந்திர பிரசாத்திற்கு அபரிதமான வாக்குகள் கிடைத்தபடியால் இரண்டாவது விருப்ப வாக்குகளை மாற்றத் தேவையில்லாததால் அவர் வெற்றி பெற்றவராக அறிவிக்கப் பட்டார்.

ஐக்கிய அமெரிக்க நாட்டில் உள்ளது போல் நமது குடியரசு தலைவர் தேர்வுக்கல்லூரி, அரசியல் சட்டத்தில் விவரித்துள்ளபடி குடியரசுதலைவர் தேர்தலை நடத்தி அரசியல் சாசனத் தேவைகளைப் பூர்த்தி செய்கிறது. இல்லையென்றால், பாராளுமன்ற, மாநிலச் சட்டசபைத் தேர்தல் முடிவுகளிலிருந்து எந்தக் கட்சி குடியரசு தலைவர் தேர்தலில் வெற்றிபெறும் என்பது வெளிப்படையாகத் தெரிந்துவிடும். 1957-ல் நடந்த குடியரசுதலைவர் தேர்தலிலும் இந்த உண்மைதான் உணர்த்தப்பட்டது. இந்தத் தேர்தலில் மூன்று வேட்பாளர்கள் போட்டியிட்டார்கள். அவர்கள் விவரம் பின்வருமாறு:-

(1) டாக்டர் இராஜேந்திர பிரசாத் (Dr. Rajendra Prasad)

(2) திரு. N. N. தாஸ் (Mr. N. N. Das)

(3) திரு. ஹரி ராம். (Mr. Hari Ram)

தேர்வுக் கல்லூரியில் அப்பொழுது 3697 வாக்காளர்கள் இருந்தார்கள். விகித பிரதிநிதித்துவ ஒற்றை மாற்று வாக்கு முறைப்படி நிர்ணயிக்கப்பட்ட வாக்குகளின் பங்கு 2,31599, ஒவ்வொரு வேட்பாளருக்குக் கிடைத்த வாக்குகள் வருமாறு :

திரு. டாக்டர் இராஜேந்திர பிரசாத் — 4,59,698
திரு. N. N. தாஸ் — 2000
திரு. ஹரி ராம் — 1499

டாக்டர் இராஜேந்திர பிரசாத் திரும்பவும் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர், வாக்குகளின் பங்கைவிடக் கிட்டத்தட்ட ஒரு மடங்கு அதிகமான வாக்குகளைப் பெற்றார். மூன்றாவது குடியரசு தலைவர் தேர்தலில் டாக்டர் இராதாகிருஷ்ணன் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவருக்கு 5,53,067 வாக்குகளும், திரு. C. ஹரி ராமுக்கு (Chaudhuri Hari Ram) 6341 வாக்குகளும், திரு Y. P. திரிசுலியா விற்கு (Yamuna Prasad Trisulia) 3537 வாக்குகளும் கிடைத்தன.

ஆனால், அதிகப்படியான அரசியல் கட்சிகள் தோன்றும் இக் காலத்தில் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் குடியரசு தலைவர் தேர்தலில் வெற்றி பெறுவார் என்று முடிவெடுப்பது ஓரளவுக்குக் கடினமாகிவிட்டது. எனினும், குடியரசு தலைவர் பதவி, எந்தக் கட்சிக்கு மக்கள் தொகை அதிகமாக உள்ள மாநிலங்களில் அதிக செல்வாக்கும், ஆதரவும் இருக்கிறதோ அந்தக் கட்சிக்குத்தான் கிடைக்கும். உதாரணமாக, தமிழ்நாடு, மஹாராஷ்டிரம், பீகார், உத்தரப்பிரதேசம். உண்மையிலேயே மாநிலச் சட்டசபை களுக்கு அசாதாரண முக்கியத்துவம் குடியரசு தலைவர் தேர்தலில் கொடுக்கப்பட்டுள்ளது. மாநிலச் சட்ட சபையினால் தேர்ந் தெடுக்கப்படும் இராஜ்ஜிய சபையிலும் (Rajya Sabha) குடியரசு தலைவர் தேர்தலுக்கான வாக்குகளின் மேல் ஆறில் $\frac{1}{6}$ ஒரு பங்கு உள்ளதால், சட்டசபைகளின் விருப்பங்களைப் பிரதிபலிக்கும் பளிங்குபோல் இராஜ்ஜிய சபை அமைந்துள்ளது. ஆகவே, பெரிய அதிகப்படி மக்கள் தொகையைக்கொண்ட மாநிலங்கள் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அனுபவிக் கின்றன என்பது சொல்லாமலே விளங்கும்.

• தேர்தல் நடத்தும் விதம்

குடியரசு தலைவர் தேர்தலை நடத்துவது, மேற்பார்வை செய் வது, முறைப்படுத்தி முடிவுகளை அறிவிப்பது முழுதும் தேர்தல் குழுவிடம் (Election Commission) ஒப்படைக்கப்பட்டுள்ளது.

1952-ல் அமலாக்கப்பட்ட குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தல் சட்டம், இந்தியக் குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தல் சம்பந்தமான சில விஷயங்களை, ஒழுங்குபடுத்தி நிர்ணயித் துள்ளது. வாக்காளர்கள் பட்டியல் தயாரித்தல், வேட்பாளர்கள் பெயரைப் பதிவு செய்தல், பதிவான வேட்பு மனுக்களைப் பரிசீலித்தல் பதிவான வேட்பாளர் பெயரைத் திரும்பப்பெற

வகைசெய்தல் குடியரசு தலைவர் தேர்தலுக்கான இடம், நாள், காலம் இவற்றைக் குறிப்பிடுதல் ஆகிய எல்லா வேலைகளையும் தேர்தல் குழு (Election Commission) கவனித்துக் கொள்கிறது. தேர்தல் குழு மத்திய அரசைக் கலந்தாலோசித்துத் தேர்தல் அதிகாரியை (Returning officer) நியமிக்கிறது.

இந்தத் தேர்தல் அதிகாரியின் அலுவலகம் புது டில்லியில் (New Delhi) இருக்கும். மாநிலங்களில், உதவித் தேர்தல் அதிகாரிகள், தேர்தல்தலைமை அதிகாரிக்கு உதவியாகத் தேர்தலை நடத்த நியமிக்கப்படுவர். தேர்தல் கல்லூரியின் உறுப்பினர்கள் அந்தந்த மாநிலங்களின் வாக்குகளைப் பதிவு செய்வார்கள். தேர்தல் சமயத்தில் மாநிலத்தேர்தல் கல்லூரி உறுப்பினர் யாராகிலும் பிற மாநிலத்தில் இருந்தால் தேர்தல் குழுவின் அனுமதியோடு அந்த மாநிலத்தில் தம் வாக்கைப் பதிவு செய்யலாம். வாக்குப் பதிவு முடிவடைந்தவுடன் தேர்தல் அதிகாரி அலுவலகத்தில் (புது டில்லியில்) வாக்குகளை எண்ணும் பணி தேர்தல் குழு குறிப்பிட்ட தேதியில், தேர்தல் அதிகாரியின் மேற்பார்வையில் தொடங்கும். தேர்தல் முடிவை உடனடியாகத் தேர்தல் குழுவுக்கும் மத்திய அரசுக்கும் தேர்தல் அதிகாரி அறிவிப்பது அவரது கடமையாகும். மத்திய அரசு தன் பதிவேட்டில் (Govt. of India Gaztte) தேர்தல் முடிவை அதிகார பூர்வமாகப் பிரசுரிக்கும்.

**குடியரசு தலைவர் தேர்தல் முடிவில் வரும் பிரச்சினைகள்**

அரசியல் சாசனத்தின் 71ஆவது விதியின்படி குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தல் முடிவில் ஏற்படும் எல்லாவித சந்தேகங்களும், பிரச்சினைகளும், தலைமை நீதி மன்றத்தால் (Supreme Court) பரிசீலிக்கப்பட்டு முடிவு வழங்கப்படுகிறது. தேர்தல் முடிந்த பிறகு சாதாரண நீதிமன்றங்களில் இந்தத் தேர்தல் முடிவை விசாரணைக்கு எடுத்துக் கொள்ள உரிமை அளிக்கப்படவில்லை. தேர்தல் முடிவு அறிவிக்கப்பட்ட தேதியிலிருந்து 30 நாள்களுக்குள் தோற்ற வேட்பாளரோ அல்லது 10க்குக் குறையாத வாக்காளர்களோ குடியரசு தலைவர், துணைத்தலைவர் தேர்தல் முடிவை எதிர்த்துத் தலைமை நீதிமன்றத்தில் வழக்காடலாம். அப்படி வழக்காடும் மனுவில் குடியரசு தலைவர் தேர்தலில் நியாயமற்ற முறை தேர்தலில் கையாண்டதாகவோ தேர்தலில் அரசியல் சட்டத்திற்கு முரண்பாடான வகையில் தேர்தல் நடைபெற்றதாகவோ முடிவு எடுக்கப்பட்டதாகவோ இருக்கவேண்டும். விசாரணை முடிவில் தலைமை நீதிமன்றம் தன்னுடைய தீர்ப்பில் மனுவை நிராகரித்தோ, தேர்ந்

தெடுக்கப்பட்ட குடியரசு தலைவரின் தேர்தல் செல்லுபடியாகா தென்றோ அவர் முறைப்படிதேர்ந்தெடுக்கப்பட்டவராகவோ தெரிவிக்கும். இந்த வழக்கு விசாரணையினால் ஏற்பட்ட செலவு தொகையை யார் யார் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று தலைமை நீதிமன்றம் தீர்மானம் செய்யும். நீதிமன்றத்தின் முடிவு மத்திய அரசுக்குத் தெரியப்படுத்தப்படுகின்றது.

**பதவிக் காலம்**

பதவிப் பிரமாணம் எடுத்துப் பதவியில் சேர்ந்த தேதியிலிருந்து 5 ஆண்டு காலத்திற்குக் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பதவி வகிக்கலாம். அவருடைய பதவிக்காலம் முடியுமுன் பதவிவிலகக் குடியரசு தலைவர் தீர்மானித்தால், துணைக் குடியரசு தலைவருக்குத் தம் கைப்பட இராஜினாமாக் கடிதம் (பதவி விலகல் கடிதம்) எழுதி, குடியரசு தலைவர் பதவியிலிருந்து விலகலாம். அப்படி இராஜினாமா செய்யப்பட்ட விஷயம் துணைக் குடியரசு தலைவரால் பாராளுமன்ற மக்கள்சபை நடுவருக்கு (Speaker) உடனடியாகத் தெரிவிக்கப்பட வேண்டும். குடியரசு தலைவர் பதவிக் காலம் முடியுமுன் அரசியல் சட்டத்தின் 61-ஆவது விதிஎண்ணில் கண்டுள்ளபடி, துரோகக்குற்றம் சாட்டப்பட்டு (Impeachment) பதவி நீக்கம் செய்யப்படுவதற்கும் வழிவகை செய்யப்பட்டுள்ளது. பதவிக்காலம் முடிந்த பின்னரும் அடுத்து வரும் குடியரசு தலைவர் பதவி ஏற்கும்வரை பழைய குடியரசு தலைவர் பதவியில் இருக்கலாம். ஒரு குடியரசு தலைவர் தாமாகப் பதவியை இராஜினாமா செய்வதாக இருந்தால் அது கீழே குறிப்பிட்ட காரணங்களுக்காக இருக்கலாம்.

(1) தொடர்ந்து உடல்நலம் பாதிக்கப்பட்டு இருக்கும் பொழுது இராஜினாமா செய்யலாம்.

(2) அமைச்சரவைக்கும் குடியரசு தலைவருக்கும் சுமுக உறவு இல்லாமல் பலமான கருத்து வேற்றுமை, கொள்கை அபிப்பிராய பேதம் இருந்து தாமே தம்மிச்சையாகப் பதவியை இராஜினாமா செய்து அரசியல் நெருக்கடி ஏற்படாமல் தவிர்ப்பது. இங்கிலாந்து நாட்டில் 8ஆவது எட்வர்ட் மன்னர் இம்மாதிரி முடியைத் துறந்தார். கட்சி மேலிடத்திலிருந்து வரும் உத்தரவை மதித்து இராஜினாமா செய்தாலும் செய்யலாம், சச்சரவைத் தவிர்ப்பதற்காக.

(3) குடியரசு தலைவர் மேல் குற்றம் சாட்டப்பட்டு, விசாரணையில் அபிவிருத்தி ஏற்பட்டாலும் பதவியில் ஒட்டிக் கொண்டு, குற்றங்கள் மெய்ப்பிக்கப்பட்டுப் பதவியிலிருந்து தூக்கி

எறியப்பட்டு அவமானம் அடைவதைக் காட்டிலும் தாமாகவே அமெரிக்கக் குடியரசு தலைவர் நிக்சன் செய்தது போல் பதவியி லிருந்து விலகிக்கொண்டு எஞ்சியுள்ள மரியாதையையும் செல் வாக்கையும் காப்பாற்றிக் கொள்ளலாம்.

(4) முக்கியமான பிரச்சினைகளில் அமைச்சரவைக்கும் குடியரசு தலைவருக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டு அவர் இராஜினுமா செய்யப் போவதாகப் பயமுறுத்தி, அப்படிச் செய் தால் அமைச்சரவையின் நேர்மையற்ற செயல்கள் அம்பலமாக்கப் படும் என்று பயந்து அமைச்சரவை தன் கொள்கை, நடத்தையை மாற்றிக்கொண்டு மறுபடி சுமுகமான உறவை ஏற்படுத்த முயலு வது அல்லது தாங்களே இராஜினுமா செய்ய முன் வருவது. சுருங்கக் கூறின், இராஜினுமாவை, அமைச்சரவைக்கு எதிராகத் தேவைப்படும் பொழுது உபயோகப்படுத்தும் ஒரு கருவியாகக் குடியரசு தலைவர் உபயோகிக்கலாம்.

அரசியல் சட்டம் 56 (2) விதியின்கீழ் தாமாகவே மேற்கூறிய காரணங்களுக்காகப் பதவியை இராஜினுமா செய்ய விரும்பினுல் துணைக்குடியரசு தலைவருக்குத் தம்கைப்பட எழுத்து மூலம் இராஜி னுமாக் கடிதத்தை அனுப்ப வேண்டும். அப்படி அனுப்பப்பட்ட கடிதம் துணைக்குடியரசுதலைவரால் உடனடியாக மக்கள் சபை நடுவருக்கு (Speaker of Lok Sabha) அனுப்பப்பட்டு விடும்.

குடியரசு தலைவரின் இராஜினுமாக் கடிதத்தை ஏன் மக்கள் சபை சபாநாயகருக்குத் துணைத்தலைவர் அனுப்பிவைக்கவேண்டும் என்பதற்கு முரண்பாடில்லாத, பலமுள்ள காரணங்கள் சொல்லப்படவில்லை.

முதன் முதலில் வகுத்த அரசியல் சாசனப்பிரதியின் (வரைவு அரசியல் அமைப்பு) 45 (a) விதியின்கீழ் இது பற்றிக் குறிப்பிடும் பொழுது, குடியரசு தலைவர் தம் இராஜினுமாக் கடிதங்களை மக்கள் சபை சபாநாயகருக்கும் இராஜ்ஜிய சபை, அமைச்சரவைத் தலைவருக்கும் அனுப்பவேண்டும் என்று இருந்ததை அரசியல் நிர்ணய சபை திருத்தி, குடியரசு தலைவரின் இராஜினுமாக் கடிதம் துணைத்தலைவருக்கு அனுப்பப்படவேண்டும் என்றும், அவர் அதை மக்கள் சபை சபாநாயகருக்குத் தெரிவிக்கவேண்டும் என்றும் அமைக்கப்பட்டது. மேற்படி திருத்தத்திற்குக் காரணமாக இருந்த திரு. B. M. குப்தா என்பவர், ‘குடியரசு தலைவர் இராஜினுமாவை ஒருவர்தாம் பெற்றுக் கொண்டு புதிய குடியரசு தலைவர் நியமனத்துக்கான காரியங்களைத் தொடங்க வேண்டும். அப்படிப்பட்ட நபர் துணைத்தலைவராகத்தாம்

இருக்க முடியும், அதே நேரத்தில் பாராளுமன்ற சபாநாயகரும் இது விஷயம் அறியவேண்டும்,' என்று குறிப்பிட்டார். எதற்காக மக்கள் சபைத் தலைவருக்கு மாத்திரம் இராஜினமா விஷயம் முதலில் துணைத்தலைவரால் தெரியப்படுத்த வேண்டும் என்பது பற்றிச் சரியான விடை கிடைக்கவில்லை. சபாநாயகரும், துணைத் தலைவரும் பாராளுமன்றச் சபைகளில் இராஜினமா விஷயத்தை முன் வைக்கவேண்டும் என்றலும் பாராளுமன்றக் கூட்டம் இல்லாத சமயத்தில் அவர்கள் என்ன செய்யவேண்டும் என்பது பற்றியும் சரியாக அறிய முடியவில்லை. மேலும் மாநிலங்கள் சபையும், மக்கள் சபையும் குடியரசு தலைவர் இராஜினமாவைப் பரிசீலனை செய்து ஏற்றுக் கொள்வதா, கூடாதா என்பதைப் பற்றி விவாதித்து முடிவெடுக்கலாமா என்பதும் புரியவில்லை. பாராளுமன்றக்கூட்டத்தில் குடியரசு தலைவரின் மேல் குற்றச்சாட்டு விசாரணையிலிருக்கும் பொழுது இப்படிப்பட்ட விவாதம் சரியானதாக இருக்கலாம்.

பாராளுமன்றம் குற்றச்சாட்டைப்பற்றி விவாதம் செய்து கொண்டிருக்கும் பொழுது இராஜினமாவை ஏற்க மறுக்கலாமா? மேற்கூறிய பல சந்தேகங்களுக்கும் கேள்விகளுக்கும் அரசியல் சாசனத்தில் எந்தப் பதிலும் இல்லை. துணைக்குடியரசு தலைவருக்கு இராஜினமாக் கடிதம் கிடைத்தவுடன் குடியரசுதலைவர் பதவி விலகி விட்டதாகக் கொள்வதா என்பது பற்றி அரசியல் சட்டத்தில் விளக்கப்படவில்லை. துணைத்தலைவர் உடனடியாக இராஜினமா விஷயததைத் தேர்தல் குழுவிற்குத் (Election Commission) தெரியப்படுத்தி அடுத்த குடியரசு தலைவர் தேர்தலுக்கு வழிவகை செய்யக் காரியங்களைத் துவக்க வேண்டும். ஆனல், இதைப்பற்றியும் அரசியல் சட்டம் விரிவாக ஏதும் சொல்லவில்லை.

### மறு தேர்தலுக்குத் தகுதி

இந்திய அரசியல் சட்டம், ஒரு குடியரசுதலைவர் எத்தனைமுறை திரும்பத் தேர்ந்தெடுக்கப்படலாம் அல்லது தொடர்ந்து பதவியில் இருக்கலாம் என்பதைப்பற்றி எந்தச் சட்டரீதியான வரம்பும் (Legal-Limit) கூறவில்லை. அரசியல் சட்டம் கூறுவதெல்லாம் ஒரு முறை குடியரசு தலைவர் பதவியை வகித்தவர், அரசியல் சட்ட மற்ற விதிகளுக்குட்பட்டுத் திரும்பவும் குடியரசு தலைவர் தேர்தலில் நிற்கத் தகுதியுடையவராகிருர் என்பதுதான் (Art. 57).

வரைவு அரசியல் அமைப்பில் (Draft Constitution) இரண்டு முறை ஒருவர் குடியரசு தலைவர் பதவியில் இருக்கலாம்

என்ற கருத்துத் தெரிவிக்கப்பட்டு இருந்தது (Art. 46, Draft. Constitution). ஆனால், அரசியல் நிர்ணய சபை இந்தக் கருத்தை விவாதிக்காமல் அகற்றிவிட்டது. அரசியல் சட்டம் அமலாகிச் சில வருடங்களுக்குப் பிறகு மக்கள் சபையில் (Lok Sabha) காங்கிரஸ் (ஆளும் கட்சி) உறுப்பினரான ரகுபீர் சிங் (Raghubheer Singh) என்பவர் 1957, செப்டம்பர் மாதம் 6ஆம் தேதி அரசியல் திருத்த மசோதா ஒன்றைத் தயாரித்து ஒரு குடியரசு தலைவர் இரண்டு முறைகளுக்கு மேல் பதவி வகிக்க முடியாதபடி சமர்ப்பித்தார். இந்த மசோதாவின் ஆதரவாளர்கள் ஒரே நபர் குடியரசு தலைவர் பதவியில் திரும்பத் திரும்பத் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தொடர்ந்து பதவியில் இருந்தால் அவர் ஒரு சர்வாதிகாரியாகக் கூடும் என்று வாதாடினார்கள். மாறுபட்ட பல கருத்துகளும் அச் சபையில் தெரிவிக்கப்பட்டன. சிலர், 'நம் நாட்டில் உண்மையான அதிகாரம் பிரதமரிடம் இருக்கிறதே அல்லாமல் குடியரசு தலைவரிடம் இல்லை. அவர் வெறும் தலையாட்டி பொம்மைதான். அவர் ஒரு 'ரப்பர் ஸ்டாம்ப்' ஆகையால், அவர் எக்காலத்திலும் சர்வாதிகாரியாக மாற இடம் இல்லை,' என்றார்கள். அப்போதிருந்த இந்தியச் சட்ட அமைச்சர் திரு. அசோக் சென், 'குடியரசு தலைவர் எத்தனை முறை பதவி வகிக்கலாம் என்பதைச் சட்டபூர்வமாகக் கட்டுப்படுத்துவதைக் காட்டிலும், அரசியல் மரபு ஒன்றை ஏற்படுத்திவிட்டால் அதுவே சாலச் சிறந்தது,' என்றும் 'ஆரோக்கியமான அரசியல் மரபுகளை உண்டாக்கி அவற்றைக் கடைப்பிடிப்பதில் ஆளும் கட்சி (காங்கிரஸ்) வழிகாட்டியாக இருக்கும்,' என்றும் சொன்னதின் பேரில் இந்தத் தனிஉறுப்பினர் மசோதா மக்கள் சபையிலிருந்து திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டது.

காலஞ்சென்ற பழைய குடியரசு தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் மூன்றும் முறையாகக் குடியரசு தலைவர் பதவிக்கு நிற்க மறுத்துவிட்டார். அமெரிக்காவிலும் முதல் குடியரசு தலைவரான ஜார்ஜ் வாஷிங்டன் என்பவரும் இதே மாதிரி மூன்றும் முறையாக நிற்க மறுத்துவிட்டார். இது ஒரு நல்ல அரசியல் மரபு, இந்தியாவில் இத்தகைய உயர்ந்த அரசியல் மரபுக்கு உதாரணமாக டாக்டர் இராஜேந்திரப் பிரசாத் திகழ்ந்தார்.

இரண்டு முறைக்கு மேல் ஒருவர் குடியரசு தலைவர் பதவியை வகிப்பது குடியாட்சிக்குப் புறம்பானது என்றும் அப்படியிருந்தால் அது சர்வாதிகாரத்திற்கு வித்திடும் என்றும் அரசியல் நிபுணர்கள் கருதுகிறார்கள். எனவே, டாக்டர் பிரசாத் உரு

வாக்கிய அரசியல் மரபு சட்டத்தின் வலிமையைப் பெற்றால் இந்திய அரசியல் ஆரோக்கியமானதாக இருக்கும்.

குடியரசு தலைவர் தேர்வுக்கான தகுதி

இந்திய அரசியல் அமைப்பின்படி குடியரசு தலைவர் தேர்தலுக்குப் போட்டியிடும் ஒருவர் இந்தியக் குடிமகனாக இருப்பதோடல்லாமல் *35* வயதிற்குக் குறையாமலும் பாராளுமன்றத்தின் மக்கள்சபை உறுப்பினராகத் தகுதி வாய்ந்தவராகவும் இருக்கவேண்டும். அரசியல் அமைப்பு யார் யாருக்குக் குடியரசு தலைவர் தேர்தலில் போட்டியிடத் தகுதியில்லை என்றும் கூறுகிறது. மத்திய அரசாங்கத்திலோ, ஏதாவது ஒரு மாநில அரசாங்கத்திலோ, மேலே குறிப்பிட்ட அரசாங்கங்களின் அதிகார வரம்பிற்குட்பட்ட நிறுவனத்திலோ எந்த ஓர் ஊதியம் தரும் பதவியையும் (Office of Profit) வகிப்பவராக இருத்தல் கூடாது. ஆனால், இந்தியக் குடியரசு தலைவர், துணைத்தலைவர், மாநில ஆளுநர், மத்திய, மாநில அமைச்சர் ஆகிய பதவிகளை ஊதியம் தரும் பதவிகள் என இச் சட்டத்திற்காகக் கருதக் கூடாது எனவும் அரசியலமைப்புக் கூறுகிறது.

இலாபகரமான பதவி (Office of Profit)

இலாபகரமான பதவி என்ற சொல் முதன் முதலில் இங்கிலாந்து நாட்டில் பராதீனப்படுத்தும் சட்டத்தில் (Act of Settlement 1701) குறிப்பிடப்பட்டுள்ளது. பின்பு இச் சொல் இந்திய அரசு சட்டம் *1935*, பிரிவு *26*லும், இந்திய அரசியல் அமைப்பு விதிகள் *58*, *59*, *64*, *66*, *102*, *191*லும் இடம் பெற்றிருக்கிறது. இலாபகரமான பதவியைக் குறித்து அரசியல் அமைப்பிலும் சரி மக்கள் பிரதிநிதித்துவ சட்டம், *1951*லும் (Representation of Peoples Act, 1951) சரி, விளக்கம் கொடுக்கப் படவில்லை. இருப்பினும், எந்தப் பதவி வகித்தாலும் அதன்மூலம் இலாபமோ ஊதியமோ கிடைத்தால் அதை 'இலாபகரமான பதவி' என்றே கொள்ளவேண்டும். பதவியின் மூலம் உண்மையிலேயே இலாபம் சம்பாதிக்காவிட்டாலும் இலாபகரமான பதவி என்ற முடிவு இருந்தாலே குடியரசு தலைவர் பதவிக்குத் தகுதியற்ற தன்மையை உண்டாக்குகிறது. ஊதியமில்லாத பதவி வகிக்கலாம். அல்லது பதவி வகிப்பதற்கான வெகுமதி, தனதானிய இலாபம், படிகள் (Allowances), பொருள்கள், அந்தப் பதவிக்கே உரித்தான மற்றச் சலுகைகள் ஆகியவை 'இலாபகரமான பதவி' என்ற சொற்றொடரில் அடங்காது. இலாபம் என்ற சொல் பண சம்பந்தமானதாக மாத்திரம்

அல்லாமல் வேறுவிதமான இலாபமாகவும் இருக்கலாம். மேலும், பதவி என்று கூறும்பொழுது எத்தனைக் காலத்துக்கான ஒப்பந்தம், பதவியின் பொறுப்புகள், அப்பதவி வகிப்பதற்கான ஊதியம் ஆகியவை குறிப்பிடப்படவேண்டும்.

ஒரு பதவி அரசின்கீழ் உள்ளதா என்பதை நிர்ணயிக்க (1) அந்தப் பதவிக்கான நியமனத்தைச் செய்ய எந்தத் துறைக்கு (Department) அல்லது அதிகாரிக்கு உரிமை இருக்கிறது, (2) எந்த அதிகாரிக்கு ஒழுங்கு நடவடிக்கை எடுத்துத் தவறு செய்பவரை, பதவியிலிருப்பவரை நீக்கவோ தண்டிக்கவோ அதிகாரம் உள்ளது, (3) யாரால் எந்த வகையில் அல்லது எதிலிருந்து ஊதியம் கொடுக்கப்படுகின்றது ஆகிய மேலே சொல்லப்பட்ட மூன்று வழிகளிலிருந்து தீர்மானிக்கப்படுகின்றது. அப்துல் ஷகூர்க்கும் ரேகப் சந்த் என்பவருக்கும் உண்டான வழக்கில் (Abdul Shahur vs Rekhab Chand) நீதிபதி கபூர் அவர்கள் கீழ்க்கண்ட கருத்தைத் தெரிவித்தார்.

'ஓர் ஊதியம் தரும் பதவிக்கு ஒருவரை நியமிக்கும் அதிகாரம், அவரைத் தொடர்ந்து பதவியில் இருக்கச் செய்வதற்கான அதிகாரம், அல்லது பதவியிலிருந்து அவரை நீக்குவதற்கான அதிகாரம், அரசின் வருவாயிலிருந்து ஊதியம் கொடுக்கும் அதிகாரம், இவை ஒரு நபர் அரசின்கீழ் ஊதியம் தரும் பதவியில் இருக்கிறாரா என்பதை நிர்ணயிக்கும் முக்கிய அம்சங்கள் ஆகும். வேறு எந்த வகையில் ஊதியம் கொடுக்கப்பட்டாலும் அவரை ஓர் அரசின் ஊழியர் என்று ஆணித்தரமாகச் சொல்ல வாய்ப்பில்லை.'

1954-ல் கொண்டுவரப்பட்ட (பாராளுமன்றம், பிரிவு 'இ' மாநிலங்களின் சட்ட சபைகள் வகையில்) தகுதியின்மை தடுப்புச் சட்டம் (The Prevention of Disqualification Act, 1954) சில பதவிகளை ஊதியம் தரும் பதவிகளின் பட்டியலிலிருந்து நீக்கியுள்ளது. அவை பல்கலைக்கழகங்களின் துணைவேந்தர்கள், பாராளுமன்றத்தின் தலைமைக் கொறடாக்கள் (Chief Whips in Parliament), தேசிய மாணவ இராணுவப் பிரிவின் அதிகாரிகள் (Officers of National Cadet Corps), அரசுக்கு ஆலோசனை கூறும் வகையில் அமைக்கப்பட்ட குழுவின் (Committee) உறுப்பினர்கள், தலைவர் போன்றோர் மேலே குறிப்பிட்ட எந்த ஒரு பதவியை வகிப்பவரும் ஒரு குறிப்பிட்ட நஷ்டஈட்டுத் தொகையைத் தவிர (Compensatory Allowance) வேறு ஊதியம் எதுவும் பெறமாட்டார்கள்.

### குடியரசு தலைவர் பதவிக்கான நிபந்தனைகள்

இந்திய அரசியலமைப்பு விதி எண் 59 குடியரசு தலைவருக்கான பதவியை வகிக்கச் சில முக்கியமான நிபந்தனைகளை விவரித்துள்ளது—

(1) குடியரசு தலைவர் பதவியை வகிக்கப்போகிறவர் பாராளுமன்ற உறுப்பினராகவோ, மாநிலச்சட்டமன்ற உறுப்பினராகவோ இருக்கக் கூடாது. அப்படி அவர் உறுப்பினராக இருந்தால் குடியரசு தலைவர் பதவியை ஏற்றவுடன் உறுப்பினர் பதவியை இராஜினமா செய்ய வேண்டும்.

(2) அரசுதுறையிலோ தனியார்துறையிலோ ஊதியம் தரும் வேறு எந்தப் பதவியையும் வகிக்கக்கூடாது.

(3) அவர் கட்சிச்சார்பற்றவராக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லையெனினும், அவர் பாரபட்சமில்லாமல் நடுநிலை வகித்து இங்கிலாந்து நாட்டு மன்னரைப் போல் கட்சி விசுவாசத்திற்கு அப்பாற்பட்டவராகச் செயலாற்ற வேண்டும்.

### படிகளும் சலுகைகளும் (Allowances and Privileges)

இந்தியக் குடியரசு தலைவர், அப்பதவிக்கேற்ற அதிகார பூர்வமான மாளிகையும், (Official residence) மாதம் ரூபாய் 10,000 ஊதியமும் பெறுகிறார். இந்தத் தொகை அவரது பதவிக் காலத்தில் குறைக்கப்படமாட்டாது [விதி எண் 59 (4)]. இந்தியக் குடியரசு தலைவரின் ஊதியம், சலுகைகள், படிகள் முதலியன பாராளுமன்றம் சட்டம் இயற்றி நிர்ணயிக்கும். மேற்சொன்னவற்றைச் சட்டத்தின்மூலம் பாராளுமன்றம் நிர்ணயிக்கும் வரை அரசியல் அமைப்பின் இரண்டாவது பிரிவில் (Second Schedule) கண்டுள்ளபடி ஊதியம், படி மற்றச் சலுகைகளைக் குடியரசு தலைவர் பெறுவார் [ விதி எண் 59 (3) ].

குடியரசு தலைவரின் ஊதியத்தை நிர்ணயிக்கும்பொழுது அரசியலமைப்பு நிர்ணய சபை இரண்டு அடிப்படை எண்ணங்களைக் கொண்டிருந்தது. (ஒன்று) புதிய அரசியலமைப்பின்படி குடியரசு தலைவர் நிருவாகப் பிரிவின் மிக உயர்ந்த தலைவர். (இரண்டு) இந்தியக் குடியரசு தலைவர், இந்திய அரசு சட்டம் 1935-ன் கீழ்ப் பதவி வகித்த ஆளுநர்-தலைவர் (Governor-General)க்குச் சரி சமமாக விளங்குகிறார். ஆகவே, குடியரசு தலைவரைக் காட்டிலும் அதிக ஊதியம் பெறக்கூடியவர்கள் அரசு நிருவாகப் பொறுப்பில் இருக்க இடம் இல்லை. நாட்டின் மிக உயர்ந்த பதவி குடியரசு தலைவர் பதவி ஆகையால், எந்த ஒரு

தனி நபரும் அவரைக் காட்டிலும் அதிகமான ஊதியத்தைப் பெறக்கூடாது என்பதை, முதல் எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு, மிகவும் அவசியமான ஒன்றாக அரசியல் நிர்ணய சபை கருதியது. ரூபாய் 5,000 மாதந் தோறும் பெறும் தலைமை நீதி மன்றத்தின் (Supreme Court) தலைமை நீதிபதி (Chief Justice) நிருவாக ஏணியின் (படியில்) (Administrative Hierarchy) உச்சியி லிருக்கும் அதிகமான ஊதியத்தைப்பெறும் அரசு அதிகாரி யாகக் கருதப்படுகிறார். ஆகவே, இந்தியக் குடியரசு தலைவரின் ஊதியம் தலைமை நீதிபதியின் ஊதியத்தைவிட எவ்வளவு அதிகமான ஊதியமாகவும் நிர்ணயிக்கலாம். எனவே, மாதம் ரூபாய் 10,000 என்று வரையறை செய்தால் குடியரசு தலைவரின் பதவி, அந்தஸ்து, கௌரவம், மரியாதை இவற்றிற்கு உகந்ததாக இருக்கும் என்று முடிவு செய்யப்பட்டது. மேலும், இங்கிலாந்து நாட்டு மன்னரின் பிரதிநிதியாகத் திகழ்ந்த ஆளுநர்-தலைவரின் (Governor-General) ஊதியம் மிகத் தாராள மாகவும், மிக அதிகமாகவும் இருந்தபடியால் அந்த இடத்தில் குடியரசு தலைவர் அமரப் போவதால் அவருடைய ஊதியத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் மிகவும் குறைவு என்று யாரும் சொல்லாத அளவிற்கு இருத்தல் வேண்டும். ஆகவே, அரசியல் நிர்ணய சபை யினர் இந்தியக் குடியரசு தலைவரின் ஊதியத்தை ரூபாய் 10,000 ஆக அரசியலமைப்பில் குறித்துள்ளார்கள்.

குடியரசு தலைவர் தம் ஊதியத்தின் ஒரு பகுதியை அரசுக்கே திரும்பக் கொடுக்கலாம். தம்மிச்சையாக ஊதியத்தை ஒப்படைக்கும் சட்டம் 1950 (Voluntary Surrender of Salaries Act, 1950) கீழ் இப்படி அரசிடமே திரும்ப ஒப்படைக்கப்பட்ட தொகைக்கு மொத்த வருமானத்தில் சேர்க்கப்படாமல் வரி விலக்குக் கொடுக்கப்படும். தம்முடைய அதிகார பூர்வமான குடியிருப்புக்காகத் தலைநகரிலுள்ள குடியரசு தலைவர் மாளிகை யும் (Rashtrapathi Bhawan at New Delhi) சிம்லாவிலுள்ள மாளிகையையும் (Raj Bhavan at Simla) ஐதராபாத்திலுள்ள குடியரசு தலைவர் விடுதியையும் (President's Nilayam at Hyderabad)அவர் உபயோகிக்கலாம்.

குடியரசு தலைவரின் ஓய்வு காலச் சட்டம் 1951, திருத்தச் சட்டம் 1961 இவற்றின்படி குடியரசு தலைவர் பதவியை வகித்த ஒவ்வொருவரும் பதவிக் காலத்திற்குப் பிறகு அல்லது பதவியி லிருந்து இராஜினாமா செய்த பிறகு ஓய்வுகால ஊதியமாக (Pension) வருடத்திற்கு ரூ. 15,000மும் அவருடைய அலுவல்களுக்கு உதவியாக அமைச்சகப் பணியாளர், (Secretarial staff) அலுவல்

களுக்காகும் செலவு ஆகியவற்றிற்காக ஆண்டிற்கு ரூபாய் 12,000மும் அவர் பெறுகிறார். இலவச மருத்துவச் சிகிச்சையும் அவருக்குக் கொடுக்கப்படும். ஆனால், அவர் மீண்டும் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் இந்தச் சலுகைகள் அவருக்குக் கொடுக்கப்பட மாட்டா. இந்த ஓய்வுகால ஊதியம் இந்திய நாட்டின் திரண்ட நிதியிலிருந்து (Consolidated Fund of India) வழங்கப்படும்.

1949-50 மத்திய அரசின் வரவு செலவு கணக்குப்படி ஆளுநர்-தலைவருக்கு (Governor-General) செலவுப் படி (Sumptuary Allowance) ரூ. 45,000, ஒப்பந்தப் படி (Contract Allowance) ரூ. 4,65,000, போக்குவரத்து, வாகனப் படி (a conveyance and motor car allowance) ரூபாய் 73,000, இதர செலவினங்களுக்காக ரூபாய் 81,000 ஆக மொத்தம் ரூபாய் 6,64,000 ஆண்டிற்குக் கொடுக்கப்பட்டது.

சிக்கனத்திற்கும், அனுவசியமான செலவுகளைக் குறைப்பதற்கும் உதாரணமாக விளங்கிய டாக்டர் இராஜேந்திர பிரசாத் குடியரசு தலைவர் பதவி வகிக்கும் பொழுது தம் ஊதியத்தை அரசுக்கே திரும்பக் கொடுத்ததை ஒட்டிப் பின்பு குடியரசு தலைவராகப் பதவியேற்ற டாக்டர் இராதாகிருஷ்ணனும் தம்முடைய ஊதியத்தை ரூ. 10,000 த்திலிருந்து ரூ. 2,500 ஆகக் குறைத்துக் கொண்டார்.

அரசியல் நிர்ணய சபையின் மேற்கூறிய குடியரசு தலைவரின் சிறந்த பதவிக்கேற்ற ஊதியம் அவர்கள் மேற்கோள்காட்டிய இரு காரணங்களுக்கும் அப்பாற்பட்டதாகத் தோன்றும். தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரின் அலுவலகம் தனக்கே உரித்தான முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது. ஒரு குடியரசு தலைவருக்கு அதுவே ஒரு சிறப்பான அம்சமாக விளங்குகிறது. ஒரு பதவியின் சிறப்பையோ, முக்கியத்துவத்தையோ அப் பதவிக்குரியவர் வாங்கும் ஊதியத்தை அடிப்படையாகக் கொண்டு எடைபோடுவது என்பது ஏற்றுக்கொள்ளக் கூடியது அன்று. தனியார் துறையில் எத்தனையோ தொழில்நுட்ப வல்லுநர்கள் குடியரசு தலைவருக்கு நிர்ணயிக்கப்பட்ட ஊதியத்தைவிடப் பன்மடங்கு அதிகமான ஊதியத்தைப் பெறுகிறார்கள் என்ற காரணத்தால் சமூகத்திலும் அரசியலிலும் குடியரசு தலைவரைவிட அதிகமான செல்வாக்கையும் அந்தஸ்தையும் பெறுகிறார்கள் என்று கருதப்படுவதில்லை. மாநிலங்களில் கூட எத்தனையோ அலுவலர்கள் மத்திய, மாநில அமைச்சர்களைவிட அதிகமான ஊதியம் பெறுகிறவர்கள் இருக்

இருந்தார்கள். எனினும், அவர்கள் அமைச்சர்களைவிட உயர்ந்தவர்கள் என்று யாரும் கருதுவதில்லை. ஒரு பதவியின் சிறப்பு, அதன் தன்மை, அதன் கடமைகள், அது செயற்படும் விதம் இவற்றைக் கொண்டு நிர்ணயிக்க வேண்டுமே தவிர அப் பதவிக்கான வெறும் ஊதியத்தைக்கொண்டு அன்று. தேர்ந்தெடுக்கப்படும் பதவிகளுக்கான ஊதியம் நிர்ணயித்ததின் நோக்கம் அப்படித் தேர்ந்தெடுத்தவர்களின் வாழ்க்கைத்தரம் பதவிக்கு உகந்ததாக இருந்து அன்றாட வாழ்க்கை அவர்களுக்கு நல்லபடியாக, கௌரவமானதாக அமையவேண்டும் என்பதே.

மேலும், இந்தியக் குடியரசு தலைவரின் ஊதியம், ஆங்கில ஆட்சியின் கீழ் ஆளுநர்-தலைவராக இருந்தவர் வாங்கிய ஊதியத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால் மிகவும் குறைவாக இருக்கிறது என்று நினைத்து ஊதியத்தை நிர்ணயம் செய்வதும் சரியில்லை. நம் நாட்டின் செல்வத்தைச் சூறையாடுவதும், நாட்டைச் சுரண்டுவதுமே குறிக்கோளாகக் கொண்டிருந்தது அன்னியர் ஆட்சி. அத்தகைய ஆட்சியாளரின் பிரதிநிதியாகத் திகழ்ந்த ஆளுநர்-தலைவர் மொகலாயச் சக்கரவர்த்தியைப் போல் ஆட்சி புரிந்து சகலவித வசதிகளுடன் மிக உயர்ந்த • தொகையையும் ஊதியமாகப் பெற்றதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? இந்தியக் குடியரசு தலைவர் ஓர் ஏழ்மை மிக்க நாட்டின் ஆட்சித் தலைவர். ஓர் ஏற்றத் தாழ்வற்ற சமுதாயத்தை அமைப்பதே நமது அரசின் குறிக்கோளாகும். ஆகையால், இந்தியத் துணைக்கண்டத்தின் தலைவர், இராஜரிகமான படாடோபத்திலோ சாம்ராஜ்ஜியத் தலைவர் என்ற ரீதியிலோ தேவையற்ற பரிவாரங்களோடு திகழ்வது விரும்பத்தக்கதன்று.

### குடியரசு தலைவருக்குள்ள விலக்குகள் (பாதுகாப்புகள்) (Immunities of a President)

இந்தியக் குடியரசு தலைவருக்கு, அப்பதவியின் சிறப்பிற்காக அதற்கேற்ற மரியாதையும், சலுகைகளும், உரிமைகளும் சட்ட ரீதியாகக் கொடுக்கப்பட்டுள்ளன. குடியரசு தலைவரைப் பதவி விலக்கல் செய்யும் முறையைத் (Impechment) தவிர, உத்தியோக முறையில் செய்த எந்தச் செயலுக்காகவும் அவர்மேல் வழக்கோ நீதி விசாரணையோ செய்யமுடியாது என்று அரசியல் அமைப்பு அவருக்கு முழுப் பாதுகாப்புக் கொடுத்திருக்கிறது (விதி எண் 361). நீதிமன்றங்கள் கொடுக்கும் உத்தரவுகளுக்கோ, ஆணைகளுக்கோ குடியரசு தலைவர் கட்டுபட்டவர் அல்லர். ஆகஸ்ட் 1969-ல் குடியரசு தலைவராகப் பதவியேற்ற திரு வி. வி. கிரி அவர்கள் தலைமை நீதிமன்றத்தில், சில ஒழுங்கீனங்களால் அவர்

தேர்தல் செல்லுபடியாகாது என்று தொடர்ந்த வழக்கில் சாட்சி சொன்னார். (இது இந்திய அரசியலில் ஒரு புதிய மரபாக அரசியல் வல்லுநர்களால் கருதப்படுகிறது). அவருடைய பதவிக்காலத்தில் யாரும் அவர்மேல் வழக்குப்போட முடியாது, எந்த நீதி மன்றத்திற்கும் அப்படிப்பட்ட வழக்குகளை அனுமதிக்க அதிகாரம் இல்லை. அவரைக் கைது செய்யவோ சிறையில் அடைக்கவோ சட்டம் இடம் தரவில்லை. பொருள் அல்லது சொத்துச் சம்பந்தமான(Civil Cases)வழக்குகளுக்கும் அவருடைய தனிப்பட்ட முறையில் (Private capacity) பதவி ஏற்குமுன் செய்த செயல்களுக்காகவோ பதவியில் இருக்கும்பொழுது செய்த செயல்களுக்காகவோ யாரும் நீதிமன்றங்களில் வழக்காடவும் (Section 80, C.P.C.) இரண்டு மாத முன் அறிவிப்புக் கொடுக்கப்படவேண்டும்.

**பதவிப் பிரமாண வைபவம் (Oath of Office)**

இந்திய அரசியல் அமைப்பின்படி குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் அப்பதவியை ஏற்குமுன் தலைநகரில் உள்ள பாராளுமன்றத்தின் மத்திய கூடத்தில் பதவிப் பிரமாணம் செய்து கொள்ளவேண்டும். இந்தப் பதவிப்பிரமாண வைபவம் பக்தி சிரத்தையுடனும் மிகுந்த கௌரவமான முறையிலும் நடக்கும். இந்த மங்களகரமான சடங்கு, மத்திய அமைச்சர்கள், துணைக் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர், (Vice President-elect) இந்தியத் தலைமை நீதிபதி, மக்கள் சபையின் சபாநாயகர் (Speaker of the Lok Sabha), அயல் நாட்டு முக்கிய பிரமுகர்கள், தூதுவர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள், தலைநகரின் தலைமை ஆணையர் (Chief Commissioner of Delhi), இந்திய அரசாங்கத்தின் முக்கிய அதிகாரிகள், இராணுவத்தில் பணியாற்றும் உயர் அதிகாரிகள் ஆகிய நாட்டிலுள்ள உயர் பதவிகள் வகிப்பவர்கள் முன்னிலையில் கோலாகலத்துடன் சிறப்பாக நடக்கும். எல்லா அதிகாரிகளும் அவரவர்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட முறையான உடைகளுடன் இவ் வைபவத்தில் கலந்து கொள்வார்கள். இந்தப் பதவிப் பிரமாண வைபவம் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியால் (Chief Justice of Supreme Court) நடத்தப்படுகிறது. அவர் இல்லாத சமயத்தில்அவருக்கு அடுத்துள்ள மூத்த நீதிபதி பதவிப் பிரமாண வைபவத்தை நடத்தி வைப்பார்.

குடியரசு தலைவர் எடுத்துக் கொள்ள வேண்டிய பதவிப் பிரமாணம் :

' நான் $\frac{\text{கடவுளின் பெயரால் சத்தியமாகச் சொல்கிறேன்}}{\text{உறுதியுடன் திடப்படுத்துகிறேன்.}}$

என் கடமைகளை (குடியரசு தலைவர் பதவிக்கான காரியங்கள்) விசுவாசத்துடன் முழுமையாக நிறைவேற்றுவேன். இந்திய அரசியல் அமைப்பையும் சட்டத்தையும் என்னுடைய முழுமையான ஆற்றலுடன் போற்றிப் பாதுகாப்பேன். இந்திய மக்களின் நன்மைக்கும் நல்வாழ்வுக்கும் என்னை அர்ப்பணித்துக் கொள்வேன்'.

இந்தப் பதவிப்பிரமாண வைபவம் முடிந்தவுடனே 31 பீரங்கிகள் முழங்கப்பட்டு அவருக்கு மரியாதை செய்யப்படுகிறது. குடியரசு தலைவர் தாம் பதவி ஏற்றுள்ளதாகப் பிரகடனம் செய்வார். இந்தப் பிரகடனம்இந்திய அரசின் அதிகாரபூர்வமான அறிக்கையில் பிரசுரிக்கப்படும் (Published in the Govt. of India Gazett). மேலும், குடியரசு தலைவர் தேர்தலில் வெற்றி பெற்றுக் குடியரசு தலைவராகப் பதவி ஏற்றுக் கொண்டதாகப் பிரகடனம் செய்தது, எல்லா முக்கிய தேசப்பாதுகாப்பு நிலையங்கள், அரசின் நிருவாகப் பிரிவுகள், காரியாலயங்கள், மாநில அரசுகள், மத்திய அரசின் கீழ் உள்ள எல்லாப் பிரதேசங்கள் ஆகியவற்றிற்கு அனுப்பப்படும்.

பதவிப் பிரமாணத்தில் உள்ள வார்த்தைகளின் வெளிப்படையான பொருள் குடியரசு தலைவர் தம் முழுத் திறமையுடன் அரசியல் அமைப்பையும் சட்டத்தையும் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும். இன்னும் வெளிப்படையாகச் சொல்லப்போனுல் அரசியல் அமைப்பின் (சாசனத்தின்) தலையாய பாதுகாப்பாளர் குடியரசு தலைவர் என்ற நிலையில் அரசியல் அமைப்பிற்கு எந்த விதத் தீங்கும் நேராத வண்ணம் எல்லாவித அதிகாரங்களையும் பயன்படுத்தத் தவறக்கூடாது. சில சமயங்களில் அமைச்சரவை தன் கட்சியின் இலாபத்திற்காகவும் கட்சியின் அனுகூலத்திற்காகவும் அரசியல் அமைப்பின் உட்கருத்து, தத்துவம் (Spirit of the Constitution) சூறையாடப்படும் வகையில் சில காரியங்களைச் செய்யலாம். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், குடியரசு தலைவர் ஆளும் கட்சியின் ஆதரவால் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பினும், கட்சி இலாபத்தைப் புறக்கணித்து அரசியல் அமைப்பின் உண்மையான தன்மையை (originality of the Constitution) முழு மூச்சுடன் பாதுகாக்க முன் வரவேண்டும். சில சமயங்களில் அமைச்சரவையின் நேர்மையற்ற செயல்கள் நாட்டில் குழப்பங்களை, கிளர்ச்சிகளைத் தூண்டிவிடும். அப்பொழுது குடியரசு தலைவர் உறுதியுடன் பதவிப் பிரமாணத்திற்கு ஏற்றவாறு செயற்பட்டு, நாட்டில் அவசரநிலைமை இருப்பதாகப் பிரகடனம் செய்து, (Declaration of state of Emergency) உடனடியாக ஏற்படவிருக்கும் உள்நாட்டுக் குழப்பங்களிலிருந்து நாட்டைக்காப்பாற்ற வேண்டும்.

குடியரசு தலைவர் எடுத்துக் கொள்ளும் பதவிப் பிரமாணம், அந்தப் பதவியில் சேருவதற்கு முன் எடுத்துக்கொள்ள வேண்டியது என்றாலும் அரசியல் அமைப்பு எல்லா அதிகாரங்களையும் அவருக்கு உண்மையிலேயே கொடுக்கவில்லை. அமைச்சரவைக்குத்தான் உண்மையிலேயே அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது.

**குடியரசு தலைவரைக் (துரோக) குற்ற விசாரணை செய்தல் (Impeachment of the President) :**

குடியரசு தலைவர் அரசியலமைப்பிற்கு விசுவாசமாக நடந்து கொள்வதாகப் பிரமாணம் (Oath) எடுத்துக் கொண்டாலும் அவர் அரசியலமைப்பிற்கு விரோதமாக நடந்து கொண்டாலோ அரசியலமைப்பு விதிகளை மீறினாலோ அக் குற்றத்திற்காக அவருக்குத் தண்டனை வழங்கவும் இந்திய அரசியலமைப்பு வழி செய்திருக்கிறது. குடியரசு தலைவரின் எந்தச் சட்ட விரோதமான செயலுக்கும் உடனடியாகக் (துரோக) குற்ற விசாரணை இயந்திரம் (Machinery of Impeachment) செயற்படத் தொடங்கிவிடும். அரசியல் சட்டம், விதி 61, குற்றச் சாட்டைத் தொடங்குவதற்கான செயல்முறையை வகுத்துள்ளது. அவை பின்வருமாறு:

(1) குற்றச் சாட்டுத் தீர்மானத்தைப் பாராளுமன்றத்தின் மக்கள் சபையிலோ, (Lok Sabha) மாநிலங்களின் அவையிலோ (Rajya Sabha) எதிலும் கொண்டு வரலாம்.

(2) எந்தச் சபையில் கொண்டு வரப்படுகிறதோ அந்தச் சபையின் 4-ல் ஒரு பாகத்திற்குக் குறையாத உறுப்பினர்கள் 14 நாள்கள் முன்னறிவிப்புடன் தீர்மானத்தில் கையொப்பம் இட்டிருக்க வேண்டும்.

(3) அத்தகைய தீர்மானங்கள் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையிலிருந்து 3-ல் 2பங்கிற்குக் குறையாத உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றிருக்க வேண்டும்.

(4) எந்தச் சபையில் குற்றச்சாட்டுத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதோ அந்தச்சபை விசாரணையை மேற் கொள்ளக் கூடாது. தீர்மானங்கள் கொண்டுவரப்படாத சபை குற்றச் சாட்டுகளைப் பரிசீலனை செய்ய ஒரு தீர்ப்பு மன்றம் (a Court of Tribunal) நியமிக்கலாம். அல்லது ஒரு தனி நீதிமன்றத்தை நியமித்து விசாரணை செய்யலாம். விசாரணையின்போது குடியரசு தலைவர் நேரிலோ, சட்ட உதவியாளர்கள் மூலமாகவோ ஆஜராகி விசாரணையில் கலந்துகொள்ளலாம். குற்றச்சாட்டு விசாரணை காலத்தில் தொடர்ந்து குடியரசு தலைவர் பதவி வகிப்பார்.

(5) விசாரணையை நடத்தும் சபை அல்லது விசாரணைக்கு அனுப்பிவைக்கும் சபை தன் மொத்த உறுப்பினர்களின் 3-ல் 2 பங்கு உறுப்பினர்கள் குற்றச்சாட்டு உண்மை என்று முடிவு செய்த பிறகு (அல்லது நிரூபிக்கப்பட்ட பிறகு) குற்றச்சாட்டை ஆதரித்து வாக்களிக்கவேண்டும்.

(6) இத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அதற்குக் குடியரசு தலைவரைப் பதவியிலிருந்து விலக்கம் செய்யும் சக்தி வந்து விடுகிறது. குடியரசு தலைவரைப் பதவி விலக்கம் செய்த தாகச் சபையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டவுடன், கொள்ளப்படும் வேறு தனி உத்தரவுகளுக்கு (Special order) இடமில்லை.

குடியரசு தலைவர் குற்றம் சாட்டப்பட்டு, நிரூபிக்கப்பட்டுப் பதவியிலிருந்து விலகிய பிறகு வழக்கு மன்றங்களில் அரசியல் சட்டப்படி தண்டிக்கப்படவேண்டிய குற்றங்களைச் செய்திருந்தால் சாதாரண மனிதனைக் கருதப்பட்டுத் தண்டிக்கப்படலாம். அரசியல் சட்ட விதி 361 பதவியில் இருக்கும்பொழுது, குடியரசு தலைவர்மீது சாதாரண வழக்கு மன்றங்கள் வழக்குத் தொடர இடம் தரவில்லை.

குடியரசு தலைவரின் மேல் (துரோக) குற்றம் சாட்டப்பட்டால் மேற்கூறியபடி பாராளுமன்றத்தின் குற்றச் சாட்டுத் தீர்மானம் நிறைவேற்றப்படாத சபையோ அதனுல் நியமிக்கப் பட்ட தனி வழக்குமன்றமோ விசாரணையை மேற்கொள்ளலாம். அல்லது நாட்டின் தலைமை நீதிமன்றத்தின் மூலம் விசாரணை நடத்தலாம். நியாயமான, பாரபட்சமில்லாத, சட்டரீதியான விசாரணையை நாட்டின் தலைமை நீதிமன்றத்தால்தான் நடத்த முடியும். குடியாட்சி அரசின் நல்ல பெயர் இந்த முறை விசாரணையால் கெட்டுவிடாது. பாராளுமன்றத்தின் சபையே அரசியல் காழ்ப்புக் காரணமாக அரசியல் நோக்குடன் விசாரணையை மேற்கொண்டு செயற்பட்டது என்ற இழிசொல் வர வழியில்லை.

குற்றச்சாட்டுக்கான வழிமுறைகளில் எத்தனையோ முறை கேடுகளும், தப்பிக்கக்கூடிய வழிகளும் இருக்கின்றன. அரசியல் சட்டத்தில் குற்றச்சாட்டுகள் விசாரணையில் இருக்கும்பொழுது குடியரசு தலைவரைத் தாற்காலிகப் பதவி நீக்கம் செய்ய இடம் இல்லை. விசாரணையின்போதுகூடத் தொடர்ந்து பதவியில் செயற்படச் சட்டம் இடமளிக்கிறது, ஆகவே, குடியரசுதலைவர் நேரில் வந்து விசாரணையின் போது அல்லது குற்றச்சாட்டுக்குப் பதில் சொல்லும்பொழுது குடியரசு தலைவர் என்ற முறையில்

உயர்ந்த இடத்தில் அமரவேண்டும். அதாவது நீதிபதியைவிட உயர்ந்த இடம் என்பது பொருள். குடியரசு தலைவர் உயர்ந்த இடத்திலும் நீதிபதி தாழ்ந்த இடத்திலும் அமர்ந்தால் ஒரு பாரபட்சமில்லாத முடிவை எதிர்பார்க்க முடியாது. மேலும், பாராளுமன்றத்தின் மக்கள்சபை குற்றச்சாட்டுத் தீர் மானத்தை நிறைவேற்றி மாநிலங்களின் அவைக்கு அனுப்பினால் அங்குத் துணைக்குடியரசு தலைவர்தாம் தலைமை வகிக்கிறார். தலைவரை, அவர்கீழ்ப் பணி புரியும் துணைத்தலைவர் விசாரணை செய்யவேண்டிய கட்டம் வந்துவிடுகிறது. தீர்ப்பு எப்படி இருப் பினும் நியாயமான தீர்ப்புத்தான் என்று முழுமனத்துடன் ஏற்றுக் கொள்ளமுடியாதபடி இது அமைந்திருக்கிறது. குடியரசுதலைவர் தமக்குத்தாமே வாதாடத் தீர்மானிக்கும்பொழுது குழப்பங்கள் ஏற்பட ஏதுவாகிறது. குற்றஞ்சாட்டப்பட்ட எந்த மனிதனும் தனக்குத்தானே வாதாட உரிமை பெற்றிருக்கிறான் என்பது பாரபட்சமற்ற, நியாயமான விசாரணையின் ஆரம்பக் கொள்கை யாகும். தனிமனிதனின் இந்த உரிமையைக் குடியரசு தலைவர் உபயோகப்படுத்தினால் நீதிமன்றத்தின் எந்த இடத்தில் குடியரசு தலைவரை அமரச் செய்வது என்பது பெருங் கேள்வியாகத் தோன்றுகிறது. ஏனென்றால், விசாரணையின்போதும் அவர் குடியரசு தலைவர் பதவியை வகிக்கின்றார். பதவி வரிசைப்படி பார்த்தால் நீதிபதி அவரைவிடத் தாழ்ந்தவரே ஆவார். விசாரணை நடத்துவது எப்படி? இது ஒழுங்கற்ற தன்மைகொண்ட தாக ஆகிவிடாதா? இத்தகைய நிலை ஏற்படும்பொழுது அமெரிக்க நடைமுறையைப் பின்பற்றலாம். நீதித்துறையின் முக்கிய அங்கமாக விளங்கும் தலைமை நீதிபதி, நீதித்துறையி லேயே முக்கியமான பதவியிலிருப்பவர் தம் இருக்கையில் அமர்ந்து விசாரணை செய்யலாம். அதற்குச் சமமான இருக்கையை வேண்டு மானால் குடியரசு தலைவருக்கு விசாரணையின்போது கொடுக் கலாம். சாதாரணமாக மக்கள்சபையில்தான் குற்றச்சாட்டுத் தீர்மானங்கள் நிறைவேற்றப்படும். ஏனெனில், மாநிலங்களின் அவை மக்கள்சபையைப் போல் 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டதன்று. அது ஓர் அரை நிரந்தரச் (Semi-permanent) சபையாகும். அரசுக்கு மக்கள்சபையில் தான் சாதாரணமாக அதன் அதிகப்படியான உறுப்பினர்கள் ஆதரவு இருக்கும்.

அரசியல் சட்டத்தின் 61ஆவது விதி மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில், அரசியல் சட்டத்தை வேண்டுமென்றே புறக்கணித்து, மீறி நடக்கும் ஒரு குடியரசு தலைவரின்மீது குற்றம் சுமத்தி விசாரணை செய்வது என்பது அவ்வளவு சுலபமான

காரியம் அன்று. மேலும் குற்றச்சாட்டுச் சுமத்துவது என்று மக்கள்சபை அல்லது அமைச்சரவை முடிவெடுத்தாலும், குடியரசு தலைவர் அதற்கு உடன்படாமல் தப்பித்துக் கொள்ள எத்தனையோ வழிகள் உள்ளன. முதலில் குடியரசு தலைவர் தாம் பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டும். தம் மேல் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப் போகிறார்கள் என்று குடியரசு தலைவர் சந்தேகித்தால் பாராளுமன்றத்தைக் கூடாமல் இருக்கும்படியும் செய்யலாம். மேலும், பாராளுமன்றக் கூட்டம் நடக்கும் பொழுதே சபைகளைக் கலைக்கலாம். அல்லது பாராளுமன்றம் கூடாமல் தள்ளி (proroque) வைக்கலாம். குற்றச் சாட்டுத் தீர்மானங்களை அவையில் அனுமதிக்கும் போதும், விசாரணையின் பொழுதும் அல்லது குடியரசு தலைவரை பதவி நீக்கம் செய்யும் பொழுதும் எடுத்திருக்கும் நடவடிக்கையின் ஒவ்வொரு படியிலும் தாமதம் ஏற்பட ஆவன செய்யக் குடியரசு தலைவரால் முடியும்.

மேலும், தப்புவதற்கான வழிகளுள் முக்கியமானது என்று கருதப்படுவது குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டுவிட்டது என்றால் மற்றொரு சபையின் (விசாரணை செய்யும் சபையின்) 3-ல் 2 பங்கு உறுப்பினர்கள் குற்றச்சாட்டுத் தீர்மானத்தை ஆமோதிக்க வேண்டும். விசாரணை செய்யும் பிரிவின் குற்றம் நிரூபிக்கப்பட்டது என்ற முடிவை மற்றொரு சபையின் 3-ல் 2 பங்கு உறுப்பினர்களைக் கொண்டு ஆமோதிக்க மறுத்தால் என்ன ஆவது? ஆகையால், குற்றம் நிரூபிக்கப்பட்டாலும் ⅔ பங்கு உறுப்பினர்கள் குற்றச் சாட்டை ஆதரிக்காவிட்டால் குடியரசு தலைவரைப் பதவி நீக்கம் செய்ய அரசியல் சட்டம் இடம் தரவில்லை.

(துரோக) குற்றச்சாட்டிற்கு வேண்டிய ஆதாரங்கள் (Grounds for Impeachment)

இந்திய அரசியலமைப்பின்படி சட்ட விரோதமான செயல்களுக்குத்தான் குடியரசு தலைவரை, குற்றச்சாட்டிற்கு உட்படுத்த முடியும். ஆனால், அமெரிக்க நாட்டில் தேசத்துரோகம், இலஞ்சம் அல்லது இவை போன்ற பெரிய குற்றங்கள், ஒழுங்கின்மை (Misdemeanours) போன்றவற்றிற்காக அமெரிக்கத் தலைவரைக் குற்றஞ்சாட்ட அந் நாட்டு அரசியல் அமைப்பு வகை செய்துள்ளது. அயர் (Eire ) நாட்டு அரசியலமைப்பிலும், பர்மா (Burma) நாட்டு அரசியலமைப்பிலும், 'ஒழுங்கீனமான நடத்தை'க்காக அந் நாட்டு ஆளுநரைக் குற்றச்சாட்டில் பதவியிலிருந்து இறக்கலாம். ஐக்கிய அமெரிக்க நாட்டின் சில துரோகக்குற்ற விசாரணைகளைப்

(Impeachment) பரிசோதித்துப் பார்த்தால் இந்தத் 'துரோகக் குற்ற விசாரணை' என்ற சொற் கூறுகளுக்கான (Terms) அர்த்தங்கள் குற்ற விசாரணையின் நோக்கம், குற்றங்களின் தன்மை போன்றவை நமக்குத் தெளிவாகும்.

*1804*-ஆம் ஆண்டு நியூ ஆம்ஷயர் (New Hampshire) மாநிலத்தின், மாவட்ட நீதிபதியான நீதிபதி பிக்கரிங் (Judge Pickering) என்பவரை விசாரணை செய்து, குற்றவாளி எனத் தீர்ப்பளித்துப் பதவியிலிருந்து நீக்கினர். அவருடைய பதவி செயல் வகையில் வழக்குத் தொடர்வதற்குரிய குற்றங்களுக்காக (Indictable Offences) அன்று. ஆனல், குடி, சீரான ஒழுக்கமின்மை (Loose Morals) போன்ற சில தனிப்பட்ட தீய பழக்கங்களுக் காகவும் நீதிபதியின் தகுதிக்குக் களங்கம் கற்பிக்கும் வகையில் நீதிமன்றத்தில் நடந்து கொண்டமைக்கும்தான் அவர் பதவி யிலிருந்து தள்ளப்பட்டார்.

*1805*-ஆம் ஆண்டு தலைமை நீதிமன்றத்தின் நீதிபதி சேஸ் என்பவர் (Justice Chase) தம்மிச்சையாகச் சர்வாதிகாரமான முறையில் நடந்து கொள்ளுதல், நியாயமற்ற நேர்மையற்ற முறை, பிறரை அடக்கியாள்வது (Oppressive) தம்முடைய நீதித் துறைக் கடமைகளைப் புறக்கணிப்பது போன்ற தவருன நடத்தைக்காகப் (Misdemeanours) பதவியிறக்கம் செய்யப் பட்டார்.

*1862*-ஆம் ஆண்டு டென்னிசி (Tennessee)யின் நீதிபதி ஹம்ப்ரேஸ் (Judge West H. Humphreys) என்பவர் நாட்டுக் கூட்டத்திற்கு (Confederation) ஆதரவாக இருந்ததால் குற்றஞ் சாட்டப்பட்டுப் பதவியிலிருந்து நீக்கம் செய்யப்பட்டார்.

*1868*-ஆம் ஆண்டு அமெரிக்கக் குடியரசுதலைவர் ஆண்ட்ரூ ஜான்சன் (Andrew Johnson) ஒழுங்கின்மை, அமிதமான- ஆத்திரமூட்டக்கூடிய பேச்சுகள், சட்டத்திற்குப் புறம்பான தீர்மானங்கள் இவற்றிற்காகக் குற்றம் சாட்டப்பட்டார். *11* குற்றச்சாட்டுகளுள் 5 குற்றச்சாட்டுகள் 'அரசியலமைப்பை மீறினதற்காக' என்று கண்டிருந்தன. இந்த அரசியலமைப்பை மீறினதற்காக என்ற சொல் இந்தியக் குடியரசு தலைவரின் குற்ற விசாரணைக்கு ஓர் அடிப்படையாக இந்திய அரசியலமைப்பிலும் இருப்பதைக் காணலாம்.

இலஞ்சம், ஊழல் இவை போன்ற பெரிய குற்றங்கள், ஒழுங் கின்மை ஆகியவற்றிற்காகவும் குற்றம் சுமத்திக் குடியரசுதலைவர் பதவியிலிருப்பவரைப் பதவியிறக்க அமெரிக்க அரசியலமைப்பில்

இடமிருக்கிறது. உதாரணமாக அமெரிக்கக் குடியரசுதலைவர் நிக்சன் (Nixon) வாட்டர் கேட் ஊழலை (Water gate Scandal) முழுமூச்சுடன் மறைக்க முயன்றதன் சார்பில் வாதாடிய சட்ட வல்லுநருக்கு உண்மையை மூடி மறைத்துத் தமக்கும் ஊழலுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என்று அடிக்கடி கூறிப் பிறகு விவகாரம் முற்றிப் போய், தமக்கு முழுக்க முழுக்க ஊழலில் பங்கு இருப்பதை நிரூபிக்க முயன்ற விசாரணைக்குழு வெற்றி யடைந்தவுடன் இராஜினாமா செய்யமாட்டேன் என்று அடம் பிடித்த நிக்சன், இனிக் குற்றச்சாட்டிலிருந்து தப்பமுடியாது என்று அறிந்ததும் ஆகஸ்ட் 10, 1974-ல் இராஜினாமா செய் தார். பின்பு குடியரசு தலைவரான போர்டு (Ford) தம் மன்னிக் கும் அதிகாரத்தைப் பயன்படுத்தி நிக்சனை மன்னித்து அந்த வழக் கிற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

நமது அரசியலமைப்பின் எந்தப்பிரிவும் அரசியல் சட்டத்தை மீறிய செயல்கள் எவை என்று விவரிக்கவில்லை. ஆனால், டாக்டர் அம்பேத்கார் அரசியல் நிர்ணயசபையில் இதுபற்றிக் குறிப்பிடும் பொழுது 'சட்ட விரோதமான செயல்' என்பது பரந்த பொரு ளுடைய சொற்றொடர். அதில் தேசத்துரோகம், இலஞ்ச ஊழல் போன்ற பெரிய குற்றங்கள், ஒழுங்கீனம் முதலியன சேரும் என்று கூறியுள்ளார். ஆகவே, மேற்கூறியவை சட்டவிரோத மான செயல்களாகக் கொள்ளப்படும்.: அமெரிக்க அரசிய லமைப்பில் பெரிய குற்றங்கள், ஒழுங்கீனங்கள் என்பனவற்றிற்கு நடைமுறையில் ஒரு விரிவான அர்த்தத்தைக் கொடுத்திருக்கி றார்கள். அவையாவன: நன்னடத்தையின்மை, தெரிந்து செய்யும் ஒழுங்கீனமான செயல்கள், பதவிக்கே இழுக்கு அல்லது மரியாதையைக் குறைக்கும் செயல்கள், அரசியல் சட்டத்தைப் புறக்கணித்து எதேச்சாதிகாரமாக நடந்து கொள்ளுதல் ஆகியவைகளாகும்.

அரசியல் சாசன நிபுணர், ஹாமில்டன் (Hamilton) என்பவர், 'குடியரசுதலைவர்மேல் சுமத்தப்பட்ட குற்றச் சாட்டைப்பற்றி விசாரணை நடத்தும் உரிமை, பொது வாழ்வில் இருக்கும் மனிதர்களின் ஒழுங்கீன நடத்தையில் ஏற் படும் குற்றங்கள் அல்லது அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட பொது நம்பிக்கைக்குப் பாத்திரமில்லாமல் நடந்து கொள்வது இவற்றிற்காக விசாரணை செய்யும் நீதிமன்றங்களுக்கு இருக் கின்றது. ஏனென்றால், இத்தகைய செயல்கள் சமூகத்திற்கே ஊறு விளைவிப்பதாகும்,' என்று கூறுகிறார்.

குடியரசு தலைவர் பதவி உரிமை (Succession to Presidency)

குடியரசு தலைவர் பதவியிலிருப்பவர் மரணமடைந்தாலோ இராஜினாமா செய்தாலோ குற்றச்சாட்டுகள் மூலம் பாராளு மன்றத்தால் பதவிநீக்கம் செய்யப்பட்டாலோ குடியரசின் துணைத் தலைவர் (Vice-President) குடியரசு தலைவரின் பணிகளைத் தாற்காலிகமாகக் கவனிப்பார் என்று இந்திய அரசியலமைப்புக் கூறுகிறது. ஒரு புதிய குடியரசு தலைவர் சட்டப்படி தேர்ந் தெடுக்கப்பட்டுப் பதவியில் அமரும்வரை குடியரசின் துணைத் தலைவர் குடியரசு தலைவரின் கடமைகளைச் செய்வார். அரசியல் சட்டத்தில் இதற்கான விதிகள் உள்ளன. எந்தக் காரணத்திற் காகவாவது குடியரசு தலைவர் தம் பணிகளைச் செய்ய முடியா விட்டால் (உடல் நலமின்மை, வெளிநாட்டிற்கு வருகை புரிதல் அல்லது வேறு காரணங்களுக்காக) துணைத்தலைவர் அப் பணிகளில் (குடியரசு தலைவர் திரும்பத் தம்கடமைகளை மேற்கொள்ளும் வரை) குடியரசு தலைவரின் சார்பில் ஈடுபடுவார். இதில் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது என்னவெனில், துணைத்தலைவர் அரசியல் சட்டம் விதி 65 (1)-ன் கீழ்ச் செயற்படும் பொழுது 'தாற்காலிகக் குடியரசு தலைவராகப் பணியாற்றும் துணைத்தலைவர்' என்று அழைக்கப்படுவார் (Vice-President acting as President). உதாரணமாக ஜாகிர்ஹுசெயின் (Zahir Hussain) மரணத்திற்குப் பிறகு துணைத்தலைவராக இருந்த V.V. கிரி மேற்கூறியபடி குடியரசு தலைவர் பதவி வகிக்க (தாற்காலிகமாக) அழைக்கப்பட்டார். தாற்காலிகமாகக் குடியரசு தலைவரின் பொறுப்புகளை வகிக்கும் பிரச்சினை அப் பதவி காலியாக இருந்த பொழுது எழுந்தது. குடியரசு தலைவரான டாக்டர் இராஜேந்திர பிரசாத் தம் பொறுப்புகளைக் கவனிக்க முடியாத நிலையில் அப்பொழுது துணைக்குடியரசு தலைவராக இருந்த டாக்டர் இராதாகிருஷ்ணன் 'குடியரசு தலைவர் கடமைகளை முடிக்கும் துணைத்தலைவர்' என்று கையொப்பமிட்டார். இதேபோல் டாக்டர் இராதாகிருஷ்ணன் குடியரசு தலைவராக இருந்து உடல்நலக் குறைவால் பொறுப்பு களைக் கவனிக்க இயலாதபோது துணைத்தலைவராக அப்போதிருந்த டாக்டர் ஜாகிர் உசேன் அப்பொறுப்புகளைக் கவனித்தார்.

இந்திய அரசியலமைப்பு, குடியரசு தலைவரின் பதவிக்காலம் முடிந்ததாலோ மரணம், இராஜினாமா, பதவி நீக்கம் அல்லது வேறு காரணங்களாலோ அப்பதவி காலியாக இருக்கும் பட்சத் தில் அப்பதவிக்கு வேறு ஒருவரை நியமனம் செய்ய வழிசெய் கிறது. (Art. 59), ஒரு புதிய குடியரசு தலைவரை, பதவியிலிருக்கும் குடியரசு தலைவரின் பதவிக்காலம் முடியுமுன் தேர்ந்தெடுக்க வேண்டும் (Art. 60). புதிய குடியரசு தலைவர் அப்படித் தேர்ந்

தெடுக்கப்படாவிட்டால் தற்சமயம் பதவியிலிருப்பவர் ஒரு புதிய குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்கப்படும் வரை தொடர்ந்து பதவியில் இருப்பார். குடியரசு தலைவர் பதவியிலிருப்பவர் மரண மடைந்தாலோ வேறு எந்தக் காரணத்தாலோ, அவர் சாதாரண மாகப் பதவியிலிருந்து விலகும் காலத்திற்கு முன்பு அப்பதவி காலியாக இருந்தால், ஒரு புதிய குடியரசு தலைவரை, அப்பதவி காலியான நாளிலிருந்து 6 மாத காலத்திற்குள் தேர்ந்தெடுக்க வேண்டும். இந்தப் புதிய குடியரசு தலைவர் தமக்கு முன்னால் பதவி வகித்தவரின் மீதமுள்ள பதவிக் காலத்திற்கு மட்டு மல்லாமல், ஒரு குடியரசுதலைவரின் முழுமையான பதவிக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இந்த இடைவெளிக் காலத்தில் ஒரு புதிய குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை இந்தியக் குடியரசின் துணைத்தலைவர், குடியரசு தலைவருக் குள்ள அலுவல்களையும் கடமைகளையும் செயலாற்றுவார். அமெரிக்கக் குடியரசின் துணைத்தலைவர்போல் அல்லாமல் இந்தியத்துணைத்தலைவர் தற்செயலாக ஏற்படும் காலியான பதவியை நிரப்புகிறார். எக்காரணங் கொண்டும் அப்பதவி காலியான நாளிலிருந்து 6 மாத காலத்திற்கு மேல் அவரால் அப்பதவியை வகிக்க முடியாது. பதவியிலிருந்தவரின் மீதமுள்ள பதவிக் காலத்திற்கும் அவரால் குடியரசு தலைவராகப் பணியாற்ற முடியாது. ஆனால், அமெரிக்கக் குடியரசின் துணைத்தலைவர், குடியரசு தலைவர் பதவி காலத்திற்குள் இறந்து விட்டாலோ, பதவி நீக்கம் அல்லது இராஜினுமா செய்து விட்டாலோ, குடியரசு தலைவர் பதவியை உடன் வகிக்க அமெரிக்க அரசியலமைப்பு வழி செய்திருக்கிறது.

குடியரசு தலைவர் தம்முடைய பதவிக்கான கடமைகளை, உடல் நலக்குறைவு, அலுவலகத்திற்கு வராமை (Absence) அல்லது வேறு காரணங்களுக்காகத் தம் அலுவல்களைக் கவனிக்க இயலாமை ஆகிய இக்காரணங்களுக்காகத் தம் அலுவல்களைச் செய்ய முடியாமல் போனுல்கூடத் துணைத்தலைவர், குடியரசு தலைவரின் பணியாற்ற அழைக்கப்படுகிறார்.

துணைக்குடியரசு தலைவர் பதவி காலியாக இருக்கும் பொழுது, குடியரசு தலைவர் இறந்தாலோ நோய்வாய்பட்டு அலுவல்களைக் கவனிக்க இயலாவிட்டாலோ, பதவிநீக்கம் அல்லது இராஜினுமா செய்தாலோ என்ன ஆவது? இப்படிப்பட்ட எதிர்பாராத அசம்பாவிதங்களைச் சமாளிக்கப் பாராளுமன்றத்திற்குக் குடியரசு தலைவரின் கடமைகளை ஆற்றத் தகுந்த அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது.

குடியரசு தலைவரால் தம் கடமைகளைச் சரிவரச் செய்ய முடியும் அல்லது அவரால் தம் கடமைகளைச் செய்ய முடியாது என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரத்தை யாரிடமும் இந்திய அரசியலமைப்புக் கொடுக்கவில்லை. அரசியலமைப்பில் இந்த விஷயம் குறித்து எந்தக் குறிப்பும் இல்லாததால், தம்முடைய பதவிக்கான அலுவல்களை எந்த நேரத்தில் செய்யமுடியாது போகும் என்பதைக் குடியரசு தலைவரே தீர்மானம் செய்ய வேண்டியது அவருடைய முதற் கடமையாகிறது. ஆனால், ஒரு வேளை, குடியரசு தலைவர் எந்தக் காரணத்திற்காகவும், உதாரணமாக, திடீரென நோய் வாய்ப்பட்டு, தம்மால் சரிவர அலுவல்களைச் செய்ய முடியுமா முடியாதா என்பதைத் தீர்மானிக்க முடியாத நிலையில் இருந்தால் அரசியலமைப்பின் 70ஆவது விதிப்படி அதைப் பாராளுமன்றம் தீர்மானிக்கும்.

குடியரசு தலைவரின் பதவிக் காலம் முடிவடைந்தவுடன் அவருடைய பதவி தானாகவே (automatically) காலியாவதில்லை. ஆனால், பதவி காலி மட்டும் (Vacancy) ஏற்படுகிறது. அரசியலமைப்பு விதி எண் 56 (1) (இ)யின்படி புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசு தலைவர், பதவியை ஏற்கும் வரை அப் பதவியைத் தற்சமயம் வகிப்பவர் தொடர்ந்து வகிப்பார். 'புதிய குடியரசு தலைவர்' என்ற வார்த்தை துணைத்தலைவரைக் (Vice-President) குறிப்பிடவில்லை. ஏனென்றால், சாதாரணமாக அடுத்துவரும் குடியரசு தலைவர் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்படுகிறார். பதவி விலகும் குடியரசு தலைவர் புதிதாக அப் பதவிக்குத் தேர்ந்தெடுத்தவர் பதவியை ஏற்கும்வரை தொடர்ந்து பதவி வகிப்பார் என்ற விதி, எங்கே நம்முடைய நாடு தற்செயலாகவும் ஒரு குடியரசுதலைவர் இல்லாமல் போய்விடுமோ என்ற அச்சத்தில், ஒரு பாதுகாப்பிற்காக இந்திய அரசியலமைப்பில் சேர்க்கப் பட்டுள்ளது. இத்தகைய நிகழ்ச்சி கீழே கொடுக்கப்பட்டிருக்கிற இரண்டு முறைகளுள் ஏதாவதொன்றில் நடக்க வழியிருக்கிறது. முதலில், பதவிக்காலம் முடிவடைந்தவுடன் பதவி விலகும் குடியரசு தலைவரின் பொறுப்பை, அடுத்துவரும் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் வெளிநாடு சென்றிருந்தாலோ நோய்வாய்ப் பட்டிருந்தாலோ குறிப்பிட்ட தினத்தில் பதவிப் பிரமாணம் எடுக்கமுடியாமல் அப்பதவியை ஏற்கமுடியாமல் போய்விடக்கூடும். அல்லது, இரண்டாவதாக, குடியரசு தலைவராகப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் தற்செயலாக இறந்து விட்டாலும் இந்நிலை ஏற்படக் கூடும். இத்தகைய நிகழ்ச்சி பதவியை விட்டு வெளியேறும் குடியரசு தலைவர் அடுத்து அப் பதவிக்கு வருபவரிடம் பதவியை ஒப்படைக்காமல் பதவிக்

—4

காலம் முடிவடைந்தவுடன் பதவி விலகினால் நாட்டில் தலைமை இல்லாமல் போய்விடும். ஆகையால், இத்தகைய நிகழ்ச்சிகள் ஏதும் நடைபெற வழியில்லாமல் அடுத்த குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் அப்பதவியை ஏற்கும்வரை, பதவி வகிப்பவர் தொடர்ந்து இருப்பார்.

துணைத்தலைவரைப்பற்றி முதலில் எந்தக்குறிப்பும் அரசியலமைப்பில் இல்லாதபோது அப் பிரிவு சேர்க்கப்பட்டது. ஆனால், இடைவெளி துணைத்தலைவரைக் கொண்டு நிரப்பப்பட்ட பிறகும் இந்த அரசியல் சட்டத்தில் இப் பிரிவை எடுக்கவில்லை. சட்டத்தின் இத்தகைய விதி பின்னோக்கிச் செல்வதாக இருக்கிறது. குடியரசு தலைவருக்குப் பிறகு துணைத்தலைவர் அப் பதவிக்கு அடுத்துவருபவராகவும் குடியரசுதலைவர் அப்பதவியை, பதவிக்காலம் முடிந்தவுடன் ஒப்படைக்கும் அதே நாளில் அடுத்து வருபவர் அப்பதவியை ஏற்கும், இடைவெளியே இல்லாத ஓர் ஏற்பாடாக இருந்தால் அது உண்மையிலேயே மிக நன்றாக இருந்திருக்கும். ஏனென்றால், அரசியலமைப்பை உண்டாக்கியவர்களின் கண்களுக்குத் தோன்றாத மற்றொரு நிகழ்ச்சி தற்செயலாக நடக்க வழியிருக்கிறது. ஒருவேளை பதவிக்காலம் முடிந்தவுடன் வெளியேறும் குடியரசு தலைவர் மறுதேர்தலில் தாமே திரும்பவும் குடியரசு தலைவராக வருவதற்கான வாய்ப்பு இல்லை என்பதை அறிந்தவராகக் குறுகிய எண்ணங்களுடன் பழிபாவங்களுக்கு அஞ்சாத மனிதராகவும் அமைந்து விட்டால், தம் அதிகாரத்தைப் பயன்படுத்திப் பாராளுமன்றத்தைக் கலைத்தோ மற்ற சில மாநிலங்களின் சட்ட மன்றங்களைக் கலைத்தோ, தம்மைப் பதவியில் இருத்திக் கொள்வார். அரசியலமைப்பு விதி எண் 54-ன் படி, பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட இருசபைகளின் உறுப்பினர்களும் மாநிலச் சட்டமன்றங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் கொண்ட ஒரு தேர்தல் கல்லூரிதான் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று இருப்பதால் இந்த எல்லாச் சபைகளும் இருந்து, அவை சாதாரணமாகத் தங்கள் அலுவல்களைக் கவனிக்கும் வரை தேர்தல் நடத்த முழுமையான வாய்ப்பு இருக்காது. ஏற்கெனவே கூறியிருப்பது போல், பாராளுமன்றத்தையோ, மாநிலங்களின் சட்ட மன்றங்களைக் கலைத்தோ, குடியரசு தலைவர் வரையறை செய்யப்பட்ட காலத்திற்கு மேல் நீண்ட காலம் தம்மைப் பதவியில் இருத்திக் கொள்ளலாம். அரசியலமைப்பு விதி எண் 71 (1)-ன் படி, முடிவான தீர்ப்பு இந்தியாவின் தலைமை நீதிமன்றத்திடம் (Supreme Court) இருந்தாலும் பழிபாவங்களுக்கு அஞ்சாத மனிதர் குடியரசுதலைவர் பதவி வகித்தால், பாராளுமன்றத்தைத் தேர்

தலுக்கு முன் கலைத்தோ தம் விருப்பத்திற்கு எதிராகச் செயற்படும் மாநிலத்தின் சட்டசபையைக் கலைத்தோ அத்தகைய சூழ்நிலையை உருவாக்கலாம்.

குடியரசு தலைவரின் பதவிக்காலம் முடிந்தவுடன் உடனடியாகத் துணைத்தலைவர் தாற்காலிகமாகக் குடியரசு தலைவர் பதவி ஏற்பார் என்றும் தொடர்ந்து அவரே அப்பதவியில் இருக்காமல் விதி 56 (1) (இ) யின்படி புதிய குடியரசு தலைவர் தேர்ந்தெடுத்தவுடன் அப்பதவியை அவரிடம் ஒப்படைத்து விலகுவார் என்றும் அரசியலமைப்பைத் திருத்தி அமைத்தால் இத்தகைய அபாயமான சூழ்நிலை உருவாகாத வண்ணம் தடுக்கலாம்.

# 3. இந்திய அரசாங்கத்தின் தலைமை நிருவாக அதிகாரியாகக் குடியரசு தலைவர்

இந்தியக் குடியரசின் தலைவர் என்ற முறையில் மற்ற எல்லா அலுவலர்களுக்கும் மேலாக அரசில் முதல் இடம் பெறுகிறார் குடியரசு தலைவர். இந்திய அரசின் தீர்மானங்களைச் செயற் படுத்தும் செயற்குழுவின் தலைவர் என்ற முறையிலும், முப்படை களின் தளபதி என்ற முறையிலும், நேரிடையாகவோ அவர்க்குக் கீழ் உள்ள அதிகாரிகள் மூலமாகவோ அவர் செயற்படலாம். இப்படிப்பட்ட அதிகாரம் அவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலும் அவர் தம்மிச்சையாக எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. அரசியலமைப்பில் கண்டுள்ள விதிகளின்படிதான் அவர் செயற்பட வேண்டும். ஆகவே, தீர்மானங்களை நிறைவேற்றும் அதிகாரம் குடியரசு தலைவருக்கு மட்டுமே உள்ளதால் ஒன்று அவரே அதை நேரிடையாகச் செய்ய வேண்டும் அல்லது தமக்குக் கீழ்உள்ள அதிகாரிகளைக் கொண்டு செய்ய வேண்டும். குடியரசு தலைவ ருக்குக் கீழ்உள்ள அதிகாரிகளைத்தவிர வேறுயாரும் அரசு செயல்களைச் செய்யமுடியாது.

### அமைச்சர்கள்

அமைச்சர்கள், குடியரசு தலைவருக்கு உதவியும் ஆலோசனையும் சொல்வதைத் தவிர, தீர்மானங்களையும் நிறைவேற்றுகிறார்கள். அரசியலமைப்பின் எந்த விதியும் அமைச்சரவைக்குத் தீர்மானங் களைச் செயற்படுத்தும் அதிகாரத்தைக் கொடுக்கவில்லை. குடியரசு தலைவர் ஒருவருக்குத்தான் அந்த அதிகாரத்தைக் கொடுத்திருக் கிறது (விதி எண் 53). எனவே, அமைச்சர்கள் குடியரசு தலைவ ருக்குக்கீழ் உள்ள அதிகாரிகளா (அலுவலர்களா) என்ற கேள்வி எழுகிறது. அப்படிக் குடியரசு தலைவருக்குக் கீழ்உள்ள அதிகாரிகளாக இருந்தால்தான் தீர்மானங்களைச் செயற்படுத்த

முடியும். இந்த விதமான ஒரு கேள்வி இந்திய அரசு சட்டம் 1935-ன் (Govt. of India Act, 1935) கீழ் எழுந்தது. அது சம்பந்த மான வழக்கில் கல்கத்தா (மேற்கு வங்காளம்) நீதிமன்றம் அளித்த தீர்ப்பை ரத்துசெய்து இங்கிலாந்து நாட்டின் பிரிவி கௌன்சில் (Privy Council) 'அமைச்சர்கள் S. 49 (1) பிரிவின் படி ஆளுநருக்குக் (Governor) கீழ்ச் செயற்படும் அதிகாரிகளே,' என்று தீர்ப்பளித்தது. எனவே, நமது அரசியல் சட்டமும் இதே சொற்றொடரை உபயோகப் படுத்துவதால் அமைச்சர்கள் குடியரசு தலைவருக்குக் கீழ்ப் பணிபுரியும் அதிகாரிகளே என்று கொள்ளவேண்டும். மேலும், சரியான அரசியல் சட்ட நிலைப்படி அமைச்சர்கள் இரண்டு விதமாகச்செயற்படவேண்டியிருக்கிறது. ஒன்று குடியரசு தலைவருக்கு நிருவாக சம்பந்தமாகவும் கொள்கை சம்பந்தமாகவும் (Formulation of Policy) ஆலோசனைகள் கூறுவது (விதி எண் 71). மற்றொன்று அரசு நிருவாகப் பிரிவு களின் தலைவர்கள் என்ற முறையில் குடியரசு தலைவருக்குக் கீழ் உள்ள அதிகாரிகளாகையால் அன்னாரின் கட்டளைகளை நிறை வேற்றுவது, அமைச்சர்களின் இந்த இரண்டு விதமான செயல் களுக்கிடையே வேறுபாடு அவ்வளவாக நமக்குத் தெரியா விட்டாலும் அதை உணர்ந்து கொள்ளக்கூடிய அளவிற்கு நம்மால் முடிகிறது. ஓர் அமைச்சருக்கு ஆலோசனை சொல்லக் கூடிய பாகம் மட்டும் இருந்தால், அவர் நிருவாகப் பிரிவின் தலைவ ராக இல்லாமல் (Minister without Portfolio) ஆலோசனை கூறுவ தற்கு மட்டும் அமைச்சராக இருப்பதும் இந்திய அரசியலமைப் பின்படி சாத்தியமே.

**அரசியலமைப்பு ஒன்றே குடியரசு தலைவரின் அதிகாரங்களைக் கட்டுப் படுத்துகிறது**

குடியரசு தலைவரின் அதிகாரங்களுக்கு எந்தவிதமான வரம்புகள் அல்லது கட்டுப்பாடுகள் உள்ளன என்பதை அரசியலமைப்புக் காட்டுகிறது. அரசியலமைப்பு விதி எண் 53-ல் கண்டுள்ளபடி குடியரசு தலைவரின் அதிகாரங்களைப் பாராளுமன்றம், குறைக்கவோ கூட்டவோ மாற்றி அமைக்கவோ, அரசியலமைப்பில் திருத்தங்கள் கொண்டுவராமல், சட்டம் செய்ய முடியாது. ஆனால், அரசியலமைப்பின் விதி எண் 53 (3) (6)-ன் கீழ்ப் பாராளுமன்றம் குடியரசு தலைவருடைய கடமைகளை, மற்ற அதிகாரிகளுக்குச் சட்டத்தின்மூலம், செயலாக்க அதிகாரம் கொடுத்திருக்கிறது. அத்தகைய கடமைகள் மத்திய அரசாங்கத்தின் நிருவாக அதிகாரத்துக்குச் சம்பந்தமுடையதாக இருக்கலாம். ஆனால், அவை குடியரசு

தலைவருக்கோ அவர் கீழ்ப் பணிபுரிபவர்களுக்கோ உள்ள அதிகாரத்திற்கு அப்பாற்பட்டவையாகும். இதைத் தவிர அரசியலமைப்பிலுள்ள சில விதிகள், குடியரசு தலைவரின் அதிகாரப் பிரயோகத்தை முறைப்படுத்திச் சட்டம் இயற்றப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் கொடுத்துள்ளது. பாராளுமன்றம் தன் உசிதப்படி அதன் சட்டங்களைச் செயற்படுத்த அரசாங்க இயந்திரத்தைப் பயன்படுத்தலாம் அல்லது குழுக்கள், அலுவலகங்களை ஏற்படுத்திச் செயற்படுத்தும் அதிகாரத்தை அவற்றிடம் ஒப்படைக்கலாம். தன்னால் உண்டாக்கப்பட்ட குழுக்களுக்கும், அலுவலகங்களுக்கும் ஆள்களைக் கூடப் பாராளுமன்றமே நியமித்துத் தன் காரியங்களைச் செயற்படுத்தலாம். எனினும், இந்திய அரசைச் செயற்படுத்தும் அதிகாரத்தை, (Executive Powers) குடியரசு தலைவரிடமிருந்து குறைக்கவோ, எடுக்கவோ அரசியல் சட்டத்தில் இடம் இல்லை.

குடியரசு தலைவர் தலைமை வகிக்கும் இந்திய அரசின் செயற்குழுவின் பிரிவு பரந்து விரிந்து உள்ளது. அரசியலமைப்பு விதி எண் 73 (அ)வில் கண்டுள்ளபடி, பாராளுமன்றம் சட்டம் இயற்றக் கூடிய எல்லா இடங்களுக்கும், பிரிவுகளுக்கும் இந்திய அரசின் அதிகாரம் செல்லுபடியாகும். மேலும், எந்த அளவுக்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் உள்ளதோ அந்த அளவிற்குச் சட்டத்தை செயற்படுத்தும் அதிகாரமும் அரசுக்கு உண்டு. விதி எண் 246-ன் கீழ்ப் பட்டியல் 1ல் (List I) கண்டுள்ள எல்லா விஷயங்கள் குறித்தும் சட்டம் இயற்றலாம். (Union list is list I) மேலும், இந்திய அரசுக்கும் மாநில அரசாங்கங்களுக்கும் பொதுவாக உள்ள விஷயங்கள் (பட்டியல் III list III) குறித்தும் சட்டம் இயற்றலாம்.

அரசியலமைப்பு விதி எண் 73 (1)-ல் கண்டுள்ள குறிப்புப்படி இந்திய அரசின் தீர்மானங்களைச் செயலாக்கும் அதிகாரம் மாநில சட்ட மன்றங்களுக்கு இதே விஷயங்களுக்குச் சட்டம் கொண்டு வரும் உரிமை இருக்கும் பொழுது அங்குச் செல்லுபடியாகாது. அரசியலமைப்போ சட்டத்தின்மூலம் பாராளுமன்றமோ இத் தகைய அதிகாரத்தை மத்திய அரசுக்குக் கொடுத்தாலொழிய மாநில விஷயங்களில் மத்திய அரசு தலையிட வாய்ப்பில்லை. மத்திய மாநில அரசுகளுக்குப் பொதுவாக உள்ள விஷயங்களைக் குறித்துப் பாராளுமன்றமே சட்டம் உருவாக்கினாலும், அச் சட்டத்தை மத்திய அரசே செயலாக்கவேண்டும் என்று பாராளுமன்றம் உத்தரவு இடாத நிலை அச் சட்டத்தை மாநில அரசுகளே அமல் படுத்தவேண்டும்.

விதி எண் 162-ன் கீழ் அரசியல் சட்டமோ, பாராளுமன்றத்தில் நிறைவேற்றிய சட்டமோ, மத்திய அரசுக்குத் தீர்மானங்களைச் செயற்படுத்தும் அதிகாரத்தைக் கொடுத்து இருந்தால் (மாநில அரசே செயற்படுத்தக் கூடிய விஷயங்கள் சம்பந்தமாக (Subjects in the Concurrent List) அம்மாநில அரசுகள் அச் சட்டத்தை அமல்படுத்த முடியாது. விதி எண் 353 (ஆ) வின்படி நெருக்கடி நிலை பிரகடனப்படுத்தப்பட்டு அமலில் இருக்கும் பொழுது, மத்திய அரசு பட்டியலில் இல்லாத விஷயங்களுக்கும் மத்திய அரசிற்குச் சட்டத்தின் மூலம் அதிகாரம் கொடுத்துக் கடமையாற்றுமாறு பணிக்கப் பாராளுமன்றத்தால் தான் முடியும். பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களை மத்திய அரசு அமல் நடத்தும் அதிகாரத்தைத் தவிர, உடன்படிக்கையோ ஒப்பந்தமோ செய்திருந்தால் ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கையின்படி கிடைக்கும் உரிமை, அதிகாரம், அதிகார எல்லை (Jurisdiction) ஆகியவை மத்திய அரசைச் சாரும். அரசியல் சட்ட விதிகள் 275 (2) (3), 339 (2), 353 (அ) 360 (3) ஆகியவற்றில் விவரித்துள்ள விஷயங்களின் மேல் மத்திய அரசு, மாநில அரசுகளுக்கு வழிகாண்பிக்கலாம், 'இதைத்தான் செய்ய வேண்டும்' என்று உத்தரவு இடலாம். மேலும், மத்திய அரசின் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு நடக்கவும் சொல்லலாம்.

### தீர்மானங்களைச் செயலாக்கும் அதிகாரத்தின் (Executive Power) விவரம்

தீர்மானங்களை, சட்டங்களை அமல் நடத்தும் செயற்குழுவின் பிரிவு (Executive Branch) விஷயங்களை விவாதித்துச் சட்டம் ஆக்கும் சட்டப்பிரிவு (Legilslature), வழக்குகளோ பிரச்சினைகளோ ஏற்படும்பொழுது, சட்டங்களை நடைமுறையில் சீர்தூக்கிப் பார்த்து நியாயம் வழங்கும் நீதிப் பிரிவு, சுருங்கக் கூறின், செயற்குழு, சட்டசபை, நீதித்துறை என்று அரசின் அமைப்பு மூன்றாகப்பிரிக்கப்பட்டுள்ளது. செயற்குழுவின் (Executive) அல்லது தீர்மானங்களைச் செயற்படுத்தும் பிரிவின் தனிச் சிறப்பு விவாதிப்பதன்று. சட்டசபை இயற்றும் சட்டங்களை அமல் படுத்தி நிருவாகம் செய்வது. அரசின் பலதரப்பட்ட கடமைகள், நவீன காலத்தில் அதனுடைய பரந்து விரிந்துள்ள பொறுப்புகள் அதிகமாக உள்ளதால் எஞ்சியுள்ள அரசு அதிகாரமும் (Residuary Powers) செயற்குழுவின் பிரிவிற்கு வந்துவிட்டது. சட்டம் இயற்றும் பிரிவு, நீதிப் பிரிவுகளுக்குக் கொடுக்கப்படாத எல்லா அதிகாரங்களும் செயற்படுத்தும் பிரிவில் சேர்ந்திருக்கிறது.

செயற்படுத்தும் துறையின் (செயற்குழுவின்) அதிகாரங்கள் நடைமுறையில் அதிகரித்துக் கொண்டே போகும்போது சில அரசியல் சிந்தனையாளர்கள் பிடிவாதமாகச் சட்டம் இயற்றும் பிரிவிற்குத்தான் எஞ்சியுள்ள அதிகாரங்கள் சேரும் என்று கருது கிறார்கள். அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ள விதிகளின்படி, அரசியல் சாசனத்தின்கீழ், தனது அதிகாரங்களைச் செயற்படுத்தும் துறை பயன்படுத்தவேண்டும். அல்லது அரசியலமைப்பு விதிகளின் உட்கருத்தை ஊகித்தும் சட்டசபைப் பிரிவிலிருந்து அதன் அதிகாரங்களைப் பெறவேண்டும். அரசியல் சட்டத்தில் வெளிப்படையாகக் கண்டுள்ள விதிகளோ சட்டப்பிரிவோ கொடுக்காத அதிகாரங்களைச் செயற்படுத்தும் பிரிவு வகிக்க முடியாது. சர் ஜான் மாரியாட் என்பவர் (Sir John Mariot Mechanism of Modern State) 'அரசின் செயற்படுத்தும்துறை நாட்டை உள்நாட்டு விரோதிகளிடமிருந்தும் வெளிநாட்டு விரோதிகளிடமிருந்தும் பாதுகாத்து, சட்டம், ஒழுங்கு, அமைதி நாட்டில் நிலவ வழிசெய்து சட்டத்துறை காட்டும் மற்றக் கடமை களையும் கவனிக்கவேண்டும்', என்று குறிப்பிட்டிருக்கிறார். இருப் பினும், ஆங்கில அரசியலமைப்பு, அரசின் செயற்குழுவிற்குத் தன் உசிதப்படி காரியங்களைச் செய்யும் அதிகாரத்தைத் (discretionary Powers) தனிப்பட்ட உரிமை (Prerogative) யாகக் கொடுத்திருக்கிறது. இந்த உரிமை அதற்குப் பாராளுமன்றத்தால் கொடுக்கப்பட்டதன்று. இத் தனிப்பட்ட உரிமையின் அளவு எவ்வளவு என்றும் அது முழுமையான உரிமையா மாற்றியமைக்க முடியாததா என்பதும் விவரிக்கப்படவில்லை. ஆனால், பாராளு மன்றத்திற்கு இந்தத் தனி உரிமையைக் குறைக்கவோ அகற் றவோ முழு உரிமை உள்ளது. சட்டம் அனுமதிக்கும் வரை யில்தான் இத் தனிப்பட்ட உரிமையை அனுபவிக்கலாம். சட் டத்தின் ஆட்சியைப்பற்றி (Rule of Law) கருத்துத் தெரிவித் துள்ள டைசி (Dicey), ஜென்னிங்ஸ் (Jennings) போன்ற மேதைகள் 'சட்டத்தின் அதிகாரத்திலிருந்து பெறப்படும் அதிகாரங்கள்தாம் செயற்படுத்தும் பிரிவுக்கு உள்ளன. ஒரு சுதந்திர அரசுக்கு எத்தனையோ வழிகள் உள்ளன. அவற்றை நாம் பார்த்த மாத்திரத்தில் தெரிந்துகொள்வோம். ஆனால், விவரிக்க இய லாது,' என்று கூறுகிறார்கள். 'பிரதிநிதித்துவத் தன்மையுடைய சட்டப்பிரிவின் அதிகாரம் தவிர, மற்ற எல்லா அரசு அதிகாரங் களும், அவற்றுக்கான சட்டதிட்டங்களிலிருந்து தெளிவாகப் புரிந்துகொள்ளலாம் அல்லது நிர்ணயிக்கலாம். ஆகவே, ஓர் அரசரோ, மற்றவரோ, நாட்டின் சார்பில் பிரயோகிக்கும் அதிகா ரங்கள், சட்டத்தின் எந்தச் சில விதிகள் அவருடைய செயலுக்கு அங்கீகாரம் வழங்குகிறதோ அந்த விதிகளில் இருந்து பெறக்கூடிய

வைகளேயாகும். மொத்தத்தில் நாடு சட்டத்தின்மூலம் ஒழுங்கு படுத்தப்பட்டிருக்கிறது,' என்று மேலும் அவர்கள் கூறுகின் றார்கள்.

செயற்குழுத் துறையின் அதிகாரம் (Executive Powers) இந்திய அரசியலமைப்பின்படி கொடுக்கப்பட்டது என்றாலும் அவற்றின் சரியான பொருளைப் பரிசீலிக்க, அலகாபாத் நீதிமன்றத் தின் மொத்த நீதிபதிகளைக்கொண்ட அவைக்கு, உத்தரப்பிரதேச அரசுக்கும் மோதிலால் என்பவருக்கும் உண்டான வழக்கு, பரி சீலனைக்கு வந்தது. அந்த வழக்கில் மாறுபட்ட அபிப்பிராயங்கள் உருவானபோதும், யாரும் செயற்குழுவின் அதிகாரம், சட்டத் துறை உருவாக்கிய சட்டங்களை அமல்படுத்துவது மாத்திரம்தான் என்று கூறவில்லை. ஓர்எழுதிய அரசியலமைப்பில் (Written Constitution) செயற்படுத்தும் துறையின் அதிகாரம் முழுமையானது. அரசியலமைப்பின் குறிக்கோள், நோக்கம் இவற்றைச் செயற் படுத்தக் கூடிய எல்லா அதிகாரங்களும் அந்த அரசுபிரிவிற்கு உண்டு. சட்டத்தை அமல்படுத்துவதோடு அதன் பொறுப்பு முடிவடைந்துவிடவில்லை. இதே கருத்தைக் கபூருக்கும் பஞ்சாப் அரசுக்கும் உண்டான வழக்கில் (R. T. Kapur Vs State of Punjab) பஞ்சாப் மாநில உயர் நீதிமன்றம் தெரிவித்துள்ளது. பஞ்சாப் மாநிலத் தலைமை நீதிபதி திரு முகர்ஜி 'செயற்படுத்தும் வேலை என்பது கொள்கையை உருவாக்கி அதைச் செயற்படுத்துவதும் தான்,' என்று கருத்துத் தெரிவித்துள்ளார். சட்டதிட்டங்களை உருவாக்கிக்கொண்டுவருவது, அமைதிகாப்பது சமூக, பொருளா தார நலனை விரிவாக்குவது, வெளிநாட்டுக் கொள்கையை நிர்ண யித்துச் சமூக உறவுக்கு வழி செய்வது பொதுவாக நாட்டின் நிருவாகத்தைச் செவ்வனே நடத்துவது ஆகியவையும் செயற்குழு வின் அதிகாரத்திற்கு உட்பட்டவையாகும்.

### குடியரசு தலைவரின் செயற்குழு அதிகாரத்தின் தன்மை (Nature of the Executive Power of the President)

அரசியலமைப்பு நிர்ணயித்துள்ள செயற்படுத்தும் அதிகா ரத்தை எப்படிக் குடியரசு தலைவர் உபயோகிப்பது? அவர் தம்மிச் சையாகப் பிரயோகிக்கும் உண்மையான அதிகாரங்களா அவை? அல்லது அந்த அதிகாரங்கள் அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் மாத்திரமே, ஒப்புக்காக, அவரிடமிருந்து பிரயோகிக்கப் பட வேண்டியவையா? குடியரசு தலைவருக்கும் பிரதம அமைச்ச ருக்கும் இடையே உள்ள சரியான அரசியல் உறவு என்ன என்பன போன்ற விஷயங்கள், சட்ட மேதைகளும் அரசியல் சட்ட நிபுணர் களும் கருத்து வேற்றுமை கொண்டுள்ள விஷயங்களாகும். ஒரு

சாரார் இங்கிலாந்து அரசியாருக்கும் அந் நாட்டுப்பிரதமருக்கும் இடையே உள்ள உறவைப் போல்தான் இந்தியக் குடியரசு தலைவருக்கும் பிரதமருக்கும் உள்ள உறவு அமைந்துள்ளது. 'இங்கிலாந்து அரசியார் பிரதமரின் ஆலோசனையின் பேரில் தான் செயற்படுகிறார். அவ்விதமே நம் நாட்டுக் குடியரசு தலைவரும் செயற்பட கடமைப்பட்டிருக்கிறார்,' என்று வாதாடு கிறார்கள். தங்களுடைய கருத்துக்கு இசைவாக அவர்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் ஆதாரங்களைக் காட்டுகிறார்கள் :

(1) செயற்படுத்தும் துறைக்கும் சட்டமியற்றும் துறைக்கும் உள்ள உறவைப்பற்றிய வகையில் இந்திய அரசியலமைப்பு இங்கிலாந்து அரசியலமைப்பைத் தழுவியிருக்கிறது. அமைச்சரவை மக்கள் சபைக்குக் கூட்டுப் பொறுப்புள்ள தன்மையை அரசியலமைப்பு விதி எண் 75 (3) உறுதிப்படுத்துகிறது. இந்தியப் பாராளுமன்றமும் இங்கிலாந்துப் பாராளுமன்றத்தைப்போல அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பை ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானம் மூலம் நிறைவேற்றலாம். அல்லது அரசின் அன்றாட நிருவாகத்திற்குத் தேவைப்படும் நிதியை ஒதுக்க மறுத்தும் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பை அதற்கு உணர்த்தலாம். எனவே, பாராளுமன்றத்தின் அதிகப்படியான உறுப்பினர்களின் ஆதரவு கிடைக்காவிட்டால் அமைச்சரவை பதவியில் நீடிக்க முடியாது. ஆகையால், குடியரசு தலைவர் மக்கள் சபையில் அதிக ஆதரவைக் கொண்ட அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுச் செயற்படாவிட்டால் அந்த அமைச்சரவை இராஜினுமா செய்வதின்மூலம் ஓர் அரசியல் நெருக்கடியை உருவாக்கி, தனக்குள்ள அபரிமிதமான மக்கள் சபை ஆதரவு மூலம் மாற்று அமைச்சரவை உருவாகாமல் பார்த்துக்கொண்டு, குடியரசு தலைவர் அன்றாட நிருவாகத்தை நிதியில்லாமல் நடத்த முடியாதபடி செய்துவிடலாம். இப்படிப்பட்ட சூழ்நிலையில் குடியரசு தலைவர் நிருவாகத்தை 6 மாத காலத்திற்கு மேல் வெற்றிகரமாக நடத்த முடியாமல் போகலாம். 6 மாத காலம் ஏனென்றால், குடியரசு தலைவர் சட்டப்படி பாராளுமன்றத்தை 6 மாத காலத்திற்குக் கூட விடாமல் நிருவாகத்தைக் கவனிக்கலாம். எனவே, அரசியலமைப்பு விதி எண் 75 (3)-ல் குறிப்பிட்டுள்ளபடி அதிகாரங்களின் மையம், குடியரசு தலைவர் அல்லர்; மக்கள் சபை நம்பிக்கைக்குப் பாத்திரமான அமைச்சரவைதான்.

(2) மேலும், விதி எண் 74-ல், குடியரசு தலைவருக்கு, அவருடைய கடமைகளை ஆற்ற, தகுந்த ஆலோசனைகளும் உதவிகளும் செய்ய, பிரதம அமைச்சரின் தலைமையிலான ஓர் அமைச்சர்கள் குழு செயற்பட வேண்டும் என்று கூறப்

பட்டுள்ளது. இவ் விதிப்படி, குடியரசு தலைவர் எக்காரணத்திற்காகவும் அமைச்சரவையின் ஆலோசனையில்லாமல் செயற்பட முடியாது என்பது புலனாகிறது. எனவே, குடியரசு தலைவர் தம்மிச்சையாகச் செயற்படச் சட்டம் அனுமதிக்கவில்லை என்பதும் தெளிவாகிறது. அரசியலமைப்பின் எந்த விதியும் குடியரசு தலைவர் அவருடைய இச்சைப்படி செயற்பட இடம் தரவில்லையாதலால் அவர் அவ்விதம் ஒருகால் செயற்பட்டால் அது அரசியல் சட்டத்திற்குப் புறம்பானது என்று கொள்ள வேண்டும். அரசியல் நிர்ணய சபையில் இது குறித்து நடந்த விவாதத்திலிருந்து, நமது நமது நாட்டின் குடியரசு தலைவர் பதவி ஆங்கில மன்னரின் சாயலில், அதை அடிப்படையாகக் கொண்டு உருவானது என்பதும் நமக்குத் தெளிவாகப் புலப்படுகிறது.

அரசியல் சாசனத்தை உருவாக்கும் குழுவின் தலைவராக இருந்த டாக்டர் அம்பேத்கார், குடியரசு தலைவரின் செயற்படுத்தும் அதிகாரத்தையும் அரசியல் சட்டத்தின்கீழ் அவருடைய நிலையைப் பற்றியும் விவரிக்கும்போது கீழ்வருமாறு கூறினார்:

இந்திய அரசின் தலைமையில், 'குடியரசு தலைவர்' என்று அழைக்கக் கூடிய ஒருவரை உருவாக்கியுள்ளோம். இப் பதவியின் பெயர் அமெரிக்கக் குடியரசு தலைவரை நினைவூட்டும். ஆனால், நாம் பதவியின் பெயரில்தான் அந்த ஒற்றுமையைக் காண்கிறோமே தவிர அமெரிக்க அரசியலமைப்பிற்கும் நாம் அரசியல் சட்டத்தின் கீழ் அமைக்கும் அரசுக்கும் எந்த ஒற்றுமையும் கிடையாது. அமெரிக்காவில் செயற்படும் அரசுக்குத் 'தலைவர்முறை துரைத்தன (Presidential Govt. குடியரசு ஆட்சி) ஆட்சி முறை' என்றும் நம்நாட்டு அரசுக்குப் பாராளுமன்ற ஆட்சி முறை (Parliamentary system of Govt.) என்றும் பெயர். இவ்விரண்டு ஆட்சி முறைகளுக்கும் அடிப்படை வேறுபாடுகள் உள்ளன. அமெரிக்கத் 'தலைவர்முறை துரைத்தனம்' ஆட்சி முறையின்கீழ் நிருவாகம் குடியரசு தலைவர் கையில் உள்ளது. ஏனெனில், அவர் தீர்மானங்களைச் செயற்படுத்தும் பிரிவின் பெருந்தலைவர். நம் நாட்டின் அரசியல் சட்டம் குடியரசு தலைவருக்கு ஆங்கில அரசியல் சட்டம் அந் நாட்டு அரசருக்கு என்ன நிலை கொடுத்திருக்கிறதோ அதே நிலையைக் கொடுத்துள்ளது. இங்கிலாந்தில் அரசர் நாட்டின் தலைவர்; ஆட்சியின் தலைவர் அல்லர். நாட்டின் சின்னமாகவும்; (Symbol of Nation) அந் நாட்டு மக்களின் ஏகோபித்த பிரதிநிதியாகவும் விளங்குகிறார். அரசாட்சி அங்கு அவர் செய்யவில்லை. நிருவாகத்தில் அரசரின் பங்கு சடங்குகள் நிறைந்த ஓர் உபாயம் மூலம் அரசியல் கொள்கைகள், முடிவுகள், நாட்டின் மக்களுக்குத்

தெரியப்படுத்தப்படுகின்றன. அமெரிக்க ஆட்சி முறையில் குடியரசு தலைவரின் கீழ் ஒவ்வோர் இலாக்காவிற்கும் செய லாளர்கள் இருக்கின்றனர். இம் மாதிரி இந்திய அரசியலில் குடியரசு தலைவரின்கீழ் ஒவ்வோர் இலாக்காவிற்கும் ஓர் அமைச்சர் பொறுப்பேற்றிருப்பார். அமெரிக்கக் குடியரசுதலைவர் அவரு டைய செயலாளர்களின் ஆலோசனைகளை ஏற்று நடக்கத் தேவை யில்லை. ஆனால், நம் நாட்டில் அமைச்சர்களின் ஆலோசனைகளின் பேரில்தான் குடியரசு தலைவர் செயற்படவேண்டும். அமைச்சர் களின் ஆலோசனைக்குப் புறம்பான எதையும் செய்யமுடியாது. அவர்களின் ஆலோசனையின்றியும் எந்தக் காரியத்திலும் ஈடுபட முடியாது. அமெரிக்கக் குடியரசு தலைவர் எந்தச் செயலாளரை யும் (காரியதரிசிகள்) தம்மிச்சையாகப் பதவி நீக்கம் செய்யலாம். ஆனால், இந்தியக் குடியரசு தலைவர், பாராளுமன்றத்தின் முழு நம்பிக்கைக்குப் பாத்திரமாக அமைச்சர்கள் இருக்கும்வரை, அவர்களைப் பதவியில் இருந்து நீக்கமுடியாது.

காலஞ்சென்ற பிரதம அமைச்சர் ஜவஹர்லால் நேரு அரசியல் நிர்ணய சபையில் இதுபற்றிப் பேசும்பொழுது, இந்தியக் குடியரசின் தலைவர் பதவி, மிக்க அதிகாரமும், அந்தஸ்தும், மரியாதையும் உள்ளது என்றும் ஆனால், அதே சமயத்தில் அவர் சட்ட ரீதியாகச் செயற்பட வேண்டியவர் என்றும் குறிப்பிட்டார்.

இதே கருத்தைப் பிரதிபலிக்கும் விதமாக, அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும் அரசியல் நிர்ணய சபையில் இதுபற்றிக் குறிப்பிடும் பொழுது 'குடியரசு தலைவர் செயற்படுகிறார் என்றால் அதற்கு அர்த்தம் அவர் அமைச்சர்களின் ஆலோசனைப்படி செய் கிறார் என்பது பொருள்', என்று கருத்துத் தெரிவித்துள்ளார்.

மத்திய அரசாங்கத்தின் தலைமை வழக்கறிஞராக இருந்த திரு M. C. செதல்வாத் (M. C. Setalvad)தும் அரசியல் நிர்ணய சபைக்கு ஆலோசகராகப் பணியாற்றிய திரு. B.N. ராவும் (B.N. Rao) குடியரசு தலைவர் தம் சொந்த அதிகாரத்தில் செயற்பட ஒன்றுமே இல்லை எனக் கூறுகிறார்கள். இங்கிலாந்து அரசரைப் போல நம்நாட்டுக் குடியரசு தலைவருக்கு ஆலோ சனைகள் கூறும் உரிமை, ஊக்குவிக்கும் உரிமை, எச்சரிக்கை செய்யும் உரிமை உள்ளன என்றும் கூறுகிறார்கள்.

எனவே, இங்கிலாந்து அரசருக்குச் சட்டப்படி பரந்த அதிகாரங்கள் இருந்தும் அரசியல் மரபின்படி அமைச்சரவை ஆலோசனையின் பேரிலேயே இந்த அதிகாரங்கள் பிரயோகிக்கப் படுகின்றன. இதே முறையில்தான் குடியரசு தலைவரின் செயல்

களும் அமைய வேண்டும். இங்கிலாந்து நாட்டு அரசரைக் குறித்து பேஜாட் (Bazehot) என்ற அரசியல் வல்லுநர், 'இங்கி லாந்து நாட்டின் அரசர் தம் முடியைத்துறக்க வேண்டும் என்று பாராளுமன்றத்தின் இரு சபைகளும் தீர்மானம் ஒன்றை நிறை வேற்றி அதை அரசருக்கு அனுப்பி வைத்தால், அவர் கையொப்ப மிடத் தயாராக இருப்பார்', என்று அந் நாட்டு அரசரின் அரசியல் நிலையை நமக்கு விளக்குகிறுர்.

குடியரசு தலைவர் பதவியை உருவாக்கிய அரசியல் சட்டத்தின் விதிகளை, அரசியல் நிர்ணய சபையிலும் அதற்கு வெளியிலும், குறை கூறினுர்கள். குறைகளுள் முக்கியமானதாக, அரசியல் சட்ட ரீதியான தலைவராக, குடியரசு தலைவரின் அதிகாரங்கள் அமையவில்லை என்றும், பாராளுமன்ற ஆட்சி முறையைக் கொண்ட ஒரு பொறுப்பான அரசு அமைக்கக் குடியரசு தலைவ ருக்கு அரசியல் சட்டம் சுமத்தும் அதிகாரங்கள் உகந்ததல்ல என்றும் கூறப்பட்டன. பொதுவாக அரசின் அன்றுட அலுவல் களைக் கவனிக்க விதிகளை உருவாக்குவது, தனி அமைச்சரின் முடிவை அமைச்சரவையின் முடிவுக்கு அனுப்புவது, பாராளு மன்றத்தில் நிறைவேறிய மசோதாக்களைத் திரும்ப மறுபரி சீலனைக்கு அனுப்புவது அல்லது அவற்றை ரத்து செய்வது (veto) ஆகிய இந்த வகையான பல அதிகாரங்கள் குடியரசு தலைவரிடம் இருப்பது அமைச்சரவை அரசுக்குப் புறம்பான தாகும் என்றும் சொல்லப்பட்டது. மேலும், அரசியல் சட்ட விதிகளின் வாசகத்தின்படி குடியரசு தலைவர் அமைச்சரவையின் ஆலோசனைப்படிதான் நடக்க வேண்டுமென்பதில்லை. இங்கி லாந்தில் அரசர், ஓர் அமைச்சர் உறுதிக்கையெழுத்து இட்ட பிறகுதான் எதிலும் செயற்படத் துவங்குகிறுர். இதே போல விதி நம் அரசியலமைப்பில் இல்லை. மேலும், நீதிமன்றங்களுக்கு அமைச்சர்கள் என்ன ஆலோசனைகளைக் குடியரசு தலைவருக்கு வழங்கினுர்கள் என்பதை அறிய உரிமையில்லை. அமைச்சர்கள் ஆலோசனைப்படி நடக்காத ஒரு குடியரசு தலைவரைக் கட்டுப் படுத்த அரசியலமைப்பில் விதிகள் இல்லை. மாருக விதி எண் 77(2)-ன் கீழ்க் குடியரசு தலைவரின் உத்தரவுகள் உண்மை யானவைதாமா என்பதை உறுதிப்படுத்த, வேண்டிய விதிகளை உருவாக்க அவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது மட்டுமல்லாமல், அமைச்சர்கள் தங்கள் பதவியில் இருப்பதற்குக் காரணம் அவர்கள் பாராளுமன்றத்தின் மக்கள் சபைக்குத் தேர்ந் தெடுக்கப்பட்டதே என்பது கண்கூடு. ஆனுல், குடியரசு தலை வரோ, பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் களாலும் மாநிலச்சட்ட சபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்

பினர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவதால் அவருடைய அதிகாரம் அமைச்சரவையின் அதிகாரத்தைவிட மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது.

தலைவர் முறைதுரைத்தன (Presidential form of Government) ஆட்சிமுறையை விரும்புபவர்களும் அரசியலமைப்பின் வாசகத்தைப் பெரிதுபடுத்துபவர்களும், அரசியல் நிர்ணய சபையில் பங்கு கொண்டவர்கள் எந்த நோக்குடன் அவ் விதிகளை அவ்வாறு உருவாக்கினார்கள் என்று அறியாதவர்களும் அரசியலமைப்பின் உட்கருத்தைப் புரிந்து கொள்ளாமல், 'தீர்மானங்களைச் செயலாக்கும் தலைவர் உண்மையிலேயே அதிகாரம் நிறைந்த தலைவரா பெயரளவில் தலைவரா என்று அரசியல் சட்ட விதிகளிலிருந்து தெரிந்து கொள்ள இயலவில்லை', என்கிறார்கள். மேலும், வருங்காலக் குடியரசு தலைவர்களுள் சிலர், தென் அமெரிக்காவில் உள்ள சில நாடுகளின் தலைவர்போல் காலப்போக்கில் அரசியல் சட்டம் அவர்களுக்குத்தான் உண்மையான அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறது என்று செயற்படலாம்.

பேராசிரியர் ஆலன்க்ளட்கில் (Prof. Alen Gledhill) என்பவர் 'ஆஸ்திரேலியா, கானடா, நாடுகளின் அரசியலமைப்பில் தலைமை ஆளுநர், (கவர்னர்-ஜெனரல் Governor-General) தம் சொந்த அபிப்பிராயப்படி செய்யக்கூடிய காரியங்கள் எவை, அமைச்சரவை ஆலோசனையின் பேரில் செய்யவேண்டியவை எவை என்று பிரிக்கப்பட்டு இருக்கிறது. ஆனால், அரசியல் மரபுகள், இந்த வேறுபாடே இல்லாத வகையில் தலைமை ஆளுநர் அமைச்சரவை ஆலோசனையின் பேரிலேயே செயற்படும் பழக்கத்தை நிரந்தரமாக்கிவிட்டது,' என்கிறார். 'இதே அரசியல் வளர்ச்சி இந்திய நாட்டிலும் ஏற்படலாம். எனினும், மேற்சொன்ன அரசியல் மரபுகள் காலப்போக்கில் உண்டாகும் என்ற எண்ணத்திற்கே, அரசியலமைப்பு உருவாக்கிய பெரியோர்கள் இடம் தந்ததாகத் தெரியவில்லை,' என்றும் கூறுகிறார்.

தொடர்ந்து அவர், 'இந்திய அரசியலமைப்பு விதிகளை மீறாமலேயே, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில், மிக்க பேராசை பிடித்த ஒழுக்கமற்றவர் குடியரசு தலைவராக இருக்கும்பொழுது, ஒரு சர்வாதிகாரியாக மாறக்கூடும். உதாரணமாக, விதி எண் 61-ன் படி பாராளுமன்றத்தின் ஒருசபையிலுள்ள 4ல் 1 பங்கு உறுப்பினர்கள் குடியரசு தலைவர்மேல் குற்றச்சாட்டுத் தீர்மானம் கொண்டுவருவதாக வைத்துக்கொள்வோம். இந்தத் தீர்மானம் அச் சபையில் கொண்டுவந்த 14 நாள்களுக்குப் பிறகுதான் பரிசீலனைக்கு வரமுடியும். குற்றம் சாட்டப்பட்டு இருக்கும் குடியரசு

தலைவர் இந்த 2 வார முன் அறிவிப்பு முடியுமுன் மக்கள் சபையைக் கலைத்துவிடலாம். ஒரு புதிய மக்கள் சபையைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்றாலும் 6 மாத காலத்திற்குத் தேர்தல் நடந்த நாளிலிருந்து புதிய சபை கூடவேண்டிய அவசியமில்லை. அல்லது கூட்டாமலும் இருக்கலாம். அமைச்சரவையிலுள்ள எல்லா அமைச்சர்களையும் குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்யலாம். ஏனெனில், அமைச்சர்கள் குடியரசு தலைவரின் விருப்பப்படிதான் பதவியில் உள்ளார்கள். பிறகு தம் இச்சையாக அமைச்சர்களை 6 மாத காலத்திற்கு நியமிக்கலாம். அவர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக இருக்கவேண்டிய அவசியம் இல்லை. பிறகு குடியரசு தலைவர் 6 மாத காலத்திற்கு அமலில் இருக்கக்கூடிய அவசரச் சட்டங்களைப் (ordinances) பிறப்பிக்கலாம். குடியரசு தலைவரின் அவசரச் சட்டங்களுக்குப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்களின் தன்மைகள் இருக்கின்றன, அரசியல் சட்ட விதிகளின் அடிப்படையில். பிறகு நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்து சம அந்தஸ்து உள்ள மாநிலங்களின் கூட்டு அரசு (Federal) என்ற நிலை மாறி ஒரு முக அரசாகி (Unitary State) அடிப்படை உரிமைகள் பறிக்கப்படலாம். மேலும், நாட்டின் இராணுவத் தலைவர் என்ற முறையில், அவருடைய கொள்கையின் வெற்றிக்காக, படைகளை ஏவலாம். இப்படிப்பட்ட கொடுங்கோலாட்சி முறையினால் பாராளுமன்றத்தின் மக்கள் சபை உறுப்பினர்களையும் தமக்கு ஆதரவு அளிக்கக் கூடியவர்களாகப் பார்த்து, அவர்கள் தேர்தலில் வெற்றி பெற ஆவன செய்யலாம். இம் முறையில் புதிதாக உருவாகும் மக்கள் சபை தமக்கு ஆதரவு அளிக்கக்கூடியவர்களாகப் பார்த்து, அவர்கள் தேர்தலில் வெற்றிபெற ஆவன செய்யலாம். இம் முறையில் புதிதாக உருவாகும் மக்கள் சபை தமக்கு அதிக ஆதரவு கொடுக்கும்படியாக அமைத்துக் கொள்ளலாம். இந்தச் சந்தர்ப்பத்திலும் அரசியல் சட்டத்தைப் பாராளுமன்றத்தின் மாநிலங்களின் அவையால் (Rajya Sabha) காப்பாற்றமுடியும் என்றாலும் அதன் உறுப்பினர்கள் மக்கள் சபையின் பலத்தில் பாதி தான் இருக்கும். இத்தகைய நிலை ஒரு நல்ல கற்பனையாக அல்லது ஒரு கெட்ட கனவாகத் தோன்றலாம். ஆனால், ஜெர்மன் நாட்டில் வேய்மார் அரசியல் சட்டம் (Weimar Constitution) அழிக்கப்பட்ட முறைக்கு இது மாறுபட்டதன்று', என்கிறார் அவர். மேலும், சார்லஸ் ஹென்றி அலெக்ஸாண்ட்ரேவிஸ் (Charles Hendry Alexandrawiz) என்பவர், நம்நாட்டு அரசியலமைப்புப் பழக்கங்கள் (Constitutional Practice) அடிக்கடி அரசியல் கிளர்ச்சிகள், எதிர் பாராத மாற்றங்கள் ஏற்படும் சில நாடுகளின் அரசியல் சட்டங்கள் போல்தாம் இருக்கின்றன என்று நம்புகிறார்.

பாராளுமன்றத்தின் அதிகப்படியான உறுப்பினர்கள் ஆதரவைக்கொண்ட ஓர் அரசின் அல்லது அமைச்சர்களின் ஆலோசனையைக் குடியரசு தலைவர், ஏற்க மறுத்தால், செயற்படமுடியாதநிலை ஏற்படும் என்ற வாதம் சட்ட ரீதியானதன்று; அரசியல் சம்பந்தமானது. உண்மையில் குடியரசு தலைவர் அரசியல் உசிதப்படி அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுச் செயற்படவேண்டும். அரசியல் சட்டப்படி அனேக காரியங்களைச் செய்ய வேண்டி இருக்கும். ஆனால், ஒரு சந்தர்ப்பத்தில் ஏற்படக்கூடிய அரசியல் நிலைமையின் தேவை, அக் காரியங்களைச் சட்டப்படி செய்ய இடம்தராது. இச் சந்தர்ப்பங்களில் காரியங்களைச் செய்யாததால் சட்டத்திலுள்ள விதிகளின் அர்த்தத்தையோ உள்நோக்கத்தையோ பாதிப்பது இல்லை. ஆனால், அரசியல் சந்தர்ப்பச் சூழ்நிலையில் நெருக்கடி நிலையை அமைச்சரவையோ குடியரசு தலைவரோ உருவாக்க இடமுள்ளது. நமது அரசியலமைப்பில், குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுப்பவர்கள், தேர்தலில் வெற்றி பெற்ற பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் மட்டும் அல்லர். தேர்ந்தெடுக்கப்பட்ட மாநிலங்களின் சட்டசபைகளின் உறுப்பினர்களையும், பாராளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும் கொண்ட ஒரு தேர்தல் கல்லூரி. மாநிலச்சட்டசபை உறுப்பினர்களின் வாக்குகளின் பலம் பாராளுமன்ற உறுப்பினர்களின் வாக்குகளின் எண்ணிக்கைக்குச் சமமாகச் செய்யப்பட்டுள்ளது. எனவே, மாநிலச்சட்டசபைகளின் அதிகப்படியான உறுப்பினர்களின் ஆதரவையும் பாராளுமன்றத்தில் சிறுபான்மையினரின் ஆதரவையும் பெற்றவர், பாராளுமன்றத்தில் அதிக உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றுக் குடியரசு தலைவர் தேர்தலில் நிற்கின்ற ஒருவரைத் தோற்கடித்துவிடலாம். அரசியல் சட்டப்படி பாராளுமன்றத்தில் அதிக உறுப்பினர்களின் ஆதரவைக்கொண்ட கட்சிதான் மாநிலங்களின் சட்டசபைகளிலும் அதிகப்படியான உறுப்பினர்களைக் கொண்டிருக்க வேண்டும் என்பதில்லை. இந் நிலையின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளக்கூடிய சூழ்நிலை இன்னும் உருவாகவில்லை. ஏனெனில், இதுவரை பாராளுமன்றத் தேர்தலும், மாநிலச் சட்டசபைகளின் தேர்தலும் ஏக காலத்தில் வந்து ஒரே அரசியல் கட்சி மத்திய, மாநில ஆட்சிப் பொறுப்பை நீண்ட காலம் (அதாவது சுதந்திரம் கிடைத்தபின் சுமார் 25 ஆண்டுகள் வரை) ஏற்றிருந்தது. அரசியலமைப்பு, மாநிலங்களின் சட்டமன்றத் தேர்தல்கள் 5 ஆண்டுகள் முடியுமுன்னரே வரலாம் என்ற நிலையை அங்கீகரிக்கிறது (விதி எண் 172). அதாவது, 5 ஆண்டு கால வரம்பிற்குள் மாநில அவைகளைக் கலைக்கவேண்டும் என்றால் கலைக்கலாம். இத்தகைய நிகழ்ச்சி கேரளத்திலும் தமிழ்நாட்டிலும் ஏற்பட்டது. மற்ற மாநிலங்களின் சபைகளும் வெவ்வேறு காலங்

களில் கலைக்கப்படலாம். இவ்வாறே பாராளுமன்றத்தின் மக்கள் சபையையும் கலைக்கலாம். எனவே, பாராளுமன்றத்தில் ஓர் அரசியல் கட்சிக்கு அதிக ஆதரவும் மாநிலங்களின் சட்டசபைகளில் பல்வேறு அரசியல் கட்சிகளுக்கு அதனதன் செல்வாக்கிற்குத் தகுந்தாற்போல் அந்த அந்த மாநிலங்களில் அதிக ஆதரவும் அமையலாம். எனவே, சட்டப்படி பாராளுமன்றத்தில் குறைந்த உறுப்பினர்களின் ஆதரவோடும் மாநிலங்களின் பெரும்பான்மை யான சட்டசபை உறுப்பினர்களின் ஆதரவோடும் குடியரசு தலைவராக ஒருவர் தேர்ந்தெடுக்கப்படலாம். இந்நிலையில், பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படி நடக்க விரும்பாத குடியரசு தலைவர் இராஜினமா செய்து விட்டு மறுபடி குடியரசு தலைவர் தேர்தலில் நின்று வெற்றி பெறலாம். இந்தச் சூழ்நிலையில் ஓர் அரசியல் நெருக்கடி தவிர்க்க முடியாத ஒன்றாகும். அப்பொழுது பாராளுமன்றத்தில் உள்ள ஆளும் கட்சியைச் சேர்ந்த பெரும்பான்மை உறுப்பினர்கள், குடியரசு தலைவர் பெரும்பான்மை மக்களின் பிரதிநிதி இல்லை என்று சொல்ல முடியாது. எனவே, குடியரசுதலைவர் பிரதமரின் ஆலோசனைப்படி நடக்கவில்லை என்று கூறி, பிரதமரே ஓர் அரசியல் நெருக்கடியை உண்டு பண்ணக்கூடிய ஆற்றல் படைத்தவர் என்ற அடிப்படையில் இவர்களின் உறவு இருக்க முடியாது. மேலும், அரசியல் காரணங்களுக்காக, பிரதமரின் முடிவுகள் எல்லாமே மேலோங்கி இருப்பதும், குடியாட்சி அரசுக்கு உலை வைக்கும். அது ஒரு சர்வாதிகார அரசு ஏற்பட வழி கோலும். இக் காரணங் களுக்காக இங்கிலாந்திலுள்ள அரசியல் மேதைகளும் சட்ட வல்லு நர்களும்கூடப் பாராளுமன்றத்தில் பெரும்பான்மை கட்சித் தலைவர் அனுபவிக்கும் அதிகாரங்களைச் சமநிலைப்படுத்தவும், கட்டுப்படுத்தவும் (Principles of Checks balances) ஒரு வழியைக் கண்டு பிடிக்க வேண்டிய அவசியத்தை அவ்வப்போது உணர்த்தி வந்தார்கள். இந்திய அரசியலமைப்பில் இது போன்ற தடை களும் சமநிலைகளும் கொண்டு அடிப்படைக் கொள்கை பிரதி பலிக்கவில்லை என்று சொல்லப்படுவதில் அர்த்தமில்லை. இந் நாட்டின் தற்போதைய சூழ்நிலைக்கு ஏற்ப நாம் வகுத்துக் கொண்ட அரசியல் சட்டத்தில் மேற்கூறிய அடிப்படைக் கொள்கை ஓர் இன்றியமையாத பாகம். எனவேதான், இந்திய அரசியல் சட்டத்தில் சுயேச்சையாகச் செயற்படும் மாநில அரசுகள் தங்கள் அதிகார எல்லைக்குள் மத்திய அரசின் குறுக்கீடு இன்றிச் செயற்படுகின்றன. இவ்வாறு இந்திய அரசியல் சட்டம், மத்திய மாநில அரசுகளுக்குள் ஒரு சமநிலையை, மத்திய அரசின் உரிமைகளையும், மாநில அரசுகளின் உரிமைகளையும் தனித் தனியே அங்கீகரிப்பதன் மூலம் ஏற்படுத்தி உள்ளது. குடியரசு

தலைவர் தேர்தலில் கூட மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் இடையே ஒரு சமநிலையைத் தெளிவாக்கியுள்ளது. மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கவும், சட்டசபைப்பிரிவுக்கும், செயற்குழுவின் பிரிவுக்கும் (Legislative and Executive) கட்டுப் பாடுகளோடு நடப்பதைக் கண்காணிக்கத் தலைமை நீதிமன்றம் (Supreme Court) ஓர் அவசியமான கருவியாக இருக்கிறது. ஆங்கில நாட்டின் பாராளுமன்றத்தைப்போல, நம் நாட்டுப் பாராளுமன்றம் ஒரு சர்வ சுதந்திரம்உள்ள அமைப்பு இல்லை. பாராளுமன்றத்தின் உரிமைக்கே ஒரு விதமான தடை ஏற் படுத்தப்பட்டுள்ளது. இந்தியப் பாராளுமன்றத்தின் சட்ட திட்டங்கள் அரசியல் சட்டத்திற்கு மாருக இருக்கின்றன என்று இந்தியத் தலைமை நீதிமன்றம் கருதினுல் அவை செல்லுபடி யாகாது என்று அது தீர்ப்பு வழங்கலாம். பாராளு மன்றம் இயற்றும் சட்டம் அடிப்படை உரிமையைப் பறிப்ப தாக இருக்கிறது என்று எந்தக் குடிமகனும் தலைமை நீதிமன்றத்தில் வழக்காடலாம். ஆனுல், இந்நிலை இங்கிலாந்தில் ஏற்படாது. தேவைப்படும்பொழுது இங்கிலாந்து நாட்டின் அரசியலமைப்பையே மாற்றியமைக்க அந் நாட்டுப் பாராளு மன்றத்திற்கு அதிகாரம் இருக்கிறது. இங்கிலாந்து நாட்டின் பாராளுமன்றத்தின் சர்வ சுதந்திரத்தை ஓர் அரசியல் அறிஞர், 'ஓர் ஆணைப் பெண்ணுகவும், பெண்ணை ஆணுகவும் இயற்கை விதி களுக்குப் புறம்பாக மாற்ற முடியாததைத் தவிர, ஆங்கிலப் பாராளுமன்றம் எதையும் செய்ய முடியும்,' என்று அந் நாட்டுப் பாராளுமன்றத்தின் சர்வ சுதந்திரப் போக்கை நகைச்சுவைபட விளக்குகிருர். ஆனுல், இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்றத் தைப் போல அரசியலமைப்பைத் திருத்தி அமைக்க இந்தியப் பாராளுமன்றம் சில தடைகளைக் கடக்க வேண்டியுள்ளது. ஏனெனில், அரசியலமைப்பின்படி, திருத்தங்களை உறுதிப்படுத்த மக்கள் சபையில் கூடியுள்ள 3இல் 2 பங்கு உறுப்பினர்கள் ஆதரவு அளிக்க வேண்டும். மக்கள்சபை உறுப்பினர்களின் பெரும் பான்மையோரின் ஆதரவு இருந்தாலொழிய (Absolute majority in the House) திருத்தங்களை நிறைவேற்ற முடியாது. மேலும், சில அரசியல் சட்டத்திருத்தங்களுக்கு, மாநிலச் சட்ட சபைகளின் அங்கீகாரமும் தேவைப்படுகின்றது. எனவே, இந்திய அரசிய லமைப்புச் சமநிலைகளையும், தண்டனைகளையும் கொண்ட ஒரு முறையைக் (System of Checks and Balances) கொண்டிருக்கிறது என்பதைத் தெளிவாக இது விளக்குகிறது. இந்தச் சீரிய அமைப்பைப் பிரதமர், குடியரசு தலைவர் உறவிலும் காண்கிறேம். இதிலிருந்து பாராளுமன்றத்தின் ஆதரவு பெற்ற அமைச்சரவை யின் அதிகாரங்களைக் குடியரசு தலைவர் கண்காணிப்பதும்,

கட்டுப்படுத்துவதும், பிரதமருக்குத் தாழ்ந்தவராகக் குடியரசு தலைவர் இல்லை என்பதை அரசியலமைப்பு உணர்த்துவதாகத் தோன்றும். அவர்களுடைய அரசியலமைப்பு உறவு (Constitutional relations) சட்டசபை, அரசியல், தனிப்பட்ட உறவு ஆகிய வற்றின் உண்மை நிலைப்படி தீர்மானிக்கும்படியும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் தன்மையிலும் அமைந்திருக்கிறது.

உண்மையில், நம் நாட்டைப் பொறுத்த வரையில் இதுவரை அமைச்சரவைக்கும் குடியரசு தலைவருக்கும் உள்ள உறவு சுமுகமாக இருந்திருக்கிறது. நாட்டின் தலைவருக்கும் அரசின் தலைவருக்கும் உள்ள இன்றியமையாத, நல்ல உறவுதான் இதற்குக் காரணம். இருவருக்குமுள்ள பரஸ்பர மரியாதை மிகவும் ஆழமானது. இயற்கையிலேயே இருவரும் அனேக விஷயங்களை ஏற்றுக் கொள்கிறார்கள் (take much for granted). இந்த நிலை திரு. ஜவஹர்லால் நேரு குடியரசு தலைவராக இருந்தாலோ குடியரசு தலைவராய் இருந்த டாக்டர் இராஜேந்திர பிரசாத் காலத்தில் முக்கியத்துவம் இல்லாத ஒரு நபர் பிரதமராக இருந்திருந்தாலோ அடியோடு வேறு விதமாக மாறியிருக்கக்கூடும். நமக்குத் தெரிந்த அளவில் திரு. நேரு பெயரளவில் ஒரு தேசத்தலைவராக, 10 ஆண்டுகள் குடியரசு தலைவர் பதவி வகித்த பிரசாத்தைப் போல் பணியாற்றி இருக்க மாட்டார்.

காலஞ் சென்ற டாக்டர் இராஜேந்திர பிரசாத், சுதந்திர இந்தியக் குடியரசின் முதல் தலைவர். காங்கிரஸ் கட்சியின் ஒரு மூத்த தலைவராக இருந்த காரணத்தினாலும், அமைச்சர்கள் அவரை விட எல்லா விதத்திலும் குறைந்தவர்களாக இருந்த காரணத்தினாலும் அவர் கருத்துகளை அமைச்சரவை மதிப்புக் கொடுத்து, மிக்க மரியாதையோடு ஏற்றுக் கொண்டதென்றால் அது அவரின் சொந்தச் செல்வாக்குக் காரணமாகத்தான் இருந்திருக்க முடியுமே தவிரக் குடியரசு தலைவர் பதவியில் இருக்கிறார் என்ற காரணத்திற்காக அன்று. 1951-ல் திரு. நேரு கொண்டுவர இருந்த இந்து சமூக விவாக ரத்து மசோதா, பண்டைய சொத்துரிமைப் பழக்கங்களைத் திருத்தி அமைக்கும் மசோதாக்களை டாக்டர் இராஜேந்திர பிரசாத் கொண்டு வராதபடி செய்து விட்டார். டாக்டர் பிரசாத் இது குறித்துப் பிரதமருக்கு எழுதிய கடிதத்தில் நாட்டிலுள்ள பெரும்பாலாரின் எதிர்ப்புக்குக் காரணமாக இருக்கும் இந்த மசோதாக்களைத் தம்முடைய எச்சரிக்கையையும் புறக்கணித்துப் பரிசீலனைக்கு ஏற்றுக் கொண்டால் தம்முடைய ரத்து செய்யும் அதிகாரத்தை (Veto Power) உபயோகப்படுத்த வேண்டி இருக்கும் என்று குறிப்பிட்டிருந்

தார். இந்தக் கடிதம் அமைச்சரவையில் அந்தச் சமயம் ஆச்சரியத்தை உண்டாக்கிய போதிலும் அவருடைய வார்த்தைகளுக்கு மதிப்புக் கொடுத்து அதை ஒத்திப் போட்டார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர் ஒரு கட்சியின் உன்னத நிலையில் இருக்கிறவர் என்பதால்தான். ஆனால், குடியரசு தலைவரும் பிரதம அமைச்சரும் வேறுவேறு அரசியல் கட்சிகளைச் சார்ந்தவர்களாக இருந்திருந்தால் ஒரு ருசிகரமான அரசியல் நிகழ்ச்சி உருவாகியிருக்கக்கூடும். இந்த விஷயம் எப்படியோ பத்திரிகைகளுக்குத் தெரிந்து விளம்பரப்படுத்தப்பட்டது. இல்லையென்றால், அமைச்சரவை இரகசியமாக விவாதங்களை நடத்துவதாலும் நீதி மன்றங்கள்கூடக் குடியரசு தலைவருக்கு அமைச்சரவை என்ன ஆலோசனைகள் கூறிற்று என்று தெரிந்து கொள்ள முடியாதபடி அரசியலமைப்பில் பாதுகாப்புகள் கொடுக்கப்பட்டிருப்பதாலும் விஷயங்கள் வெளிவர வழியில்லை. இந்த அரசியலமைப்புப் பாதுகாப்புகளால் குடியரசு தலைவரும் அமைச்சரவையும் எவ்வாறு ஒருங்கிணைந்து செயற்படுகிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்வது கடினம்.

நம் நாட்டின் அரசியல் அமைப்புப் போல உள்ள மற்ற நாடுகளின் அரசியலமைப்புகள் குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் இடையே என்னென்ன அரசியல் மரபுகளை ஏற்படுத்தியிருக்கின்றன என்று தெரிந்து அதைப்போல் நம் நாட்டிலும் மரபுகளை ஏற்படுத்துவது அவ்வளவாக உகந்தது அன்று. முன்னாள் இந்தியத் தலைமை நீதிபதியாக இருந்த திரு. பதஞ்சலி சாஸ்திரி (Patanjali Sastri) என்பவர், 'அரசியலமைப்பில் குடியரசு தலைவரின் அதிகாரங்கள் என்னென்ன வென்று குறிப்பிடப்பட்டுள்ளதோ அவற்றை மற்ற நாட்டு அரசியலமைப்பு மரபுகள் மூலம் குறைக்க முடியாது,' என்று ஆணித்தரமாகச் சொல்லியுள்ளார். ஓர் எழுதிய அரசியலமைப்பு அதற்கே சொந்தமான சில அடிப்படைக் குணாதிசயங்களைக் கொண்டிருக்கிறது. மக்களே தங்களுக்கு வகுத்துக்கொண்ட, எல்லாவற்றையும் தன்னகத்தில் கொண்டுள்ள (Self–Contained) ஓர் எழுதப்பட்ட அரசியலமைப்பாகும் அது.

டாக்டர் இராஜேந்திர பிரசாத் அரசியல் நிர்ணய சபையில் நவம்பர் 26, 1949-ல் முடிவுரை நிகழ்த்தியபொழுது இந்தியக் குடியரசு தலைவர் அமைச்சரவையின் ஆலோசனைப்படிதான் எல்லாச் சமயங்களிலும் நடக்கவேண்டும் என்று அரசியலமைப்பின் எந்தவிதியும் கட்டுப்படுத்தாவிட்டாலும், காலப்போக்கில் ஏற்படக்கூடிய அரசியல் மரபுகளின் தன்மையால் இங்கிலாந்து மன்னரைப்போல் ஒரு சட்ட ரீதியான குடியரசு தலைவராகச்

செயற்படுவார் என்று கூறினர். அவர் குடியரசு தலைவராக இருந்த 10 ஆண்டுகளின் அனுபவத்தால் இந்தியக் குடியரசு தலைவரை இங்கிலாந்து மன்னருக்கு ஒப்பிடுவதால் ஒரு தவறான முறையில் நம் அரசியலமைப்பைப் புரிந்து கொள்ளக்கூடும் என்றும் நினைத்தார். அவர் அபிப்பிராயங்களைத் தெளிவாகக் கூறுதுவிட்டாலும், அவர் மனம் எந்தக் கண்ணோட்டத்தில் செயற்பட்டது என்பதைக் கீழே குறிப்பிடுபவற்றிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

அரசியலமைப்பில் விவரமாக அமைச்சரவையின் ஆலோசனைப் படிதான் குடியரசு தலைவர் செயற்படவேண்டும் என்று எங்கும் கூற வில்லை என்கிறார் திரு பிரசாத் அவர்கள். இங்கிலாந்து நாட்டின் எழுதப்படாத அரசியல் சட்டத்தின் மரபுகளையும் பழக்க வழக்கங் களையும் நம்முடைய எழுதி அமைக்கப்பட்ட அரசியல் சட்டத்தில் சேர்த்துக்கொள்ளலாமா என்னும் கேள்வியை எழுப்பி அதற்கு அவரே பதிலும் கீழ்வருமாறு சொல்கிறார். நம் நாட்டின் நிலையும் பிரச்சினைகளும் இங்கிலாந்து நாட்டின் பிரச்சினைகளும் ஒன்றல்ல. எனவே, இங்கிலாந்து நாட்டின் அரசியல் சட்ட அர்த்தத்தை நாம் ஏற்றுக்கொள்வதும் நம் அரசியல் சட்டத்தில் இணைப்பதும் சரியில்லை. உண்மையில், நம் அரசியல் சட்டம் இங்கிலாந்து நாட்டின் அரசியல் சட்டத்தைத் தழுவியிருப்பினும் இரண்டுக்குமுள்ள வேற்றுமைகள் முக்கியமானவை. அவை யாவன:

'இங்கிலாந்து அரசியலமைப்பு ஒருமுக அரசு (Unitary Constitution) முறையைச் சார்ந்தது. இதில் பாராளுமன்றம் தான் மிக்க அதிகாரத்தைக் (Supreme) கொண்டு முதன்மையாக விளங்கு கிறது. சட்டங்கள் இயற்றும் பொறுப்பை வேறு எந்த நிறுவனத் துடனும் பகிர்ந்து கொள்ள முடியாது. பாராளுமன்றமே தன் அதிகாரத்தைப் பகிர்ந்து கொடுக்க முடிவுசெய்தாலொழிய, சட்டங்கள் உருவாக்க எதற்கும் உரிமை இல்லை. நம்முடைய அரசியல் சட்டம் ஒரு கூட்டாட்சியின் (Federal) அடிப்படையில் உருவானது. எனவே, மத்திய அரசின் பாராளுமன்றமும் மாநில அரசுகளின் சட்ட சபைகளும் தனித்தன்மை வாய்ந்தவை. அவற்றினுடைய அதிகாரங்கள் நம்முடைய அரசியலமைப்பில் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், மத்திய அரசின் பாராளுமன்றம் சட்ட சபைகளின் உரிமைகளை ஆக்கிர மித்துக் கொள்ள முடியாது. இங்கிலாந்து நாட்டின் அரசிய லமைப்புப்படி அந்நாட்டின் தலைவர் ஓர் அரசர். பரம்பரை வழி களின்படி அரசு (முடி Crown) அரசரின் சந்ததிகளுக்குச் சட்டப் படி போகும். ஆனல், நம் நாட்டின் தேசத்தலைமையில் ஒரு

குடியரசு தலைவர் இருக்கின்றார். இவர் 5 ஆண்டு காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அவரை அரசியலமைப்பில் சொல்லப் பட்டிருப்பது போல் எந்த ஒரு தவறான நடத்தைக்கும் முறை யாகப் பதவியிலிருந்து நீக்கிவிடலாம். மத்திய அரசின் தீர்மானங் களைச் செயற்படுத்தும் அதிகாரம் குடியரசு தலைவரிடம்தான் இருக்கிறது. அதை அவர் நேரிடையாகவோ தம் கீழ்ப் பணி புரியும் அதிகாரிகள் மூலமாகவோ அரசியலமைப்பில் சொல்லப் பட்ட விதத்தில் உபயோகிக்கலாம். இராணுவத்தின் மிக உயர்ந்த தலைவராகவும் (Supreme Commander) அவர் இருக்கிறார். அரசியல் சட்டத்தின் அனேக விதிகள் குடியரசு தலைவரின் பொறுப்புகளையும் கடமைகளையும் விவரிக்கின்றன.'

குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் உள்ள உறவின் அரசியல் மரபுகள் இங்கிலாந்து மரபுகளை எல்லாவிதத்திலும் தழுவியிருக்கும் என்று நம்பமுடியாது. ஏனெனில், மரபுகளின் வளர்ச்சி அனேக சந்தர்ப்பங்களைக் கொண்டு உருவாவன. அது அரசியல், பொருளாதார சூழ்நிலைகளைப் பொறுத்திருக்கின்றது. இச் சூழ்நிலைகள் இரண்டு நாடுகளுக்கும் ஒரே மாதிரி இருக்க முடியாது. எனவே, வளரும் அரசியல் மரபுகளும் ஒரே மாதிரி இருக்க வழியில்லை. கானடா, ஆஸ்திரேலியா போன்ற ஆங்கில சமூகத்தைக் கொண்ட நாடுகளில் கூட அவர்கள் உருவாக்கிய அரசியல் மரபுகள் இங்கிலாந்தின் மரபுகளுக்கு மாறுபட்டிருக் கின்றன. இந்திய நாட்டு மக்கள் இங்கிலாந்து நாட்டு மக்களைப் போலல்லாமல் நடையுடைபாவனை, அரசியல் அறிவு, படிப்பு, உலக அனுபவம், நாகரிகம் ஆகிய எல்லாவற்றிலும் மாறுபட்டு விளங்கியதால் நம் அரசியல் மரபுகள் அவர்களுடையது போல் இருக்கும் என்று எண்ண முடியாது. மேலும், இங்கிலாந்து அரசியல் மரபுகள் நம் அரசியல் சட்டத்தில் பிரிக்க முடியாத ஓர் அம்சம் என்றும் சொல்லுவதற்கில்லை. நமது அரசியல் சட்டத் திலுள்ள விதிகள், இங்கிலாந்து அரசியல் மரபுகள் நம் அரசியல் சட்டத்தின் ஒருபாகம் என்று எங்கும் கூறவில்லை. சர் ஐவர் ஜென்னிங்ஸ் (Sir Ivor Jennings) என்பவர் குறிப்பிட்டுள்ளது போல் 'இங்கிலாந்து அரசியல் மரபுகள் இந்திய அரசியலமைப்பில் இணைக்கப்பட்டிருக்கின்றன என்று வெளிப்படையாகத் தெரிந்த போதிலும் எந்த விதமான கட்டுப்பாடும் இல்லாத அதிகாரங் களைக் கொண்ட குடியரசு தலைவரின் செயல்கள் சில சமயங்களில் அமைச்சரவையுடன் மோதலை உருவாக்கும். இங்கிலாந்து நாட்டிலுள்ளது போல் இல்லாவிட்டாலும், அதற்கு மாறு பட்டதாக இருந்தாலும் ஏதாவது ஒரு வழிமுறை சுமுக உறவுக்குச் செய்தாக வேண்டும்.

இந்திய அரசியல் சட்டம் அமலில் இருக்கும் இந்தக் குறுகிய காலத்தில் எந்த அரசியல் மரபும் நல்லபடி அமைந்து விட்டது என்று கருத இடமில்லை. குடியரசு தலைவருக்கும் பிரதமருக்கும் இடையே இருக்கும் உறவைத் தீர்மானிக்கும்படி எந்த ஒரு மரபும் உண்மையில் வளர்ச்சியடையவில்லை. மேலும், எந்த மரபும் அரசியல் சட்டத்தில் குறிப்பாகக் கண்டுள்ள விதிகளை மீற முடியாது. அரசியல் மரபு என்பது காலப் போக்கில் சூழ் நிலைகளுக்கு ஏற்றபடி நடைமுறையில் இருக்கவேண்டிய ஓர் ஏற்பாடு (Working arrangement). இம் மரபுகள் மாறுபட்ட காலங்களில் ஏற்றுக் கொள்ளாதவைகளாகவும் அமையலாம். உதாரணமாக அமெரிக்கக் குடியரசு தலைவராக ஒருவரை மூன்றும் முறையாகத் தேர்ந்தெடுக்கக் கூடாது என்று ஒரு மரபு நிலவுகிறது. இந்த மரபு முதல் அமெரிக்கக் குடியரசு தலைவர் திரும்பவும் குடியரசு தலைவர் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளாமல் மறுத்ததிலிருந்து வளர்ச்சியடைந்தது. ஆனால், இந்த அரசியல் மரபைப் புறக்கணித்துக் குடியரசு தலைவராக இருந்த திரு. ரூஸ்வெல்ட் என்பவர் மூன்றும் முறையாக, ஏன் நான்காம் முறையாகக் கூடக் குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இப்படிப்பட்ட சூழ்நிலை மறுபடியும் உருவாவதைத் தடுக்க அமெரிக்க அரசியல் திட்டத்தில் ஒரு திருத்தம் செய்யப்பட்டது. அதன்படி எந்த ஒரு குடியரசு தலைவரும் மூன்றும் முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட முடியாது. இரண்டே முறைதான் ஒரே நபர் குடியரசு தலைவராகப் பதவி வகிக்க முடியும்.

குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் உள்ள உறவின் தன்மையை நிர்ணயிக்கும் இன்னொரு விஷயம் நாட்டிலுள்ள அரசியல் கட்சிகளின் நிலை. காங்கிரஸ் கட்சியின் சீரான ஒற்றுமை சீர்குலைந்துபோய் ஓரே இயல்பான அரசு தன்மை அழிக்கப்பட்டு விட்டால், குடியரசு தலைவர், பெயரளவில் தான் ஆட்சித் தலைவராக இருக்க வேண்டும் என்று அரசியல் சட்டம் உருவாக்கியவர்களின் எண்ணத்திற்கே சவால்விட ஏதுவாகும். பலதரப் பட்ட கட்சிகளைக் கொண்ட ஆட்சி முறை உருவானால் அரசியல் சட்டம் பலத்த சோதனைகளுக்குள்ளாகலாம். மாறுபட்ட அரசியலமைப்பின் தலைவர்களாக இருந்து, மாறுபட்ட பாகத்தை ஏற்றுச் செயற்பட வேண்டியிருந்தாலும் இந்தியக் குடியரசு தலைவரின் பொறுப்புகளும் கடமைகளும் அமெரிக்கக் குடியரசு தலைவருக்கு அளிக்கப்பட்ட பொறுப்புகள் போலக் காணப்படுகின்றன. பொறுப்பும் நிதானமும் ஒருங்கிணைந்து செயற்பட வேண்டியவர் குடியரசு தலைவர் என்று கொண்டு அரசியல் சட்டம் அவருக்கு எல்லா அதிகாரங்களையும் அளித்துள்ளது. ஓரே கட்சி

ஆட்சியில் இருந்தால் எவ்வளவு நன்றாகக் குடியரசு தலைவர் சமநிலையான ஈடுபாட்டோடு செயற்படுகிறாரோ, அது பல கட்சி களைக்கொண்ட அரசு அமைந்தால் நடக்காது. அப்படிப்பட்ட சூழ்நிலையில் பாராளுமன்றம் பலம் இழந்து செயற்பட்டால் அதாவது எந்தக் கட்சியுமே அதிகப்படியான உறுப்பினர்களைக் கொண்டு செயற்படாத நிலைமையில், உண்மையில் அதிகாரம் அமைச்சரவையிடம் இருந்தும் பிரதமரிடமிருந்தும் குடியரசு தலைவரின் கைகளுக்குப் போய்விடும்.

எந்த ஒரு கட்சிக்கும் பாராளுமன்றத்தில் அதிகப்படியான ஆதரவு இல்லாத நிலையில் ஒரு பிரதமரைத் தேர்ந்தெடுப்பது சிரமமான காரியம் ஆகிவிடும். குடியரசு தலைவரும் அரசியல் கட்சிகளின் பூசல்களின் சுழலில் சிக்கநேரிடும். இப்படிப்பட்ட சூழ்நிலை 1952-ல் தமிழ்நாடு மாநிலத்தில் உருவானது நினைவிருக் கலாம். அப்பொழுது நடந்த பொதுத்தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்குப் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு கிடைக்க வில்லை. அப்பொழுது ஆளுநராக இருந்த திரு. ஸ்ரீபிரகாசா என்பவர் கட்சிகளின் கூட்டாட்சி ஏற்பட வழியிருக்கிறதா என்று ஆராயாமலும் மற்றக் கட்சித் தலைவர்களைக் கலந்து ஆலோசிக்கா மலும், காங்கிரஸ் கட்சியின் தலைவரைக் கூப்பிட்டு அரசு அமைக் கும் பொறுப்பை அவரிடம் தம்மிச்சையாகக் கொடுத்து அவர் எந்த மாநிலச் சபையிலும் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படாத பொழுது மேல்சபை உறுப்பினராகவும் நியமனம் செய்துவிட் டார். எனவே, முதலமைச்சராக யார் இருக்கவேண்டும் என் பதை ஆளுநரே முடிவு செய்ததுமல்லாமல் ஒரு கட்சியின் ஆதர வாளராக ஒருதலைப்பட்சமாக நடந்துகொண்டார். இதேபோன்ற நிலை, நாடு அரசியல் அனுபவம்பெற்று, புதிதாக உருவான அரசியல் கட்சிகளில் சில ஒன்றாகச் சேர்ந்து தங்கள் இடத்தைப் பலப்படுத்திக்கொண்டு செயற்பட்டால் மத்தியஅரசிலும் ஏற்பட லாம். பலதரப்பட்ட சிறுபான்மைக் கட்சிகளின் தலைவர்கள் மக்கள் சபையில் சிறுபான்மையோரின் ஆதரவோடு செயற்படும் பொழுது, பிரதமர் சிறுபான்மைக் கட்சியின் தலைவர் என்ற முறையில் குடியரசு தலைவரின் தயவில்தான் செயற்பட வேண்டியிருக்கும். சிறுபான்மையான உறுப்பினர்களின் தலைவ ராக உள்ள எந்தப் பிரதமரும் பலமிழந்து, மனோதிடத்துடன் பிரச்சினைகளைச் சமாளிக்க முடியாது. ஒரு பக்கம் குடியரசு தலைவரின் நல்லெண்ணத்திற்குப் பாத்திரமாகி அதே சமயத்தில் மக்கள் சபையின் நம்பிக்கையையும் இழக்காமல் செயற்பட வேண்டியிருக்கும், ஏனெனில், இந்த இரு ஆதரவும் இல்லா விட்டால் அவர் வகிக்கும் பதவி ஆட்டங்கண்டு விடும். இப்படிப்

பட்ட நிலையில் பிரதமர் கொள்கைகளை வகுத்துச் செயற்படுவ தற்குப் பதிலாகக் குடியரசு தலைவரின் கைப்பொம்மையாக (ஜெர்மனி நாட்டில் நடந்த மாதிரி) மாறிவிடலாம். எதிர் காலத்தில் எப்படிப்பட்ட சூழ்நிலை உருவாகும் என்று உடனடி யாக முடிவு செய்ய இயலாது. ஏனெனில், நாட்டில் உருவாகிக் கொண்டு இருக்கும் அரசியல் கட்சிகளின் அமைப்பு, கொள்கை, தன்மை இவற்றைக் கொண்டுதான் நிர்ணயிக்க வேண்டியிருக்கும். முக்கியமான, செல்வாக்கு நிறைந்த தலைவர்களைச் சுற்றிக் கட்சிகள் அமைக்கப்பட்டு அந்தத் தலைவர்கள் ஆட்சியில் அமர ஆவன செய்யப்பட்டால் கட்சிகளின் கூட்டாட்சிப் பொறுப்பை (Coalition Government) ஏற்க பிரான்சு நாட்டைப் போலப் பல கட்சிகளைக் கொண்ட கூட்டு ஆட்சிதான் அமைக்க முடியும். இதற்கு மாறாக ஜெர்மன் நாட்டைப்போல அரசியல் கட்சிகள் நல்ல பொருளாதார, அரசியல் கொள்கைகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டு நல்ல முறையில் செயற்பட முனைந்தால் கட்சி களின் கூட்டு, அரசு பொறுப்பை ஏற்க முடியாமல் போகும்.

முடிவில் குடியரசு தலைவருக்கும் பிரதமருக்கும் இடையே உள்ள ஒரு விசேஷத் தன்மையைக் கொண்ட உறவு, அவர்கள் இருவருக்குமுள்ள பரஸ்பர செல்வாக்கைப் பொறுத்தும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளக்கூடிய தன்மையைப் பொறுத்தும், அப்பொழுது நிலவும் சமூக பொருளாதாரச் சூழ்நிலைக்கு ஏற்பவும் அமையும். குடியரசு தலைவரும் பிரதமரும் ஒருவரை ஒருவர் சமநிலைப்படுத்துகின்றனர் (balance each other). குடியரசு தலைவர் நடைமுறையில் அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்று நடக்க வேண்டும் என்றாலும் சில சந்தர்ப்பங்களில் அவர்களின் ஆலோசனையை ஏற்க மறுக்கலாம். இதை வேறு விதமாகச் சொல்ல வேண்டும் மென்றால், சட்டரீதியானது அன்று என்று தாம் கருதும் பிரதமரின் எந்த ஒரு செயலையும் குடியரசு தலைவர் தடுக்கலாம்.

### குடியரசு தலைவரின் செயற்குழு அதிகாரங்கள் (Executive Powers of the President)

அரசியல் விற்பன்னர்கள், 'தீர்மானங்களைச் செயலாக்கும் அதிகாரம்' (ஆட்சித்துறை அதிகாரம்) என்ற சொற்றொடரைக் கீழே குறிப்பிட்டபடி பிரித்துள்ளார்கள்.

**(1)** நிருவாகத்துறை அதிகாரங்கள் (Administrative Powers) சட்டங்களை நிறைவேற்றி அமல் படுத்துவது, அன்றாட அரசாங்க நிருவாகத்தைக் கவனிப்பது சம்பந்தப்பட்டதாகும்.

(2) இராணுவ அதிகாரங்கள் : (Military Powers); இராணுவ அமைப்பைக் குறித்தும் யுத்தம் நடத்தும் விதத்தையும் பற்றியது.

(3) சட்டமன்றத்துறை அதிகாரங்கள் : (Legislative Powers): மசோதாக்களைத் தயாரிப்பதும் அவற்றைச் சட்டமாக்க உத்தரவு பிறப்பிப்பதும் சம்பந்தப்பட்டது.

(4) வெளிநாடுகள் உறவுகள் பற்றிய அதிகாரங்கள் (Diplomatic Powers) வெளிநாடுகளின் உறவு சம்பந்தமான விஷயங்கள்.

(5) நீதித்துறை அதிகாரங்கள் (Judicial Powers) குற்றவாளிகளுக்கு மன்னிப்பு அளித்தல், தண்டனையைக் குறைத்தல்(Pardon), மரணதண்டனையை ஒத்தி வைத்தல் (Reprieves) ஆகியவை சம்பந்தப்பட்டது.

மேற்கூறிய எல்லா அதிகாரங்களையும் குடியரசு தலைவருக்கு இந்திய அரசியலமைப்பு அளித்துள்ளது. அவற்றைப்பற்றி விவரமாக இப்பொழுது பார்ப்போம்.

# 4. குடியரசு தலைவரும் அவருடைய நிருவாகத்துறை அதிகாரங்களும்

## (The President and his administrative Powers)

அமெரிக்கக் குடியரசு தலைவரைப்போல் இந்தியக் குடியரசு தலைவர், செயற்குழுப் பிரிவின் உண்மையான தலைவர் அல்லர். எனவே, அரசின் பலதரப்பட்ட இலாக்காக்களின் அலுவல்களைக் கண்காணிக்கவோ மேற்பார்வையிடவோ, கட்டுப்படுத்தவோ அவருக்கு அதிகாரம் இல்லை. உள்நாட்டில் உள்ள பரந்து விரிந்து செயற்படும் பல அலுவல்களையும் வெளிநாட்டில் செயற் படும் தூதுவர்களின் அலுவல்களையும் அமெரிக்கக் குடியரசு தலைவரைப்போல் கட்டுப்படுத்த நம் குடியரசு தலைவரின் கையில் அதிகாரம் இல்லை. அமெரிக்க அரசியலமைப்பில் குடியரசு தலைவர்தாம் சட்டங்கள் ஒழுங்காகச் செயல்படுகின்றனவா என்று கண்காணிக்கவேண்டும். இந்தியக் குடியரசு தலைவரும் அதேபோல் நிருவாகம் செயற்படுவதைக் கண்காணிக்கவேண்டும் என்று அரசியல் அமைப்பில் எந்த விதியும் குறிப்பிடவில்லை. எனவே, நாட்டில் சட்டங்கள் முறைப்படி அமல்படுத்தப்படுகின் றனவா என்று ஆராய்வதில் குடியரசு தலைவருக்குச் சட்டரீதி யான பொறுப்புகள் தரப்படவில்லை. உண்மையைச் சொல்லப் போனால் அரசின் செயற்படுத்தும் துறையில் குடியரசு தலைவர் பங்குகொள்வது மிக மிக அரிதான விஷயம். மத்திய அரசின் அமைச்சர்கள் அனேகமாக எல்லா விஷயங்களிலும் அவரைக் கலக்காமலே, அவருக்குத் தெரிவிக்காமலே அவர் சார்பில் அரசு அலுவல்களைக் கவனிக்கிறார்கள். மத்திய அரசின் இலாக்காக்கள் உண்மையிலேயே அந்தந்த இலாக்காவின் அமைச்சரின் கண் காணிப்பில் செயற்பட்ட போதிலும், செயற்குழுவின் எல்லா முடிவுகளும் குடியரசு தலைவரின்பேரில் எடுக்கப்படுகின்றன. விதிஎண் (77-(1)). அரசு உத்தரவுகளும், அதிகாரப் பத்திரங்

களும் குடியரசு தலைவரின்பேரில்தான் செய்யப்படுகின்றன. அவை குடியரசு தலைவரால் உருவாக்கப்பட்ட விதிகளை அனுசரித்து அவர் சார்பில் உறுதியாக்கப்படுகின்றன. இந்த முறையில் உறுதி செய்யப்படும் உத்தரவுகள், அதிகாரப் பத்திரங்கள் மத்திய அரசின் நிருவாகப்பிரிவின் உத்தரவுகள் என்று மக்களுக்கு எளிதில் தெரியும்படி அமைந்துள்ளன. இது இந்திய அரசு சட்டம் (Govt. of India Act 1935) 1935-ன் கீழ்க் குடியரசு தலைவரின்பேரில்வரும் உத்தரவுகளை, சம்பந்தப்பட்ட இலாக்காவின் செயலாளரே கையொப்பமிட்டு, உறுதி செய்தது போலவே தான் இருக்கிறது. அரசியலமைப்பு விதிஎண் 77-ல் கண்டபடி குறிப்பிட்டமுறையில் உறுதிப்படுத்தப்பட்ட உத்தரவுகளை அவை குடியரசு தலைவரின் உத்தரவுகள் அல்ல என்று யாரும் கேட்கவோ, நினைக்கவோ கூடாது என்று கூறுகிறது. விதி எண் 77 உத்தரவுகளின் உருவத்தை அல்லது அமைப்பைத் தான் (form of order) குறிக்கிறது என்றும், அவ் வுத்தரவுகள் சரியானவைகளா குறிப்பிட்ட விஷயத்துக்கு ஏற்ற வகையாக இருக்கின்றனவா என்பதை விதி எண் 73 தீர்மானித்து, அரசின் நிருவாகப் பிரிவின் அதிகார வரம்பை விளக்குகிறது.

குடியரசு தலைவர், அரசு அலுவல்களைச் செவ்வனே செய்வதற்கு விதிகள் வகுத்து, அமைச்சர்களுக்கு (பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படி தான்) இலாக்காக்களின் பணிகளைப் பிரித்துக் கொடுத்து விடுகிறார் [விதி 77 (3)]. பிரதமர், அமைச்சரவை எடுக்கும் எல்லா முடிவுகளையும் குடியரசு தலைவரின் கவனத்திற்குக் கொண்டு வருவதுடன், குடியரசு தலைவர் கேட்டு அனுப்பும் எல்லா விவரங்களையும், நிருவாக விஷயங்களையும் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார். தனிப்பட்ட அமைச்சரின் ஆலோசனைகளையும், சிபாரிசுகளையும் அமைச்சரவையின் முடிவுகளுக்குக் கொண்டு போகும்படி குடியரசு தலைவர் பிரதமரைக் கேட்டுக் கொள்ளலாம் (விதி எண். 78). எனவே, இந்தியக் குடியரசு தலைவர் அமைச்சரவையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தும் அவர் அமைச்சரவையின் கூட்டங்களில் தலைமை வகிக்க உரிமையில்லை.

### வேலை கொடுக்கும் அதிகாரம் (The Power of Appointment)

அரசு நிருவாக அதிகாரம் என்று குறிப்பிடும்போது அதில், நாட்டில் உயர்ந்த அலுவலர்களையும், மற்ற நிருவாகக் குழுக்களையும் நியமிக்கும் அதிகாரமும் உள்ளடங்கி உள்ளது. குடியரசு தலைவர், வேலை நியமன விஷயங்களில், அரசியல் சட்டத்திலுள்ள விதிகளை அனுசரித்து அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலும் இந்த அதிகாரத்தைச் செலுத்துகிறார். அமெரிக்க நாட்டின் மேல்

சபை (Senate)யின் சம்மதத்தின் பேரிலேயே, குடியரசு தலைவர் நியமன அதிகாரத்தைப் பிரயோகிக்கிறார். அமெரிக்கப் பாராளு மன்றம் (Congress) குடியரசு தலைவர்தாம் உத்தியோக நியமனம் செய்யும் அதிகாரி என்று குறிப்பிட்ட பதவிகளுக்கு நியமித்தால் அவர் அப்பதவிகளின் நியமனத்திற்குமேல்சபையின் சம்மதத்தைப் பெற வேண்டியதில்லை. இந்திய அரசியல் சட்டப்படி குடியரசு தலைவர்தாம், பிரதமரையும் அமைச்சர்களையும், இந்திய அரசின் தலைமை வழக்கறிஞரையும் (Attorney-General), தலைமைத் தணிக்கை அதிகாரியையும், தலைமை நீதிமன்றத்தின், தலைமை நீதிபதியையும் மற்ற நீதிபதிகளையும் மாநில உயர்நீதி மன்றங் களின் நீதிபதிகளையும், ஆளுநர்களையும் பதவிகளுக்கு நியமனம் செய்கிறார். நீதிபதிகள் நியமன விஷயங்களில் குடியரசு தலைவ ரிடமிருந்து உத்தரவு வந்தாலும், உண்மையில் உள்நாட்டுத் துறை அமைச்சரே இந்த நியமனங்களைச் செய்கிறார்.

விதி 124 படி தலைமை நீதிமன்றத் (Supreme Court) தின் தலைமை நீதிபதி நியமன விஷயத்தில் குடியரசு தலைவர், மற்றத் தலைமை நீதிமன்றத்தின் நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள் முதலியவர்களை அவர் உசிதப்படி கலந்தாலோசித்து முடி வெடுப்பார். மேற் கூறியவர்களுடன் ஆலோசனை செய்தாலும் அவர்களுடைய சம்மதத்தின் பேரில்தான் குடியரசு தலைவர் தலைமை நீதிபதி நியமன விஷயத்தில் செயற்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை. தலைமை நீதிமன்றத்தின் மற்ற நீதிபதிகளை நியமிக்கும் விஷயத்தில் குடியரசு தலைவர் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியை மட்டும் கலந்தாலோசிக்க வேண்டும். வேலை நியமன விஷயங்களில் யார் யார் ஆலோசனைகள் சொல்லத் தகுந்தவர்களோ அவர்களைக் கலந்து செயற்பட்டாலும் அவர்கள் ஆலோசனைப்படிதான் குடியரசு தலைவர் உத்தரவுகள் அனுப்ப வேண்டும் என்பது ஒன்றும் கட்டாயமானதன்று. நடைமுறையில் உள்நாட்டு அமைச்சர்தாம் மற்றத் தலைமைநீதிமன்றத்தின் நீதி பதிகளின் அபிப்பிராயத்தையும், குடியரசு தலைவரின் அபிப்பி ராயத்தையும் கேட்டறிந்து, பிறகு அவர் முடிவின்படி, குடியரசு தலைவர் உத்தியோக நியமனஉத்தரவைப் பிறப்பிக்கின்றார். ஆக, வெளிப்படையாகக் குடியரசு தலைவர்தாம் உத்தரவை அனுப்பு கிறார் என்றாலும், உண்மையில் நியமன அதிகாரியாகச் செயற்படுவது மத்திய அரசின் உள்துறை அமைச்சர்தாம். தலைமை நீதிபதி பதவி, தலைமை நீதிமன்றத்தில் காலியானவுடன், மரபின்படி அடுத்த மூத்த நீதிபதிதான் தலைமை நீதிபதியாகப் பதவி ஏற்பார். ஆனால், சமீபத்தில், அடுத்த மூத்த நீதிபதியைத் தலைமை நீதிபதியாக நியமனம் செய்யாமல் உள்நாட்டுத்துறை

அமைச்சர் ஆலோசனைப்படி, திரு. இராய் என்பவரைப் பிரதம நீதிபதியாக நியமனம் செய்தார்கள். இதனால் வழக்கத்தில் இருந்துவந்த ஒரு மரபு அழிக்கப்பட்டது. அரசியல் இலாபத்திற் காக நீதிமன்றத்திலேயே அநீதி நிகழ்ச்சி நடப்பதாகப் பத்திரி கைகள் ஒருமுகமாக இதை எதிர்த்தன. மூத்த நீதிபதியான திரு ஹெக்டே என்பவர் நீதிபதி பதவியை இராஜினாமா செய்து விட்டார்.

விதி எண் 217-ன் கீழ் உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகளை நியமிக்க, (1) தலைமை நீதிமன்றத்தின் தலைமைநீதிபதி (Chief Justice of India), (2) மாநில ஆளுநர், (3) உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி ஆகியவர்களுடன் கலந்தாலோ சித்துக் குடியரசு தலைவர் முடிவுசெய்கிறார். உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியை நியமனம்செய்ய, தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, மாநில ஆளுநர் இவர்களை மட்டும் குடியரசு தலைவர் கலந்தாலோசித்தால் போதுமானது. இன்று நடைமுறை யில் உள்ளாட்சித்துறை அமைச்சர்தாம், குடியரசு தலைவரின் பேரில் நியமனங்களைச் செய்கிறார்.

மேலே குறிப்பிட்ட பெரிய அதிகாரிகளைப் பதவிகளுக்கு நியமனம் செய்வதல்லாமல், குடியரசு தலைவர் கீழே விவரித்துள்ள நிருவாகக் குழுக்களையும் நியமிக்கலாம்.

(1) மாநிலங்களின் அவை (Inter-State Council)

(2) மத்திய அரசாங்கப் பணியாளர் தேர்வுக்குழு, ஒரு சில மாநிலங்களின் கூட்டுக்குழு, (Union Public Service Commission and a Joint Commission for a group of States).

(3) நிதிக்குழு (Financial Commission)

(4) பின்தங்கிய வகுப்புகளுக்குக் (SC & ST) கொடுக்கப் பட்ட பாதுகாப்புகளும் சலுகைகளும் சரிவரச் செயற்படு கின்றனவா என்று பார்த்து, குடியரசு தலைவருக்கு அறிக்கை சமர்ப்பிக்க ஒரு விசேஷ அதிகாரியை நியமித்தல்.

(5) பின்தங்கிய வட்டாரத்தில் நிருவாகம் நடக்கும் முறை யைக் குறித்து அறிக்கை அனுப்ப ஒரு குழுவும், பின்தங்கிய வகுப்பு களைச் சார்ந்த மக்களின் நிலையை ஆராய ஒரு குழுவும் நியமிப்பது.

(6) மொழிக்குழு (Language Commission)

உண்மையில் மத்திய அரசின் எந்த ஓர் உத்தியோக நியமனமும் குடியரசு தலைவரின் பெயரில் அவருடைய அதிகாரத் தின் கீழ்தான் செய்யப்படுகிறது. ஆனால், மேற்கூறிய குழுக்கள்,

குடியரசு தலைவரின் அத்தாட்சிப் பத்திரத்தில் அவருடைய அலுவலகத்தின் முத்திரையின்கீழ் அமைக்கப்படுகின்றது.

குடியரசு தலைவருக்கு, சில உயர்மட்டப் பதவிகள் தற்செயலாகக் காலியானால், காலியாகவுள்ள அந்தப் பதவிகளுக்கு ஆள்களை நியமிக்கவும் அதிகாரம் இருக்கிறது.

உதாரணமாக,

(1) பாராளுமன்றத்தின் சபாநாயகர், மேலவைத் தலைவர் (Speaker and Chairman of the Houses of Parliament) ஆகிய பதவிகளுக்கு, அவரவர்களின் துணைச் சபாநாயகர், துணைமேலவைத் தலைவர், இல்லாத போதும்,

(2) இந்தியாவின் தலைமை நீதிபதி, மாநிலத்தின் தலைமை நீதிபதி, மற்ற நீதிபதிகள், மாநிலத்தின் ஆளுநர் ஆகியோர் நீண்ட காலம் வேலைக்கு வராவிட்டாலோ வேறுகாரணங்களுக்காக அப்பதவிகளை ஏற்க முடியாது போனாலோ ஏற்படும் பதவி காலியைப் (Vacancies) பூர்த்தி செய்கிறார் (விதி எண் 160).

தலைமை நீதிமன்றத்தின் குறைநிறை எண்ணைப் (Quorum) பூர்த்தி செய்வதற்காக, ஒரு மாநில நீதிபதியைச் சேர்த்துக் கொள்வதற்குக் குடியரசு தலைவரின் சம்மதத்தை முதலில் பெற வேண்டும். மேலும், ஓர் அதிகப்படியான நீதிபதி மாநிலத்தின் உயர் நீதிமன்றத்தில் அல்லது இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தில் செயலாற்றத் தேவைப்பட்டாலும் குடியரசு தலைவரின் சம்மதத்தை முதலில் பெற்ற பிறகுதான் உத்தரவை அனுப்பலாம்.

அமெரிக்கக் குடியரசு தலைவரைப் போல், பலதரப்பட்ட அதிகாரிகளை நியமனம் செய்ய, அதிகாரங்கள் அவருக்குக் குவிந்திருப்பதுபோல் இந்தியக் குடியரசு தலைவருக்கு, அரசியலமைப்பில் விவரித்துள்ள பதவிகளைத் தவிர அதிகமான அரசு ஊழியர்களை நியமிக்க அதிகாரம் இல்லை. அரசாங்க அதிகாரிகளை வேலைக்குத் தேர்ந்தெடுக்கும் முறை, வேலைகளுக்கான நிபந்தனைகள் இவற்றைக் குறித்துச் சட்டம் இயற்ற அந்தந்தச் சட்டசபைகளுக்கு அதிகாரம் உள்ளது (விதி எண் 309). அரசு வேலைகளுக்கு ஆள்களைத் தேர்ந்தெடுக்க, அரசு பணியாள் தேர்வுக்குழுக்களை மத்திய அரசு சார்பிலும் ஏற்படுத்த அரசியலமைப்பு வழி வகுத்துள்ளது. சில குறிப்பிட்ட விஷயங்களைத்தவிர, மற்ற எல்லா நியமன விஷயங்களிலும் குடியரசு தலைவர் அரசு பணியாளர்

தேர்வுக் குழுவின் ஆலோசனையைக் கேட்கச் சட்டம் வகை செய்கிறது.

**வேலை நீக்கம் செய்யும் அதிகாரம் : (The Power of Removal)** வேலை நியமனம் செய்யும் அதிகாரம் உள்ளவர்களுக்கு வேறுவகை ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தாலொழிய வேலை நீக்கம் செய்யும் அதிகாரமும் உள்ளடங்கி இருக்கிறது. குடியரசு தலைவருக்கு அமைச்சர்கள், இந்தியாவின் தலைமை வழக்கறிஞர், ஆளுநர்களை வேலை நீக்கம் செய்யும் அதிகாரம் உள்ளது (விதி எண் 156-1). தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களைக் கொண்ட பாராளுமன்ற முறை அரசின் சாராம்சம், நாட்டின் செயற்குழுப் பிரிவின் தலைவர் அமைச்சர்களை வேலை நீக்கம் செய்வது அன்று. ஆங்கில அரசியலமைப்பு முறையைத் தழுவிய இந்தியப் பாராளுமன்ற அரசு அமைப்பில் வேலை நீக்கம் செய்யும் அதிகாரம் பிரதம அமைச்சரின் ஆலோசனையின் பேரிலேயே குடியரசு தலைவரால் உபயோகப்படுத்தப்படுகிறது. 'வேண்டாத அல்லது விரும்பத்தகாத அமைச்சர்' மக்கள் சபையில் பெரும்பாலாரின் ஆதரவைப் பெற்றிருப்பினும், அவரை அமைச்சரவையிலிருந்து நீக்கிவிடக் குடியரசு தலைவருக்கு பிரதமர் ஆலோசனை வழங்கலாம். நடைமுறையில் வேலை நீக்கம் செய்யவேண்டிய அவசியம் இல்லை. ஏனென்றால், சம்பந்தப்பட்ட அமைச்சரைப் பதவி விலகும்படி பிரதமர் கேட்டுக்கொண்டாலே அது வேலைநீக்க உத்தரவாகக் கொள்ளப்படுகிறது. எந்தச் செயலாளரையும் எந்த நேரத்திலும் பதவி நீக்கம்செய்ய அமெரிக்கக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் உண்டு. ஆனால், இந்தியக் குடியரசு தலைவர், தம்முடைய அமைச்சர்களை அவர்களுக்கு மக்கள் சபையில் பெரும்பாலாரின் ஆதரவு இருக்கும் வரை அப்படிச் செய்யமுடியாது.

மத்திய நிலங்களையும் பழங்குடிகள் வாழும் இடங்களையும் குடியரசு தலைவர் நிருவாகம் செய்யும் முறை : (Administration of Union Territories and Tribal Areas by the President)

மாநிலங்களின் மறு அமைப்புக்குழு (States Reorganisation Commission) வின் மறு அமைப்புத் திட்டம் இந்திய யூனியனில் இரண்டுவித பிரதேசங்களை இணைக்க வழி வகுத்திருக்கின்றது. ஒன்று, எல்லைகள் திருத்தி அமைக்கப்பட்ட அடிப்படை மாநிலங்களைக்கொண்ட கூட்டு அரசு, இந்த மாநிலங்கள் நாடு பூராவும் பரந்து விரிந்து இருக்கின்றன. இரண்டு, சில விசேஷ அம்சங்களுக்காக (உதாரணமாக, எல்லையோர நிலங்கள், பாதுகாப்புக்கான முக்கிய இடங்கள்) போர்ப் பாதுகாப்புப் போன்ற காரணங்களுக்காக, மற்ற மாநிலங்களோடு இணைக்கப்படாமல் மத்திய

அரசின் நேரடி நிருவாகத்தில் இருப்பன. மேற்படி திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டு, நமது அரசியலமைப்பில் 7ஆவது திருத்தமாக, மாநிலங்கள் மறு அமைப்புச் சட்டம் 1956-ல் (States Re-organisation Act, 1956) சேர்க்கப்பட்டுள்ளது. தற்பொழுது கிட்டதட்ட 9 மத்திய நிலங்கள் (Union Territories) நம் நாட்டில் உள்ளன. அவை (1) டில்லி (2) அருணாசல பிரதேசம் (3) அந்தமான் நிக்கோபார் தீவுகள் (4) மிசோரம் (5) லஷத் தீவுகள் (6) கோவா, டையூ, டாமன் (7) தாதர், நாகர்ஹாவ்லி (8) பாண்டிச்சேரி, காரைக்கால் (9) சண்டிகார் ஆகியவைகளாகும்.

அரசியல் அமைப்பு விதி எண் 239-ல் கூறியுள்ளபடி

(1) வேறு விதமாகப் பாராளுமன்றம் இயற்றிய சட்டம் கூறினாலன்றி, ஒவ்வொரு யூனியன் பிரதேசத்திலும் குடியரசு தலைவரால் நியமிக்கப்பட்ட நிருவாக அதிகாரி, குடியரசு தலைவர் குறிப்பிடும் பதவியின் பெயரோடு, அவர் சார்பில் நிருவாகம் செய்வார்.

(2) 6ஆவது பாராவில் எப்படிச் சொல்லப்பட்டிருந்தாலும் (Para VI) குடியரசு தலைவர், ஒரு மாநில ஆளுநரை, அடுத்து இருக்கும் யூனியன் பிரதேச நிருவாக அதிகாரியாகப் பணிபுரிய நியமிக்கலாம். அப்படி நியமிக்கப்பட்ட ஓர் ஆளுநர், (மாநில) அமைச்சரவையின் ஆலோசனையின்றித் தாமே செயற்படலாம்.

விதி எண் 239அ—யூனியன் பிரதேசங்களுக்கு, சட்டசபையோ அமைச்சரவையோ இரண்டும் சேர்ந்த அமைப்போ இருக்க வழி செய்கிறது. இதன்மூலம் பாராளுமன்றம் யூனியன் பிரதேசங்களுக்கு (உதாரணமாக, பாண்டிச்சேரி, மணிப்பூர், கோவா, டையூ, டாமன் போன்றவற்றிற்கு) சட்டம் இயற்றி, ஓர் அமைச்சரவை அந்த அந்த இடங்களில் செயற்பட வழி செய்திருக்கின்றது. அதன் பிரகாரம்,

(அ) உறுப்பினர்களை நியமித்தோ தேர்தல்மூலம் தேர்ந்தெடுத்தோ சில உறுப்பினர்களை நியமித்து மற்றவர்களைத் தேர்ந்தெடுத்தோ ஓர் அமைப்பை உருவாக்கி, அதை யூனியன் பிரதேசத்தின் சட்டசபையாகப் பணியாற்றச் சட்டம் இயற்றலாம்.

அல்லது

(ஆ) ஒரு சட்டசபையும் அமைச்சரவையும் சேர்ந்த ஓர் அமைப்பை உருவாக்கி அவற்றின் சட்டதிட்டங்களையும் பணிகளையும் அதிகாரங்களையும் சட்ட ரீதியானதாக ஆக்கிச் சட்டம்

இயற்றலாம். இதில் குறிப்பிட்ட பாராளுமன்றம் செய்யும் சட்டம், விதி எண் 368-ன் படி அரசியல் சட்டத் திருத்தமாகக் கொள்ளக்கூடாது.

எனவே, மேற்கூறிய அரசியலமைப்பு விதிகளின்படி யூனியன் பிரதேசங்களின் நிருவாகத்தின் பிரதான அம்சங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

*(1)* யூனியன் பிரதேசங்கள் என்று கூறப்படுபவை குடியரசு தலைவரின் நேரடி ஆட்சியின்கீழ் இருக்கும். குடியரசு தலைவர் இந்த நேர்முக ஆட்சியைத் தம் அதிகாரம் பெற்ற பிரதிநிதி மூலம் செய்வார். அந்தப் பிரதிநிதிக்கு ஏற்ற பதவிப் பெயர்களை அளிப் பார் அவர். யூனியன் பிரதேசங்களில், எப்படி மாநிலங்களின் ஆளுநர்கள் அந்த அந்த மாநிலங்களில் செயற்படுகிறார்களோ அதே ரீதியில் குடியரசு தலைவர் செயற்படுவார். யூனியன் பிரதேசங்கள் விதி 239-ன் படி, மத்திய அரசின் நேர்முக நிருவாகத்தின்கீழ் இருந்தாலும் அவை தனிமாநில அந்தஸ்தை இழப்பதில்லை. இப் பிரதேசங்களுக்கு அவற்றின் தேவைக் கேற்ப நிருவாக சம்பந்தமான சட்டங்கள் செய்யலாம்.

(2) குடியரசு தலைவர் விரும்பினால் அடுத்துள்ள மாநில ஆளுநரை யூனியன் பிரதேச நிருவாகத்தைக் கவனித்துக் கொள்ளச் சொல்லலாம் அப்படி நியமனம் செய்யப்பட்ட ஆளுநர் யூனியன் பிரதேச நிருவாகத்தைப் பொறுத்தமட்டில் தம் மாநில அமைச்சரவையின் ஆலோசனையை நாட வேண்டியதில்லை.

(3) யூனியன் பிரதேசங்களின் அபிவிருத்தி, நல்லாட்சி அமைதி இவற்றிற்காகக் குடியரசு தலைவர் நிருவாக விதிகளைச் செய்யலாம். ஆனால், விதி 239அ வின் கீழ் எந்த ஒரு யூனியன் பிரதேசத்திலாவது, சட்டசபை அமைப்பு ஏற்பட்டால் அப் பிரதேசங்களுக்குச் சட்டசபை தொடங்கும் தேதியிலிருந்து, எந்த நிருவாக விதிகளையும் குடியரசு தலைவர் செய்யக் கூடாது. குடியரசு தலைவர் உருவாக்கும் சட்டதிட்ட விதிகளுக்கு-பாராளு மன்றத்தின் அங்கீகாரம் பெற்ற சட்டங்களுக்கு என்ன மதிப்பு, அதிகாரம் உண்டோ அவை குடியரசு தலைவர் இயற்றும் சட்டங் களுக்கும் உண்டு. இந்த விதிகளை நிலைமைக் கேற்றாற் போல் குடியரசு தலைவர் மாற்றியமைக்கலாம்.

*(4)* பாராளுமன்றம், யூனியன் பிரதேசங்களில் உயர் நீதிமன்றங்களைச் சட்டத்தின் மூலம் . துவக்கலாம். அல்லது அங்குள்ள நீதிமன்றத்தையே உயர்நீதி மன்றமாகச் செயற்பட உத்தரவு இட அப்படி உருவான உயர்நீதி மன்றங்கள் மற்ற

மாநிலங்களில் உள்ள உயர்நீதி மன்றங்களுக்கு என்ன அதிகாரம் உள்ளதோ, அதே அதிகாரத்தோடு யூனியன் பிரதேச உயர்நீதி மன்றமாகச் செயற்படும். பாராளுமன்றம் சட்டம் இயற்றி உயர் நீதி மன்றத்தின் அதிகாரத்தைத் திருத்தி அமைக்கா விட்டால் அப்படிப் புதிய நீதிமன்றங்கள் அமைக்காத இடங்களில் யூனியன் பிரதேசங்கள் எந்தெந்த மாநிலங்களைச் சார்ந்து இருக்கின்றனவோ, அந்தந்த மாநிலங்களிலுள்ள உயர்நீதி மன்றத்தின் அதிகார வரம்பிற்கு உட்பட்டவைகளாக இருக்கும். இத்தகைய ஏற்பாடு பாராளுமன்றம் சட்டத்தின் மூலம் மாநில உயர்நீதி மன்றங்களின் அதிகார வரம்பை யூனியன் பிரதேசங்களிலிருந்து எடுக்கும் வரையில் இருக்கும்.

வடகிழக்கு எல்லைப் பிரதேசம் (The North-East Frontier Tract) குடியரசு தலைவரின் பிரதிநிதியாகச் செயற்படும் அஸ்ஸாம் மாநில ஆளுநரால் நிருவாகம் செய்யப்படுகிறது. அஸ்ஸாம் மாநிலத்தில் தலைநகராக விளங்கும் ஷில்லாங்கில் உள்ள ஓர் அரசாங்க ஆலோசகரின் உதவியின் பேரில் அங்கு நிருவாகம் செயற்படுகிறது. மத்திய அரசாங்கத்திடம்தான் இதன் முழுப்பொறுப்பும் அடங்கியுள்ளது. இந்த எல்லையோரப் பகுதி 5 பிரிவுகளாக, காமெங் எல்லைப்பகுதி (Kameng Frontier Division), சுபான்சிரி எல்லைப்பகுதி (Subansiri Frontier Division), சியாங் எல்லைப்பகுதி (Siang Frontier Division), லோகித் எல்லைப் பகுதி (Lohit Frontier Division), திராப் எல்லைப்பகுதி (Tirap Frontier Division) என்று பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவும் ஒரு நிருவாக அதிகாரியால் (Political Officer) நிருவகிக்கப்படுகிறது.

# 5. குடியரசு தலைவரின் இராணுவ அதிகாரங்கள்
## (The President and his Military Powers)

மத்திய அரசின் செயற்படுத்தும் அதிகாரத்தின் ஒரு பகுதியாகக் குடியரசு தலைவர் இராணுவத்தின் தலைமை அதிகாரியாக (Supreme Commander) மற்றச் சுதந்திர நாடுகளின் தலைவர்களைப் போல் விளங்குகிறார். அரசியலமைப்பின் விதி எண் 53—பிரிவு (2) இதை ஆணித்தரமாக உணர்த்துகிறது. அதன்படி பாதுகாப்புப் படைகளின் தலைமை அதிகாரம் (Supreme Command) மத்திய அரசின் செயற்குழு அதிகாரங்களின் ஒரு பகுதியாக விளங்குகிறது. எனவே, குடியரசு தலைவர், படைகளுக்குப் பெயரளவில் உள்ள தலைவர் என்றும், அவர் இராணுவத்தின் தலைவர் என்ற முறையில் இடும் கட்டளைகள் அமைச்சரவையின் ஆலோசனையின் பெயரில் தான் அதற்கு இடப்படுகின்றன **என்றும் கொள்ள வேண்டும் (விதி எண்-74).**

குடியரசு தலைவரின் அதிகாரம் பெயரளவில்தான் என்று சொல்வதும், சம்பிரதாயப்படி அவர் இராணுவத்தின் உயர்ந்த அதிகாரியாக இருக்கிறார் என்று கூறுவதும் சரியில்லை. இராணுவத்தின் தலைவராக அவர் செய்யும் காரியங்கள் பாராளுமன்றம் இயற்றிய சட்ட வரம்புக்குள் இருக்கும் [விதி 53(2)]. இந்த நிலைக்கு ஆதாரமாக நாம் காண்பது பாதுகாப்புப் படைகளின் தலைவர்கள் குடியரசு தலைவரிடம் நேரிடையாகத் தொடர்பு கொண்டு செயற்படுகிறார்கள். மேலும், விதி 352-ன் கீழ், குடியரசு தலைவர் எடுக்கும் முடிவு, செயல், அவருடைய திருப்தியின்மேல் எடுக்கப்படுவதாகும் (Action by President under Act. 352 is to be taken on his satisfaction).

சிவில் அதிகாரத்தின் (Civil Power) தன்மையை விளக்கவும், இராணுவ சர்வாதிகாரப் போக்குக்குச் சிறிதும் இடமளிக்கக்

கூடாது என்ற எண்ணத்தினாலும்தான் குடியரசு தலைவரிடம் இராணுவத்தின் தலைமைப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. குடியரசு தலைவர் இராணுவ விஷயத்தில், செயல், தொழில் நுட்பங்கள் தெரியாதவராக இருப்பதால், அவருக்குப் போர்க் காலங்களில் நிலைமையைப் புரியும்படி செய்யவும், பாதுகாப்பு முதலிய விஷயங்களை அவருக்குத் தெரியப்படுத்தவும் இராணுவப் பிரிவுகளின் தலைவர்கள் அவருக்கு அவ்வப்பொழுது நிலைமையை விளக்குகிறார்கள். எந்த முறையில் முப்படைகளையும் உபயோகிக்க வேண்டும் என்ற இராணுவ உத்தரவுகள் எல்லாம், பாதுகாப்புப் படைகளின் தலைவர்கள் தயார் செய்து, குடியரசு தலைவரின் பெயரில் கொடுக்கப்படுகின்றன. எந்த அளவிற்கு அமைச்சர்கள் இராணுவத்திற்குத் தேவையான நிதி, போக்குவரத்து, உணவு தளவாடங்கள் (Supplis) முதலிய பொருள்களைத் தரத் தயாராக இருக்கிறார்களோ அதைப் பொறுத்து இருக்கிறது அந்த உத்தரவுகளைச் செயற்படுத்தும் விதம். இந்த விதத்தில் குடியரசு தலைவர், அமைச்சரவைக்கும் இராணுவத்திற்கும் ஓர் இணைப்பாக விளங்குகிறார்.

குடியரசு தலைவரின் இராணுவ அதிகாரம் சட்டத்தின் மூலம் தான் செயலாக்கப்படுகின்றது என்று இந்திய அரசியலமைப்பு அமெரிக்க அரசியலமைப்பைப் போல் அல்லாமல், ஆனால் அயர் நாட்டின் (Eire constitution) அரசியலமைப்பைப் போல் தெள்ளத் தெளிவாகக்கூறுகிறது. ஆகையால், குடியரசு தலைவர் சட்டப்படி தான் இராணுவ அதிகாரத்தைப் பிரயோகிக்க வேண்டும். விதி எண் 53 (2). ஏழாவது அட்டவணை முதற் பட்டியல் உள் எண் (Entry) 2 பிரகாரம் (Under entry, 2 of List, in Schedule VII) கப்பற்படை, விமானப்படை, தரைப்படை இதர மத்திய அரசாங்கப் படைகள் விஷயமாகப் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்றலாம். ஆகையால், படைகளுக்கு ஆள்களைச் சேர்க்கவும், பயிற்சியளிக்கவும், போருக்கு ஆயத்தப்படுத்தவும், நல்லமுறையில் பராமரிக்கவும் சட்டம் இயற்றப் பாராளுமன்றத்திற்கு உரிமை இருக்கிறது. வேறுவிதமாகச் சொல்லப் போனால், அமெரிக்க நாட்டின் பாராளுமன்றத்திற்கு, அந் நாட்டுக் குடியரசு தலைவர் பாதுகாப்புப்படைகளின் தலைமை அதிகாரியாக ஆற்றும் செயல்களைக் குறைக்கமுடியாதபடி இருப்பதைப் போல் நம் நாட்டுப் பாராளுமன்றம் செயற்படவில்லை. மாறாக, நம் நாட்டுப் பாராளுமன்றம் இந்தியக் குடியரசு தலைவர் பாதுகாப்புப்படைகளின் தலைவர் என்று ஒப்புக்கு விட்டு வைத்துப் பாதுகாப்புச் சம்பந்தமான அவருடைய அதிகாரங்களை, எந்தக் குறுகிய அளவிற்குக் குறைக்க வேண்டுமோ அந்த அளவிற்குக் குறைத்து விடலாம்.

இங்கிலாந்து நாட்டில் மன்னர்தாம் முப்படைகளுக்கும் முதன்மைத் தலைவர் (Commander-in-Chief). தலைமை அதிகாரம், படைகளை அமைப்பது, அவற்றைச் செயற்படுத்தும்விதம் எல்லாம் மன்னரின் சொந்த அதிகாரத்திற்குட்பட்டு இயங்க வேண்டும். ஆனால், பாதுகாப்பு விஷயங்களில் மன்னரின் சிறப் புரிமையைப் (Prerogative) பாராளுமன்றம் கட்டுப்படுத்த நினைத்தாலொழிய அது மன்னரின் இந்த உரிமையில் தலையிடுவ தில்லை. பாராளுமன்றம் அனுமதித்தாலொழிய, அமைதிக் காலத் தில் ஒரு தயார்ப்படையைப் (Standing Army) பராமரிக்க, உரி மைகள் மசோதா (Bill of Rights) தடை செய்கிறது. இத் தடை எல்லாப் படைகளுக்கும் பொருந்தும். எனவே, பாராளுமன்றத் தின் கீழ்தான் தனிப்படை, விமானப்படை, கப்பற் படைகளைப் பராமரிக்கவும், விமானப்படை கப்பற்படைகளைத் தரையில் உப யோகப்படுத்தவும் வேண்டியிருக்கிறது. எல்லாத் தரை, விமானப் படைகளின் அதிகாரிகள், அரசியிடமிருந்துதான் நியமன உத் தரவுகளைப் (Commissioning of Officers) பெறுகிறார்கள். கப்பற்படை அதிகாரிகளுக்கு, கப்பற்படைத் தலைமை அலுவ லகத்திலிருந்து 2 உறுப்பினர்கள் கையெழுத்திட்டு, அந்த நியமன உத்தரவின் மேலே அரசியின் கையெழுத்திட்டுக் கொடுக்கப்படும்.

அயர் (Eire) நாட்டுப் பாதுகாப்புப் படைச் சட்டம், 1937, இராணுவ அதிகாரம் (Defence Forces Act 1937) செலுத்தும் முறையை விவரித்துள்ளது. அதன்படி அதிகார வினியோகம் உட்பட இராணுவ சம்பந்தமான எல்லா விஷயங்களிலும், அரசின் ஆலோசனையின்பேரில் பாதுகாப்பு அமைச்சர் மூல மாகக் குடியரசு தலைவர் செயற்படவேண்டும். இதுதவிர இதர அலுவல்களையும் குடியரசு தலைவர் அரசின் ஆலோசனைப்படி செய் வார். அவையாவன :

(1) பாதுகாப்புப் படைகளின் உயர் அதிகாரிகளைச் (சட்டத் தில் குறிப்பிட்டபடி) நியமனம் செய்தல்.

(2) அதிகாரிகளை நியமிப்பது, நீக்குவது, ஓய்வுபெறச் செய்வது.

(3) நியமன உத்தரவு வேலையை அதிகாரி இராஜினாமா செய்வதை ஏற்றுக்கொள்வது அல்லது மறுப்பது. பாதுகாப்புப் படைகள் (தாற்காலிக) சட்டம் 1941ன்கீழ், நெருக்கடி காலங்களில் தாற்காலிக அதிகாரியாகப் படையிலோ, ஒதுக்கி வைக்கப்பட்ட படையிலோ (Reserve) அதிகாரியாக இருப்பவர், குடியரசு தலைவர், அரசு ஆலோசனைப்படி இராஜினாமா கொடுக்கும்படி கட்டளையிட்டால் கொடுத்து விடவேண்டும்.

அமெரிக்க அரசியலமைப்பில் குடியரசு தலைவருக்கு விரிவான அதிகாரம் பாதுகாப்புப் படைகள் விஷயத்தில் கொடுக்கப் பட்டுள்ளது. குடியரசு தலைவர்தாம் முப்படைகளின் தலைவர். மாநிலப் படைகள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் சேவைக்கு அழைக்கப்பட்டால் அவற்றிற்கும் குடியரசு தலைவர்தாம் முதன் மைத் தலைவர். இதுவே, அவருக்குள்ள பரந்த இராணுவ அதிகா ரத்தை விளக்குகிறது. இருந்தும் இந்த அதிகாரங்களைத் தவிர அமெரிக்கச் சட்டங்களைப் பரிபூரணமாக அமலில் இருக்கும்படி பார்த்துக் கொள்ளும் பொறுப்பும் அவருடையதுதான். ஒவ் வொரு மாநிலத்திலும் குடியரசு முறை ஆட்சிக்கு உத்தரவாதம் அளிக்கவும் வெளிநாட்டு ஊடுருவல் அல்லது உள்நாட்டுக் கலகம் அல்லது போர் இவற்றிலிருந்து மாநிலங்களைக்காக்கவும் அமெரிக்க அரசாங்கம் தயாராக இருக்க வேண்டும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது. அமெரிக்க அரசின் இந்த அரசியலமைப்புக் கடமையைத் (Constitutional obligation) தேவை ஏற்படும்பொழுது இராணுவப் படைகளையும் உபயோகப்படுத்திச் செய்யக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டு உள்ளது. அமெரிக்கப் பாராளுமன்றம் அவர் முப்படைகளின் தலைவர் பொறுப்பில் செய்யும் காரியங்களைக் கட்டுப்படுத்த முடியாது.

அமெரிக்காவில் இராணுவப் படைகளை உண்டாக்குவது, பராமரிப்பது, கப்பல் படையை உருவாக்கிப் பராமரிப்பது தவிர இப் படைகள் சம்பந்தமாகச் சட்ட திட்டங்கள் செய்வது ஆகியவற்றிற்குப் பாராளுமன்றத்திற்கு முழு அதிகாரம் அந் நாட்டின் அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், கோட்டைகள், கொத்தளங்கள், இராணுவத் தொழிற்சாலைகள் சம்பந்தமானவை பாராளுமன்றம் செய்யும் சட்ட திட்டங்களின் படி தான் செயற்பட வேண்டும்.

இதற்கு மாறாக அமெரிக்கக் குடியரசு தலைவருக்கு, படைகளை உள்நாட்டிலும், கடற்பரப்பிலும் அயல்நாடுகளிலும் எத் திசை யில் எந்த விதத்தில் இயங்க வைப்பது என்பனபற்றி முழு அதிகா ரம்கொடுக்கப்பட்டிருக்கிறது. அமெரிக்கா, சீனாவுடனும், மெச்சி கோவுடனும் (China & Machico) போர் நிலையில் இருக்கிறது என்று பாராளுமன்றத்தால் பிரகடனப்படுத்தப்படாமல் இருந்தும் அப்பொழுது குடியரசு தலைவராக இருந்த திரு. வில்சன் (President Wilson) பல முறை இந்த அதிகாரத்தை உபயோகப் படுத்தியிருக்கிறார். பாராளுமன்றம் அங்கீகாரம் கொடுக்க மறுத்தும், வியாபாரக் கப்பல்களில் (Merchants Vessels) தற்காப் பிற்காகப் பீரங்கிகளைப் பொருத்த இதே அதிகாரத்தின்கீழ்

திரு வில்சன் அவர்கள் செயற்பட்டார். இது போலவே பாராளு மன்றத்தின் ஒப்புதல் இல்லாமலேயே 1950ல் கொரியா (Korea) வில் நடந்த ஆக்கிரமிப்பைக் குடியரசு தலைவராக அப்போதிருந்த திரு ட்ருமன் (President Truman) அமெரிக்கப் படைகளை அனுப்பி எதிர்த்தார். விரோதமாக இருக்கும் நாட்டை வென்று அமெரிக் காவின் ஆட்சியின் கீழ்-அதிகாரத்தின் கீழ்க் குடியரசு தலைவர் கொண்டு வரலாம். அவர் அன்னிய நாட்டை நிரந்தரமாகத் தம் வசம் ஆக்கிக் கொள்ளக் கூடாது. பாராளுமன்றம் சட்டத் தின் மூலம் சிவில் நிருவாகத்தை அமைக்கும் வரை, குடியரசு தலைவர் அத்தகைய நாடுகளில் ஆட்சி செலுத்தலாம்.

சில நாட்டு அரசியலமைப்புகளில் சண்டை அல்லது சமா தானம் பிரகடனம் செய்யும் அதிகாரம் அந் நாட்டு ஆட்சித் தலைவரிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆங்கிலச் சட்டத்தின் கீழ்ச் சண்டை அல்லது சமாதானம் பிரகடனம் செய்யும் அதிகா ரம் மன்னரிடத்தில் மட்டும்தான் இருக்கிறது. இங்கிலாந்து நாடு வேறு ஒரு நாட்டுடன் சமாதான நிலையில் உள்ளதா சண்டையிடும் நிலையில் உள்ளதா என்பதை முடிவு செய்யும் அதி காரமும் மன்னரிடம்தான் இருக்கிறது. இதற்கு மாறாக, அமெரிக்க அரசியலமைப்பின் கீழ், சண்டையைப் பிரகடனப் படுத்தும் அதிகாரம் குடியரசு தலைவரிடம் இல்லை. பாராளு மன்றத்திடம்தான் அந்த அதிகாரம் இருக்கிறது. எனினும், குடியரசு தலைவர், படைகளின் தளபதியாதலால் அவருடைய போக்கு அல்லது யுத்த ஆயத்தங்கள், யுத்தம் தவிர்க்க முடியா தது என்ற நிலையை உருவாக்கலாம்.

இந்தியாவில் பாராளுமன்றத்திற்குத்தான் சண்டை அல்லது சமாதான உடன்படிக்கை இவற்றிற்கான சட்டங்கள் செய்யும் அதிகாரத்தை அரசியல் சட்டம் அளித்துள்ளது. ஆனால், இந்தச் சட்டங்களை நடைமுறையில் அமல் நடத்துவது செயற்குழுவின் (Executive) பொறுப்பு. செயற்குழுவின் பொறுப்புகள், மக்கள் சபை நிறைவேற்றிய சட்டங்களை அமல் நடத்துவது மட்டும் அன்று. சட்ட சபைப் பிரிவு முன்வைத்த சட்டங்களின் உள் நோக்கத்தையும் செயற்குழுப் பிரிவு (Executive Branch) மனத்தில் கொண்டு செயற்பட வேண்டும். ஆனால், சட்டம் இயற்றாத நிலையில் செயற்குழுப் பிரிவு வாளா இருந்துவிடாமல், அரசியல் சட்டவிதிகளுக்கேற்ப, பாராளுமன்றம் ஏற்கெனவே இத் துறை யில் செய்துள்ள சட்டத்தின் சாரத்தை (கருத்தை) மனத்தில் கொண்டு தானாகவே செயலில் இறங்க அதிகாரம் அதற்கு உண்டு.

இந்திய அரசியல் விதி எண் 352 குடியரசு தலைவருக்கு நெருக்கடி நிலைமையைப் பிரகடனம் செய்யும்பொழுது பாதுகாப்புப் படைகளை, உள்நாட்டுக் குழப்பம், சண்டை அல்லது அன்னியர் படையெடுப்பு இவற்றைத் தவிர்க்கக் குடியரசு தலைவர் உபயோகப்படுத்தலாம் என்பதும் அடங்கியுள்ளது. சட்டத்தின் கட்டுப்பாடுகள் இல்லாத பொழுது இந்தியக் குடியரசு தலைவர் பாதுகாப்புப் படைகளின் மிக உயர்ந்த தளபதியாக இருத்தலால், சம்பந்தப்பட்ட பாதுகாப்பு அமைச்சரின் ஆலோசனையின் பேரிலோ பிரதமரின் ஆலோசனையின் பேரிலோ படைகளை நிலைமைக்கேற்றாற்போல் உபயோகப்படுத்த அதிகாரம் உள்ளடங்கி உள்ளது. பாராளுமன்றம் யுத்த நிலை இருப்பதைப் பிரகடனம் செய்வதற்கு முன்பே குடியரசு தலைவர் செயலில் இறங்கலாம். நெருக்கடி நிலைமை இருப்பதை மட்டும் பிரகடனம் செய்வது குடியரசு தலைவரின் சிறப்பு அதிகாரங்களுள் ஒன்று. அப்படிப் பிரகடனம் செய்து விட்டு நிலைமையைச் சமாளிக்கக் குடியரசு தலைவர், படைகளுக்குத்தகுந்த உத்தரவுகள் போட அதிகாரம் இல்லாவிட்டால் அது நகைப்பிற்கு இடமளிக்கும். எனவே, இந்தியக்குடியரசு தலைவருக்குப் படைகளின் பெருந்தலைவர் என்ற முறையில் படைகளைப் பிரயோகிக்கத் தேவையான அதிகாரத்தை, பாராளுமன்றத்தின் முன் அனுமதியோ, சம்மதமோ இல்லாமல் செயற்படுத்துவதை அரசியல் சட்டம் கொடுத்துள்ளது. எனவே, இந்திய அரசியல் சட்ட விதிகளின் கீழ்க் குடியரசு தலைவர் யுத்தப் பிரகடனம் செய்யும் அதிகாரத்தைப் பெற்றிருக்கிறார். ஆனால், அயர்நாட்டுச் சட்டப்படி (constitution of Eire) இது சாத்தியமில்லை. ஏனெனில், அந் நாட்டுச் சட்டத்தில் பின்வருமாறு ஆணித்தரமாகக் கூறப்பட்டிருக்கிறது.

'போர்ப் பிரகடனம் செய்வதும், போரில் நாட்டை ஈடுபடுத்துவதும்,பாராளுமன்றத்தின் முழுச் சம்மதத்தின் பேரில்தான் (Dail Eireann) நடக்கவேண்டும்' (Act 28, Sec of Irish Constitution). இந் நாட்டு அரசியலமைப்பு, சமாதானத்தைப்பற்றி எதுவும் கூறாமல் விட்டுவிடுவதால் அந்த அதிகாரமும் பாராளுமன்றத்தினுடையதுதான் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

அமெரிக்க நாட்டில் பாராளுமன்றத்தின் அதிகாரமும், குடியரசு தலைவரின் அதிகாரமும் தெளிவாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஏனெனில், அமெரிக்காவில் இருப்பது தலைவர்முறை துரைத்தன ஆட்சியாகும் (Presidential Government). இந்தியாவில் பாராளுமன்ற ஆட்சிமுறையாகையால் சட்டப்பிரிவுக்கும் செயற்குழுப் பிரிவுக்கும், அமெரிக்காவில் உள்ளதுபோல் கண்டிப்பான

அதிகாரப் பிரிவு இல்லாததால் (No rigid separation of Powers) சட்ட ரீதியாகப் பாராளுமன்றத்திடம் உள்ள அதிகாரம் உண்மையில் செயற்குழுவின் தலைவர் வகிப்பார். மேலும், அன்றாட அன்னிய நாட்டு உறவு போன்ற அலுவல்களைப் பாராளுமன்றம் வகிக்க முடியாது. அதையும் செயற்குழுப் பிரிவுதான் நிருவகிக்க வேண்டும். உடன்படிக்கைகளை ஆமோதிப்பது (Ratification) போன்ற காரியங்களை மாத்திரம் பாராளுமன்றம் கவனிக்கலாம். வியாபார சம்பந்த உடன்படிக்கை, அன்னிய நாடுகளுடன் நேச உணர்வுக்காகப் பேச்சு வார்த்தைகள் நடத்துவது ஆகியவையெல்லாம் செயற்படுத்தும் பிரிவின் தலைவரைச் சாரும். இப்படிப்பட்ட காரியங்களில் செயற்படும் பிரிவு எடுக்கும் முடிவுகளுக்கும் பாராளுமன்றம் ஒப்புதல் தருவதல்லாமல் வேறு எதுவும் செய்ய இயலாது. அன்றாட அன்னிய நாட்டு உறவு சம்பந்தமான காரியங்கள், செயற்குழுப் பிரிவின் கைகளில் இருப்பதால், அதனுடைய போக்குப் போரிற்குக் கொண்டு சென்றாலும் ஆதரவு தருவதைத் தவிர வேறு வழியில்லை. உதாரணமாக, 1971-ல் பங்களா தேசச் சார்பில் இந்தியா பாகிஸ்தானுடன் போர்ப் பிரகடனம் செய்தது செயற்குழுப் பிரிவின் தலைவரான குடியரசு தலைவருடையது ஆகும். பாராளுமன்றம் அப் பிரிவின் செயல்களை ஆதரித்தது. இம்மாதிரி, அமெரிக்காவிலும் பாராளுமன்றம் குடியரசு தலைவரின் ஒவ்வொரு செயலையும் ஒப்புக் கொண்டாக வேண்டியிருக்கிறது.

போர்ப் பிரகடனம் செய்யும் அதிகாரம் விஷயமாக அமெரிக்க அரசியல் சட்டத்திற்கும் இந்திய அரசியல் சட்டத்திற்கும் உள்ள வித்தியாசம் கண்கூடு. அமெரிக்க நாட்டில் இந்த அதிகாரம் முழுக்க முழுக்கப் பாராளுமன்றத்தின் கையில்தான் உள்ளது. குடியரசு தலைவரின் கையில் இல்லை (விதி எண், பிரிவு-8 அமெரிக்க அரசியல் சட்டம்). போர் விஷயங்களில் பாராளுமன்றத்திற்கு ஆலோசனைகள் வழங்கும் நிலையில் குடியரசு தலைவர் இருந்தாலும் பூர்வாங்க அதிகாரம் அவரிடம் இல்லை. போர் விஷயங்களில் பாராளுமன்றம் அமெரிக்கக் குடியரசு தலைவரின் ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டாலும் போர்ப் பிரகடனம் செய்யும் அதிகாரம் பாராளுமன்றத்தினுடையதுதான். இதற்கு மாறாக இந்திய அரசியல் சட்டம் விதி எண் 246ஐயும் ஏழாவது அட்டவணை 1ஆவது பட்டியல் 15ஆவது விதியையும் (Schedule VII) (list I entry 15) சேர்த்துப் பார்த்தால் போர், சமாதானம் குறித்து, சட்டங்கள் இயற்றப் பாராளுமன்றத்திற்குத்தான் அதிகாரம் உள்ளது. இதிலிருந்து தெரிவது என்னவெனில், போர் ஆரம்பித்த பிறகுதான் பாராளுமன்றம் அது சம்பந்தமான சட்ட திட்டங்களை

நிறைவேற்றலாம். எனவே, இங்குப் போர்ப் பிரகடனம் செய்வது குடியரசு தலைவர். அப் பிரகடனம் செய்த பிறகு அதற் கான சட்ட திட்டங்கள் செய்வது பாராளுமன்றம். ஆகையால், போர்நிலை நாட்டில் வந்த பிறகுதான் அதற்கான சட்டங்கள் செய்யும் உரிமை பாராளுமன்றத்திற்கு வருகிறது.

இங்கிலாந்து போன்ற நாடுகளிலும்கூட, போரோ சமாதானமோ செய்யும் முடிவான அதிகாரம், செயற் குழுவிடம் இருந்த போதிலும் நடைமுறையில் பாராளுமன்றம் அங்கீகாரம் முன்னதாகவே பெறப்படுகின்றது.

இந்தியாவில், குடியரசு தலைவர் 1951 ஜனவரி மாதம் ஓர் அரசு அறிக்கையின்மூலம் இந்தியாவிற்கும் ஜெர்மன் நாட்டுக்கும் (இரண்டாவது உலக மகா யுத்தத்தில்) இடையே இருந்த போர் நிலை முடிவடைந்ததாகப் பிரகடனம் செய்ததிலிருந்து நாமும் இங்கிலாந்து நாட்டின் மரபுகளைப் பின்பற்றுகிறோம் என்பது வெளிப்படை. பாராளுமன்றம் சட்டமியற்றி, அதன் மூலம் செயற்படுத்தும் பிரிவின் தலைவரான குடியரசு தலைவர், போர் முடிவடைந்து விட்டதாக அறிக்கை விடலாம் என்று இருந்திருந் தால், குடியரசு தலைவர் 1951-ல் கொடுத்த பிரகடனம் செல்லு படியாகி இருக்க முடியாது. இதிலிருந்து நமக்குத் தெள்ளத் தெளிவாகப் புரிவதுயாதெனில் போர், சமாதானம் பிரகடனம் செய்யும் அதிகாரம் குடியரசு தலைவரிடம் தான் உள்ளது என்பது.

# 6. குடியரசு தலைவரும் பாராளுமன்றமும்
## (The President and the Parliament)

இந்தியக் குடியரசு தலைவர் இங்கிலாந்து மன்னரைப் போல வும் அயர்நாட்டுக் குடியரசு தலைவர் போலவும் பாராளுமன்றத் தின் ஓர் அங்கமாகத் திகழ்கிறார். (விதி எண் 79). இந்தியக் குடியரசின் பாராளுமன்றம் (The Union Parliament) முறையே மக்கள் சபை, மாநிலங்களின் சபை, குடியரசு தலைவர் என்ற மூன்று அங்கங்களைக்கொண்டது. பாராளுமன்றத்தின் எந்தச் சபையி லும் அங்கத்தினராக இல்லாவிட்டாலும் குடியரசு தலைவருக்கு, சபைகளின் அமைப்பு, வேலைகள், பாராளுமன்றத்தின் சட்ட மியற்றுவது சம்பந்தமான கடமைகள் குறித்து அனேக அதி காரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

சில பார்ராளுமன்ற உறுப்பினர்களை நியமனம் செய்யும் அதிகாரம் (President's power of Nominating Certain Members to the Parliament)

அரசியல் சட்ட விதிஎண் 331-ன் கீழ்க் குடியரசு தலைவர் மக்கள் சபைக்கு ஆங்கிலோ இந்திய சமூகத்திலிருந்து 2 உறுப்பினர்களை நியமனம் செய்யலாம். இந்த அதிகாரத்தை மக்கள் சபையில் அந்தச் சமூகத்திற்கு ஏற்ற பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவில்லை என்று குடியரசு தலைவர் கருதினால், பயன் படுத்துவார். இந்திய-காஷ்மீர் உடன்படிக்கையின் அடிப்படையில் அம் மாநிலத்தின் சட்டசபைப் பரிந்துரைகளின் பேரில் 6 பாராளுமன்ற உறுப் பினர்களைக் குடியரசு தலைவர் நியமனம் செய்யலாம். அந்தமான்-நிக்கோபார் தீவுகளுக்கும் அசாம் மாநிலத்தில் உள்ள சில பழங்குடி களின் பிரதேசங்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கச் சில உறுப் பினர்களை நியமிக்கக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் உண்டு.

இதே மாதிரி இலக்கியம், விஞ்ஞானம், கலை, சமூக சேவை ஆகியவற்றிற்காக 12 உறுப்பினர்களை மாநிலங்களின் சபையில் (Rajya Sabha) நியமனம் செய்யவும் குடியரசு தலைவருக்கு

அதிகாரம் இருக்கிறது. இந்த உறுப்பினர்களின் தகுதிகளைப் பற்றி விவரமாக ஏதும் அரசியலமைப்புச் சொல்லவில்லை. 'நாட்டின் விஞ்ஞானம், கலை, சமூகசேவை, இலக்கியம் ஆகியவை சம்பந்தமான தலைசிறந்த சேவை அல்லது முதிர்ந்த அனுபவம் உள்ளவர்களைப் பாராளுமன்றத்தின் உறுப்பினர் களாகக் குடியரசு தலைவர் நியமனம் செய்யலாம்,' என்று மட்டுமே அரசியலமைப்புக் கூறுகிறது. எனவே, மாநிலங்களின் அவைக்கு நியமிக்கும் உறுப்பினர்களின் தனித்தகுதியை அரசியலமைப்பு விவரிக்காமல் விட்டதால் இந்த உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப் பதில் குடியரசு தலைவர் தம் விருப்பப்படி செயற்படலாம். தமக்கு வேண்டியவர்களை நியமனம் செய்துவிட்டு, தகுதி உள்ளவர்களைப் புறக்கணிக்கலாம். அப்படி அவர் தமக்குப் பிரியமானவர்களை மாத்திரம் நியமனம் செய்தால் ஒரு நாட்டின் தலைசிறந்த தலைவர் இப்படிப் பாரபட்சமாக நடந்து கொள்கிருர் என்ற இழிசொல் லுக்கு இலக்கு ஆவது ஒரு குடியரசு தலைவருக்கு அழகாகாது.

இந்திய அரசியல் சட்டம், இங்கிலாந்து அரசியல் சட்டத்தைப் போலல்லாமல், பிரதமரின் ஆலோசனையின் பேரில் தான் குடியரசு தலைவர் பாராளுமன்றத்திற்கு உறுப்பினர்களை நியமிக்க வேண்டும் என்று குறிப்பாகச் சொல்லவில்லை. இங்கி லாந்து அரசியல் சட்டத்தில் பிரதமரின் ஆலோசனைப் படிதான் மன்னர் பாராளுமன்றத்தின் மேல் சபைக்கு (House of Lords) உறுப்பினர்களை நியமனம் செய்கிருர். இந்த நியமனம் மன்னரின் சிறப்புரிமைகளுள் (Prerogative) ஒன்று என்ருலும் அரசியல் மரபு களின் அடிப்படையில் மன்னர் பிரதமரின் ஆலோசனைப்படிதான் நியமனம் செய்கிருர். இந்தியக் குடியரசு தலைவர் பிரதமர் ஆலோசனைப்படிஅல்லாமல் தம்மிச்சையாகச் செயற்பட்டாலோ ஆங்கிலேயர் மரபைப் பின்பற்ருமல், பிரதமரின் ஆலோசனையை இவ் விஷயத்தில் ஏற்றுக் கொள்ளாமல், செயற்பட்டாலோ மோச மான அரசியல் குழப்பங்கள் ஏற்பட ஏதுவாகும். குடியரசு தலைவரால் இப்படி நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்கள், அமைச்சரவைக் கட்சிக்கு மாறுபட்ட கட்சியைச் சேர்ந்தவர் களாகவோ மாறுபட்ட கொள்கையைக் கொண்டவர்களாகவோ பாராளுமன்றத்தில் அரசு எடுக்கும் முடிவுகளை அல்லது அரசு கொள்கைகளை ஏற்றுக் கொள்ளாமல் அரசின் கொள்கைகளை முரியடிக்கும் போக்கோடு செயற்பட்டால் பாராளுமன்றத்தில் அரசுக்கு வீண் தொல்லைகள் ஏற்படும். பாராளுமன்றம் நல்ல முறையில் செயற்படுவதும் இதனுல் பாதிக்கும். மாநிலங்களின் அவை (Rajya Sabha) குறைந்த உறுப்பினர்களைக் கொண்டு செயற்படுவதால், ஆளும் கட்சியின் போக்கில் குடியரசு தலைவ

ருக்கு அதிருப்தி ஏற்படின், நியமனம் செய்த 12 உறுப்பினர்களைக் கொண்டு மாநிலங்களின் அவையின் அலுவல்களைச் செயலற்று விடச் செய்யலாம். மாநிலங்களின் அவையில் நியமனம் செய்யப் பட்ட உறுப்பினர்களின் முக்கியத்துவம், அந்த அவையில் எந்த அரசியல் கட்சிக்கும் பெரும்பான்மையான உறுப்பினர்கள் இல்லாமலும், ஆளும் கட்சியின் உறுப்பினர்களும் அவையில் சிறுபான்மையினராக இருந்தாலும் அதிகரிக்கும். மக்கள் சபை (Lokh Sabha) அனுப்பும் மசோதாக்களை மறு பரிசீலனை அல்லது அதன் மேல் ஆலோசனைகள் கூறும் அவை-மாநிலங்களின் அவை. எனவே, குடியரசு தலைவரின் மேல் உள்ள குற்றச்சாட்டை விசாரிப்பதிலும் நிதி தவிர மற்ற எல்லா மசோதாக்களையும் சட்ட மாக்குவதிலும் மாநிலங்களின் அவை செயற்படுகிறது (விதி எண் 107). ஆகையால், பாராளுமன்றத்திற்கு நியமனம் செய்யப் படும் உறுப்பினர்கள் குடியரசு தலைவரின் சொந்த விருப்பத்திற்குப் பாத்திரமானவர்கள் என்ற பழிச் சொல் வந்து பாராளு மன்றத்தின் அன்றாட நடவடிக்கைகளில் வீண் குழப்பத்தைத் தவிர்க்க, உறுப்பினர்களை நியமனம் செய்வதை விட்டுவிட்டுத் தொழில் ரீதியாக ஒரு பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டால் (functional representation) அது மேன்மையானதாக இருக்கும்.

### உறுப்பினர்களின் தகுதியின்மைபற்றிக் குடியரசு தலைவரின் முடிவு தீர்மானம் (Presidents Decision on Questions as to the Disqualifications of Members)

பாராளுமன்ற உறுப்பினர்கள் சபையில் சேர்ந்தவுடன் (Oath) பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும். பிரமாணம் எடுத்துக் கொண்டபிறகே அவர்கள் தங்கள் பாராளுமன்ற அலுவல்களைக் கவனிக்கமுடியும். இந்தப் பிரமாணம் குடியரசு தலைவர் முன்னிலையிலோ அவர் நியமனம் செய்பவர் முன்னிலை யிலோ எடுத்துக்கொள்ள வேண்டும் (விதி எண்-99). ஓர் உறுப்பினரின் தகுதியின்மை பரிசீலனைக்கு வருமேயானால் தேர்தல் குழுவைக் (Electoral Commission) கலந்து ஆலோசித்துக் குடியரசு தலைவர் எடுக்கும் முடிவு தீர்மானமான முடிவாகக் கருதப்படும். குடியரசு தலைவர் எடுக்கும் முடிவு தேர்தல் குழுவின் ஆலோசனைக்கு மாறுபட்டோ, முரணாகவோ இருந்தால் மட்டும் அவரு டைய முடிவு கடைசி முடிவாகக் கருதமுடியாது. நீதிமன்றங்களும் குடியரசு தலைவர் எடுக்கும் முடிவை, வழக்குகள்மூலம் விசாரணைக்கு எடுத்துக்கொள்ள அதிகாரம் இல்லை. ஆனால், குடியரசு தலைவரின் முடிவு தேர்தல் குழுவின் முடிவுக்கு மாறுபட்டு இருந்தால்தான் வழக்குகளின்மூலம் நீதிமன்றங்கள் குறுக்கிட முடியும்.

இந்த ஒரு முறைகேடான நிலைக்குக் காரணம் அமைச்சரவையின் ஆலோசனை பேரில் குடியரசு தலைவரால் நியமிக்கப்படும் தேர்தல்குழு கொடுக்கும் ஆலோசனைகள் குடியரசு தலைவரைக் கட்டுப்படுத்தும். ஒரு மதியூகம் படைத்த நேர்மையற்ற குடியரசு தலைவர் தாமும் தம் அமைச்சரவையும் விரும்பக்கூடிய நபர்களைத் தேர்தல் குழுவில் நியமனம் செய்வதின்மூலம், அவர்கள் விருப்பத்திற்குமாறாக நடந்து கொள்ளாமல் பார்த்துக் கொள்ளலாம். தேர்தல் குழுவின் அங்கத்தினர்களாக நியமனம் பெறும் நபர்கள் குடியரசு தலைவர் மற்றும் அமைச்சரவையின் குறிப்பறிந்து செயற்படலாம். இப்படிப்பட்ட விதிகள் இருப்பது (அரசியலமைப்பில்) சட்டசபைகளிலேயே ஊழல்கள் நடப்பதற்குப் போதுமான சந்தர்ப்பங்களைக் கொடுக்கும்.

எனவே, பாராளுமன்றமே ஊழலின் சின்னம் என்ற அவச்சொல்லைத் தவிர்க்க, தேர்தல் குழுவை, குடியரசு தலைவரின் தொடர்பு இல்லாத வகையில், சுதந்திரமாகச் செயற்படும் ஒரு தனி அந்தஸ்தில் அமைக்கலாம். அல்லது உறுப்பினர்களின் தகுதியின்மை பிரச்சினையை நீதிமன்றங்களின் முடிவுகளுக்கோ பாராளுமன்றத்தின் தனிக் குழு (விசேஷ குழு)வின் முடிவுக்கோ விடுவது சாலச் சிறந்ததாகும்.

அரசியல் சட்டம் விதி எண் 101 (2)-ன் கீழ், குடியரசு தலைவர் ஒரே நபர் பாராளுமன்ற உறுப்பினராகவும், மாநிலச் சட்டசபை உறுப்பினராகவும் ஒரே சமயத்தில் இருப்பது குறித்து விதிகள் உருவாக்கலாம். 1950-ல் சட்ட அமைச்சகம் கொண்டுவந்த அறிக்கையின்படி ஒரே சமயத்தில் பாராளுமன்றம், மாநிலச் சட்டசபையில் ஒருவரே உறுப்பினராக இருப்பது தடுக்கப்பட்டது. இதுபோன்ற விஷயங்களில் அதிகாரம் பாராளுமன்றத்திடம் இல்லாமல், குடியரசு தலைவரிடம் இருந்தால் தம் செல்வாக்கைப் பயன்படுத்திப் பாராளுமன்றத்தின் தன்மையை, அவர் சார்ந்துள்ள அரசியல் கட்சிக்கு ஆதரவாக விதிகளை மாற்றியமைக்கக் கூடும்

## பாராளுமன்றத்தைக் கூட்டவும் ஒத்திவைக்கவும் குடியரசு தலைவருக்குள்ள அதிகாரம்

இங்கிலாந்து மன்னரைப்போல, இந்தியக் குடியரசு தலைவரும் பாராளுமன்றத்தைக் கூட்டவோ கூட்டத்தை ஒத்திப்போடவோ செய்ய அரசியலமைப்பு விதி எண் 85 (2) அவருக்கு அதிகாரம் கொடுக்கிறது. பாராளுமன்றத்தின் இரு சபைகளுள் ஏதாவது ஒன்றைக் கூட்டவோ ஒத்திவைக்கவோ குடியரசு தலைவரால் முடியும். அரசியலமைப்பு விதி எண் 85-ன் படி பாராளுமன்றம்

தானாகவே கூட முடியாது. குடியரசு தலைவரின் விருப்பப்படிதான் கூட்டத் தொடர் ஆரம்பிக்கும். (ஆனால், நடைமுறையில், பாராளுமன்றக் கூட்டம் ஆரம்பிக்கும் விஷயத்தில் மக்கள் சபையின் தலைவரான பிரதமர், தம் அமைச்சரவை, சபாநாயகர், எதிர்க்கட்சித் தலைவர்கள் இவர்களைக் கலந்தாலோசித்துத்தான் கூட்டத் தொடரை ஆரம்பிப்பதும் கலைப்பதும் செய்யப்படுகிறது). குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் கூட்டத் தொடரை ஆரம்பிக்கும் அதிகாரத்திலுள்ள ஒரே கட்டுப்பாடு, பாராளுமன்றக் கூட்டத்தின் கடைசி நாளுக்கும் மறுபடி கூடும் தேதிக்கும், இடையில் உள்ள இடைவெளி 6 மாதங்களுக்கு அதிகமாக இருக்கக்கூடாது என்பதுதான்.

பண சம்பந்தப்பட்ட மசோதாக்களைத் தவிர மற்ற மசோதாக்கள் பாராளுமன்றத்தின் ஒரு சபையில் அங்கீகரிக்கப்பட்டு மற்றொரு சபையில் நிராகரிக்கப்பட்டாலும், மசோதாக்களின் சரத்துகளில் திருத்தங்கள் செய்வதில் இரண்டு சபைகளுக்குமிடையே அபிப்பிராய பேதம் இருந்தாலும் அல்லது ஒரு சபையில் அங்கீகரிக்கப்பட்டு மறுசபையில் அந்த மசோதா கிடைத்த 6 மாதத்திற்குள் அங்கீகரிக்கப்படாமல் இருந்தாலும் குடியரசு தலைவர், இரண்டு சபைகளின் கூட்டுக் கூட்டத்திற்கு ஆஜராகும்படி (Joint Sitting of the two Houses) உறுப்பினர்களுக்கு அழைப்பு விடலாம் [விதி எண் 108 (1) ]. இரண்டு சபைகளின் கூட்டுக் கூட்டத்தைக் கொண்டுவரும் அதிகாரம் குடியரசு தலைவருக்கு இருப்பினும், இரண்டு சபைகளுக்கும் கருத்து வேற்றுமை இருக்கும்பொழுது அவர் கூட்டுக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்பது கட்டாயமில்லை. ஏனெனில், இதைப் போன்ற விஷயங்களில் குடியரசு தலைவர், அமைச்சரவையின் ஆலோசனைப்படிதான் செயற்படுவார். ஒரு மசோதா மேல் சபையில் அங்கீகரிக்கப்பட்டு மக்கள் சபையில் நிராகரிக்கப்பட்டால் நிச்சயமாக இரண்டு சபைகளின் கூட்டுக் கூட்டம் ஏற்படாது. காரணம் என்னவெனில், மக்கள் சபையின் நம்பிக்கைக்குப்பாத்திரமான அமைச்சரவை,மக்கள் சபையே நிராகரித்த ஒரு மசோதாவை இரண்டு சபைகளின் இணைந்த கூட்டத்தில் கொண்டுவரக் குடியரசு தலைவருக்கு ஆலோசனை கொடுக்காது. அப்படி நிராகரிக்கப்பட்ட மசோதா ஒரு நெருக்கடி நிலையை உண்டாக்கி, இந் நெருக்கடியைச் சமாளிக்க இரண்டு சபைகளின் இணைந்த கூட்டம் தவிர்க்க முடியாதது என்று குடியரசு தலைவருக்குத் தோன்றினால் (அமைச்சரவை இவ் விஷயத்தில் கூட்டுக் கூட்டத்திற்கு ஆலோசனை கூறுவிடினும்) குடியரசு தலைவர் தம்மிச்சையாக இணைந்த கூட்டத்திற்கு அழைப்பு விடலாம்.

6 மாத காலத்திற்கு மேல், பாராளுமன்றம் கூடத் தாமதம் ஆனாலும், குடியரசு தலைவர் தம் கடமைகளைச் செய்யும்படி கட்டாயப்படுத்தவோ, தம் அதிகாரத்தை உபயோகப்படுத்த வேண்டும் என்று வற்புறுத்தவோ நீதித்துறைக்கு அதிகாரம் இல்லை (விதி எண் 361). நீதிமன்றங்கள் அனுப்பும் கட்டளைகளுக்கோ, உத்தரவுகளுக்கோ அவர் கட்டுப்பட்டவர் அல்லர். பாராளுமன்றத்தின் கூட்டத்தைக் கூட்ட 6 மாதங்களுக்குமேல் குடியரசு தலைவர் காலதாமதம் செய்யும் பொழுது, அவர்மேல் குற்றச்சாட்டைக் கொண்டுவர, ஒரே ஒரு பரிகாரந்தான் உள்ளது. விதி எண் 85-ன்படி தானே கூடப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் கொடுக்கப்படவில்லை. குடியரசு தலைவர் பாராளுமன்றம் கூட அழைப்பு விடுத்தாலன்றிக் கூடுவதற்கில்லை. பாராளுமன்றத்தில் அவர்மீது தேசத் துரோகக் குற்றச்சாட்டைக் (Impeachment) கொண்டு வருவதாக இருந்தாலும், தலைமை நீதிமன்றம் குடியரசு தலைவர் அரசியல் சட்டத்தின் ஒரு முடிவான விதியை மீறியது அவருக்கு அரசியல் சட்ட விதி 361 (1)-ன் படி கொடுக்கப்பட்டிருக்கும் உரிமைகளுக்கும், சலுகைகளுக்கும் அப்பாற்பட்டது என்று இந்த நிலையில் தலையிட்டுக் கூறினாலொழிய ஒன்றும் செய்வதற்கில்லை.

அரசாங்கத்தின் அதிகார பூர்வமான அறிக்கையில் (Gazette) குடியரசு தலைவரின் கையொப்பத்தின்கீழ்ப் பாராளுமன்றம்கூட உத்தரவு பிரசுரிக்கப்படுகிறது. கூட்டம் கூட இருக்கும் தேதி, நேரம், இவை அந்த அறிக்கையில் கொடுக்கப்படும். இதைத் தவிரப் பாராளுமன்றத்தின் செயலாளர் (Secretary) தனிப்பட்ட அழைப்புகளை எல்லா உறுப்பினர்களுக்கும் அனுப்பி வைப்பார். உறுப்பினர்களுக்கு அனுப்பும் அழைப்பைத் தவிரப் பாராளுமன்றத்தின் உறுப்பினர்கள் அல்லாத அமைச்சர்கள், இந்தியாவின் தலைமை வழக்கறிஞர் (Attorney-General of India) ஆகியவர்களுக்கும் அழைப்பு விடப்படுகிறது. அமைச்சர்கள் மற்ற அரசாங்கத்தின் அதிகாரிகள் (இவர்கள் உறுப்பினர்களாக இல்லாவிட்டாலும்) பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளில் பங்கு கொள்ள விதி எண் 88 வழி வகை செய்துள்ளது.

ஒருமுறை பாராளுமன்றம்கூட அழைப்பு அனுப்பிய பிறகு குடியரசு தலைவர் பாராளுமன்றம் கூட இருக்கும் தேதியைமாற்றி வேறு ஒரு தேதியை நிர்ணயித்து அறிக்கை விடலாமா? இப்படிப் பட்ட நிலை 1953-ல் மாநிலங்களின் அவை கூட்ட விஷயத்தில் ஏற்பட்டது. அச் சபை, அரசாங்கத்தின் அதிகாரபூர்வமான ஓர் அறிக்கையின்படி ஆகஸ்ட் 17, 1953-ல் கூட இருந்தது.

வேறோர் அறிக்கையில் ஆகஸ்ட் 24-ல் கூட அழைப்பு அறிவிக்கப் பட்டது. இவ் விதமாகத் தேதி மாற்றம் செய்வதை—உறுப்பினர்கள் ஆட்சேபனை செய்தார்கள். அப்போதிருந்த சட்ட அமைச்சர், பாராளுமன்றம்கூட இருக்கும் தேதியை நிர்ணயிக்கும் குடியரசு தலைவருக்கு அத் தேதியை மாற்றி அறிக்கைவிடவும் அதிகாரம் உண்டென்று தம் சொந்த அபிப்பிராயத்தைக் கூறினர். சபையின் சபாநாயகரும் குடியரசு தலைவர் சட்டப்படி தான் நடந்திருப்பார் என்று கூறி மழுப்பிவிட்டார். அரசியல் சட்டம் இதுபற்றி ஏதும் கூறவில்லை. அது கூறுவதெல்லாம் குடியரசு தலைவர், பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளும் உரிய காலத்தில்கூட அவர் உசிதப்படி அழைப்பு விடவேண்டும் என்பது தான். பாராளுமன்றத்தின் கூட்டத்தை விரைவுபடுத்தவோ தள்ளிப்போடவோ குடியரசு தலைவருக்கு அதிகாரம் இல்லாத தால், அவர் ஒரு தேதியைக் குறிப்பிட்டு அழைப்பு அனுப்பிய பிறகு அந்தத் தேதியைமாற்றி வேறு தேதியில்கூட அழைப்புவிட அவருக்கு அதிகாரம் இருக்கிறதா என்பது கேள்விக்குறியாக இருக்கிறது. அப்படி அவருக்கு அதிகாரம் இருப்பதாகக்கொண்டாலும் சபைகளின் கூட்டம் தொடங்கும் தேதியை மாற்றி வேறு தேதிக்குக் கூட்டத்தைத் தள்ளிப்போடுவது என்பது சாதாரணமாக செய்யக்கூடாத காரியம் என்றுதான் தோன்றுகிறது. இந்த அதிகாரத்தைக் குடியரசு தலைவர் தேசிய நெருக்கடிக் காலத்திலோ ஒரு மோசமான சூழ்நிலையிலோ உபயோகப்படுத்துவது நல்லது.

அமெரிக்க நாட்டில் பாராளுமன்றத்திற்கும் குடியரசு தலைவருக்கும் உள்ள உறவு குறித்துப் பார்ப்போம்.

அமெரிக்கக் குடியரசு (U. S. A.)

அமெரிக்கப் பாராளுமன்றத்தின் (Congress) சாதாரண கூட்டத்தை ஆரம்பிக்க அழைப்புவிடும் அதிகாரம் அந் நாட்டுக் குடியரசு தலைவருக்குக் கிடையாது. ஏனெனில், அரசியல் சட்டத்திலேயே பாராளுமன்றக் கூட்டம் ஆரம்பிக்கும் தேதியை நிர்ணயம் செய்துள்ளார்கள். ஆனல், பாராளுமன்றம் அரசியல் சட்ட விதிப்படி வேறு ஒரு தேதியில் பாராளுமன்றம் கூட நிர்ணயம் செய்யலாம். 1933-ல் தீர்மானித்த அரசியல் சட்டத்தின் 20ஆவது திருத்தத்தின்படி, பாராளுமன்றத்தின் கூட்டம் ஜனவரி மாதம் 3ஆம் தேதி ஆரம்பிக்க வேண்டும். இந்தத் திருத்தம் அரசியல் சட்டத்தில் இடம் பெறுமுன் இருந்த தேதி டிசம்பர் மாத முதல் திங்கட்கிழமையாகும்.

ஆனல், பாராளுமன்றத்தின் இருசபைக் கூட்டங்களையோ இரண்டில் ஒன்றின் கூட்டத்தையோ விசேஷகாலங்களில் கூட்ட

(விதி II பிரிவு 3-ன்படி) குடியரசு தலைவருக்கு அதிகாரம் உள்ளது. தம்மிச்சையாகப் பாராளுமன்றத்தின் பிரத்தியேகக் கூட்டத்தைக் கூட்டுவதற்கான விசேஷ சூழ்நிலை உருவாகியுள்ளதா என்பதைக் குடியரசு தலைவர்தாம் தீர்மானிக்க வேண்டும். அரசியல் சட்டத்தில் 20ஆவது திருத்தம் அங்கீகரிக்கப்படுமுன், புதிய குடியரசு தலைவர் மார்ச்சு மாதத்தில் பதவிப் பிரமாணத்திற்குப் பிறகு பதவியில் அமர்ந்தவுடனே, தேர்தலுக்கு முன் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றவும் அல்லது அவர்களுடைய திட்டங்களைச் செயற்படுத்தவும் பாராளுமன்றத்தின் விசேஷக் கூட்டத்தைக் கூட்ட அழைப்பு விடுவது குடியரசு தலைவருக்குக் கைவந்த கலையாகும். ஆனால், 20ஆவது அரசியல் சட்டத்திருத்தத்திற்குப் பிறகு பாராளுமன்றத்தின் கூட்டத்தொடர் ஜனவரி 3ஆம் தேதிக்கே தொடங்குவதாலும், குடியரசு தலைவர் மார்ச்சு மாதத்தில் பதவிப்பிரமாணம் செய்து கொள்ளும் பொழுது பாராளுமன்றக் கூட்டம் தொடர்வதாலும், விசேஷக் கூட்டத்திற்கு அழைப்பு விட வாய்ப்பு இல்லை. பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளுள் மேல்சபையின் (Senate) விசேஷக் கூட்டத்திற்குக் குடியரசு தலைவர் அழைப்பு விடுவது அதிகம். ஏனெனில், பிற நாடுகளுடன் செய்த உடன்படிக்கைகளை அங்கீகரிக்கவும் தாம் செய்த பதவி நியமனங்களை உறுதிப்படுத்தவும் மேல்சபைக் கூட்டம் தேவைப்படுகிறது.

குடியரசு தலைவருக்குப் பாராளுமன்றத்தைக் (எந்த ஒரு சபையின் கூட்டத்தையும்) கலைக்க அதிகாரம் இல்லை. கூட்டம் கலைக்கப்படுவது அந்தந்த சபையின் வேலை (அமெரிக்க அரசியல் சட்டம் விதி எண் 1, பிரிவு 514).

### இந்தியக் குடியரசு தலைவரின் பாராளுமன்றத்தைக் கலைக்கும் அதிகாரம் (The Indian President's Power of Dissolution of Parliament)

இந்திய அரசியல் சட்டப்படி மக்கள் சபை, கூடிய தேதியிலிருந்து 5 ஆண்டு காலம் வரை அது நீடித்து, 5 ஆண்டு முடிவில் கலைந்துவிடும். ஆனால், தேசிய நெருக்கடிக்காலங்களில் மாத்திரம் நெருக்கடிநிலை பிரகடனம் செய்தபிறகு பாராளுமன்றம் செயற்படும் காலம் ஒரு வருடத்திற்குச் சட்டப்படி நீடிக்கப்படலாம். எனினும், நெருக்கடி நிலை தீர்ந்த பிரகடனம் வந்த 6 மாத காலத்திற்கு மேல் பாராளுமன்றம் சட்டப்படி செயற்படுவதற்கில்லை விதி எண் [83 (3)]. 5 ஆண்டுகள் முடியுமுன்னரே கூடப் பிரதமரின் ஆலோசனையின் பேரில் மக்கள் சபை கலைக்கப்படலாம். (இவ்வாறு 1970 இறுதியில் பிரதமரின் ஆலோசனைப்படி, குடியரசு

தலைவர், மக்கள் சபையைக் கலைத்தார்). குடியரசுதலைவர் சபையைக் கலைக்கும் அதிகாரம், மக்கள் சபைக்கு மாத்திரந்தான் பொருந்தும். ஏனெனில், மேல்சபையின் (Rajya Sabha) மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பதவி, விலகுவார்கள். எனவே, அமெரிக்க மேல்சபையைப்போல (Senate) இந்திய மாநிலங்களின் அவை ஒரு நிரந்தரமாக இயங்கும் சபை. காலங்கடந்ததாலோ குடியரசு தலைவராலோ கலைக்கப்படமாட்டாத சபை அது. ஆகவே, பாராளுமன்றத்தை முழுமையாகக் கலைப்பதற்கில்லை. அரசியல் சட்டப்படி மக்கள் சபைதான் கலைக்கப்படுவதற்கு உட்பட்டது. இங்கிலாந்து அரசியல் மரபின்படி பிரபுக்கள் சபை (House of Lord) பரம்பரையாக (Hereditary body) இயங்கினாலும் 2 சபைகளும் கலைக்கப்படும். ஆனால், இந்திய அரசியல் சட்டப்படி மக்கள் சபை மாத்திரந்தான் கலைக்கப்படும். இங்கிலாந்து அரசியல் முறையைத் தழுவி நம் அரசியலமைப்பு இருந்தாலும் பாராளுமன்றக் கலைப்பு விஷயத்தில் நாம் இங்கிலாந்து அரசியல் மரபுகளை (மேல்சபை கலைக்கும் விஷயத்தில்) விட்டு விட்டோம்.

இங்கிலாந்து நாட்டில் பாராளுமன்றத்தைக் கலைப்பது மன்னரின் தனி உரிமைகளுள் ஒன்றாக இருந்தபோதிலும், 1784 முதல் மன்னர் பிரதமரின் ஆலோசனைகளை இவ்விஷயங்களில் ஏற்க மறுத்ததில்லை. பாராளுமன்றத்தின் கூட்டத்தொடரைக் கலைப்பது மன்னரின் தனி உரிமை (Prerogative) என்பது குறித்து அரசியல் சட்ட நிபுணர்களுக்கிடையே கருத்து வேற்றுமை நிலவிவருகிறது.

உதாரணமாக, லாஸ்கி (Prof. Laski) என்ற பேராசிரியர், 'மன்னருக்கு இவ்விஷயத்தில் சொந்த உரிமையோ கருத்தோ இருக்க இடமில்லை. அரசரின் பகிரங்கச் செயல்கள் பொதுவாக எல்லாராலும் ஒப்புக்கொள்ளக்கூடிய தனித் தன்மையைப் பெற்றிருக்கவேண்டும். அவர் அமைச்சர்களின் ஆலோசனைகளைப் பகிரங்கமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். மன்னர் தம்மிச்சையாகச் செயற்பட்டால் அவர் கட்சிப் பூசல்களில் கலந்த தன்மை ஏற்படும். அவர் அரசியல் சட்டப்படி பாரபட்சமாகச் செயற்படக்கூடாது. கட்சிகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் எல்லாருக்கும் பொதுவானவர் மன்னர்,' என்கிறார். ஆனால், கீத் (Keith) என்பவர் 'பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் மக்களின் நலனை முன்னிட்டு, மன்னர் தம் கருத்துப்படி செயற்படலாம். அவர் அமைச்சரவையின் பரிந்துரையை ஏற்காமல் பாராளுமன்றத்தைக் கலைக்க மறுக்கலாம். அல்லது அமைச்சரவையைப் பதவிநீக்கம் செய்யலாம். மன்னரின் ஆலோசனைப்படி அமைச்ச

ரவை இராஜினுமா செய்யாவிட்டால்தான் அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்யலாம்,' என்கிறார். திரு கீத்தின் கருத்துப் படி-கண்மூடித்தனமான, வரம்பில்லாத மாற்றங்கள் வராமல் தடுக்க-'மன்னர்தாம் அரசியல் சட்டத்தின் கடைசி காவலர்'.

சர் ஐவர் ஜென்னிங்ஸ் (Sir Ivor Jennings) என்பவர் 'அமைச்சரவை ஆட்சி' என்ற (The Cabinet Government) புத்தகத்தில், 'அரசி, பாராளுமன்றத்தைக் கலைக்கப் பிரதமரின் ஆலோசனையை ஏற்காமல் இருப்பதற்கில்லை. எனினும், குடியாட்சி அடிப்படையில் உருவாக்கப்பட்ட அரசியல் சட்டம் சாதாரணமாகச் செயற்பட, தம் கருத்துப்படி ஆவனசெய்ய அவருக்கு உரிமை உள்ளது,' என்கிறார். எனவே, குடியாட்சி அடிப்படையில் இயங்கும் அரசியல் சட்டத்திற்கு ஊறு ஏற்படும் என்று நினைத்தால், அரசி, பிரதமர் கருத்தை ஏற்க மறுப்பது நியாயமானதாகும்.

சர் டேவிட் கீர் (Sir David Keir) என்பவர் 'அரசியல் மரபுகளுள் மிகவும் குறைக்கப்பட்டபோதிலும், பொதுமக்களின் நலனுக்காக, வரலாற்றுத் தன்மைகொண்ட எஞ்சியுள்ள தம் தனி உரிமையை மன்னர் பாராளு மன்றக் கலைப்பு விஷயத்தில் விட்டுக் கொடுக்கலாகாது', என்கிறார். அரசியல் சட்டம் நல்ல முறையில் செயற்பட அரசியல் சட்டமே, தனக்குத்தானே வைத்திருக்கும் கடைசிப் பாதுகாப்பு அது,' என்று மன்னரைப்பற்றிக் கூறுகிறார். 1944-ல் கொண்டுவந்த கல்வி மசோதாவின் பேரில் பேசும் பொழுது திரு சர்ச்சில் (Churchill) 'பாராளுமன்றத்தைக் கலைக்கும் ஆலோசனை பிரதமரிடம் இருந்துவந்தாலும், அது வெறும் ஆலோசனையாகையால் சந்தர்ப்பச் சூழ்நிலைக்கேற்ப மன்னர் அதை நிராகரிக்கலாம்; மேலும், பிரதமரின் ஆலோசனையைப் பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் ஏற்றுக் கொள்ளாதது மன்னரின் தனி உரிமையைப் பிரயோகிக்கும் அபூர்வ சம்பவம் என்று கொண்டாலும், மன்னர், தாம் உத்தேசிக்கும் செயல் சரிதானு என்பதை வேறு சில ஆலோசகர்களையும் கலந்து முடிவெடுப்பார்,' என்கிறார். இதற்கு மாருக சர் ஜான் சைமன் (Sir John Simon) என்பவர், 'குடியாட்சியை அடிப்படையாகக் கொண்ட ஒரு நாட்டில் பிரதமரின் ஆலோசனையை மன்னர் நிராகரிக்க முடியாது ; ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்', என்கிறார்.

பேராசிரியர் கீத் என்பவர், 'ஒரு பிரதமர் பாராளுமன்றத்தைக் கலைக்கத் தரும் ஆலோசனையை மன்னர் ஏற்றுக் கொள்வதைக் குறித்துக் கருத்து வேற்றுமை பரவலாக உள்ளது. எனினும், இவ்விஷயத்தில் மன்னருக்குள்ள தனி உரிமையை மறுக்கமுடியாது. ஆனல், அந்த உரிமை அசாதாரணச் சூழ்நிலை

யில்தான் அபூர்வமாக உபயோகப்படுத்தப்படவேண்டும்,' என்கிறார். உதாரணமாக, இங்கிலாந்து பிரதமர் சேம்பர்லின் (Chamberlain) 1940-ல் ஜெர்மானியர்கள் ஆல்பர்ட் கால்வாயைக் (Albert Canal) கடந்து சென்றபொழுது பாராளுமன்றத்தைக் கலைக்க ஆலோசனை கூறியிருந்தால் மன்னர் அதை மறுத்திருப்பார். எனவே, இப்படி நெருக்கடி நிலை இருக்கும்பொழுது அரசியல் மரபுகள் வழிகாட்டியாக அமைந்தபோதிலும் மன்னர் தம் கடமை என்ன என்பதைத் தீர முடிவு செய்து செயற்பட வேண்டும்.

ஓர் அமைச்சரவை பாராளுமன்றத்தில் தோற்று, பாராளுமன்றம் கலைக்கப்பட்டு, மறுதேர்தலுக்குப் பிறகும் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு இல்லாமல் இருந்தால் அச்சமயத்தில் பாராளு மன்றத்தை மறுபடி கலைக்க ஆலோசனை கூறினல், மன்னரால் அது ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. எனவே, பதவியிலிருக்கும் ஓர் அமைச்சரவை இரண்டாவது முறையாகத் தேர்தலில் சிறுபான்மைக் கட்சியாக (Minority in Parliament) வந்தால் அதன் ஆலோசனையைப் பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் மன்னர் ஏற்றுக்கொள்ள மாட்டார் என்ற மரபு இன்றும் இருந்துவருகிறது. மேலும், 1924-ல் தொழிலாளர் கட்சியின் (Labour Party) அரசு இருந்தபொழுது பிரதமரின் ஆலோசனைப்படி பாராளுமன்றத்தை மன்னர் கலைத்தார். அவர் தம் உரிமையைப் பயன்படுத்திப் பாராளுமன்றத்தைக் கலைக்குமுன் வேறு ஒரு கட்சியையோ வேறு ஆளுங்கட்சி உறுப்பினரையோ தலைவராகக் கொண்டு அரசு நடத்த முடியுமா என்பதை இங்கிலாந்தில் பார்ப்பதில்லை. (இந்தியாவில், இந்திய அரசு சட்டம் 1935-ன் கீழ் மாற்றுக் கட்சி அரசு நடத்துமா என்று இவர்களே பரிசீலனை செய்தார்கள்).

இங்கிலாந்தில் உள்ளது போலவே கானடா (Canada) நாட்டிலும் பொறுப்புள்ள ஆட்சி இருப்பதால் ஆளுநர் தலைவர் (Governor-General) அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் தான் செயற்படுவார். இங்கிலாந்து, வடஅமெரிக்கச் சட்டம், பிரிவு 50 (British North America Act, Sec. 50) படி ஆளுநர் தலைவர், இங்கிலாந்து மன்னரைக் காட்டிலும் அதிக அதிகாரம் பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் பெற்றிருக்கிறார். இதற்குக் காரணம், இங்கிலாந்து நாட்டில் உள்ளதுபோல் பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி கூறும் ஆலோசனையை மன்னர் ஏற்றுக்கொள்ளும் மரபு கானடாவில் இல்லை. இதற்கு மாருக மாற்று அரசு அமைக்க ஆளுநர் தலைவர் எல்லா முயற்சிகளும்

எடுத்த பிறகு, அது முடியாமற் போனால் பாராளுமன்றத்தைக் கலைக்கும் ஆலோசனையை ஏற்றுச் செயற்படுவார். திரு. ரிட்டல் (Riddell) எனபவர், கானடா நாட்டைப் பற்றிக் கூறும்பொழுது, 'பாராளுமன்றத்தைக் கலைத்து, பொதுத் தேர்தலுக்கு ஆளுநர் தலைவர் (Governor-General) ஒப்புக் கொள்வதும் கொள்ளாததும் நன்றாக நிலைநிறுத்தப்பட்ட அரசியல் விதிகளைத் தழுவியது,' என்கிறார். ஆளுநர் தலைவர் ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்தவர் போல் செயற்படக் கூடாது. கட்சி அரசியல், அரசியல் பூசல்கள், அரசியல் சதிகள் போன்றவற்றில் கலந்து கொள்ளாமல் நடுநிலை வகிக்கவேண்டும். மக்களின் நலமே அவருடைய முக்கியக் குறிக் கோளாக இருக்க வேண்டும். முக்கியமான கொள்கை ரீதியில் பிரச்சினைகள் அரசியல் கட்சிகளுக்கிடையே இல்லாதபோது அவர் பாராளுமன்றத்தைக் கலைக்கும் ஆலோசனையை ஓர் அரசியல் கட்சி பதவி வகிப்பதற்காக ஏற்றுக்கொள்ளக் கூடாது,' என்கிறார்.

1926-ல் லார்ட் பிங் (Lord Byng) என்பவர் ஆளுநர் தலைவராக இருந்த பொழுது, பிரதமர் மெகான்சி கிங் (Mackenzie King) என்பவர் பாராளுமன்றத்தைக் (மக்கள் சபையை) கலைத்து, புதுத்தேர்தல் நடத்தும்படி கொடுத்த ஆலோசனையை ஏற்றுக் கொள்ளாமல், பிரதமரின் இராஜினாமாவை ஏற்றுக்கொண்டு, வேறுகட்சி அரசு நடத்துமா என்பதை ஆலோசித்து, எதிர்க் கட்சித்தலைவரான மெய்கன் (Meighan) என்பவரை அரசு அமைக்க அழைத்தார். ஆனால், மெய்கன் அமைத்த அரசுக்குப் பெரும் பாலான பாராளுமன்ற உறுப்பினர்கள் ஆதரவு கிடைக்காமற் போனதால் பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி நேர்ந்தது.

ஆஸ்திரேலியாவிலும் (Australia) அமைச்சரவை ஆலோசனை யின்பேரில்தான் ஆளுநர் தலைவர் செயற்படுகிறார். அங்குக்கூட, கானடாவில் நடந்ததுபோல், ஆளுநர் தலைவர் பிரதிநிதிகள் சபை யில் (House of Representatives) தோற்ற பிரதமரின் சபையைக் கலைக்கும் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை. 1904-ல் ஆளுநர் தலைவராக இருந்த திரு. நார்த் கோட் பிரபு (Lord North Cote) பிரதமர் திரு. வாட்சனின் (Watson) மக்கள் சபையைக் கலைக்கும் ஆலோசனையை ஏற்கவில்லை. 1905-ல் பிரதமராக இருந்த திரு. ரீட் (Reid) என்பவரின் பாராளுமன்றக் கலைப்பு ஆலோசனையையும் ஏற்றுக்கொள்ளவில்லை. 1909-ல் ஆளுநர் தலைவராக இருந்த திரு டட்லி பிரபுவும் (Lord Dudley) பாராளு மன்றத்தில் தோற்ற பிரதமர் பிஷர் (Fisher) கொடுத்த கலைக்கும் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை. மாற்றுக் கட்சிகள் அரசு அமைக்கச் சாத்தியக்கூறு இருந்ததே ஆளுநர் தலைவர் பிரதமர்

களின் சபையைக் கலைக்கும் ஆலோசனையை ஏற்க மறுத்ததற்குக் காரணம். ஆனால், 1914க்குப் பிறகு ஆளுநர் தலைவர், 2 முறை சபையைக் கலைக்கும் அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுச் செயற்பட்டார். தென் ஆப்பிரிக்காவிலும் 1939-ல் கனடாவைப் போல் ஐக்கியப் பாராளுமன்றத்தில் (Union Parliament) தோற்ற பிரதமர் ஜெனரல் ஹர்ட்ஜாக் (Gen. Hertzog) என்பவர் இரண்டாவது உலக மகாயுத்தத்தின் போது பாராளுமன்றத்தைக் கலைக்கும் யோசனையை ஆளுநர்தலைவருக்குத் தெரிவித்தார். அவருடைய ஆலோசனையை ஆளுநர் தலைவர் ஏற்காததால் அவர் இராஜினாமா செய்ய நேர்ந்தது. பின்பு ஜெனரல் சுமட்ஸ் (General Smuts) என்பவரை அரசு பொறுப்பை ஏற்று அமைச்சரவை அமைக்கும்படி ஆளுநர்தலைவர் அழைப்பு விடுத்தார். அந்த அழைப்பை ஏற்று அமைச்சரவை அமைத்து மக்கள் சபையில் (House of Assumbly) பெரும்பாலாரின் ஆதரவையும் பெற்றார் அவர். இத் தருணத்தில்தான் ஆளுநர் தலைவர், பாராளுமன்றத்தைக் கலைக்கும்படி கொடுத்த ஆலோசனையை ஏற்காதது எவ்வளவு மேண்மையானது என்பது தெளிவாகிறது

அயர் நாட்டு அரசியற் சட்டப்படி (Constitution of Eire) குடியரசு தலைவர் அமைச்சரவை ஆலோசனைப்படிதான் செயற்பட வேண்டும். அதே நேரத்தில் ஆங்கில அரசியல் மரபுக்குப் புறம்பாக, பாராளுமன்றத்தைக் (Dail Elveann) கலைக்கும் ஆலோசனையை ஏற்பது, ஏற்காமல் இருப்பது விஷயமாய்ப் பூரண உரிமை குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

இதே போல் பர்மா அரசியல் சட்டத்திலும் (Burma), 'பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் குடியரசு தலைவருக்குப் பூரண உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. பர்மா அரசியல் சட்டம், பிரிவு 57-ல் பிரதமர் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவைச் சபையில் பெறத் தவறினால், குடியரசு தலைவர், பிரதமரின் சபையைக் கலைக்கும் ஆலோசனையை ஏற்காமல் வேறு ஒரு பிரதமரை நியமனம் செய்யும்படி சபையைக் (Chamber) கேட்டுக் கொள்வார். அப்படி அவர் கேட்டு 15 நாள்களுக்குள் வேறு ஒரு தலைவரை நியமிக்காவிட்டால்தான் பாராளுமன்றத்தைக் கலைப்பார்,' என்றிருக்கிறது.

இந்திய அரசியல் சட்டத்தின் எந்த விதியும் குடியரசு தலைவருக்கு எந்தெந்தச் சூழ்நிலைகளில் மக்கள் சபையைக் கலைக்கும் ஆலோசனையை மேற்கொள்ளலாம் அல்லது நிராகரிக்கலாம் என்று தெளிவுபடுத்தவில்லை, எனவே, இந்த விஷயத்தில் சட்டம்

குடியரசு தலைவரின் செயலைக் கட்டுப்படுத்தாததால் அவருக்கு நிலைமைக்கேற்றாற்போல் முடிவெடுக்க வாய்ப்பு இருக்கிறது. மக்கள் சபையில் தோற்கடிக்கப்பட்ட கட்சித்தலைவர் தரும் பாராளுமன்றத்தைக் கலைக்கும் யோசனையைக் குடியரசு தலைவர் ஏற்காமல் வேறு கட்சித்தலைவர், நிலையான அரசை அமைக்க முடியும் என்று நம்பினாலும் அல்லது அரசு நடத்தும் கட்சியின் தலைவராக உள்ள பிரதமர், மற்ற அமைச்சர்களின் நம்பிக்கைக்கு, (அவர்கள் ஒரே அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும்) பாத்திரமில்லாமல் இருக்கிறார் என்று நினைத்தாலும் வேறு ஒருவரைப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கும்படி கட்டளை இடலாம்.

அரசு பொறுப்பில் இருக்கும் ஒரு கட்சி புரட்சிகரமான கொள்கைகளைச் செயற்படுத்தத் தன்கட்சிக்கு வரப்போகும் தேர்தலில் வாக்காள மக்களின் ஆதரவு கிடைக்கவேண்டும் என்பதற்காகவும் தன் கட்சிக்கு ஆதரவு மிகவும் குறைந்த காரணத்தால் பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சிகளின் தாக்குதல்களால் காரியங்களைச் சரிவரக் கவனிக்க முடியவில்லை என்ற காரணத்திற்காகவும் பாராளுமன்றத்தைக் கலைத்து மறுதேர்தல் நடத்தக் குடியரசு தலைவருக்கு ஆலோசனை அல்லது சிபாரிசு செய்யலாம். அப்படியல்லாமல் தம்முடைய பதவிக்காலம் முடிந்தபின் தம்கட்சிக்கு மறு தேர்தலில் கிடைக்கும் ஆதரவு குறைவாக இருக்கும் என்று கருதி, தற்சமயம் நிலவும் சூழ்நிலையும் சந்தர்ப்பமும் மாத்திரம் தம் கட்சிக்கு மறு தேர்தலில், மிக அதிகமான உறுப்பினர்களை வெற்றி பெறச் செய்யும் என்ற குறுகிய கட்சி இலாபத்திற்காக மறுதேர்தல் நடத்தக் குடியரசு தலைவருக்குச் சிபாரிசு செய்வது முறையான செயலன்று.

போரில் கிடைத்த வெற்றி அல்லது உள்நாட்டில் ஏற்பட்ட குழப்பங்களிலிருந்து ஏற்படும் எழுச்சிகள் மூலம் நிருவாக ஊழல்கள் அல்லது ஒரு சில சட்டங்களின் மூலம் அரசின் மேல் உள்ள பரவலான வெறுப்பு மறையக் கூடும் என்று நினைத்து மறுதேர்தலுக்கு வகை செய்வது, அந்த அரசியல் கட்சியில் ஒழுங்கீனத்தையும், கட்சி இலாபத்திற்காக நாட்டின் பொது நன்மையைப் பணயம் வைப்பதையும் காட்டுகிறது. பதவியில் இருக்கும் ஓர் அரசியல் கட்சி தன் அதிகாரத்தையும் செல்வாக்கையும் சூழ்நிலையையும் பயன்படுத்திக் கொண்டு மக்களைத் திசை திருப்பி, பித்தலாட்டங்கள் செய்து மறுதேர்தல் வைத்து, மறுபடி அரசு பொறுப்பிற்கு வருவது குடியாட்சி அடிப்படையில் இயங்கும் அரசியல் கட்சி அரசுக்கே உலை வைப்பதற்கொப்பாகும்.

பாராளுமன்றத்தைக் கலைக்கும் விஷயத்தில் இந்தியா, டொமினியன் அந்தஸ்து நாடுகளில் உள்ள முறையைத் தழுவியதேயல்லாமல் இங்கிலாந்து நாட்டு முறையை அன்று. 1954 ல் ஆந்திர மாநிலத்தில் திரு. பிரகாசம் அமைச்சரவை, சட்டசபை ஓட்டெடுப்பில் தோற்ற பிறகு ஆளுநர், முதலமைச்சரின் ஆலோசனையை ஏற்றுச் சட்டசபையைக் கலைத்தார். காரணம், எதிர்க்கட்சிகள் ஒற்றுமையில்லாமல் இருந்ததால் மாற்று அமைச்சரவை அமைக்க முடியவில்லை. தேர்தலில் தோற்கடிக்கப்பட்ட கட்சிக்கே பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு கிடைத்ததால், திரு. பிரகாசமே மறுபடியும் அமைச்சரவை அமைத்தார். இதே போல் திருவாங்கூர் கொச்சி மாநிலத்தில் திரு. தாணுப்பிள்ளையின் அமைச்சரவை தோற்கடிக்கப்பட்டதும் ஆளுநரை (Raj Pramukh) அணுகி, சபையைக் கலைத்து மறுதேர்தலுக்கு ஆலோசனை கூறியும், அவர் கேட்காமல் மாற்றுக் கட்சிகள் அமைச்சரவை அமைக்க வழி உள்ளதா என்பதை ஆராய்ந்து, மாற்றுக் கட்சிகள் அரசு பொறுப்பை ஏற்றுச்செயற்பட வழி வகுத்தார்.

பாராளுமன்றத்தைக் கலைக்கும் அதிகாரம் வாக்காளர்களின் அதிகாரம். அது வாக்காளர்களிடம் ஆட்சி உரிமை பெற, சட்ட இறைமையிடமிருந்து அரசியல் இறைமைக்கு வரும் ஒரு வேண்டுகோள். குடியரசு தலைவர், ஆளுநர் சட்ட சபையைக் கலைக்கும் விஷயத்தில் புத்திசாலித்தனமாக நடந்து கொள்வதன் மூலம், இந்த அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யும் சந்தர்ப்பங்களுக்கு இடமே இல்லாமற் போகும். விளையாட்டு, விதிகளின்படி நடக்கிறதா என்றும் விளையாடுபவர்கள் எவ்வித தவறும் செய்யாதபடியும் பார்த்துக் கொள்ளும் ஒரு நடுவர் போல, குடியரசு தலைவர், ஆளுநர் அரசியல் விளையாட்டுகளைக் கண்காணிக்க வேண்டும்.

### ஒத்திவைக்கும் அதிகாரம் (Power of Adjournment)

பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டத்திற்கு அழைப்பு விடும் அதிகாரமும் கூட்டத்தைக் கலைக்கும் அதிகாரமும் குடியரசு தலைவரிடம் இருந்தாலும் நாளுக்கு நாள் கூடுவதின் அல்லது சபையின் நடவடிக்கையை ஒத்திவைப்பதின் அதிகாரம் அந்தந்தச் சபையினுடையதே. மக்கள் சபை இயங்கும் விதி 15-ன்படி நாளுக்கு நாள் கூட்டத்தைத் தள்ளிப் போடும் அதிகாரம், மறுபடி சபையைக் கூட்டும் அதிகாரம் சபாநாயகருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. குடியரசு தலைவர் தலையீடு இல்லாமல் அச் சபைகளே தினந்தோறும் செயற்படும் தங்கள் முறையை வகுத்துக் கொள்ளலாம்.

இங்கிலாந்து நாட்டில் கூடப் பாராளுமன்றக் கூட்டத்தைத் தள்ளிவைப்பது மன்னரின் தனி உரிமைக்குள் இல்லை. அச் சபையே முடிவு செய்ய வேண்டிய விஷயம். ஆனால், பாராளுமன்றக் கூட்டம் சம்பந்தப்பட்ட 1797, 1870 வருடத்தின் சட்டப்படி பாராளுமன்றக் கூட்டம் 14 நாள்களுக்கு ஒத்திவைக்கப்பட்டு இருந்தால், மன்னர் பாராளுமன்றத்தை இந்த விடுமுறை நாள் களில் கூட உத்தரவிடலாம். இந்தியக் குடியரசு தலைவருக்கு ஒரு கூட்டத் தொடர்க் கிடையில் அழைப்புவிட அதிகாரம் இல்லை.

அமெரிக்கக் குடியரசு தலைவருக்குப் பாராளுமன்றக் கூட்டத்தை ஒத்திவைக்க, சட்டரீதியான அதிகாரம் இரண்டு சபைகளும் ஒத்திப்போட ஒரு தேதியை நிர்ணயிக்கத் தவறினால் மட்டும் உள்ளது. ஆனால், இந்த அதிகாரத்தை இதுவரை எந்தக் குடியரசு தலைவரும் பிரயோகித்ததாக இல்லை.

மேயின் 'சட்ட சபை செயற்படும் முறை' என்ற புத்தகத் திலிருந்து (May's Parliamentary Practice) தெரிவது யாதெனில் கூட்டத் தொடர் (Session) என்பது சபை கலைந்த பிறகோ ஒத்தி வைக்கப்பட்ட பிறகோ மறுபடி கூடிக்கலைவதற்கு முன் உள்ள காலம், எந்தச் சபையும், தன் விருப்பப்படி கூட்டம் நடக்கும் காலத்தில் எந்தத் தேதிக்கு வேண்டுமானாலும் தள்ளிப் போட லாம். பாராளுமன்றக் கூட்டம் கலைந்துவிட்ட பின்னும் மறுபடி கூட்டத் தொடர் ஆரம்பிக்கும் முன்னும் உள்ள காலத்திற்கு 'இடைவேளை' (Recess) என்று பெயர். ஆனால், ஒத்திவைப்புக்குப் பிறகு மறுபடி கூடுமுன் உள்ள காலத்திற்கு ஒத்திவைப்பு (Adjournment) என்றுதான் கூறுவது வழக்கம்.

ஒத்திவைப்பு என்பது கூட்டத்தொடரை முடிவுறச் செய் கிறது. தள்ளிவைத்தல் என்பது ஒரு கூட்டத்தொடரின் காலத்தில் ஏற்படும் ஒரு குறுக்கீடு ஆகும்.

(A prorogation terminate a Session an adjournment is an interruption in the Course of one and this same session)

குடியரசு தலைவரின் மரணம் (Demise of the President)

இங்கிலாந்து நாட்டில் அரசியார் இறந்தவுடன் பாராளு மன்றம் கலைக்கப்பட்டு வந்தது முன்னாளில். பாராளுமன்றத்தின் இரு சபைகளும் கூட அரசியார் அழைப்பு விடுகிறார். அவரே இறந்து போவதால், சபைகள் கூட விடுக்கும் அழைப்பும் இல்லாமல் போவதால் பாராளுமன்றம் கலைக்கப்பட்டு வந்தது.

இந்த அசௌகரியத்தை நீக்க 1867-ல் கொண்டு வந்த மக்கள் பிரதிநிதித்துவ மசோதா (Representation of people's Act 1867) சட்டமாக்கப்பட்டது. இதனால் பாராளுமன்றத்தின் காலம் அரசியார் இறப்பதைத் தழுவியில்லை. எனவே, இந்தியாவிலும் இதே முறையில் குடியரசு தலைவரின் மரணம் அல்லது இராஜினாமா அல்லது பதவி நீக்கம், பாராளு மன்றத்தின் கூட்டத்தையோ அது செயற்படும் காலத்தையோ பாதிக்காது.

பாராளுமன்ற சபைகளுக்குக் குடியரசு தலைவர் வரவும்—பேச்சும் (Special Address by the President to Houses)

இந்திய அரசியல் சட்ட விதி எண் 87-ன்கீழ்ப் பொதுத் தேர்த லுக்குப்பிறகு முதன் முதலாகக் கூடும் மக்கள் சபையையும் ஒவ் வோர் ஆண்டும் தொடங்கும் முதல் பாராளுமன்றக் கூட்டத்தை யும் (இரண்டு சபைகளின் சேர்ந்த கூட்டத்தை) குடியரசு தலைவர் சந்தித்து அழைப்பிற்கான காரணத்தை விளக்கி, அறிவுரை வழங்க வேண்டும். இந்தக் கூட்டத்தில் எப்பொழுதும் அரசின் கொள்கை விளக்கமும், இந்தக் கூட்டத் தொடரில் கொண்டுவர இருக்கும் மசோதாக்கள் முதலியனவும் விளக்கப்படும். குடியரசு தலைவர் இரண்டு சபைகளும் சேர்ந்த கூட்டத்தில் பேசுவது இந்தியாவில் புதிய செயல். முன்னாள் ஆளுநர் தலைவர் (Governor General) அன்றைய சட்டசபைக்கூட்டத் தொடரை ஆரம்பித்து அறிவுரை வழங்கவில்லை. இந்தியக் குடியரசு தலைவரின் பேச்சு, இங்கிலாந்து அரசரின் பாராளுமன்றக்கூட்ட அறிவுரையைத் தழுவியுள்ளது. இந்த மன்னரின் பேச்சு அமைச்சரவையால் தயாரிக்கப்படுவதால் அதன் பொறுப்புகள் முழுவதும் அமைச்சர் களையே சாரும். குடியரசு தலைவரின் பேச்சில் அவர் சொந்த அபிப்பிராயங்கள் எண்ணங்கள் இருக்க இடமில்லை. ஆனால், அவர் பேச்சு அரசின் உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கைகள், வர இருக்கும் மசோதாக்கள், இவற்றைப் பற்றிய அதிகார பூர்வ மானதாக அமையும். ஒவ்வொரு வருட ஆரம்பத்திலும் வரும் கூட்டம், நிதி சம்பந்தமான கூட்டமாக இருக்கும் (Budget Session). பாராளுமன்றச் சபைகள் எந்தப் பொது அலுவல்களிலும், குடியரசு தலைவர் கூட்டத்தை ஆரம்பித்து அழைப்பின் காரணங் களை விவரிப்பதற்குமுன், தங்களை ஈடுபடுத்திக் கொள்ள முடியாது. பாராளுமன்றக் கூட்டத் தொடரை ஆரம்பித்துவைக்க வரும் குடியரசு தலைவரை ஊர்வலமாகப் பாராளுமன்றத்தின் மத்திய கூடத்திற்கு அழைத்துச் செல்வார்கள். பாராளுமன்றச் செய லாளர்களும், சபாநாயகர்களும், மேலவைத் தலைவரும் இந்தச் சம்பிரதாயத்தில் கலந்துகொள்வர். முதலில் இந்தி மொழியிலும் பிறகு ஆங்கில மொழியிலும் தமது பேச்சைப் பாராளுமன்றத்

திற்கு அளிப்பார் அவர். வேறு எந்த அலுவல்களும் பார்க்காமல் இரண்டு சபைகளும் குடியரசு தலைவரின் பேச்சு முடிந்தவுடன் கலைந்து செல்லும். குடியரசு தலைவரின் பேச்சில் சொல்லப்பட்ட விஷயங்களை விவாதிப்பதற்காகச் சில நாள்களை ஒதுக்கிவைப் பார்கள்.

குடியரசு தலைவர் அறிவுரையின் மேல் நடக்கும் விவாதம் குடியரசு தலைவரின் பேச்சுக்கு நன்றி நவிலும் வகையில் ஒரு தீர் மானமாக (Motion) அமையும். விவாத முடிவில் பிரதம அமைச் சரோ அவர் சார்பில் ஓர் அமைச்சரோ அரசின்கொள்கை விளக்கம் கொடுக்க உரிமை பெற்றிருக்கிறார் (விதி 20 பாராளுமன்றம் நடக்கும் முறை). குடியரசு தலைவரின் பேச்சின்பேரில் நடக்கும் விவாத முடிவில் அரசு தோற்கடிக்கப்பட்டால் அமைச்சரவை இராஜினாமா செய்ய ஏதுவாகும். மக்கள் சபை கலைக்கப்பட்டுப் புதிய பொதுத் தேர்தல் உருவாகலாம். ஏனெனில், குடியரசு தலைவர் பேச்சுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் செய்யும் தீர்மானந்தான் அரசின் மேல் உள்ள நம்பிக்கைத் தீர்மானம். இது தோற்கடிக்கப்பட்டாலும் திருத்தங்கள் கொண்டு வந்து அது நிறைவேறினாலும் அது அரசின்மேல் நம்பிக்கையில்லை என்ற தீர்ப் பாகக் கொள்ளப்படும். பாராளுமன்றத் துவக்கப் பேச்சு விஷய மாக இந்தியாவிற்கும் இங்கிலாந்திற்கும் உள்ள முக்கிய வேற்றுமை என்னவெனில் இங்கிலாந்தில் அரசரின் பேச்சு (அறிவுரை) அச்சடித்து அல்லது ஒருவரால் வாசிக்கப்படும். இது ஒவ்வொரு கூட்டத் தொடர் ஆரம்பிக்கும் பொழுதும் செய்யப்படு கிறது. ஆனால், இநதியாவில் தேர்தலுக்குப் பிறகு கூடும் முதல் கூட்டத்தொடரிலும், ஒவ்வொரு வருடமும் அவ் வருடத்தின் முதல் கூட்டத் தொடரிலும் குடியரசு தலைவர் பேசுவார்.

அமெரிக்காவில் பாராளுமன்றம் (Congres) முதன் முதலில் கூடும் பொழுது குடியரசு தலைவர் முதல் கூட்டத் தொடரில் (அறிவுரை) பேச்சு வழங்க வேண்டும் என்று சட்டமில்லை. ஆனால், குடியரசு தலைவர் விரும்பினால் அவருடைய கொள்கைகளை விவரித்துப் பாராளுமன்றம் முதன் முதலில் கூடும் பொழுது ஓர் அறிக்கை சமர்ப்பிக்கலாம். அல்லது ஓர் அமைச்சரைப் படிக்கச் சொல்லலாம்.

**பாராளு மன்றத்திற்குச் செய்திகள் அனுப்ப, அங்குப் பேசக் குடியரசு தலைவருக்கு உள்ள உரிமை (Right of the President to Address and send Messages to Houses)**

பாராளுமன்றத்தின் முதல் கூட்டத் தொடரைத் துவக்கி வைத்துப் பேசுவதைத் தவிர, குடியரசு தலைவர் விரும்பினால் விதி

எண் 86-ன்கீழ் இரண்டு சபைகளையும் ஒன்றாகவோ தனித்தனியாகவோ கூட்டிப் பேசவும், உறுப்பினர், அத்தகைய கூட்டத்தில் பங்கு கொண்டு குடியரசு தலைவரின் பேச்சைக் கேட்கவும் அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், இரண்டில் எந்தச் சபைக்கும் குடியரசு தலைவர் அச்சபையில் விவாதித்துள்ள மசோதா குறித்தோ அல்லது வேறு விஷயம் குறித்தோ செய்தி அனுப்பினால் அவ் விஷயத்தைச் சுணக்கமில்லாமல் அச் சபை பரிசீலிக்கக் கடமைப்பட்டுள்ளது.

குடியரசு தலைவர் அரசியல் சட்டம், விதி எண் 86-ன் கீழ் சபைகளுக்கு அறிவுரை வழங்குவது விதி எண் 87-ன்கீழ் வழங்குவதிலிருந்து மாறுபட்டது. பாராளுமன்றம் பிரஸ்தாப ஆண்டில் முதன் முதலாகக் கூடுவதாக இல்லாமலிருந்து மோசமான நெருக்கடிக்கிடையில் இரு சபைகளின் கூட்டத்தில் குடியரசு தலைவர் பேசவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் விதிஎண் 86-ன் கீழ்தான் செய்யமுடியும். இவ்வாறு அரசியல் சட்டம், 18ஆவது பாகத்தின்படி (Part XVIII of constitution) பாராளுமன்றத்தின் சம்மதம் தேவைப்பட்டு, மக்கள் சபை கலைக்கப்பட்டிருக்கும் காலத்தில், குடியரசு தலைவர் மாநிலங்களின் அவையின் உறுப்பினர்களைச் சந்தித்துப் பேசலாம்; அறிவுரை வழங்கலாம்.

இதைத் தவிர இரண்டு சபைகளின் கூட்டத் தொடர் தனித் தனியே இயங்கும்பொழுதும் இரண்டு சபைகளுள் ஒன்றில் மட்டும் பேசும்படியான சந்தர்ப்பமும் ஏற்படலாம். ஒரு மசோதா சட்டமாக, இரண்டு சபைகளும் ஏற்றுக் கொள்ளவேண்டும். ஒரு சபை ஏற்றுக்கொண்டு மறுசபை நிராகரித்து விட்டால் குடியரசு தலைவர் அச் சபைக்கூட்டத்தில், அம் மசோதாவை ஏற்க வேண்டிய காரணங்களை விளக்கி அச் சபையின் அங்கீகாரம் கிடைக்கும்படி செய்யலாம். (விதி எண் 86-ன் கீழ்). அப்படி ஒரு மசோதாவை ஒரு சபை ஏற்று மறுசபை மறுத்துவிட்டால் இரண்டு சபைகளுக்கும் வீண் சச்சரவும் குழப்பமும் ஏற்படும். இதில் குடியரசு தலைவர் தலையிட்டால் அவர் ஓர் அரசியல் கட்சிக்கு ஆதரவாளர்; நடுவர் அல்லர் என்று கொள்ள நேரிடும். குடியரசு தலைவரின் கட்சிச் சார்பற்ற தன்மையும் அழிந்துவிடும். அமைச்சர்கள் இருசபைக் கூட்டங்களிலும் கலந்து கொள்வதால், இருசபை சச்சரவுகளை அவர்கள் மூலமே தீர்ப்பது சாலச் சிறந்தது.

குடியரசு தலைவரின், செய்திகள் அனுப்பும் அதிகாரம் மிகவும் விரிவாக உள்ளது. இந்திய அரசியல் சட்டத்தில் மசோதாவைக் குறித்தோ பாராளுமன்றத்தில் உள்ள வேறு எந்த விஷயம்

குறித்தோ அவர் செய்திகள் (Messages) அனுப்பலாம். பொது வாக, அரசியல் நடைமுறையில் அமைச்சரவை ஆலோசனையின் பேரில்தான் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தில் பேசுவார். என்றாலும், செய்திகள் அனுப்புவது அவர் விருப்பத்தைப் பொறுத்தது. இந்த விஷயத்தில் அமைச்சரவையின் தலையீடு அவ்வளவாக இல்லை என்று கொள்ளலாம்.

செய்திகள் வாங்குவதைக் குறித்த பாராளுமன்ற நடைமுறை
(Procedure in Parliament on Receipt of the Messages)

மக்கள் சபை விதிகளின் 23ஆவது விதி கூறுவதாவது, அரசியல் சட்டம் விதி எண் 86 (2)-ன்படி, குடியரசு தலைவரிட மிருந்து சபாநாயகருக்குச் செய்தி வந்தால் அச் செய்தியை அவர் சபையில் வாசித்து, அவ் விஷயத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள, தேவைப்படும் உத்தரவுகளைப் பிறப்பிப்பார். இது குறித்து உத்தரவுகள் கொடுக்கும் பொழுது சபையின் செயற் படும் விதிகளை, தேவைக்கேற்றாற்போல் மாற்றி அமைத்துக் கொள்ளலாம்.

மக்கள் சபையின் செயற்படுமுறை விதி 246-ன்படி, குடியரசு தலைவரிடமிருந்து மக்கள் சபைக்கு வரும் செய்திகள் அவர் கையொப்பத்தின்பேரில்தான் வரவேண்டும். அவர் தலைநகரில் இல்லாதபோது அவரிடமிருந்து வரும் செய்தி அமைச்சர்மூலம் சபாநாயகருக்குச் சேரவேண்டும். 247ஆவது விதியின் கீழ், மக்கள் சபையிலிருந்து குடியரசு தலைவருக்கு அனுப்பப்படும் செய்தி சபை யில் தீர்மானம் நிறைவேறிய பிறகு சபாநாயகர்மூலம் அனுப்பப் படவேண்டும்.

மற்றக் குடியாட்சி நாடுகளில் பாராளுமன்றத்திற்குச் செய்திகள் அனுப்பும் விதிகள் எவ்வாறு செயற்படுகிறது என்று பார்ப்போம்.

இங்கிலாந்து நாட்டின் சட்டப்படி, பாராளுமன்றக் கூட்டத் திற்கு எந்த நேரத்திலும் வருகை தரவும், அறிவுரையை உறுப் பினர்களுக்கு வழங்கவும், மன்னருக்கு உரிமை உள்ளது. எனினும், சட்ட ரீதியான அரசு செயற்படுவதால், மன்னர் அறிவுரை வழங்கிச் சென்ற பிறகு (Speech from the throne) பாராளு மன்றக் கூட்டத்தில் அவர் மறுபடி கலந்து கொள்வ தில்லை.

மன்னரிடமிருந்து வரும் செய்திகளும் சம்பிரதாய விஷயங் களைக் குறித்து இருக்குமே தவிர மற்றப்படி பழக்கத்தில் செய்திகள்

அனுப்பும்முறை இன்று அவ்வளவாக இல்லை. மன்னரின் சொத்து விஷயமாகவோ சிறப்பு உரிமையைச் சார்ந்த விஷயமாகவோ இருந்தால், பாராளுமன்றத்திற்கு அவர் சம்பிரதாயப்படி செய்தி அனுப்புவார். மன்னரின் செய்தி சபையின் தீர்ப்பை மாற்றத் தூண்டும்படியாக இருக்கக்கூடாது. பாராளுமன்ற விவாதத்தின் போது மன்னரின் சொந்த விருப்பத்தைச் சுட்டிக்காட்ட இடமில்லை. பாராளுமன்றத்தின் விவாதங்களைத் தம்விருப்பப்படி அமைக்கவோ அல்லது விவாதங்களில் தலையிடவோ மன்னருக்குச் சட்டப்படி உரிமையில்லை. சிலசமயங்களில் அமைச்சரின் மூலம் தயார்ப் படையைக் (Reserve) கூப்பிடவோ அல்லது நெருக்கடி நிலையை விவரிக்கவோ மன்னர் செய்தி அனுப்பலாம்.

அமெரிக்கா : அமெரிக்கக் குடியரசு தலைவர், இந்தியக் குடியரசு தலைவரைப்போலப் பாராளுமன்றத்தின் ஓர் அங்கம் இல்லை. ஆனால், அவ்வப்பொழுது நாட்டின் நிலைபற்றிச் செய்திகள் பாராளுமன்றத்திற்குக் கொடுப்பதுடன், அவர் தீர்மானித்திருக்கும் எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் குறித்து, பாராளுமன்றத்தின் பரிசீலனைக்குச் சிபாரிசு செய்யவேண்டும். கூட்டத்தொடர் ஆரம்பம் ஆவதற்கு முன்னமேயே செய்திகள் குடியரசு தலைவரிடம் இருந்து அனுப்பப்படுகிறது. ஆனல், பொதுமக்களின் கவனத்திற்குக் கொண்டு வரக்கூடாத விஷயங்கள் இரகசியமாக வைக்கப்படும். பாராளுமன்றத்திற்கு அப்படிப்பட்ட இரகசிய விஷயங்களைக் குறித்து எந்தச் செய்தியும் எட்டாது. இந்தக் குடியரசு தலைவரின் செய்திகள், அரசுகொள்கைகளைப் பற்றியும் அதற்குத் தேவைப்படும் சட்டதிட்டங்களைப்பற்றியும் இருக்கும். இப்படி அனுப்பப்படும் செய்திகள் விரிவாக வாசிக்கப்பட்டு விவாதிக்கப்படும்.

அமெரிக்கக் குடியரசு தலைவரின் வருடாந்தரச் செய்தி அனுப்பும் பழக்கம், இங்கிலாந்து நாட்டின் மன்னரின் சிம்மாசனப் பேச்சுக்கும் (Speech from the throne) இந்தியக் குடியரசு தலைவரின் பாராளுமன்றத்தின் கூட்டத் தொடரைத் தொடங்கி, வழங்கும் பேச்சுக்கும் சமமானது. ஆனல், இந்தப்பேச்சு முழுக்க முழுக்க அமெரிக்கக் குடியரசு தலைவருடைய கொள்கையின் அடிப்படையில் அமைந்திருக்கும். இங்கிலாந்து மற்றும் இந்தியாவில் பாராளுமன்றத்திற்கு மன்னரும் குடியரசு தலைவரும் சமர்ப்பிக்கும் பேச்சு, அந் நாட்டுப் பிரதமர் அரசின் கொள்கையை விவரித்துத் தயாரித்த பேச்சாக இருக்கும்.

அமெரிக்காவில், குடியரசு தலைவர் தேவை ஏற்படும் பொழுது பாராளுமன்றத்திற்குச் செய்திகள் அனுப்புவதற்கு முக்கிய

காரணம் இங்கிலாந்து, இந்தியா போன்ற நாடுகளில் உள்ளது போன்ற அமைச்சரவை அரசு அங்கு இல்லை. மேலும், அமைச்சரவை அரசின் கீழ்ச் சட்டமியற்றும் பிரிவுக்கும், செயற்படுத்தும் பிரிவுக்கும், நெருங்கிய தொடர்பும், ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பதுந்தான் காரணம். அமெரிக்காவின் குடியரசு தலைவர் அந் நாட்டின் மிகமுக்கியமான தலைவர் ஆதலால் அவரின் விருப்பங்களைப் பாராளுமன்றத்திற்குத் தெரியப்படுத்த அதற்குச் செய்திகளை அனுப்புவதைத் தவிர வேறு வழியில்லை. ஏனெனில், அங்கு அரசின் மூன்று பிரிவுகளும் அதிகாரப் பிரிவினையால் (Separation of powers) பிரிக்கப்பட்டிருக்கின்றன. இதற்கு மாறாக, இந்தியாவில், இங்கிலாந்து நாட்டைப்போல் அமைச்சரவை அரசு நடக்கிறது. இதனால் குடியரசு தலைவர் அமைச்சரவையின் கைப்பாவையாக இருக்கிறார் என்றும் மிகைப்படுத்திப் பேசப்படுகிறது. உண்மையில் அமைச்சரவை அரசு நடக்கும் நம் நாட்டில், அமைச்சர்கள் பாராளுமன்றத்தின் உறுப்பினர்களாக இருந்து பொறுப்புடன் செயற்படுவதால் குடியரசு தலைவர், பிரதமரின் ஆலோசனைப்படி நடக்கக் கடமைப்பட்டிருக்கிறார். அரசியல் சட்டம் ஏற்படுத்தியிருக்கும் சம்பிரதாயமும் இது தான். பாராளுமன்றத்தில் உறுப்பினர்கள் என்ற முறையில், அமைச்சர்கள் அங்கு நடக்கும் காரசாரமானவிவாதங்களில் பங்கு கொண்டு, அரசின் நிருவாக, கொள்கை விஷயங்களில் விளக்கம் கூறி நிலைமையைச் சமாளிப்பார்கள். எனவே, மசோதாக்களைப் பாராளுமன்றத்தின் பரிசீலனைக்குக்கொண்டு வரவும் சட்டசபையில் விவாதத்திலிருக்கும் விஷயங்களைக் குறித்து விமரிசிக்கவும் திருத்தங்கள் கொண்டுவரவும், உரிமைகள், அதிகாரங்கள் அமைச்சர்களுக்கு உண்டு.

இந்தியக் குடியரசு தலைவர், பாராளுமன்றத்திற்குச் செய்தி அனுப்புவது ஒரு தேவையற்றதும், விவகாரத்தை இன்னும் சிக்கலாக்கக் கூடியதாகவும் இருக்கும் என்ற எண்ணம் ஓரளவுக்கு ஒப்புக்கொள்ளக்கூடியதாகத்தான் உள்ளது. குடியரசு தலைவர் அனுப்பும் செய்தியின் நோக்கம் பாராளுமன்றத்தின் பரிசீலனையில் உள்ள ஒரு விஷயத்தை ஆதரிப்பதற்காக என்று கொண்டால் அரசாங்க அமைச்சர்களே அவ் விஷயத்தைச் செவ்வனே செய்து முடிக்கலாம். மசோதாவை, சபைகளில் தங்குதடையின்றி நிறைவேற்ற ஆவன செய்யலாம். ஒரு மசோதா தனிப்பட்ட உறுப்பினரால் சபையின்முன் வைக்கப்பட்டால், அமைச்சர்கள், அம் மசோதா விஷயமாய் அரசின் கருத்தை முன்வைக்க, சந்தர்ப்பம் உள்ளது. இதற்கு மாறாக, அமைச்சரவையின் ஆலோசனையின்றிக் குடியரசு தலைவர் சபைகளில் உள்ள ஒரு

மசோதாவைப் பற்றிக் குறிப்பு அனுப்பினால் அது அமைச்சரவைக்கும், குடியரசு தலைவருக்கும் இடையே வீணான விரோத மனப்பான்மையை உண்டாக்கும். மசோதாக்களில், குடியரசு தலைவரின் தலையீட்டால், சிக்கலேற்பட்டுப் பாராளுமன்ற ஆட்சியின் முக்கியத்துவத்துக்கே ஊறுவிளைவிக்கக் கூடியதாக அமையும். மேலும், அது குடியரசு தலைவர், இங்கிலாந்து அரசியைப்போல் அரசியலுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் என்ற எண்ணத்தைத் தகர்த்து விடும்படியாகவும் ஆகலாம். அரசியல் சட்டவிதி எண் 86 பிரிவு (2)ல், சந்தேகத்திற்கு இடமில்லாமல் குடியரசு தலைவர் இரண்டு சபைகளுக்கும் செய்தி அனுப்புவது குறித்துத் தெளிவுபடுத்துகிறது. அமைச்சர்கள், மாநிலங்களின் அவைக்குப் பொறுப்பில்லாமல் இருந்தாலும், அது சில முக்கிய, முடிவான சட்டங்கள் செய்யும் அதிகாரம் உள்ள சபை. அப்படிப்பட்ட மாநிலங்களின் அவைக்குக் (Rajya Sabha) குடியரசு தலைவர் செய்தி அனுப்புவதன்மூலம் அமைச்சரவைக்கே சங்கடமான நிலை ஏற்படலாம்.

அயர்நாட்டு அரசியல் சட்டத்தின் பாகம் 13(7)-ல் இருந்து இந்தவிதி நம் அரசியல் சட்டத்தில் புகுத்தப்பட்டுள்ளது. ஆனால், அயர்நாட்டு அரசியல் சட்டத்தை ஆராய்ந்தால் அந் நாட்டுக் குடியரசு தலைவர் பொதுநல, தேசிய விஷயங்களைக் குறித்து அமைச்சரவையின் அங்கீகாரம் கிடைத்தபின்தான் பாராளுமன்றத்திற்குச் செய்தி அனுப்பலாம். ஆனால், இந்திய அரசியல் சட்டத்தில் இந்த 'அமைச்சரவையின் சம்மதத்தின் பேரில், குடியரசு தலைவர் பாராளுமன்றத்திற்குச் செய்திகள் அனுப்ப வேண்டும்,' என்ற நிபந்தனை இல்லை.

எனினும், அமைச்சரவைக்குச் சட்ட ரீதியான பொறுப்புப் பாராளுமன்றத்திடம் இருப்பினும், அதை உதாசீனம் செய்வது போல் இந்தியக் குடியரசு தலைவர் பாராளுமன்றத்திற்குச் செய்திகள் தம்மிச்சையாக அனுப்புவது அமையும்.

திரு. கிளட்கில் (Gledhill) போன்ற அரசியல் நிபுணர்கள் குடியரசு தலைவருக்கு இந்த உரிமையை அரசியல் சட்டம் வழங்கி இருப்பது, தேவை ஏற்படும்பொழுது தம் கருத்துகளைப் பகிரங்கமாகப் பாராளுமன்றத்தின்முன் வைப்பதற்காகவே என்று கருதுகின்றனர். அமைச்சரவையால் தமக்குக் கொடுக்கப்பட்ட ஆலோசனை அவருடைய மனத்தில் ஏற்றுக்கொள்வது சரியில்லை என்று தோன்றும்பொழுது பாராளுமன்றத்திற்கு விண்ணப்பித்துக் கொள்ள இந்த அதிகாரம் உபயோகப்படுத்தப்படலாம். இந்த

விண்ணப்பம் பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டு ஆதரவுதரப்பட்டால், அமைச்சரவை வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை. அல்லது அமைச்சரவைக்கும் குடியரசு தலைவருக்கும் சுமுக உறவு இல்லாத நிலையில் இந்த உரிமையைக் குடியரசு தலைவர் அமைச்சரவைக்கு எதிராக உபயோகப்படுத்தலாம் என்ற பயம், அமைச்சரவையை, குடியரசு தலைவருக்கு அது தரும் ஆலோசனை ஆளும் கட்சியின் சொந்த அரசியல் இலாபத்திற்காக இல்லாமல், பொது நலனையும் நாட்டின் நலனையும் மையமாகக் கொண்டதாக இருக்கத் தூண்டும்.

இந்தக் கண்ணோட்டத்தில், அரசியல் சட்ட விதி86- குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் இடையே ஏற்படும் பிளவுக்கு வித்திடுவதாக உள்ளது. இந்தப் பிளவு, மத்திய அரசு ஆட்சியிலும் மாநிலங்களின் அரசு ஆட்சியிலும் வெவ்வேறு அரசியல் கட்சிகள் இருக்கும் பொழுது விரிவாகலாம். குடியரசு தலைவர் தேர்தலில் பாராளுமன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் மாநிலச் சட்ட சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் பங்கு கொள்வதை நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். எனவே, அமைச்சரவையின் ஆலோசனைகளை உதாசீனம் செய்யும் ஒரு குடியரசு தலைவரைப் பதவி நீக்கம் செய்ய இருக்கும் ஒரே வழி குற்றச்சாட்டுப் பத்திரிகை (Impeachment) சமர்ப்பிப்பதுமூலம்தான். சட்டமியற்றும் வகையில் கீழே குறிப்பிட்டுள்ள மசோதாக்கள் குடியரசு தலைவரின் சிபாரிசு அல்லது முன் அனுமதியின்றிப் பாராளுமன்றத்தில் கொண்டு வர முடியாது.

1. புதிய மாநிலங்கள் அமைக்க, எல்லைகளை மாற்றியமைக்க, மாநிலங்களின் பெயர்களை மாற்ற, சம்பந்தப்பட்ட மாநிலங்களின் சட்டசபைகளின் தீர்மானத்துடன் மத்திய அரசுக்கு அனுப்ப வேண்டும். இவ் விதியின் கீழ் 1953–ல் ஆந்திர மாநிலம் உருவானது. 1953-ல் அனேக மாநிலங்களின் எல்லைகள் திருத்தி அமைக்கப்பட்டன.

2. நிதி மசோதாக்களும், செலவு சம்பந்தப்பட்ட மசோதாக்களும் (விதி-117), வரி விதிப்பு அல்லது வரிச் சட்டத்தில் திருத்தங்கள் அல்லது விதி 110 (1)-ல் விவரித்துள்ளவை சம்பந்தப்பட்ட மசோதாக்கள் ஆகியவையும் குடியரசு தலைவரின் சிபாரிசுடன் மக்கள் சபையில் அனுமதிக்கப்படவேண்டும். விதி 110 (1)-ல் நிதி மசோதா அல்லது நிதி சம்பந்தமில்லாத மசோதாக்களும் அடங்கும். இவ் விதியின்கீழ் வரும் எந்த

மசோதாவும் குடியரசு தலைவரால் அல்லது அவர் சிபாரிசுடன் தான் கொண்டு வரவேண்டும். இதற்குச் சில விதி விலக்குகளும் உண்டு. (அ) வரிக்குறைப்பு அல்லது வரியை நீக்கும் மசோதா (ஆ) ஸ்தல ஸ்தாபனங்கள் விதிக்கும் வரிகள், அனுமதிச் சீட்டு (Licenses) வரிகள், அபராதங்கள், கட்டணங்கள், விதி எண் (117 (1)-ன்கீழ் வரக்கூடிய நிதி சம்பந்தப்பட்ட மசோதாக்களும் மற்ற மசோதாக்களும் (இ) கீழ்க்கண்ட அடிப்படைகளைக் கொண்ட மசோதாக்கள்.

(i) மாநிலங்களுக்கு முழுமையாகவோ, பகுதியாகவோ அளிக்க இருக்கும் வரி, சுங்க வரி சம்பந்தப்பட்டவை [விதி எண் 274 (2) (அ)].

(ii) 'விவசாய வருமானம்' என்று இந்திய வருமான வரிச் சட்டத்தில் உள்ள சொற்றொடரின் பொருளைத் திருத்தி அமைக்கும் வகையில் சட்டம் உண்டாக்குதல். (உதாரணமாக பிரிவு 2 (1)-ன்கீழ் கொண்டுவரப்பட்ட இந்திய வருமான வரிச் சட்டம் [Sec. 2 (1) of the Indian Income-tax Act (XI of 1922].

(iii) மாநிலங்களுக்கு நிதியைப் பிரித்துக் கொடுக்கும் அடிப் படையில் மாற்றம் செய்வது (விதி எண் 270, 272).

(iv) அதிக வரி விதிப்பது (Surcharge) (விதி எண் 271)(ஈ),விதி எண் 304 (அ) (ஆ), மாநிலச் சட்ட சபைகளுக்கு, பொதுநலனைக் கருத்தில் கொண்டு தேவைப்படும் கட்டுப் பாடுகளை வர்த்தகம், வியாபார சம்பந்தமான மாநிலங் களுக்கு இடையே உள்ள போக்குவரத்திலோ ஒரு மாநிலத்தின் மாவட்டங்களுக்கிடையே உள்ள போக்கு வரத்திலோ விதிக்க அதிகாரம் கொடுத்துள்ளது. ஆனல், விதி எண் 304-ன் கீழ், தேசிய நலனைப் பாதுகாக்க, மேலே குறிப்பிட்ட மசோதாக்கள் சட்டமாக்கப்படுமுன் அல்லது மாநில ஆளுநர் எந்த ஓர் அவசரச்சட்டம் பிறப்பிப் பதற்கும் குடியரசு தலைவரின் முன் அனுமதியுடன் செயற்படவேண்டும்.

எனவே, சில மசோதாக்கள் கொண்டுவருமுன்பே குடியரசு தலைவரின் அனுமதி தேவைப்படுகிறது. இத்தகைய முன் அனுமதி அல்லது சிபாரிசு ஒரு சம்பிரதாயமாக உள்ளது எனக் கொள்ள லாம். உண்மையில் இந்த மசோதாக்கள் சம்பந்தப்பட்ட சிபாரிசுகள் அமைச்சரவையால்தான் செய்யப்படுகின்றன. தனிப் பட்ட ஓர் உறுப்பினர் இந்தவகை மசோதாவைக் கொண்டு வருவ தற்கு ஒரு தடைபோலக் குடியரசுதலைவரின் முன் அனுமதி

பெறுவது அமைந்துள்ளது. அமைச்சரவை இப்படிப்பட்ட மசோதாவை ஆதரிக்காவிட்டால் குடியரசு தலைவரின் சம்மதம் கிடைக்காமல் மசோதா சட்டம்ஆக வழியில்லாமல் போய், சபைக்குள் விவாதத்திற்கு வராமலேயே நின்றுவிடும்.

அரசியல் சட்டம், விதி எண் 255-ல், பாராளுமன்றத்தால் சட்டமாக்கப்பட்ட எதுவும், குடியரசுதலைவரின் முன் அனுமதியின்றி, பாராளுமன்றத்தால் அனுமதிக்கப்பட்டுச் சட்டமாக்கப் பட்டது என்ற காரணத்திற்காக, அச் சட்டம் செல்லுபடியாகாது என்று கருதக்கூடாது. ஆனால், பாராளுமன்றம் மசோதாவைச் சட்டமாக்கியதும், குடியரசு தலைவரின் அங்கீகாரம் கிடைத்தால் போதுமானது. குடியரசு தலைவரின் முன் அனுமதி மசோதா கொண்டுவருமுன் கிடைக்கவில்லை என்ற காரணத்திற் காக நீதி மன்றங்கள் சட்டம் செல்லாது என்று தள்ளுபடி செய் யாத வகையில் மேற்படி விதி பாதுகாப்பு அளிக்கிறது.

**பாராளுமன்றத்தில் சில அறிக்கைகளைச் சமர்ப்பிக்கக் குடியரசு தலைவருக்கு இருக்கும் அதிகாரம்**

குடியரசு தலைவரின் கட்டளையின் பேரில் பாராளுமன்றத் தின் ஒவ்வொரு சபையிலும் சில அறிக்கைகளும் தாக்கீதுகளும் சமர்ப்பிக்கப்பட்டு அவை அச் சபைகளின் நடவடிக்கைகளுக்கு உட்படுத்தப்படுகின்றன. அவையாவன :

(1) 'வருடாந்தர நிதி சம்பந்தப்பட்ட அறிக்கை' பொது வாக, வரும் ஆண்டிற்கு அரசின் வரவு செலவு திட்டம் (Budget). அந்தத் திட்டத்தில் வருவாயின் மதிப்பீடும், செலவினங்களின் மதிப்பீடும் கொடுக்கப்பட்டிருக்கும்.
செலவினங்களின் மதிப்பீடுதிரும்பவும்.

(2) 1935-ன் [Sec. 33 (2)] கீழ்ச் சொல்லப்பட்டிருப்பது போல் வருவாய்க் கணக்குச் செலவுகளிலிருந்து மற்றச் செலவினங் களும்

(3) திரண்ட நிதியிலிருந்து (Consolidated Fund) எடுக்கப் படும் செலவினங்களுக்கும் அந் நிதியிலிருந்து எடுக்கப்படாத செலவினங்களுக்கும், உள்ள மாறுபாட்டை விளக்கியிருக்க வேண்டும்.

1935ஆம் வருடச் சட்டப்படி, ஆளுநர் தலைவர் அவர் உசிதப்படி 'நிதி சம்பந்தப்பட்ட கணக்கை, உரிய காலத்தில் முடிக்க' விதிகளை உருவாக்க அவருக்கு அதிகாரம் கொடுக்கப் பட்டிருந்தது. இதனால் சட்டசபையின் விமரிசனம் செய்யும் சுதந்திரம் வெகுவாகக் குறைக்கப்பட்டிருந்தது. இன்றுள்ள

அரசியல் சட்டத்தில், இது குறித்துச் சட்டமியற்றி, வேண்டிய விதிகளை உருவாக்கப் பாராளுமன்றத்திற்கே இந்த உரிமை உள்ளது (விதி எண் 119). திரண்ட நிதியிலிருந்து எடுக்கப்படும் செலவினங்களைப் பாராளுமன்றத்தின் வாக்கெடுப்பிற்கு விடுவதில்லை. ஆனால், இரு சபைகளும் வாக்களிப்புக்கு உட்படாத செலவினங்களைப்பற்றி விவாதித்து விமரிசிக்கலாம்.

இதரச் செலவினங்கள் பாராளுமன்றத்தின் மக்கள் சபைகள் அங்கீகாரத்திற்கு, நிதி ஒதுக்கக் கோரிக்கை (Demand for grant) ரூபத்தில் சமர்ப்பிக்க வேண்டும். இத்தகைய நிதிக் கோரிக்கையை அங்கீகரிக்கவும் மறுக்கவும் அல்லது குறிப்பிட்ட நிதித் தொகையைக்குறைத்து அங்கீகாரம் செய்யவும் மக்கள்சபைக்கு அதிகாரம் உள்ளது. இதிலிருந்து நமக்குத் தெரிவது யாதெனில், மக்கள் சபைக்கு விதி எண் 113 பிரிவு 3 ன்-படி எக் காரணத்திற்காகவும் செலவு தொகையை அதிகரிக்க அதிகாரம் இல்லை என்பது. ஆனால், குடியரசு தலைவர் செலவு தொகையை அதிகரிக்கும்படி சிபாரிசு செய்தால் மாத்திரம் அதிகரிப்பை ஏற்கலாம். செலவுக்கு நிதிக் கோரிக்கையை அதிகப்படுத்த வேண்டுமானால் அப்படி அதிகப்படியான தொகைக்கு ஒரு தனி நிதிக் கோரிக்கை சபைமுன் வைக்க வேண்டும். எந்த ஓர் அதிகப்படியான செலவும் அதிகப்படியான நிதியை உருவாக்கக் காரணமாக இருப்பதால் தான் இந்த ஏற்பாடு.

(i) குடியரசு தலைவர் இதன்படி, துணைநிறைவு மானியக் கோரிக்கை (Supplementary Budget) அல்லது அதிகப்படியான மானியக் கோரிக்கை மசோதாவைத் தம் சிபாரிசுடன் மக்கள் சபைக்கு அனுப்புகிறார். திரண்ட நிதியிலிருந்து நிதி ஒதுக்கீட்டு மசோதாவுக்கு (Appropriation Bill) மானியங்களை வழங்க, சம்மதம் தெரிவிக்கக் குடியரசு தலைவர் மறுக்கலாம்.

(ii) இந்திய அரசின் வரவு செலவு கணக்குகள் சம்பந்தப்பட்ட இந்தியாவின் தணிக்கைத் துறைத் தலைமை அதிகாரி (Comptroller and Auditor General of India) சமர்ப்பிக்கும் அறிக்கை

(iii) நிதிக்குழுவின் (Finance Commission) சிபாரிசும் அதன் பேரில் அரசு எடுத்துக் கொண்ட நடவடிக்கையும்-விதி எண் 281.

(iv) மத்திய அரசு ஊழியர் தேர்வுக் குழுவின் (U.P.S.C.) வருடாந்தர அறிக்கையும், மத்திய அரசாங்கம் அதன்

சிபாரிசை ஏற்றுக் கொள்ளாததின் காரணத்தின் விளக்கமும்.

(v) தாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடி மக்கள் (Scheduled Castes and Tribes) பற்றிய அறிக்கையை, அதற்கான விசேஷ அதிகாரி சமர்ப்பித்தல்.

(VI) சமூக, கல்வி ரீதியில் பின் தங்கிய மக்களின் முன்னேற்றத்திற்காக அமைக்கப்பட்ட குழுவின் அறிக்கை.

குடியரசு தலைவரின் (மசோதாவிற்கு) அங்கீகாரமும் மறுப்பாணை அதிகாரமும்

இந்திய யூனியனின் பாராளுமன்றம், குடியரசு தலைவரும் இரண்டு சபைகளும் ஒன்று சேர்ந்த ஒரு கலவையான அமைப்பாகும். இங்கிலாந்து நாட்டில் அரசி பாராளுமன்றத்தின் ஓர் அங்கமாக விளங்குவது போலவே இந்தியக் குடியரசு தலைவரும் இந்தியப் பாராளுமன்றத்தின் ஓர் அங்கமாக விளங்குகிறார். நிறைவேற்றப்படும் எந்த ஒரு மசோதாவும் அது சட்டமாக மாற அல்லது சட்டத்தின் வலிமையைப்பெற அந் நாட்டு அரசியின் ஒப்புதல் கையெழுத்துமூலமாகவேண்டும். அரசியின் ஒப்புதல் இல்லாமல் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட எந்த மசோதாவும் சட்டமாக முடியாது. இந்தியக் குடியரசு தலைவரும், இங்கிலாந்து அரசியைப் போலவே சட்டம் இயற்றும் வகையில் செயற்படுகிறார். குடியரசு தலைவரின் சம்மதம் இல்லாமல் எந்தச் சட்டமும், பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டிருந்தாலும், சட்டமாக ஆகாது. பாராளுமன்றம் நிறைவேற்றும் எந்தச் சட்டத்திற்கும் அல்லது அரசியல் சட்டத்திருத்தத்திற்கும் குடியரசு தலைவரின் ஒப்புதல் தேவைப்படுகிறது (விதி எண் 368).

விதி எண் 111-ன் கீழ் ஒரு மசோதா, குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு வைக்கும்பொழுது கீழ்வருமாறு செயற்படலாம்.

(1) மசோதாவுக்குச் சம்மதம் தெரிவிக்கலாம்.

(2) மசோதாவுக்குத் தம் சம்மதத்தைத் தெரியப் படுத்தாமல் இருக்கலாம்.

(3) நிதி மசோதா அல்லாத மசோதாக்களாக இருந்தால்

(அ) மசோதாவை முழு மறு பரிசீலனைக்கு அனுப்பலாம்.

(ஆ) மசோதாவின் ஒரு பகுதியை மறுபரிசீலனைக்கு அனுப்பலாம்.

(இ) மசோதாவின் திருத்தங்களுக்குச் சிபாரிசு செய்யலாம்.

குடியரசு தலைவரின் அங்கீகாரம் பெற்ற ஒரு மசோதாஅரசின் அதிகார பூர்வமான ஏட்டில் (gazette) பிரசுரிக்கப்பட்டவுடன், உடனடியாகச் சட்டமாகிவிடுகிறது. குடியரசு தலைவரால் மறு பரிசீலனை செய்யவேண்டும் என்று திருப்பிச் சபைக்கு அனுப்பப் பட்ட மசோதா, திரும்பவும் சபைகளில் அவருடைய திருத்தங் களுடனோ அது இல்லாமலோ' நிறைவேற்றப்பட்டால் அந்த மசோதாவுக்கு அவர் தம்முடைய அங்கீகாரத்தைக் கொடுத்தே ஆகவேண்டும். மறுத்துத் தள்ளிவிட அவருக்கு அரசியல் சட்டம் இடம் கொடுக்கவில்லை. நிதி சம்பந்தப்பட்ட மசோதாக்கள் விஷயங்களில் குடியரசு தலைவர் அவற்றை அங்கீகரிக்கலாம். அல்லது அங்கீகாரத்தைக் கொடுக்காமல் நிறுத்திக் கொள்ளலாம். திரும்ப அந்த மசோதாக்களை மறுபரிசீலனைசெய்யச் சபைகளுக்கு அனுப்ப முடியாது.

குடியரசு தலைவர், இருசபைகளும் ஏற்றுக் கொண்ட மசோதா வுக்குத் தம் ரத்துசெய்யும் அதிகாரத்தைப் பிரயோகித்தால் இரு சபைகளும் ஒன்று கூடி ஒரு சிறுபான்மை (simple Majority) ஆதரவுடன் மறுபடியும் அந்த மசோதா உறுப்பினர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டால் குடியரசு தலைவரின் மறுப்பாணை (power of veto) பயனற்றதாகஆகிவிடும். குடியரசு தலைவரின் இந்த மறுப்பாணை, அமெரிக்கக் குடியரசு தலைவருக்கு இருக்கும் மறுப்பாணையை விட மாறுபட்டது; வலிமை குன்றியது ஆகும். அமெரிக்காவில் குடியரசு தலைவரின் ரத்துசெய்யும் அதிகாரத்தை முரியடிக்க மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் தீர்மானித் தால்தான் முடியும். ஆகவே, இந்தியக்குடியரசு தலைவர் ஒரு மசோதாவை அங்கீகரிக்கா விட்டாலும் அந்த மசோதா சிறிது காலம் தாழ்த்தியாவது சட்டமாகிவிடுகிறது; அவ்வளவே. குடி யரசு தலைவரின் ரத்துசெய்யும் அதிகாரம் (Veto) அமெரிக்கக் குடியரசு தலைவரின் ரத்துசெய்யும் அதிகாரத்துடன் ஒப்பிடும் பொழுது மிகவும் குறைந்துள்ளது. அமெரிக்கக் குடியரசு தலைவரின் இந்த ரத்துசெய்யும் அதிகாரம் அவருக்கு ஒரு பலம் பொருந்திய ஆயுதமாக உள்ளது.

விதி எண் 111ன் கீழ், இந்தியக் குடியரசு தலைவரின் மறுப் பாணை அதிகாரத்தைப் (Power of Veto) பிரயோகித்து இரு சபை களின் மறுபரிசீலனைக்கு மசோதாவை அனுப்பும் பொழுது ஒரு மூன்றுவது சபையைப்போலச் (third chamber) செயற்படுவதால் அவரின் ரத்துசெய்யும் அதிகாரம் மிகவும் பலகீனமாக (லேசாக

இருக்கிறது. இதனால் ஏற்படும் தாமதம் சில அரசியல் பலன்களை உண்டாக்கலாம்.

மேலும், மசோதாக்களைக் குடியரசு தலைவர் அங்கீகரிக்கக் கால வரம்பு எதுவும் அரசியல் சட்ட விதிகளில் இல்லை. விதி எண் III-ல் கண்டிருப்பதெல்லாம், குடியரசு தலைவர் மசோதாவை மறு பரிசீலனைக்கு அனுப்ப விரும்பினால், அது அவர் கையில் கிடைத்த வுடன் எவ்வளவு விரைவில் அனுப்ப முடியுமோ அவ்வளவு, விரைவில் திரும்ப அனுப்பவேண்டும் என்றுதான் சொல்கிறது. 'எவ்வளவு விரைவிலோ அவ்வளவு விரைவில்' என்ற சொற் றொடர் வளைந்து கொடுக்கும் சொல்லாக இருக்கிறது. எனவே, குடியரசு தலைவர் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் மசோதா வைத் தாமதப் படுத்த இடமளிக்கிறது. அரசியல் சட்டத்தில் கால வரையறை செய்யாதது இந்த விஷயத்தில் மறைமுகமான ரத்து செய்யும் அதிகாரத்திற்குச் சமமாக உள்ளது.

சில அரசியல் சட்டங்களில் தாமதிக்கும் அதிகாரம் கொடுக் கும் பொழுது காலவரையறை செய்யப்படுகிறது. இத்தாலிய நாட்டு அரசியல் சட்ட விதிகள் 73-ம், 74-ம் இதற்கு ஓர் எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது. குடியரசு தலைவர் சம்மதம் தெரி வித்த ஒரு மாதத்திற்குள் சட்டங்கள் பிரகடனப்படுத்தப்படு கின்றன. இந்தச் சபைகள், முழுப் பெரும்பான்மையான (absolute majority) உறுப்பினர்களால் ஒரு சட்டத்தின் அவசரத் தன்மையை விளம்பரப்படுத்தினால் அந்தச் சட்டத்தில் குறிப்பிடப் பட்டிருக்கும் காலவரம்பிற்குள் அது பிரகடனப்படுத்தப்படும். சட்டங்கள் பிரகடனப்படுத்தப்பட்டவுடன் பிரசுரிக்கப்பட்டு, அந்தத் தேதியிலிருந்து 15ஆவது நாள் அமலுக்கு வருகிறது. ஆனால், அமலுக்கு வரும் தேதியும் குறிப்பிட்டிருந்தால், அந்தத் தேதியில் தான் அமலுக்கு வரும்.

குடியரசு தலைவர், சட்டமாக்க வேண்டிய மசோதாவைச் சட்டப் பிரகடனம் செய்யுமுன், தக்க காரணங்களைக் கூறிச் சபை களுக்கு அந்த மசோதா மீது ஒரு புதிய முடிவை எடுக்க வேண்டு கோள் அனுப்பலாம். அப்படி அனுப்பப்பட்ட சட்டம், மறுபடியும் சபைகளின் உறுப்பினர்களால் அங்கீகரிக்கப்பட்டால் அதை உடனே பிரகடனப்படுத்த வேண்டும்.

இத்தாலிய நாட்டு அரசியல் சட்டத்தில் கூறியுள்ளபடி இந்தியக் குடியரசு தலைவருக்குச் சட்டங்களை அங்கீகரிக்க அல்லது நிராகரிக்க ஒரு கால வரம்பு அரசியல் சட்டத்தில் வைத்திருக்க வேண்டும். இந்த விஷயத்தில் அரசியல் சட்டம், ஒரு சட்டத்திற்கு அங்கீகாரமோ அல்லது நிராகரிக்கும் அதிகாரத்தை பிரயோகிக் கவோ குடியரசு தலைவருக்கு உகந்த காலத்தை அவரே தேர்ந்

தெடுக்கும்படி செய்துள்ளது. சில சமயங்களில் ஒரு முடிவை எடுப்பதில் குடியரசு தலைவர் காலதாமதம் செய்வது நல்ல காரணங்களுக்காக இருக்கலாம். இப்போதைய சூழ்நிலையில் அந்தச் சட்டம் நிறைவேறினாலோ அமலுக்கு வந்தாலோ விரும் பத்தகாத நிகழ்ச்சிகள் நடக்க ஏதுவாகும் என்று அவர் கருதினால் நாட்டின் அமைதியையும் கட்டுப்பாட்டையும் மனத்தில் கொண்டு சட்டத்திற்கு அங்கீகாரம் வழங்குவதில் காலதாமதம் செய்யலாம். ஆனால், அதே சமயத்தில் அரசியல் காரணங்களுக்காகவும் தாமதப்படுத்த அவரால் இயலும் என்ற உண்மையையும் நாம் மறந்து விடக் கூடாது. ஆகவே, இந்தியக் குடியரசு தலைவர் பதவி ஏற்குமுன் எந்த அரசியல் கட்சியின் தொடர்பும் இல்லாமல் இருக்கமுடியாத காரணத்தால் சட்டங்களை அவர் ஏற்க அல்லது நிராகரிக்க, கால வரம்பு அரசியல் சட்டத்தில் இல்லாதது விரும்பத்தகாத பலன்களைக் கொடுக்க ஏதுவாகும்.

ஏற்கெனவே கூறியுள்ளபடி அரசியல் சட்ட விதி எண் 111-ன் கீழ் ஒரு மசோதாவைக் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் முழுமையான மறுபரிசீலனைக்கு அனுப்பலாம். அல்லது அதில் சில பகுதிகளை மறுபரிசீலனைக்கு அனுப்பலாம். அல்லது சில திருத்தங்களை அதனுடன் சேர்க்க ஆலோசனை கூறித் திரும்ப அனுப்பலாம். மசோதாவைத் திரும்பப் பாராளுமன்றத்திற்கு அனுப்பும் விஷயத்தில் குடியரசு தலைவர் அமைச்சரவையைக் கலந்துதான் செயற்பட வேண்டும் என்பதில்லை. ஏனெனில், மசோதாக்களின் மேல் விவாதம் நடக்கும்பொழுது பாராளு மன்றத்தின் இரு சபைகளிலும், அவசியம் என்று அவர்கள் நினைத் தால் வேண்டியதைச் செய்ய அமைச்சர்கள், அவைகளில் இருக் கிறார்கள். பாராளுமன்றத்தின் மக்கள் சபையில் அமைச்சரவைக்கு ஆதரவாகப் பெரும்பான்மையான உறுப்பினர்கள் இருப்பதன் காரணத்தாலே, அமைச்சர்கள், அவர்கள் உத்தேசிக்கும் திருத்தங் களோ, மறுபரிசீலனையோ மசோதாவையே முழுமையாக மாற்றி யமைக்கவோ அவர்களால் முடியும். அப்படிச் செய்ய முடியா விட்டால் அமைச்சரவைக்கு மக்கள் சபை உறுப்பினர்களின் ஆதர வின்மையால் தோல்வி ஏற்பட்டு இராஜினாமா செய்யவேண்டி வரும். அல்லது மக்கள் சபையைக் கலைத்துப் புதுத் தேர்தல் நடத்தக் குடியரசு தலைவருக்கு ஆலோசனை கூறவேண்டியதாகி விடும். அரசாங்கப் பொறுப்பில் இருக்கும்படியான ஒரு பெரும் பான்மை அரசியல் கட்சியின் ஆதரவு எந்த மசோதாவும் சட்ட மாக வேண்டும் என்று குடியரசு ஆட்சி முறை எதிர்பார்க்கிறது. எந்தச் சூழ்நிலையில், பாராளுமன்றத்தின் மறுபரிசீலனைக்கு மசோதாவைத் திருப்பி அனுப்பவேண்டும் என்று அமைச்சரவை,

குடியரசு தலைவருக்கு ஆலோசனை வழங்கும் என்பதைச் சொல்லச் சிரமமாக உள்ளது. எனவே, இவ் விஷயத்தில் குடியரசு தலைவர் தம்மிச்சையாகத்தான் செயற்படவேண்டியிருக்கும். அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்கள், சம்பிரதாயப்படி உபயோகப் படுத்தப்படாவிட்டாலும் இங்கிலாந்து அரசியின் ரத்துசெய்யும் அதிகாரம் இன்னும் உள்ளது என்றுகூறி, அதைத் தழுவிய இந்திய அரசியலமைப்பிலும் இது புகுத்தப்பட்டது என்று கூறுவது பொருத்தமாக இல்லை. ஏனெனில், இங்கிலாந்து அரசியின் ரத்துசெய்யும் அதிகாரம் நடைமுறையிலுள்ள அரசியல் மரபு களால் இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன் அந் நாட்டில் மறைந்து விட்டது. எனவே, இந்த ரத்துசெய்யும் அதிகாரத்தை இந்திய அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் வேண்டுமென்றே ஏதோ ஒரு காரணத்திற்காகத்தான் நுழைத்து இருக்கிறர்கள்.

நன்மை தீமைகளைப்பற்றி ஆராயாமல், பாராளுமன்றம் அவசரமாகக் கொண்டுவரும் சட்டத்தைத் தடுப்பதற்காகத்தான் ரத்துசெய்யும் அதிகாரம் குடியரசு தலைவருக்கு வழங்கப் பட்டது. பாராளுமன்ற முறை அரசியல் செயற்குழுப் பிரிவு (Executive Branch) சட்டங்களை உருவாக்கிக் கொண்டுவருவதால், சட்டமாக்கப்படவேண்டிய மசோதாவைக் குடியரசு தலைவர், மறுபரிசீலனைக்கு அனுப்புவதும், ரத்துசெய்யும் அதிகாரத்தைப் பயன்படுத்தித் தடுப்பதும் மிகவும் அபூர்வமானவை. ஆங்கில அரசியல் சட்டப்படி, இங்கிலாந்து நாட்டு அரசிக்கு முழுமையான ரத்து செய்யும் அதிகாரம் (absolute Veto) இருந்தாலும் அந்த அதிகாரம் ஆன் அரசி (Queen Anne) கால முதல் உபயோகத்தில் இல்லை. எந்த ஒரு நாட்டில், அரசியல் சட்ட அமைப்புப்படி, சட்ட மன்றங்களும், செயற்குழுப் பிரிவும் (Legislature and Executive) சுயேச்சையாகத் தனித்தனியே இயங்குகின்றனவோ அங்குச் செயற்குழுப் பிரிவுக்குச் சட்டமியற்றுவதில் எந்தப் பங்கும் இல்லாத காரணத்தால், வேண்டாத, விரும்பாத சட்டத்தை அமல்படுத்துவதில் செயற்குழுப் பிரிவுக்கு, அவசரச் சட்டதைத் தடுத்து நிறுத்தும் அல்லது கட்டுப்படுத்தும் அதிகாரம் கொடுப்பது வரவேற்க வேண்டிய விஷயம். இக் காரணத்திற்காகத் தான் அமெரிக்கக் குடியரசு தலைவருக்கு ரத்துசெய்யும் அதிகாரம் பல காரணங்களுக்காகத் தேவையான ஒன்று என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. உதாரணமாக,

(1) பாராளுமன்றத்தின் ஊடுருவலில் இருந்து செயற்குழுப் பிரிவு தன்னைப் பாதுகாத்துக் கொள்ள

(2) குடியரசு தலைவரின் அபிப்பிராயத்தில், ஒரு சட்டம் மக்களுக்கு உகந்தது அன்று அல்லது சூழ்நிலைக்கு ஏற்றதன்று

என்றுதோன்றினல் அச் சட்டத்தைத் தடுக்க அல்லது கட்டுப் படுத்த

(3) அரசியல் சட்டத்திற்குப் புறம்பானது என்று நினைக்கும் சட்டங்களைத் தடுத்து நிறுத்த

ஆகியவற்றிற்காக ரத்துசெய்யும் அதிகாரம் அமெரிக்கக் குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. தனக்குச்சரி என்று தோன்றும் எந்தக் காரணத்திற்காகவும், குடியரசு தலைவர் ரத்துசெய்யும் அதிகாரத்தை உபயோகப்படுத்தும் அளவிற்கு இந்த அதிகாரம் இன்று அமெரிக்கக் குடியரசு தலைவரால் அதிகமாகக் கையாளப்படுகிறது.

பிரான்சு நாட்டில் 3-ஆவது குடியரசு ஆட்சிக் காலத்தில் குடியரசு தலைவருக்குச் சட்டத்தை ரத்துசெய்யும் அதிகாரம் கொடுக்கப்படாவிட்டாலும், சட்டசபை முடிவு செய்து அனுப்பிய மசோதாவை மறு பரிசீலனைக்கு அனுப்புவதற்கு உரிமை கொடுக்கப்பட்டது. பாராளுமன்ற ஆட்சி முறைக்கு ரத்து செய்யும் அதிகாரம் புறம்பாக இல்லை; புறம்பானதும் அன்று. ஏனெனில், இந்த அதிகாரம்,சிறந்த சட்டங்களைஉருவாக்க இடையில் ஒரு தணிக்கை அல்லது ஆய்வு செய்வதன் மூலம் உறுதுணையாக நிற்கிறது.

முடிவாக, இந்தியக் குடியரசு தலைவர், ரத்துசெய்யும் அதிகாரத்தை, நிதி சம்பந்தப்பட்ட மசோதாக்களைத் தவிர, மற்ற எல்லா மசோதாக்களுக்கும் பயன் படுத்தலாம். அதிகார பூர்வமல்லாத மசோதாக்களுக்கு மட்டுந்தான் சம்மதம் தெரிவிக்காமல் இருக்கலாம் என்று கொள்ள வேண்டுமென்றுல் அதை அரசியல் சட்ட விதி எண் 111 குறிப்பாகச் சொல்லியிருக்கும். சாதாரணமாக, தம் சம்மதத்திற்கு அனுப்பப்பட்ட மசோதாக்களுக்குக் குடியரசு தலைவர் தம் சம்மதத்தைத் தெரிவித்தாக வேண்டும். ஆனல், அப்படி அனுப்பும் மசோதாக்களுள் சில அரசியல் சட்ட விதிகளுக்குப் புறம்பானவை என்று அவருக்குத் தோன்றினல், அவர், ‘அரசியல் சட்டத்தைப் பாதுகாப்பேன்’ என்று பதவிப் பிரமாணம் செய்து கொண்டிருப்பதால், அவை அடிப்படை உரிமைகளைப் பறிப்பதாகக் கருதினலும் அல்லது மாநிலங்களின் சட்டமியற்றும் எல்லைக்குட்பட்ட விஷயம் என்று தோன்றினலும், சம்மதம் தெரிவிக்க மாட்டார். குடியரசு தலைவர் மசோதாக்களுக்கு உடனடியாகச் சம்மதம் தெரிவிப்பதை நிறுத்திக் கொள்வது சம்மதம் கொடுக்கக் கூடாது என்று எண்ணியதாலா அம் மசோதாவைப் பாராளு மன்றத்திற்குத் திரும்ப அனுப்பி மறுபரிசீலனை செய்வதற்காகவா என்பதை அரசியலமைப்பு விதி எண் 111 தெளிவுபடுத்தவில்லை.

# 7. குடியரசுதலைவரின் அவசரச் சட்டம் இயற்றும் அதிகாரம்

## [Ordinance making power of the President]

பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மசோதாக்கள் சட்டமாகத் தமது அங்கீகாரத்தைக் கொடுப்பதைத் தவிர, தாமே சட்டமியற்றும் அதிகாரமும் குடியரசுதலைவருக்கு உண்டு. பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத் தொடர்கள் இருக்கும் சமயத்தைத்தவிர, வேறு எந்த நேரத்திலும் உடனடியாகச் சட்டமியற்றிச் செயற்பட வேண்டிய சூழ்நிலை உருவாகியுள்ளது என்று குடியரசுதலைவர் 'திருப்தி' அடைந்தால் அத்தகைய சூழ்நிலையைச் சமாளிக்கத் தேவையான அவசரச் சட்டங்களை அவர் பிரகடனப்படுத்தலாம். அவசரச்சட்டத்தைக் கொடுக்கும் அதிகாரம் ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குச் சட்டத்தை உண்டாக்கும் செயற்குழு அதிகாரத்திற்குச் சமமாக உள்ளது. இந்த அதிகாரத்தைப் பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டம் நடக்கும் நேரத்தைத் தவிர வேறெந்த வேளையிலும் குடியரசு தலைவர் உபயோகிக்கலாம். கலைக்கப்படும் வரையிலோ ஒத்திவைக்கப்படும் வரையிலோ பாராளுமன்றத்தின் கூட்டத் தொடர் நடந்து கொண்டிருப்பதாகக் கொள்ளவேண்டும். இதைத் தவிரக் 'கூட்டத் தொடர் இல்லாத பொழுது' என்ற வார்த்தை அவசரச் சட்டம் பிரகடனப்படுத்தப்படும் பொழுது பாராளுமன்றத்தின் கூட்டத்தொடர் இருக்கக்கூடாது என்றுதான் பொருள் படுகிறது. அவசரச்சட்டம் கடந்த காலத்திலிருந்து அமலுக்கு வந்தால் அப்பொழுது பாராளுமன்றத்தின் கூட்டத் தொடர்கள் இருந்திருந்தாலும் அதுபற்றி ஒன்றும் இல்லை. அவசரச் சட்டங்கள் கண்டிப்பாகச் செல்லுபடியாகும். பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத்தொடர் ஒத்திவைக்கப்படு முன்போ அத்தகைய ஓர் உத்தரவு அறிவிக்கப்படுமுன்போ

அவசரச்சட்டம் போட்டால் அது அரசியல் சட்ட விரோதமாகக் கருதப்படும். ஏனென்றால், பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத் தொடர் நடக்கும்பொழுது-சட்டங்களை உருவாக்க வேண்டிய அரசியல் சட்ட இயந்திரம் இயங்கும்பொழுது-இந்த அவசரச் சட்ட அதிகாரத்தைப் பயன்படுத்திச் சட்டங்கள் உருவாக்குவது நியாயமானதன்று. ஆனால், பாராளுமன்றத்தின் இருசபைகளின் ஏதாவதொன்றின் கூட்டத் தொடர் இல்லாமல் இருந்தால் இந்த அவசரச் சட்ட அதிகாரத்தைக் குடியரசு தலைவர் உபயோகிக்கலாம். ஏனென்றால், எந்தச் சட்டமும் ஒரே ஒரு சபையால் மட்டும் உருவாக்க முடியாது. இதன் காரணமாகத் தான் பாராளுமன்றத்தின் இருசபைகளின் ஏதாவதொருசபை யின் கூட்டத்தொடர் இருந்தாலும் அவசரச் சட்ட அதிகாரத் தைக் குடியரசு தலைவருக்கு இந்திய அரசியலமைப்பு அதிகாரம் அளித்துள்ளது.

பாராளுமன்றத்தின் மக்கள் சபை கூட்டத் தொடர் நடந்து கொண்டிருக்கும்பொழுதே குடியரசு தலைவர் 1957-ஆம் ஆண்டு முக்கியப் பணிகள் பராமரிப்பு அவசரச் சட்டம் (Essential Services Maintanance Ordinance of 1957) போட்டதை உதாரணமாக இங்கே கூறலாம். இச் சட்டத்தின் முகப்பு (Preamble) கீழ்க்கண்ட வாறு இருந்தது.

'சமூகத்தின் சில முக்கியப் பணிகள் தொடர்ந்து நடை பெறவும் மக்களின் அன்றாட வாழ்க்கை சீராக எப்பொழுதும் போல் நடக்கவும், மக்கள் சபையினால் நிறைவேற்றப்பட்ட மசோதா மாநிலங்களின் அவையில் கூட்டத்தொடர் இல்லாத காரணத்தால் உடனடியாகச் சட்டமாக்கி அமல்படுத்த வேண்டிய சூழ்நிலை உருவாகியிருக்கிறதென்ற திருப்தி குடியரசு தலைவருக்கு ஏற்பட்டதால், அரசியல் சட்ட விதி எண் 123 பிரிவு (1) (Clause I of article 123)-ன் படி கொடுக்கப்பட்டுள்ள அதிகா ரங்களின்படி, குடியரசு தலைவர் கீழே கொடுக்கப்பட்டுள்ள அவ சரச் சட்டத்தைப் பிரகடனம் செய்கிறார்.'

ஒரு மசோதா ஒரு சபையினால் நிறைவேற்றப்பட்டு மறுசபை யில் பரிசீலனையில் இருக்கும் பொழுதும் குடியரசு தலைவர் அம் மசோதாவைக் குறித்து அவசரச் சட்டம் போட அதிகாரம் உள்ளது என்பதைத்தான் மேலே கூறிய அவசரச் சட்டத்தின் முகப்பு விளக்குகிறது. பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத் தொடர் நடக்கும் பொழுது ஒரு குறிப்பிட்ட சட்டம் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டும் என்று குடியரசு

தலைவர் கருதினால், அத்தகைய சட்டம், சில நடைமுறைச் சம்பிர தாயங்களைப் (Procedural farmalities) பாராளுமன்றம் சட்டம் இயற்றுவது குறித்துக் கடைப்பிடிக்க வேண்டியிருப்பதால் உடனடி யாக நிறைவேற்ற முடியாது என்று அவர் நினைத்தால் இருசபை களின் கூட்டத் தொடரை ஒத்திவைத்து அவசரச் சட்டம் போட லாம். பஞ்சாப் மாநில ஆளுநர் அவசரச்சட்டம் உண்டாக்கவே உண்மையில் சட்டமன்றக் கூட்டத் தொடரை ஒத்தி வைத்தார் (The statesman March 13, 1968). அவசரச் சட்டத்தைப் போட வேண்டுமென்றே பாராளுமன்றத்தின் ஒரு சபை கூட்டத் தொடரையோ இரு சபைகளின் கூட்டத் தொடர்களையோ குடியரசு தலைவர் ஒத்தி வைத்தால், குடியரசு தலைவரின் செய்கை சட்டவிரோதமானது என்று கருதுவதற்கு இடமில்லை. பஞ்சாப், ஹரியானு உயர்நீதி மன்றத் தீர்ப்பை எதிர்த்துத் தலைமை நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்த பஞ்சாப் மாநில அரசாங்க வழக்கில் தீர்ப்பு வழங்கிய தலைமை நீதிபதி இதயத்துல்லாவும் (C.J. Hidayatulla) இதே கருத்தைத்தான் பிரதிபலித்தார். அரசியல் சட்டவிதி 174 (2)-ன்கீழ்ச் சட்ட சபையைக் கலைக்கும் அதிகாரத்தை ஆளுநர் பெற்றுள்ளார் என்பதைத் தலைமை நீதிபதி குறிப்பிட்டு, பரிசீலனையிலுள்ள வழக்கில் சட்ட சபையின் கூட்டத் தொடர் நடந்து கொண்டிருக்கும் பொழுது அதைக் கலைப்பது முறையா என்ற கேள்விக்கு இடமில்லை என்று கூறி மேற்படி [(174 (2)] ஆளுநரின் அதிகாரத்தை ஒரு வரம்புக்குள் ளாக்கவில்லை என்பதையும் சுட்டிக்காட்டினார். சட்டசபை கூட்டத் தொடர் இருக்கும்பொழுது அதைக் கலைத்தால், நல்ல எண்ண மில்லாமல் தம் அதிகாரத்தை ஆளுநர் துஷ்பிரயோகம் செய்த தாக நினைக்க ஏதுவாகலாம் என்றும் அவர் கருத்துத் தெரிவித் திருக்கின்றார்.

உடனடியாகச் சட்டம் இயற்றி நிலைமையைச் சமாளிக்க வேண்டிய சூழ்நிலை உருவாகியிருக்கின்றது என்று குடியரசு தலைவர் திருப்தி அடைந்தால் அவசரச் சட்டம் குடியரசு தலைவரால் பிறப் பிக்கப்படும். இதில் வரும் 'திருப்தி' என்ற சொல் குடியரசு தலைவரின் திருப்தியைத்தான் குறிக்கின்றது. முன்னாள் தலைமை நீதிபதி சுப்பாராவ் 'இந்த விஷயத்தில் அமைச்சரவையின் ஆலோசனைப்படி குடியரசு தலைவர் நடக்க வேண்டியதில்லை. அவசரச் சட்டத்தைப்பொறுத்த வரையில் தம்மிச்சைப்படி நடக்க வேண்டும்,' என்று கூறுகிறார். குடியரசு தலைவரின் 'திருப்திக்கான' காரணங்கள் இருக்கின்றனவா இல்லையா என்பது விசாரணைக் குரிய விஷயம் அன்று என்று வழக்கு மன்றங்களும் கூறுகின்றன. அவசரச் சட்டங்கள் கொடுக்கும் மாநில ஆளுநர்களின் அதிகாரங்

களின் அளவைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது தலைமைநீதிமன்றம், 'மாநிலச் சட்டமன்றங்களுக்குச் சட்டங்களை உருவாக்கும் அதிகாரம் எவ்வளவுக்கெவ்வளவு பரவலாக உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு அதிகாரம் அவசரச் சட்டத்தினால் உருவாகும் சட்டங்களுக்கும் உண்டு. அரசியல் சட்டவிதி 209 சட்டசபையின் அதிகாரங்களைத் தெளிவாக விளக்குகிறது. ஆகையால், அதற்கு எதிரான கருத்து அரசியலமைப்பில் இருந்தாலொழிய மாநில ஆளுநரும் அதற்குச் சமமான அதிகாரங்களைப் பெற்றே ஆக வேண்டும். இதற்கு எதிரான கருத்து அரசியலமைப்பில் இல்லை. ஆகையால், அரசியல் விதி எண்கள் 209, 213-ன்கீழ்க் கொடுக்கப்படும் அதிகாரத்தினால் உண்டாக்கப்பட்ட அவசரச் சட்டம் செல்லுபடியாகும்,' என்று கூறுகிறது. அரசியல் சட்ட விதி 213, அரசியல்விதி 123 ஐப் போலவே (பிரிவு (1) பிரிவு (3) ஐத் தவிர) இருப்பதால் அவசரச் சட்ட விஷயத்தில் குடியரசு தலைவருக்குள்ள அதே அதிகாரங்கள் மாநில ஆளுநருக்கும் உள்ளது என்பது தெளிவாகிறது.

சாதாரணமாக மத்திய அரசு பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்தும் பொதுப்பட்டியலில் (Concurrent list)உள்ள விஷயங்கள் குறித்தும்தான் அவசரச் சட்டம் குடியரசு தலைவர் பிரகடனப் படுத்துவார். ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் அரசியல் இயந்திரம் முறிந்துவிட்டது என்று பிரகடனப்படுத்தப்பட்டாலோ நெருக்கடி நிலை நாடு முழுவதற்கும் பிரகடனப்படுத்தப்பட்டாலோ மாநிலப் பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்தும் சட்டம் இயற்றக் குடியரசு தலைவரால் முடியும். ஆனால், அரசியல் இயந்திரம் ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் முறிந்துவிட்டது என்று பிரகடனப் படுத்தி மாநிலப் பட்டியலில் இருக்கும் விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றினால் அது அந்த மாநிலத்திற்கு மட்டுந்தான் பொருந்தும். நெருக்கடிநிலை நாடு முழுமைக்கும் பிரகடனப் படுத்தியிருக்கும் பொழுது, குடியரசு தலைவர், மாநிலப் பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்துச் சட்டங்கள் இயற்றினால் அது எல்லா மாநிலத்திற்கும் பொருந்தும். எப்படியிருப்பினும் விதி எண் 356-ன் கீழ்ச் சட்டமியற்றும் அதிகாரம் பாராளுமன்றத்தால் மாற்றிக் கொடுக்கப்படாத வரையில் அரசியல் இயந்திரம் முறிந்து விட்டது என்று பிரகடனப்படுத்தப்பட்ட மாநிலத்திற்கு, பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டத்தொடர் இருக்கும்பொழுது அவசரச் சட்டம் இயற்றக் குடியரசு தலைவரால் முடியாது. ஆனால், சட்ட மியற்றும் அதிகாரம் பாராளுமன்றத்தால் குடியரசு தலைவருக்கு வழங்கப்பட்டால் பாராளுமன்றத்தின் இரு சபைகளின் கூட்டத் தொடர் நடைபெற்றாலுங்கூடக் குடியரசு தலைவர்,

அவசரச் சட்டம், அம் மாநிலத்தைப் பொறுத்தவரையில் இயற்றலாம். இது தவிர, மத்தியப்பட்டியல், பொதுப்பட்டியல், மாநிலப் பட்டியல்களில் கூறப்படாத விஷயங்கள் குறித்தும் (Residuary Subjects) அவசரச் சட்டம் இயற்றக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் உள்ளது.

அரசியல் சட்டத் திருத்தத்தைக் குறித்து எந்த அளவிற்கு அவசரச் சட்டம் பிரகடனம் செய்யச் சாத்தியக் கூறு குடியரசு தலைவருக்குள்ளது என்ற ஒரு கேள்வி எழலாம். அரசியல் சட்ட விதி 123 (3)-ன் படி, அரசியல் சட்டப்படி பாராளுமன்றம் சட்டமாக்க அருகதையில்லாத சரத்துகள் அவசரச் சட்டத்தில் இருக்குமேயானல் அவை செல்லுபடியாகா. இதிலிருந்து, பாதிக்குக் குறையாத மாநிலச் சட்ட மன்றங்களினல் அங்கீகாரம் தரப்பட வேண்டிய அரசியல் சட்ட விதிகளை, அவசரச் சட்டத்தினல் திருத்தி அமைக்க முடியாதுஎன்பதை முடிவு செய்யலாம். ஏனென்றல், அவற்றைப் பற்றிய அரசியல் சட்டத் திருத்தங்கள் தானே செய்யப் பாராளுமன்றத்திற்கே அதிகாரம் இல்லை. அத்தகைய திருத்தங்கள் பாராளுமன்றத்தில் குறிப்பிட்ட பெரும்பான்மை ஆதரவுடன் நிறைவேற்றப்படுவதோடல்லாமல் பாதிக்குக் குறையாத மாநிலச் சட்ட மன்றங்களின் அங்கீகாரமும் கிடைத்தால்தான் செய்யமுடியும். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானல் பாராளுமன்றத்தால் மட்டும் திருத்தி அமைக்கப்படும் அரசியல் சட்ட விதிகள் மட்டுமே அவசரச் சட்டத்தின் வரம்பிற்குட்பட்டவை. இது குறித்து மேலும் சற்று ஆராய்ந்து பார்த்தால் அதுவும் அப்படியன்று என்பதும் விளங்கும். விதி எண் 368-ன் கீழ்வரும் மசோதா சாதாரண மசோதாவைப் போல்தான் உள்ளது, ஒரு சிறப்புப் பெரும்பான்மை அத்தகைய மசோதாவிற்குத் தேவை என்பது வெறும் நடைமுறைதான் என்று சங்கரி பிரசாத்திற்கும் இந்திய யூனியனுக்கும் (Sankari Prasad Vs. Union of India, 1951) நடந்த வழக்கில் தலைமை நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது உண்மையென்றலும் மேற்கூறிய கருத்தை ஏற்றுக்கொள்வதற்கு மிகவும் சிரமமாக உள்ளது. அரசியல் சட்டத் திருத்த மசோதாவும் சாதாரண மசோதாவும் ஒரே அந்தஸ்தும் தன்மையும் உடையதாக இருக்கும் என்பதைப் பகுத்தறிவு ஏற்க மறுக்கிறது. அப்படி இருக்கவும் கூடாது. ஒரு சாதாரண மசோதாவைக் குறித்துப் பாராளுமன்றத்தின் இரு சபைகளுக்குள் கருத்து வேற்றுமை பலமாக இருந்தால் இரண்டு சபைகளின் இணைந்த கூட்டத்திற்கு (Joint sittings) ஏற்பாடு செய்ய அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டுள்ளது. ஆனல், ஓர் அரசியல் சட்டத்திருத்த மசோதா குறித்து இருசபைகளுக்கும்

—9

கருத்து வேற்றுமை இருந்தால், இணைந்த கூட்டம் கூட்டச் சட்டத்தில் வகையில்லை என்பதைக் கவனிக்க வேண்டும்.

மேலும், சாதாரண மசோதாவுக்கு அங்கீகாரம் குடியரசு தலைவர் கொடுப்பதற்கும் ஓர் அரசியல் சட்டத்திருத்த மசோதாவிற்கு அங்கீகாரம் கொடுப்பதற்கும் வித்தியாசம் உள்ளது. சாதாரண மசோதாவைக் குடியரசு தலைவர் தம் மறுப்பாணையைப் பயன்படுத்தி நிறுத்திவிடலாம் அல்லது அம் மசோதாவை மறுபரிசீலனை செய்யச் சபைக்குத் திருப்பி அனுப்பலாம். ஆனால், அரசியல் சட்ட விதி எண் 368-ல் சொல்லப் பட்ட முறைப்படி நிறைவேற்றப்பட்ட ஓர் அரசியல் சட்டத்திருத்த மசோதாவிற்குக் குடியரசு தலைவர் கண்டிப்பாகத் தம் கையொப்பத்தை, அங்கீகாரத்தைக் கொடுத்தே ஆகவேண்டும். ஆகையால், அரசியலமைப்புத் திருத்தங்கள் சாதாரணச் சட்டமியற்றும் முறைப்படி இல்லை என்பது தெரிகிறது. அரசியல் சட்டத்தைத் திருத்தப் பிரத்தியேகமான சட்டமியற்றும் முறை கடைப்பிடிக்கப்பட வேண்டும். அவசரச் சட்டம் இயற்றக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் வழங்கும் அரசியல்சட்ட விதி எண் 123 (3), இந்தப் பிரத்தியேகமான சட்டமியற்றும் முறையைத் தழுவியிருக்கவில்லை.

இவை தவிர, பாராளுமன்றத்தால் சட்டமியற்ற அதிகாரம் இல்லாத விஷயங்களில் குடியரசு தலைவரால் அவசரச் சட்டம் போட முடியாது என்று அரசியல் சட்ட விதி 123 (3) கூறிய போதிலும் அரசியல் சட்டத்திலுள்ள சில குறிப்பிட்ட விதிகளைத் திருத்தி அமைக்கப் பாராளுமன்றத்திற்கு உரிமையுள்ளதால், குடியரசு தலைவருக்கும் அத்தகைய அரசியல் சட்ட விதியைத் திருத்தி அமைக்க அதிகாரம் உள்ளது என்று கொள்ளலாம். டாக்டர் K.V. ராவ் (K.V. Rao)'அரசியல் சட்ட விதிகள்' 245-லிருந்து 249 வரை பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரங்களை விவரிப்பன. இவை அரசியல் சட்டத்தின் ஏழாவது அட்டவணையில் சொல்லப்பட்டவற்றைமட்டும் குறிக்கின்றன. ஆனால், பாராளுமன்றம் சட்டத்தின் மூலம் ஒழுங்குபடுத்த வேண்டிய பல விஷயங்களைப்பற்றி-(மீதமுள்ள அதிகாரம் உட்பட (Residuary Powers) உதாரணமாக விதிஎண் 83 (2)-ன் துணைவாசகம் விதி எண் 3 ஆகியவற்றில் சொல்லப்பட்டிருப்பவை போன்று, அரசியலமைப்பில் சொல்லப்பட்டிருக்கின்றன. தேர்தல்கள் ஒழுங்கு படுத்துவது போன்ற விஷயங்கள் அரசியல் சட்டத்தின் 7ஆவது அட்டவணையில் மறுபடியும் குறிப்பிடப்பட்டாலும் விதி எண் 83 (2)-ல் உள்ள காப்பு வாசகம் (Proviso) போன்ற விஷயங்களை மறுபடி அது குறிப்பிடவில்லை. இதனால் பாராளுமன்றம் செய்யக்கூடிய

இரண்டு விதச் சட்டங்களை நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள லாம். அரசியல் சட்டத்தின் 7ஆவது அட்டவணையில் கண்டுள்ள விஷயங்கள் குறித்துத்தான் அவசரச்சட்டம், பிரகடனம் செய்யக் குடியரசு தலைவரால் முடியும். ஆனால், அரசியல் சட்டம் பிரத்தி யேகமாகக் குறிப்பிடும் பாராளுமன்றத்தினால் சட்டப்படி ஒழுங்கு படுத்த வேண்டிய விஷயங்கள் சம்பந்தமாகக் குடியரசு தலைவர் அவசரச் சட்டப் பிரகடனம் செய்ய இயலாது. உதாரணமாக, ஒரு நெருக்கடி காலத்தில் பாராளுமன்றம் செயற்படும் காலத்தை நீடிக்க அவசரச் சட்டத்தின் மூலம் குடியரசு தலைவரால் செய்ய முடியாது. இராணுவத்தின் தலைமை அதிகாரி என்ற வகையில் தமது அதிகாரங்களை ஓர் அவசரச் சட்டத்தின் மூலம் ஒழுங்கு படுத்திக் கொள்ள அவரால் இயலாது. இந்த வாதம் ஓர் அவசரச் சட்டம் பாராளுமன்றம் இயற்றும் சட்டம் போல் ஆகாது என்ற உண்மையின் அடிப்படையில் உறுதியாக்கப்படுகிறது என்றாலும், விதி எண் 123 (2)-ல் விவரிக்கப்பட்டுள்ளபடி 'ஓர் அவசரச் சட்டத் திற்குப் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின் வலிமை யும் விளைவுகளும் உண்டு என்பதை மறுக்க முடியாது,' என்று கூறியுள்ளார். இந்த வாதம் ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால், குடியரசு தலைவர் அதிகாரங்களைத் துஷ்பிரயோகம் செய்யாமல் தடையாக இருக்கும் விதி எண் 53-க்கு எந்தச் சக்தியும் இல்லை என்கிறது. அரசியலமைப்பைத் திருத்தி அமைப்பது குறித்து 7ஆவது அட்டவணையில் ஒன்றும் சொல்லப்படாததால், அவசரச் சட்டத்தின் மூலம் அரசியலமைப்பைத் திருத்த முடியாது என்று முடிவு செய்யலாம்.

விதி எண் 123 (1)-ன் கீழ்க் கொடுக்கப்படும் அவசரச் சட்டம் பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் வைக்கப்படவேண்டும். இருசபைகளுள் ஏதாவதொன்று அவசரச்சட்டத்தை அங்கீகரிக்கா விட்டால், பாராளுமன்றத்தின் கூட்டம் திரும்ப ஆரம்பித்தவுடன் 6 வாரங்களுக்கு அவசரச் சட்டம் அமலில் இருக்கும் என்ற உண்மையும் மேற்கூறிய வாதத்திற்கு ஆதரவாக உள்ளது. அரசியல் சட்டத்தைத் திருத்தி அமைக்கும் அவசரச் சட்டமும் பாராளு மன்றத்தின் ஏதாவதொரு சபை நிராகரித்தால் மற்ற அவசரச் சட்டங்களைப் போன்று தொடர்ந்து 6 வாரங்களுக்கு அமலில் இருக்குமா என்பது சந்தேகத்திற்குரி யது.

**அவசரச் சட்டம் நீடிக்கும் காலம் (Duration of the Ordinance)**

குடியரசு தலைவரால் பிரகடனப்படுத்தப்படும் அவசரச் சட்டம் எப்பொழுது பிறப்பிக்கப்பட்டாலும் பாராளுமன்றத்தின்

இரு பேரவைகளிலும் சமர்ப்பிக்கப்படவேண்டும். மேலும், பாராளுமன்றக் கூட்டத்தொடர் மறுபடி ஆரம்பித்த தேதியிலிருந்து 6 வாரங்களுக்குப் பிறகு அது செல்லுபடியாகாது. அல்லது அதற்குள்ளாகப் பாராளுமன்றத்தின் இரு பேரவைகளும் அங்கீகரிக்க மறுத்துத் தீர்மானங்கள் நிறைவேற்றினால் இரண்டாவது தீர்மானம் நிறைவேறியவுடன் அவசரச்சட்டம் செல்லுபடியாகாது. எங்கே பாராளுமன்றத்தின் இரு சபைகளும் மாறுபட்ட தேதிகளில் கூட அழைப்பு விடப்படுகிறதோ அங்கே இரண்டாவது சபை கூடும் தேதியிலிருந்து 6 வாரங்கள் கணக்கிடப்படவேண்டும். அதற்குமேல் அதற்கு உயிர் இல்லை. ஓர் அவசரச்சட்டம் பாராளுமன்றத்தின் கூட்டம் கலைக்கப்படாமல் தள்ளிவைக்கப்படுகின்ற அன்றே பிரகடனப்படுத்தப்பட்டால், அதிகப்படியாக 7½ மாதங்களுக்கு (மக்கள் சபை கலைக்கப்படாமல் இருந்தால்) செல்லுபடியாகும். இதற்கிடையில் அவசரச்சட்டம் ரத்து செய்யப்பட்டாலும் அல்லது பாராளுமன்றத்தின் இரு சபைகளும் அவசரச் சட்டத்தை ஆமோதிக்காத தீர்மானங்களை நிறைவேற்றினாலும் செல்லுபடியாகாது. எப்படியிருப்பினும் அரசியல் சட்ட விதி எண் 85-ன்கீழ்க் கூட இருக்கும் மக்கள் சபை கலைக்கப்பட்டு விட்டால் 7½ மாதங்களுக்குக் கூடுதலாகவும் அவசரச் சட்டம் நீடிக்கலாம்.

ஓர் அவசரச் சட்டம் அமலில் உள்ள காலமும் அது செயற்படுத்தப்படும் காலமும் எப்பொழுதும் ஒன்றாகவே இருக்க முடியாது. ஏனெனில், அது சென்ற காலத்தையும் அளாவியதாக (Retrospective effect) இருக்கலாம். மேலும், பாராளுமன்றச் சபைகளின் கூட்டத் தொடர் நடந்த தேதியிலிருந்து கூடச் செயற்படலாம். சட்டப் பேரவைகள் நிறைவேற்றிய சட்டங்களை நீதிமன்றங்கள் சட்டத்திற்குப் புறம்பானவை என்று தள்ளிவிட்டால், அவசரச்சட்டங்கள் மூலம் கடந்த காலத்திற்கும் பொருந்தும்படியாக அவசரச்சட்டங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, வருமானவரித் தீர்ப்பு மன்றம் (Income-tax Tribunal) குறித்த தலைமை நீதிமன்றத்தின் தீர்ப்புக் கடந்த காலத்திற்கும் பொருந்தும்படியாக 1954ஆம் ஆண்டு அவசரச் சட்டத்தினால் ரத்து செய்யப்பட்டது.

அவசரச் சட்டத்தைப் பாராளுமன்றத்தின் இருபேரவைகளின் முன் சமர்ப்பிக்க வேண்டும் என்பது குடியரசு தலைவரின் கண்டிப்பான கடமையா என்று கேட்கலாம். அரசியல் சட்டப்படி பாராளுமன்றத்தின் சபைகளிலே சந்தேகமின்றிக் கண்டிப்பாகச் சமர்ப்பிக்க வேண்டும் என்று விதி எண் 123 பிரிவு (2) உப

பிரிவு (அ)வில் கூறப்பட்ட போதிலும் பாராளுமன்றத்தின் கூட்டத்தொடர் மறுபடியும் ஆரம்பித்து 6 வாரங்களுக்குள்ளேயே அவசரச்சட்டம் முடிவு பெறுவதாக இருந்தால் குடியரசுதலைவர், அச் சட்டத்தைப் பாராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டிய தில்லை. உதாரணமாக, 1961-ஆம் ஆண்டு ஒரிஸா மாநிலத்தில் குடியரசு தலைவர் ஆட்சி அமலில்வர 2 நாள்களுக்கு முன்பே ஆளுநர் அவசரச் சட்ட முலம் அம் மாநில வரவு செலவுகணக்கை அங்கீகரித்தார். பாராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்கப்படாம லேயே இந்த அவசரச்சட்டம் மடிய விடப்பட்டது (allowed to lapse). அவசரச்சட்டத்தைப் பாராளுமன்றத்தில் குடியரசுதலைவர் சமர்ப்பிக்காவிட்டால் அதன் விளைவு, பாராளுமன்றக் கூட்டத் தொடர் மறுபடி ஆரம்பித்த தேதியிலிருந்து 6 வாரங்களுக்குப் பிறகு அச் சட்டம் முடிவடைந்து விடும் என்பதுதான். இருந் தாலும் ஆரம்பத்தில் அச் சட்டம் செல்லுபடியாகும் நிலையில் மாறுதல் ஏதும் கிடையாது. அவசரச்சட்டம் தொடர்ந்து செயற்பட வேண்டும் என்று முடிவெடுத்தால் அதற்கான மசோதாவைப் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்துச் சட்டமாக் கலாம். இப்படிச் செய்வதானல், அவசரச் சட்டத்தைப் பாராளுமன்றப் பேரவைகளில், அவற்றின் கூட்டத்தொடரின் ஆரம்பக் கூட்டத்திலேயே சமர்ப்பிக்க வேண்டும்.

மேலும், குடியரசு தலைவர் விரும்பினல், பாராளுமன்றக் கூட்டத் தொடர் மறுபடி ஆரம்பிக்கு முன்பே அவசரச் சட்டம் முடிவு பெறுமானல் அதையும் சபைகளின் பரிசீலனைக்குச் சமர்ப் பிக்கலாம். 1954-ல் கும்பமேளா என்ற இடத்தில் நடைபெற்ற மாபெருந் திருவிழாவிற்கு வருகைதரும் யாத்திரிகர்களுக்கு அவசரச் சட்டத்தின்மூலம் யாத்திரிக வரியைக் குடியரசு தலைவர் விதித்தார். அந்த அவசரச் சட்டம் பாராளுமன்றக் கூட்டம் மறுபடி துவங்குமுன்பே முடிவடைந்தபோதிலும், அது இருசபை களிலும் சமர்ப்பிக்கப்பட்டது.

ஓர் அவசரச் சட்டம் பிரகடனம் செய்த பிறகு அச் சட்டம் பாராளுமன்றத்தின் சபைகளுக்குச் சமர்ப்பிக்கப்படாவிட்டாலும் உறுப்பினர் யாரேனும் அச் சட்டத்தை ஒழிக்க ஒரு தீர்மானம் சபையில் கொண்டுவரலாம். குடியரசு தலைவர் அவசரச் சட்டத்தைப் பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் சமர்ப்பிக்கா மல் இருப்பதால், உறுப்பினர்கள், அவசரச்சட்டத்தின்மேல் கண்டனத் தீர்மானம் நிறைவேற்ற வாய்ப்பில்லை என்று நினைக்கக் கூடாது. அவசரச்சட்டத்தைக் கண்டிக்கும் தீர்மானம் இருசபை களிலும் நிறைவேற்றப்பட்டவுடன், நிறைவேறிய தேதியிலிருந்து

அவசரச் சட்டம் செல்லுபடியாகாது. மாறுபட்ட தேதிகளில் இருசபைகளிலும் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், கடைசியாக நிறைவேற்றப்பட்ட தேதியிலிருந்து அச் சட்டம் செல்லுபடியாகாது.

ஆனால், ஒரு சபையில் மட்டும் கண்டனத் தீர்மானம் நிறை வேற்றப்பட்டால் பாராளுமன்றம் கூடிய தேதியிலிருந்து 6 வார காலங்களுக்கு அவசரச் சட்டம் அமலில் இருக்கும் (பாதிக்கப் படாது). மாறுபட்ட தேதிகளில் பாராளுமன்றச் சபைகளின் கூட்டத்தொடர் மறுபடி ஆரம்பமாகி ஒரு பேரவை கண்டனத் தீர்மானம் நிறைவேற்றியதேதிக்குப் பிறகு மறுசபை கண்டனத் தீர்மானம் நிறைவேற்றும்வரை அது குறுகிய காலமாக இருந்தா லும் அவசரச் சட்டம் செல்லுபடியாகும். ஓர் அவசரச்சட்டத்தை ரத்து செய்ய, சட்டமியற்ற எப்படி இரு சபைகளின் ஒப்புதல் தேவையோ அப்படியே அவற்றின் சம்மதம் தேவைப்படுகிறது என்பது விஞேதமாக உள்ளது. ஓர் அவசரச் சட்டத்தை ரத்து செய் வதானது கடந்த காலத்திலிருந்து செய்ய இயலாது என்பதும் அதேசமயத்தில், அவசரச்சட்டம் செயற்படும் தேதி முன்காலத்தைப் பற்றியதாகவும் இருக்கலாம் என்பதும் கவனத்திற்குரியது.

இதைத் தவிர, அவசரச் சட்டத்தைக் கண்டனம் செய்வ தானது, அதை இயற்றிய குடியரசு தலைவரைக் கண்டனம் செய்வ தாகாது. ஏனெனில், பாராளுமன்றத்திற்கு எப்படிச் சட்ட மியற்றும் அதிகாரம் உள்ளதோ அதே மாதிரி குடியரசு தலைவருக் கும் அவசரச்சட்டம் இயற்றும் அதிகாரம் உள்ளது மக்கள் சபை யின் சபாநாயகர், தம் வாய் மொழித் தீர்ப்பறிவிப்பில் (Ruling) 'பாராளுமன்றக் கூட்டத் தொடர் இல்லாத காலத்தில், சட்ட மியற்றச் சபைகளுக்கு எவ்வளவு அதிகாரம் உள்ளதோ அவ்வளவு அதிகாரங்களைக் குடியரசு தலைவர் பெற்றுள்ளார். தேசத்தின் சட்டமியற்றும் அமைப்பில் அவரும் ஓர் அங்கம் வகிப்பவர். சட்ட மியற்ற அவருக்கும் அதிகாரம் உள்ளபடியால் அவர் கண்டனத் திற்கு அப்பாற் பட்டவர். இந்தச் சபையில் அரசியல் சட்ட த்தின் கீழ்க் குடியரசு தலைவர் ஒரு சட்டமியற்றியதற்காகக் கண்டனம் தெரிவிக்க இயலாது. ஆகையால், அரசியல் சட்டவிதி எண் 123-ன் கீழ், அவசரச் சட்டம் இயற்றியதாக இந்தச் சபைக்குக் கண்டனம் தெரிவிக்கும் அதிகாரம் கிடையாது', என்று ஆணித் தரமாகக் கூறியுள்ளார்.

இவ்விதமாக, விதி எண் 123-ன் கீழ் மிக முக்கியமான அதிகாரங்களைக் குடியரசு தலைவர் பெற்றுள்ளார். எழுதப்பட்ட அரசியல் சட்டத்தைக்கொண்ட, பிரதிநிதித்துவ சட்டமாமன்ற

அரசியல் அமைப்பைக்கொண்ட எந்த நாட்டிலும் இந்த அளவிற்கு ஆட்சித் தலைவர் சட்டமியற்றும் அதிகாரங்களுக்கு இருப்பிடமாக இருக்கவில்லை. பாராளுமன்றம் இயற்றும் சட்டம் போலவே அவசரச் சட்டம், சட்டவரம்புக்குட்பட்டதாக இருப்பதால் பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தைக்கூடக் குறுகிய காலத்திற்காவது திருத்தி அமைக்க, மாறுதல் செய்ய அவசரச் சட்டத்தில் இடமுள்ளது. பாராளுமன்றக் கூட்டத்தொடரில் சட்டமாக்கப்பட்ட விஷயங்களைத் திருத்தியோ, மாறுதல்கள் செய்தோ கடந்த காலத்திற்கும் பொருந்தும்படியான தன்மையைக் கொண்டதாகக்கூட அவசரச்சட்டம் அமையலாம். நிதி சம்பந்தப்பட்ட விஷயங்களிலும் குடியரசு தலைவர் அவசரச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. 1950-ல் வருமானவரிச் சட்டத்தில் திருத்தங்கள் செய்யவும் 1952-ல் மேற்கு வங்காளத்தில் சூதாட்ட வரியைக் குறைக்கவும் 1954-ல் கங்காசாகர் பெரு விழாவில் யாத்திரிகர்கள் வரி விதிக்கவும் அவசரச் சட்டம் கையாளப்பட்டது. உண்மையில் எந்த ஒரு குடியாட்சி நாட்டிலும் அரசின் செயற்குழுப் பிரிவுச் சட்டப் பேரவைகளின் திட்டவட்டமான முன்அங்கீகாரம் இல்லாமல் நிதி திரட்டிச் செலவிடும் அதிகாரத்தைப் பெற்றில்லை. சட்டப் பேரவைகளின் அதிகாரமும் செயற்குழுப் பிரிவின் பொறுப்புகள், கடமைகள் எல்லாம் நிதியின் சக்தியைச் சார்ந்துள்ளபடியால் சட்டப்பேரவைக்குத் தான் இவ் வதிகாரம் சொந்தம். நிதி திரட்டுவதும் செலவிடுவதும்தான் சமூகப் பொருளாதார அமைப்பைத் தரமான வகையில் உருவாக்கி வளம்பெறச் செய்யும்; அவசரச் சட்டத்தின் வாயிலாக நிதி திரட்டிச் செலவினங்களைச் சந்தித்தால், பாராளுமன்றம் இச் சட்டத்திற்கு அங்கீகாரம் வழங்காவிட்டாலும் திரட்டிய நிதியையும், வசூலித்த வரியையும் திரும்பக் கொடுத்துவிடவோ செலவிட்ட தொகையைத் திரும்பப் பெறவோ இயலாது. மேலும், இவ்விதத்தில் திரட்டிச் செலவிடும் நிதி சில பொருளாதார வியாபார சக்திகளைச் சமூகத்தில் தோற்றுவித்து அதன் பயனாக உண்டாகும் சூழ்நிலையைப் பாராளுமன்றம் கூடிய பிறகு இதை மனத்தில் கொண்டாலும், அதனால் மாற்ற முடியாத ஒரு சூழ்நிலை எதிர்நோக்கி உள்ளதைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கும்.

எனினும், குடியரசு தலைவர் நிதி திரட்டிச் செலவிட அவசரச் சட்டம் இயற்றலாம் என்றாலும் நாட்டின் வரவு செலவுகணக்கை (Budget) ஏற்றுக் கொள்ள அவசரச் சட்டம் இயற்றலாமா கூடாதா என்பது தெளிவாக இல்லை என்பதைக் கவனத்திற் கொள்ளவேண்டும். மத்தியச் சட்ட அமைச்சராக இருந்த

திரு. கோவிந்த மேனன் (Mr. Govinda Menon) பஞ்சாப் மாநில நெருக்கடியைப் பற்றிக் கூறும்பொழுது, 'ஆளுநர் கூடத் தம் மாநில வரவு செலவு கணக்கை அவசரச் சட்டத்தின் மூலம் அங்கீகரிக்க இயலாது. வரவு செலவு கணக்கு அங்கீகரிக்கப்படாவிட்டால் அரசியல் சட்டம் செயலற்று விடும்' என்கிறார். ஒரிஸா மாநிலத்தில் திரு மெஹ்தாப் (Dr. H. K. Mehtab) தலைமையில் செயற்பட்ட கூட்டு அமைச்சரவை, வரவு செலவு கணக்கை அங்கீகரிக்காமல் இராஜினுமா செய்த பொழுது, மாநில ஆளுநர் தமது முக்கியச் செயலாளரையும் சட்ட நிபுணர்களையும் கலந்தாலோசித்து அவசரச்சட்டம் மூலம் 1961ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் வரவுசெலவு கணக்கை அங்கீகரித்தார். அதே ஆண்டு பிப்ரவரி 25-ல் அரசியல் சட்டப்படி அரசு நடக்க வழியில்லை என்று குடியரசு தலைவர் ஆட்சி பிரகடனம் செய்யப்பட்டது. மாநில ஆட்சிப் பொறுப்பை குடியரசு தலைவர் ஏற்ற பிறகு, மத்திய அரசு ஆளுநருக்கு அனுப்பிய தாக்கீதில் அவரது அவசரச்சட்டம் சட்ட ரீதியானதாக இல்லை என்று கூறியது. அதே சமயத்தில் மக்கள் சபையில் பிரதமர், இந்த ஆளுநர் அவசரச் சட்டம் செல்லும் அல்லது செல்லாது என்பதைக் குறித்து நீதிபதிகளுக்கிடையேயும் சட்ட வல்லுநர்களுக்கிடையேயும் கருத்து வேற்றுமை இருப்பதைச் சுட்டிக் காட்டினர். சட்ட ரீதியான தீர்ப்பு இல்லாததாலும் மத்திய மாநிலச் சட்ட அமைச்சரவையில் கருத்து வேற்றுமை உள்ளதாலும் இவ்விஷயத்தில் மத்திய அரசின் முடிவை ஏற்க இயலாது. உண்மையில் மாநிலச் சட்ட வல்லுநர்கள் கூறிய கருத்துத் தரமானதாகத் தோன்றுகிறது. ஆளுநர் ஆலோசனையைப் புறக்கணித்து வரவு செலவு கணக்கை அங்கீகரிக்காமல் இராஜினுமா செய்தது அமைச்சரவை. மத்திய அமைச்சரவையும் இவ்விதம் நடந்தால், குடியரசு தலைவர் இதுபோன்ற சூழ்நிலையில் என்ன செய்வார்? அவசரச் சட்டத்தின் வாயிலாக வரவு செலவு கணக்குக் குடியரசு தலைவரால் அங்கீகரிக்கப்படாவிட்டால் நாட்டின் அன்றாட நிருவாகம் ஸ்தம்பித்துவிடும். இம்மாதிரி சம்பவங்கள் மாநிலங்களில் நடக்கும் பொழுது மத்திய அரசில் நடக்கச் சிறிது கூட இடமில்லை என்று சொல்லிவிடமுடியாது. எனவே, இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் ஒரு குறுகிய கால வரவு செலவு கணக்கை அங்கீகரிக்கக் குடியரசு தலைவர் அவசரச் சட்டத்தைக் கையாளலாம். ஜெர்மன் நாட்டில் இம்மாதிரி சூழ்நிலை உருவான பொழுது திரு. வான் ஹிண்டன்பர்க் (President-Von Hindenburg) என்ற குடியரசு தலைவர், வரவு செலவு கணக்கை அங்கீகரிக்க ஓர் ஆணை பிறப்பித்தார். ப்ரென்னிங் அரசால் (Brunning Government) வரவு செலவு கணக்கு மசோதா நிறைவேற்றப்பட முடியாது என்று தெரிந்தவுடன்

அம் மசோதா திரும்பப் பெறப்பட்டது. பின்பு அம் மசோதா குடியரசு தலைவரின் ஆணையால் பிரகடனப்படுத்தப்பட்டது. ஒரிஸா மாநில ஆளுநர் பிரகடனம் செய்த அவசரச் சட்டம் சட்ட ரீதியானதன்று என்று கூறியதால் மேற்படி அவசரச் சட்டத்தால் அங்கீகரிக்கப்பட்ட வரவுசெலவு கணக்குப்படி செலவுகள் செய்யாமலும், அந்த அவசரச் சட்டத்தையே திருப்பப் பெறுமலும் இருக்க நேர்ந்தது. திரு லால்பகதூர் சாஸ்திரி அதுபற்றிக் குறிப்பிடுகையில், அதைத் 'திரும்பப் பெறத்தேவையில்லை; தாளுகவே அது முடிவடைந்துவிடும்; அந்த அவசரச் சட்டத்தின்படி எந்த நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லை,' என்று கூறினர். அந்தச்சட்டம் மாநிலச் சட்டப்பேரவையின் கூட்டம் இருந்த பொழுது பிரகடனம் செய்யப்பட்டதால் அது சட்டரீதியானதாக அது அமலில் இருக்கும் காலம் முடியும் வரையில் இருந்தது. அச் சட்டத்தின்படி எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை என்பது, அதன் சட்ட ரீதியான தன்மையைப் பாதிக்கவில்லை.

இவ்விதமாக, பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களை அவசரச் சட்டம் வாயிலாகக் குடியரசு தலைவர் பயனற்றதாகச் செய்யலாம். கடந்த காலத்திற்கும் பொருந்தும்படி சட்டம் இயற்றலாம். கடந்த காலத்திற்குச் சட்டம் இயற்றுவதில் விதி 20-ல் கூறிய வரையறைதான் பொருந்தும். பாராளுமன்றத்தின் அங்கீகாரம் இல்லாமல் வரி வசூல்மூலம் நிதிதிரட்டிச் செலவிடலாம். அவசரச்சட்டங்களை நீதிமன்றங்களின் பரிசீலனைக்கோ, தீர்ப்புக்கோ உட்படாததாக்கலாம். நீதிமன்றங்களை ஒதுக்கி வைத்த குற்றச்சாட்டு அடிக்கடி சுமத்தப்பட்டதின் காரணம், அவசரச் சட்டத்தால் நீதிமன்றங்கள் 'சட்ட விரோதமானவை' என்று அளித்த தீர்ப்பை நிராகரிக்கும் வகையில் அவசரச்சட்டத்தின் வாயிலாகக் கடந்த காலத்திற்கும் பொருந்தும்படி குடியரசு தலைவர் செயற்பட்டதுதான். மேற்கு வங்க ஆளுநர் உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பு மாநிலஅரசு விரும்பத்தகாததாக இருக்கும் என்று எதிர்பார்த்துத் தீர்ப்புக்கூற இயலாத வண்ணம் ஓர் அவசரச்சட்டம் பிரகடனம் செய்தார் என்று கூறப்படுகிறது. அவசரச்சட்டம் எந்தச் சூழ்நிலையில் பிறப்பிக்கப்பட்டது என்பது நீதிமன்றத்தின் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டது என்றும் சட்டபூர்வமானது என்றும் உயர்நீதிமன்றம் கருதினலும் இப்படிப்பட்ட அவசரச் சட்டம் வாயிலாகச் சட்டரீதியான தீர்ப்பைத் தவிர்ப்பது சரியன்று என்று அந் நீதிமன்றம் கருத்துத் தெரிவித்தது.

அரசியல் சட்டவிதி எண் 123-ன் கீழ்க் குடியரசு தலைவரின் அதிகாரங்கள் கணிசமானவை என்றும் குறுகிய காலத்திற்கேனும்

அதிகார துஷ்பிரயோகம் (செய்யவேண்டும் என்றால்) செய்வதைத் தவிர்க்க முடியாது என்றும் மேற்கூறியவற்றிலிருந்து தெரியவரு கிறது. இவ்விதம் அதிகார துஷ்பிரயோகம் செய்வதற்கு மூன்று அம்சங்கள் அனுகூலமாக இருக்கின்றன. (1) அவசரச்சட்டம் இயற்றவேண்டிய சூழ்நிலை உருவாகியிருப்பதாகக் குடியரசு தலைவரேதாம் திருப்தி அடையவேண்டும். எனவே, குறுகிய காலத்திற்கு அதிகாரங்களைத் துஷ்பிரயோகம் செய்வதைத் தடுக்க வழியில்லை. (2) அவசரச்சட்டம் அமலில் இருக்கும் காலம் உறுதியாக வரையறுக்கப்படவில்லை, ஏனென்றால், அவசரச்சட்டம் கடந்த காலந்தொட்டே அமலுக்கு வந்ததாக மறுபடியும் பிரகடனம் செய்யலாம். (3) 'கூட்டத்தொடர்,' 'பாராளுமன்றக் கூட்டம்' என்பனவற்றின் விளக்கம் உள்ளநிலையில் வேறுவிதமாகச் சட்டப் பேரவைகள் அவற்றின் பணிகளில் ஈடுபட்டுள்ள பொழுது, குடியரசு தலைவர் அவசரச் சட்டப் பிரகடனத்தின் வாயிலாக வெவ்வேறு தேதிகளில் பேரவை கூட்டங்கள் ஆரம்பிக்க வகை செய்யலாம்,

### அவசரச் சட்டத்திற்கான நிபந்தனைகள்

சட்டமியற்றும் அதிகாரம் நடைமுறையில் யூனியன் பாராளுமன்றத்திற்கு உரிய அதிகாரமாக இருந்தாலும் பாராளுமன்றக் கூட்டத் தொடர் இல்லாத சமயங்களில், அசாதாரண சந்தர்ப்பங்களில் அரசியல் சட்டம் விதி எண் 123-ன் கீழ் அவசரச் சட்டங்கள் பிறப்பிக்க அதிகாரம். உள்ளது. இந்த அவசரச் சட்டம் சிறிது காலத்திற்குத்தான் அமலில் இருக்கும். குடியரசு தலைவரின் இந்தச்சட்டமியற்றும் அதிகாரம், இந்திய அரசு சட்டம் 1935-ல் பிரிவு 42, 43, 44-ன் கீழ் ஆளுநர் தலைவர் (Governor General) அனுபவித்த அதிகாரத்திற்கு ஒப்பிடலாம். எனினும், குடியரசு தலைவரின் அவசரச் சட்டங்கள் இயற்றும் அதிகாரம் கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டுச் செயற்படும்.

(1) பாராளுமன்றத்தின் கூட்டத் தொடர் இல்லாத போது மட்டும் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்படும். ஒரு சபையின் கூட்டத் தொடர், ஒத்திவைக்கப்பட்டாலோ, கலைக்கப் பட்டாலோ கூட்டத் தொடர் ஒரு முடிவுக்குவந்துவிடுகிறது. ஆகையால், ஒத்தி வைக்கப்படும் வரை அல்லது கலைக்கப்படும் வரை பாராளுமன்றத்தின் கூட்டத் தொடர் நடந்து கொண்டிருப்பதாகக் கொள்ள வேண்டும். எனவே, பாராளுமன்றக் கூட்டம் தள்ளி வைக்கப்படுமுன். அவசரச் சட்டம் குடியரசு தலைவரால் விதி எண் 123-ன் கீழ் அல்லது ஒரு மாநில ஆளுநரால் விதி எண் [213 (1)-ன் கீழ்ப்பிரகடனம் செய்தால் அச்சட்டம் செல்லுபடியாகாது.]

(2) அவசரச் சட்ட மூலம் உடனடியாகச் செயற்பட வேண்டும் என்ற நிலைமை உருவாகியிருக்கிறது என்று குடியரசு தலைவர் கருதினல், அவசரச்சட்டம் பிறப்பிக்கலாம்.

(3) ஒவ்வோர் அவசரச்சட்டமும் பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத்தொடர் ஆரம்பித்தவுடன் சமர்ப்பிக்கப் படவேண்டும். பாராளுமன்றத்தின் கூட்டத்தொடர் ஆரம்பித்து 6 வாரங்கள் முடிந்தவுடன் அவசரச் சட்டம் செல்லுபடியாகாது. அல்லது இரு சபைகளும் அவசரச்சட்டத்திற்கு அதிருப்தி தெரிவித்துத் தீர்மானம் நிறைவேற்றியவுடன் 6 வாரங்களுக்குள் இருப்பினும் செல்லுபடியாகாது. (மக்கள் சபையின் 71ஆவது விதி, அவசரச்சட்டத்திற்குப் பதிலாகப் பாராளுமன்றத்தில் திருத்தங்களுடனே அது இல்லாமலேயோ மசோதாக்கள் கொண்டுவரப் பட்டால் அவசரச்சட்டம் கொண்டுவந்த சூழ்நிலையின் காரணங்களை விளக்கி ஓர் அறிக்கையை, மசோதாவுடன் இணைத்துச் சபையின் முன், பரிசீலனைக்கு வைக்கவேண்டும். அதே மக்கள் சபையின் 71ஆவது விதி மேலும் கூறியிருப்பதாவது, பாராளுமன்றத்தின் பரிசீலனையில் ஒரு மசோதா இருக்கும் பொழுது, அந்த மசோதாவின் சரத்துகளை முழுமையாக அல்லது பகுதியாக அல்லது திருத்தங்களுடன் ஓர் அவசரச் சட்டம் கொண்டுவந்தாலும் அதற்கான காரணங்களை விளக்கும் அறிக்கையை இரண்டு சபைகளிலும் வைக்கவேண்டும்). பிறப்பிக்கப்பட்ட அவசரச்சட்டம் குடியரசு தலைவராலேயே எந்த நேரத்திலும் திரும்பப் பெறப்படலாம்.

(4) அவசரச் சட்டத்தின் விஷயம், மத்திய அரசு சட்டமியற்றும் அதிகார வரம்பிற்குள் வரவேண்டும். அதாவது மத்திய அரசின் அதிகார வரம்பிற்குட்பட்டதாக இருக்கவேண்டும்.

(5) அவசரச் சட்டம் நீதிமன்றங்களின் வழக்கு விசாரணைக்கு உட்பட்டதன்று என்று குடியரசு தலைவர் அச் சட்டத்தில் கூறினல் அது செல்லுபடியாகாது. ஏனெனில், பாராளுமன்றம் இயற்றும் சட்டத்திற்கே நீதிமன்றங்கள் செல்லுபடியாகாது என்று தீர்ப்பு வழங்க அதிகாரம் உள்ளது.

ஓர் அவசரச் சட்டம் பாராளு மன்றத்தின் கூட்டம் தொடங்கியவுடன் அதன் முன் பரிசீலனைக்கு வைக்கப்படவேண்டும் என்பது முக்கியமானது. ஆனல், பாராளுமன்றக் கூட்டம் ஆரம்பிக்கப்படுமுன்பே அவசரச் சட்டத்தின் காலம் முடிவடைந்து விட்டால் சபைகளின் கூட்டம் ஆரம்பித்தவுடன் அச் சட்டத்தின் காலம் முடிவடைந்து விடுகிறது. எனினும், அச் சட்டம் பாராளுமன்றத்தின் பரிசீலனைக்கு வைக்கப்படுகிறது. சாதாரணமாக, அவசரச்சட்டம், யாத்திரிக வரிச் சட்டத்தைப் போல் அவ்வளவு குறுகிய காலவரம்பு கொண்டதன்று.

குடியரசு தலைவரின் அவசரச் சட்டமியற்றும் அதிகாரம் உண்மையான சட்டமியற்றும் அதிகாரம் என்று சொல்வதற்கு இல்லை. ஏனெனில், இந்த அவசரச் சட்டம் பாராளு மன்றத்தால் நிராகரிக்கப் படலாம். எனவே, சட்டம் இயற்றும் அதிகாரம் பாராளு மன்றத்திற்குத்தான் முழுமையாக இருப்பதாலும், அவசரச் சட்டம் பாராளுமன்றத்தின் முடிவுக்கு உட்பட்டதாலும் குடியரசு தலைவரின் அவசரச் சட்டமியற்றும் அதிகாரம் மிகவும் குறைந்ததே என்று கொள்ள வேண்டும்.

அவசரச்சட்டம் பிரகடனம் செய்யக் குடியரசு தலைவரின் திருப்திகரமான முடிவு இருந்தால்தான் முடியும். அவசரச் சட்டங்கள் குறித்து நீதிமன்றங்களில் வழக்குகள் தொடர அனுமதிக்கப்படவில்லை. குடியரசு தலைவரின் திருப்தி அவசரச் சட்டம் கொண்டுவரும் வகையில் உண்மைதானு என்று நீதி மன்றங்கள் ஆராய முடியாது. எனவே, குடியரசு தலைவரின் முடிவைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குக் கிடையாது.

1935ஆம் ஆண்டு இந்திய அரசு சட்டப்படி (Govt. of India Act-1935) ஆளுநர் தலைவருக்கு அவசரப் பிரகடனம் செய்ய முழு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. இதற்கான காரணங்களைக் கூறத்தேவையில்லை. ஆனால், இந்தியக் குடியரசு தலைவருக்கு நிருவாகத் துறையில் அனுவலர்கள் இல்லை என்பதாலும், அமைச்சரவைதான் நாட்டின் சமூக, பொருளாதார நிலையை நன்கு அறிந்து கொள்ளக்கூடிய தன்மையில் உள்ளதாலும் அமைச்சரவை ஆலோசனையின் பேரில் தான், குடியரசு தலைவர் அவசரச்சட்டம் பிறப்பிப்பார் என்று கொள்ளலாம். ஆனால், அமைச்சரவையின் ஆலோசனையில்லாமலே அவசரச்சட்டம் பிரகடனம் செய்யும் நிலை உருவானால், பிரதமர் பதவியிலிருந்து இராஜினுமா செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்றுதான் தோன்றுகிறது.

**அவசரச் சட்டம் இயற்றும் அதிகாரம்—ஒரு மதிப்பீடு**

இந்தியக் குடியரசு தலைவரின் சட்டமியற்றும் அதிகாரம், இங்கிலாந்து அமெரிக்கா போன்ற நாடுகளின் குடியாட்சி அரசியல் சட்டங்களில் இல்லாத ஒரு தனி அதிகாரமாக விளங்குகிறது. அரசியல் சட்ட நிர்ணய சபையில் அவசரச்சட்டம் குறித்து விவாதம் ஏற்பட்ட பொழுது டாக்டர் அம்பேத்கார் கீழே உள்ள முடிவைத் தெரிவித்தார்.

'சாதாரணச் சட்டங்கள் கொடுக்கும் அதிகாரம் சில சந்தர்ப்பங்கள் சூழ்நிலைகளில் நிலைமையைச் சமாளிப்பதற்குப் போதுமானதாக இருக்கமுடியாது. எனவே, செயற்படுத்தும் பிரிவுக்கு, அந்

நிலையைச் சமாளிக்கப் போதுமான அதிகாரம் தேவைப்படும். இதனால்தான் அவசரச் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரம், குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்படவேண்டும். இல்லையேல், சாதாரணச் சட்டங்களின் அதிகாரத்தைக்கொண்டு செயற்படும் பிரிவு (Executive) நிலைமையைச் சமாளிக்க முடியாமற் போகலாம், பாராளுமன்றமும் கலைக்கப்பட்டுவிட்ட காலத்தில். ஆகையால், அவசரச் சட்டத்திற்கு அடிப்படை ஆட்சேபம் இருக்க முடியாது'.

'இதனால் அவசரச் சட்டம் உருவாகும் நேரம் பாராளுமன்றக் கூட்டத்தொடர் இல்லாத காலமாக இருக்கும். எனவே, அவசரச் சட்டத்திற்குப் பாராளுமன்றத்தின் ஆலோசனை கிடைக்க வழியில்லை. பாராளுமன்றம் கூடாதவகையில் பார்த்துக்கொண்டு இந்த அவசரச் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரத்தைக் குடியரசு தலைவர் துஷ்பிரயோகம் செய்யமாட்டார். செய்யவும் முடியாது. பாராளுமன்றத்தின் இரு சபைகளும் அவற்றின் பொறுப்புகளை, கடமைகளைச் செய்யக் கூடியே ஆகவேண்டும்,' என்கிறார்.

இந்தியக் குடியரசு தலைவர், சாதாரணமாக, இந்த அதிகாரத்தை அமைச்சரவை அல்லது பிரதமரின் ஆலோசனைப்படிதான் கையாண்டு அவசரச்சட்டம் பிறப்பிப்பார். ஆனால், அவர் தம் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யமாட்டார் என்று உத்தரவாதம் தரமுடியாது. அமைச்சரவை, தனக்குப் பாராளுமன்றத்தில் இருக்கும் பிடிப்பும் செல்வாக்கும் சந்தேகத்திற்குரியவையல்ல என்ற முடிவுடன் குடியரசு தலைவருக்கு ஆலோசனை கூறினால் அவர்களுங்கட்சியைச் சேர்ந்தவராக இருந்த காரணத்திற்காகவோ அமைச்சரவை விரும்புவதைச் செய்யவேண்டும் என்ற எண்ணத்திலோ அவசரச் சட்டம் பிரகடனம் செய்ய முன்வரலாம். அல்லது அமைச்சரவையின் செல்வாக்குக்குப் பணிந்து செயற்படலாம். அப்படிச் செய்தால் அதிகாரத் துஷ்பிரயோகத்திற்கு இடமளிக்கப்படுகிறது. பாராளுமன்றம் கலைக்கப்படாமல் விதி எண் 85 (1)ன் கீழ், அவசரச் சட்டத்தின் ஆதிக்கம் 6 மாதங்களும் இருக்கலாம். விதி எண் 85-ன்படி குடியரசு தலைவர் பாராளுமன்றத்தை எப்பொழுது வேண்டுமானாலும் கலைத்துவிடலாம். நீதிமன்றங்கள், குடியரசு தலைவர் அவசரச்சட்டம் பிறப்பிப்பதற்கான சூழ்நிலை இருந்ததா என்று ஆராய முடியாது. குடியரசு தலைவரும் அவசரச் சட்டம் பிறப்பிக்க அவசியமா என்பதைப் பற்றி யாருக்கும் சமாதானம் சொல்லத் தேவையில்லை.

இந்திய அரசியல் சட்டப்படிப் பாராளுமன்றத்தின் 'கூட்டத்தொடர்' (Session) 'கூட்டம்' (Meeting) என்ற வார்த்தைகள்,

இரண்டு சபைகளின் கூட்டம் நடக்கும் நேரத்தை மட்டுமே குறிப்பதாகக் கொள்ளவேண்டும். இந்த விளக்கம், இரண்டு சபைகளும் ஒரே நேரத்தில் கூடாமல் தனித்தனியே அதாவது ஒரு சபை கூடியிருக்கும்போது, மறுசபை கூடாமல் இருந்தால், அது குடியரசு தலைவர் தம் அவசரச் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரத்தை உபயோகப்படுத்த வாய்ப்புத் தருவதாக அமையும். அவசரச் சட்டத்தின் ஆதிக்க காலம் தொடர்ந்து நீடிப்பதற்காகவே கூட இருசபைகளும் ஏதாவது காரணத்திற்காகக் கூடி அதனதன் அலுவல்களைக் கவனிக்காமல் இருக்க வழிவகையும் செய்யலாம் என்று தோன்றுகிறது. எனவே, இந்த அதிகாரத்தை நேர்மையற்ற முறையில் குடியரசு தலைவர் பிரயோகிக்க வாய்ப்பு இருப்பதை மனத்திற் கொள்ளவேண்டும். ஏனெனில், பாராளுமன்றத்தின் கூட்டத்தொடர் முடிந்தவுடனேயே அவசரச்சட்டம் பிறப்பிக்கப்பட்ட நிகழ்ச்சிகள் உள்ளன. அத்தகைய நிகழ்ச்சிகள் பாராளுமன்றத்தில் மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியிருக்கின்றன. அவசரச் சட்டத்திற்குச் சூழ்நிலை இருந்திருக்குமேயானல் பாராளுமன்றத்தின் கூட்டத் தொடரிலேயே ஒரு மசோதாவைக்கொண்டுவந்திருக்கலாம். அல்லது கூட்டத் தொடரை அதிகப்படுத்தி (Extension of the Session of the Parliament) மசோதாவைக் கவனிக்கச் செய்யலாம். விதி எண் 85-ம், 123-ம் ஓர் அவசரச் சட்டம் 6 மாதத்திற்கோ 6 வாரத்திற்கோ அமலில் இருக்கலாம் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளது. ஒரு குடியாட்சி நாட்டில், சர்வாதிகாரப் போக்கில் அவசரச் சட்டம் 6 மாதத்திற்கு அமலில் இருப்பதுவிரும்பத்தக்கது அன்று. மேலும், அவசரச்சட்டம் பிறப்பித்தபிறகு அதைப் பரிசீலனை செய்யப் பாராளுமன்றத்திற்கு 6 மாதங்கள் கழித்துச் சந்தர்ப்பம் கொடுப்பதும் முறையன்று. ஏனெனில், குடியரசு ஆட்சியில் அவசரச்சட்டம் பிறப்பித்த போதிலும் (பாராளுமன்றத்தின் கூட்டம் நடக்காத காலத்திலும்கூட) பாராளுமன்றத்தின் கூட்டம் இதற்காகவே தொடங்கவேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய 1வார காலம் போதுமானது.

குடியரசு தலைவர் தம்முடைய சட்டமியற்றும் அதிகாரத்தைத் தம் சார்பில் வேறு ஒருவர் பிறப்பிக்கக் கொடுக்கக்கூடாது. சில சமயங்களில் அவசரச்சட்டத்திலேயே அது எப்பொழுது எங்கு அமலில் இருக்கவேண்டும் என்பதை மாநில அரசே முடிவு செய்யும் என்று குறிப்பிடப்படும். இதனல் குடியரசு தலைவரின் சட்டமியற்றும் அதிகாரம் மாநில அரசுக்கு வினியோகிக்கப்படுவதில்லை. அமல் நடத்தும்அதிகாரம் மட்டும் தரப்படுகிறது.

# 8. குடியரசு தலைவரும் அயல் நாட்டு உறவும்
## (The President and Foreign Affairs)

வெளிநாடுகளின் உறவு, செயற்படுத்தும் பிரிவின் (Executive function) பொறுப்பாக எல்லா நாடுகளிலும் அமைந்துள்ளது. இந்தியாவில் அன்னிய நாட்டு உறவு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் வரம்பிற்கு உட்பட்டு இருந்த போதிலும், சட்டமியற்றும் பிரிவு (legislature) நேரிடையாகக் காரியத்தில் இறங்கும் தன்மையைப் பெற்றிருக்க முடியாது. வெளிநாடுகளுடன் நிலவும் உறவுக்கான நடவடிக்கைகள் பூராவும் இந்தியக் குடியரசுதலைவரைச்சார்ந்தது. எனவே, குடியரசு தலைவர் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை வெளிநாட்டு உறவுகள் சம்பந்தப்பட்ட வகையில் உபயோகிக்கலாம்.

(1) வெளிநாடுகளுக்குத் தூதர்களை, பிரதிநிதிகளை நியமனம் செய்வதும் பதவி நீக்கம் செய்வதும்

(2) வெளிநாட்டுப் பிரதிநிதிகளை வரவேற்பது

(3) உடன்படிக்கை, ஒப்பந்தங்கள்—இவற்றிற்கான பேச்சு வார்த்தைகள் நடத்துவது, முடிப்பது

மேலே குறிப்பிடப்பட்ட விஷயங்கள், செயற்குழுப் பிரிவைச் சாருமாதலால், குடியரசு தலைவரின் அதிகாரத்தினுள் அடங்கும். ஒரு நாட்டின் பிரதிநிதித்துவத் தகுதி அந் நாட்டு ஆட்சித்தலைவருக்குத்தான் உள்ளது. இந்திய அரசியல் சட்டம், இந்தியக் குடியரசின் தலைவராக இருப்பவர் குடியரசு தலைவர்தாம் என்று குறிப்பாகச் சொல்லவில்லை. எனினும், அவருடைய பதவியின் தன்மையும் அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களும் அவரை நாட்டின் தலைவராகச் செய்துள்ளதில் வியப்பொன்றும்

இல்லை. அவர் தூதர்களையும், நாட்டின் பிரதிநிதிகளையும் நியமிக்கவும், பதவிநீக்கம் செய்யவும், நாம் நேச உறவு ஏற்படுத்திக் கொள்ள விரும்பும் அயல்நாட்டுப் பிரதிநிதிகளை வரவேற்கவும், அவருக்கு உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், நடைமுறையில் இந்தத் தூதராலய நியமனங்கள், மாற்றங்கள், பதவி நீக்கம் முதலியன அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில் வெளிநாட்டு விவகார அமைச்சரால் செய்யப்படுகின்றன. அரசின் எந்த ஒரு செயலும் நடவடிக்கையும் குடியரசு தலைவரின் பெயரில் தான் செயற்படுத்தப்படவேண்டி இருப்பதால் அயல் நாட்டு விவகாரங்களும் குடியரசு தலைவரின் பெயராலே செயற்படுத்தப் படுகின்றன.

மற்ற நாடுகளுடன் ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் செய்து கொள்வதில் குடியரசு தலைவருக்குள்ள அதிகாரம் சிக்கலான தன்மையைக் கொண்டிருக்கிறது. நவீன அரசியல் சட்டங்கள், உடன்படிக்கைகள் செய்து கொள்வதில் மூன்று வித்தியாசமான முறைகளைக் கையாளுகின்றன. முதல் முறை, இங்கிலாந்து நாட்டிலுள்ளது போல, உடன்படிக்கை செய்யும் அதிகாரம் சட்ட ரீதியான அங்கமாக விளங்கும் மன்னரிடம் ஒப்படைக்கப் பட்டுள்ளது. இதை வேறு விதமாகச் சொல்ல வேண்டுமென்றால், உடன்படிக்கை, ஒப்பந்தம், சர்வதேச உறவு இவை இங்கிலாந்து நாட்டைப் பொறுத்த வரையில் பாராளு மன்றத்தின் முன் அனுமதியின்றியும் சட்டரீதியான சம்மதம் இன்றியும் இங்கிலாந்து நாட்டு அரசரால் செயற்படுத்தப்படுகின்றன. ஆனால், இங்கிலாந்து நாட்டின் சொந்த நிலப்பரப்பைக் கொடுப்பது, மற்ற நாடுகளுக்கு மானியம் வழங்குவது, நாட்டின் சட்டதிட்டங்களில் திருத்தம் அல்லது மாறுதல் போன்றவற்றிற்குப் பாராளு மன்றத்தின் சம்மதம் முன் கூட்டியே தேவைப்படும்.

இரண்டாவது முறையில், உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள் செய்வதில் செயற்குழுப் பிரிவும், சட்டமியற்றும் பிரிவும் கூடிச் செயற்பட வேண்டும். உதாரணமாக, ஐக்கிய அமெரிக்க நாட்டில், அரசியல் சட்டம் அந் நாட்டின் குடியரசு தலைவருக்கு உடன்படிக்கைகள் செய்து கொள்ளும் உரிமையைக் கொடுத்திருந்தாலும் அவருடைய அதிகாரத்தை இந்த விஷயத்தில் கட்டுப்படுத்தும் வகையில் மேலவை (Senate) உறுப்பினர்களுள் மூன்றில் இரண்டு பங்கு (2/3) உறுப்பினர்கள் அதை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, குடியரசு தலைவரின் வெளிநாட்டு உடன்படிக்கை விஷயத்தில் மேல்சபைக்குச் (Senate) சம உரிமையைவிடக் கூடுதலாக

அதிகாரம் அமெரிக்க அரசியல் சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ளது. ஒப்பந்தங்களுக்கான பேச்சு வார்த்தைகளில் குடியரசு தலைவருக்கு மிக அதிகமான அதிகாரம் இருந்தபோதிலும், கடைசியாக ஏற்படும் முடிவு (Final Decision) மேலவையின் (Senate) ரத்து செய்யும் அதிகாரத்திற்கு முன் அல்லது உடன்படிக்கையில் திருத்தங்கள் செய்யும் அதிகாரத்திற்கு முன் குடியரசு தலைவர் பணியவேண்டிய கட்டாயம் இருக்கிறது. உலகின் வேறு எந்த நாட்டிலும் ஒரு பாராளுமன்றத்தின் மேல் சபைக்கு அமெரிக்க மேல்சபைக்கு இருப்பது போன்ற செல்வாக்கும் அதிகாரங்களும் இல்லை. அமெரிக்கப் பாராளுமன்றத்தின் மேல்சபையைப் பொறுத்தவரை கூட்டாட்சியின் எல்லா உயர் அதிகாரிகளும் குடியரசு தலைவரால் நியமிக்கப்பட்டாலும் அந்த நியமன உத்தரவுகள் செல்லுபடியாக வேண்டுமானால் அது மேல்சபையின் அங்கீகாரத்தைப் பெற்றிருக்கவேண்டும். அயல் நாட்டு ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகள் போன்றவற்றிற்கும் மேல்சபையின் அங்கீகாரம் இன்றியமையாததாகும். மேல்சபையின் அங்கீகாரம் இன்றி எந்த ஒப்பந்தமும் உடன்படிக்கையும் செல்லுபடியாகாது. தம்முடைய இந்த அதிகாரத்தைப் பயன் படுத்தி. குடியரசு தலைவர் பிறநாடுகளுடன் செய்த ஒப்பந்தங்களை, மேல்சபை பலதடவை அங்கீகாரம் கொடுக்க மறுத்திருக்கிறது. ஆகையால், மேல்சபையின் (Senate) அங்கீகாரத்தைப் பெறுவதில் இருக்கும் இன்னல்களைத் தவிர்ப்பதற்கு, குடியரசு தலைவர் இதர நாடுகளுடன் பேச்சுவார்த்தை நடத்தித் தாமே நிருவாக ஒப்பந்தங்கள் செய்துகொள்கிறார். இந்த ஒப்பந்தங்கள் உடன்பாடுகள் போல மதிக்கப்பட்டு வந்தாலும் இவற்றில் மேல்சபையின் தலையீடு இல்லை. ஏனென்றால், குடியரசு தலைவரால் செய்யப்படும் இந்த ஒப்பந்தங்கள் செயற்குழு ஒப்பந்தங்கள் (Executive agreements) என்று சொல்லப்பட்டு அவற்றிற்கு மேலவையின் அதிகாரம் தேவையற்றது என்றும் அவற்றிற்கு உடன்படிக்கை போலவே அகில உலக நாடுகள் கருதும்படியாக வலு இருக்கும் என்றும் பின்னர் ஏற்பாடு செய்யப்பட்டது.

மூன்றாவது முறையில் உடன்படிக்கைகளைச் செய்துகொள்ளும் அதிகாரம் சட்டசபைப் பிரிவினிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. உதாரணமாக, சுவிட்சர்லாந்து நாட்டின் அரசியல் சட்ட விதி எண் 85-ன்கீழ் வெளிநாடுகளுடன் செய்யும் எல்லா ஒப்பந்தங்களும் உடன்படிக்கைகளும் செல்லுபடியாகவும் மாநிலங்களுக்கிடையே ஏற்படும் ஒப்பந்தங்களை அங்கீகரிக்கவும் பாராளுமன்றத்திற்குத்தான் (Federal Assembly) அதிகாரம் உண்டு.

—10

இந்திய அரசியல் சட்டப்படி மத்தியப் பாராளுமன்றத்திற்கு வெளிநாடுகள் உறவு சம்பந்தமாய் ஒப்பந்தங்கள், உடன்படிக்கைகளுக்கான சட்டங்களைச் செய்யவும், ஏற்கெனவே செய்துள்ள உடன்படிக்கைகளைச் செயற்படுத்தவும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பதால் வெளிநாடுகள் உறவு விஷயத்தில் இந்தியா முதலில் விவரித்த அமைப்பைச் சார்ந்தது என்பது விளங்கும். இதனால் நமக்குத் தெளிவாவது யாதெனில், இந்திய அரசியல் சட்டப்படி அன்னிய நாடுகளின் உடன்படிக்கைகளைச் செயற்படுத்தும் விஷயத்தில் சட்டமியற்ற வேண்டிய அவசியம் இருந்தாலொழிய சட்டசபையின் தலையீடு இதில் இல்லை. எந்த ஓர் ஒப்பந்தமும் மக்களின் சொத்துரிமையைப் பாதிப்பதாக இருந்தாலும், ஒருங்கிணைக்கப்பட்ட நிதியிலிருந்து (consolidated fund) செலவுகளைச் சமாளிக்க வேண்டியிருந்தாலும் சட்டம் மூலம் பாராளுமன்றத்தின் ஒப்புதல் கிடைத்தாலொழிய மேற்கொண்டு நடவடிக்கை எடுக்க முடியாது. மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ள சட்டங்கள் இயற்றும் அதிகாரத்தைத் தவிர மத்திய அரசு, இந்திய யூனியன் முழுமைக்கும் அல்லது எந்தப் பகுதிக்கும் சட்டம் இயற்றும் அதிகாரம் பெற்றிருக்கிறது. எனவே, மத்திய-மாநில அரசுகளின் சட்டமியற்றும் அதிகார வினியோகம் குறுக்கே வெட்டப்பட்டாலும் மத்திய அரசின் சட்டம் முழுமையாக நாடு பூராவும் அமலில் இருக்கும். இந்த விஷயத்தில் இந்திய அரசியல் சட்டம் அமெரிக்கக் கூட்டாட்சி முறையைப் பின்பற்றுகிறது. அமெரிக்காவில் மேலவையின் சம்மதத்துடன் குடியரசு தலைவர் செய்து கொள்ளும் வெளிநாட்டு ஒப்பந்தம் நாடு பூராவும் வியாபித்து நாட்டின் பிரதான சட்டமாகக் கருதப்படும். எனவே, இப்படிப்பட்ட மேல்சபை ஆதரவு கொண்ட ஒப்பந்தம், இணைந்த மாநிலங்களின் ஒதுக்கிவைத்துள்ள (Reserve Powers) அதிகாரத்தையும் கூட ஒழுங்குபடுத்தும். இந்த ஒதுக்கிவைத்துள்ள அதிகார விஷயங்களில் ஒரு மாநிலத்தின் சம்மதம் இல்லாமல் பாராளுமன்றம் (Congress) கூடத் தொடமுடியாத விஷயங்களில், மேல்சபை ஆதரவுடன் குடியரசு தலைவர் செய்யும் உடன்படிக்கை ஊடுருவி நிற்கும்.

உடன்படிக்கை செய்துகொள்ளும் வகையில் இந்தியக் குடியரசு தலைவரின் அதிகாரம், இரண்டு வழிகளில் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. முதலில், பாராளுமன்றம் தனக்கு உடன்படிக்கை செய்துகொள்வதிலும் அந்த உடன்படிக்கையைச் செயற்படுத்துவதிலும் தன் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பயன்படுத்திக் குடியரசு தலைவரின் உடன்படிக்கை செய்து கொள்ளும்

அதிகாரத்தை ஒழுங்குபடுத்தும். இரண்டாவதாக மத்திய அரசின் செயற்குழுப் பிரிவு, மக்கள் சபையின் கட்டுப்பாட்டுக்கு அடங்கிச் செயற்படவேண்டியிருப்பதால் குடியரசு தலைவரின் உடன்படிக் கைகள் செய்துகொள்ளும் அதிகாரம், பாராளுமன்றத்தின் பரிசீலனைக்கும் விமரிசனத்திற்கும் உட்பட்டது. எனினும், இந்த விஷயத்தில் குடியரசு தலைவர், மக்கள் சபைக்குப் பொறுப்பாக உள்ள அமைச்சர்கள் மூலமாகச் செயற்படுவதால், ஆளுங் கட்சிக்குப் பரிபூரண ஆதரவு (Majority) பாராளுமன்றத்தில் இருக்கும் வரை உடன்படிக்கைகளை ஆதரித்துச் செயற்படுவார். உடன்படிக்கை ஏற்பட்ட பிறகு நீதிமன்றங்கள் குடியரசு தலைவரின் செயல்களைச் செல்லுபடியாகாவென்று தீர்ப்புக் கூறமுடியாது.

# 9. குடியரசு தலைவரின் நீதித்துறை அதிகாரங்கள்

## (The President and His Judicial Powers)

அனேகமாக எல்லா நாடுகளிலும், நாட்டின் தலைவருக்கு நீதித்துறை சம்பந்தமான சில அதிகாரங்கள் கொடுக்கப்படுவது வழக்கம். இதற்குக் காரணங்கள் இல்லாமல் இல்லை. ஒரு நாட்டு அரசின் தலைசிறந்த தலைவர் என்ற முறையே இந்த அதிகாரம் கொடுப்பதற்கு ஒரு காரணம். இரண்டாவதாக நீதி பதிகள் எவ்வளவுதான் சட்டத்தைக் கரைத்துக் குடித்தவர்களாக இருப்பினும் அப்பழுக்கு இல்லாதமுறையில், குறையில்லாத வகையில், சட்டம் செயற்படுத்தப்பட்டது என்று கூறவும் முடியாது. ஏனெனில், சட்டத்தைச் செயற்படுத்துவது, தவறுதலுக்குப் பாத்திரமான மனிதர்கள்தாம். இந்த மன்னிக்கும் அதிகாரம் இங்கிலாந்து அரசிக்கும், அமெரிக்கா, அயர் (Eire) போன்ற நாடுகளின் குடியரசு தலைவர்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. செயற்குழுப் பிரிவின் தலைமைக்கு (ஆட்சித் தலைவருக்கு) இந்த அதிகாரம் ஏன் கொடுக்கப்பட்டுள்ளது என்பது குறித்து நீதிபதி டாஃப்ட் (Taft C.J.) என்பவர் சுவையான முறையில் விமரிசிக்கிறார்.

'நாட்டின் தலைவரின் கருணை, குற்றவாளியைத் தண்டிக்கும் சட்டத்தின் கடுமையைக் குறைக்கவும், அச் சட்டத்தை அமல் படுத்துவதில் ஏற்படும் பிழைகளிலிருந்து காப்பாற்றவும் ஏற்பட்டது. சட்டப்படி நீதி செலுத்துவது எப்பொழுதுமே நல்லமுறையில் நடந்தது என்று சொல்வதற்கில்லை. இந் நிலைக்கு ஒரு பரிகாரமாக மக்களாட்சி நாடுகளில் குற்றச்சாட்டில் வரும் தீர்ப்பின் கடுமையை ஓரளவு குறைக்க நீதிமன்றங்களைத் தவிர, செயற்குழுப் பிரிவுக்கும் மன்னிக்கும் அதிகாரம் அரசியல் சட்டம் கொடுக்கிறது. சில விசேஷ வழக்குகளின் தீர்ப்பின் கொடுமை

யைக் குறைக்கச் செயலாக்கும் பிரிவின் தலைவருக்கு மன்னிக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது" என்று விளக்குகிறார்.

மன்னிக்கும் அதிகாரம் பலதரப்பட்டது. இராணுவ நீதி மன்றங்கள் விசாரிக்கும் வழக்குகளிலும், மத்திய அரசின் ஆட்சித் துறை வரம்புக்குட்பட்ட சட்டங்களை மீறியதற்காக பிற நீதி மன்றங்கள் விசாரிக்கும் வழக்குகளிலும் குற்றவாளிகளுக்குத் தண்டனைகள் வழங்கப்படுகின்றன. இந்த வழக்குகளில் கொடுக்கப் பட்ட தண்டனைகளையும் அல்லது வேறு எவ்வித வழக்குகளில் கொடுக்கப்பட்ட மரண தண்டனையையும் நீக்கிக் குற்றவாளிகளை மன்னிக்கும் (Pardon) அதிகாரம் குடியரசு தலைவருக்கு உண்டு. மரண தண்டனையை ஒத்திவைக்கும் அதிகாரம் (reprieves), தண்டனையை ஒத்திவைத்தல் (respites), தண்டனை முறை மாறுமல் தண்டனையைக் குறைத்தல் (remission), தண்டனையைத் தாற்காலிகமாக ஒத்திவைத்தல் (suspension), தண்டனை அளித்தலைத் தாமதப் படுத்தல் (remit), கடுமையான தண்டனையைக் கடுமை குறைந்த தண்டனையாக மாற்றுதல் (commute) ஆகியவைகளும் குடியரசு தலைவருக்கு உள்ள நீதித்துறை அதிகாரங்கள் ஆகும். ஒவ்வொரு தண்டனையைக் குறைக்கும் அதிகாரத்திற்கும் தனி முக்கியத் துவமும் சட்டரீதியான பயனும் உண்டு

## மன்னிப்பு (Pardon)

மன்னிப்பு என்பது தண்டனையிலிருந்து குற்றவாளியை விடுவிப்பது ஆகும். தண்டனையிலிருந்து காப்பாற்றுதல் என்பது ஓர் அருள்வடிவான அல்லது கருணையான செயல் (An Act of Grace). ஆகையால், அதை உரிமைகொண்டு கேட்க முடியாது. மன்னிப்பால், ஒருவர் தண்டனையிலிருந்து காப்பாற்றப்படுவ தோடல்லாமல், அந்த நபர் குற்றமே செய்யாதவராகவும் ஆக்கப் படுகிறார். எனவே, குற்றத்தினுல் ஏற்பட்ட எல்லாத் தகுதியின் மையும் பலவீனங்களும் மன்னிப்பால் குற்றம் சாட்டப்பட்டவரிட மிருந்து போய்விடுகிறது.

மன்னிப்புப் பரிபூரணமானதாகவோ, குறைந்தோ, நிபந் தனைக்குட்பட்டதாகவோ இருக்கலாம்.

## முழுமையான மன்னிப்பு (Absolute Pardon)

குற்றத்தையே தள்ளிவைத்துத் தீர்ப்பையும் தண்டனையையும் இந்த வகை மன்னிப்பு ரத்துசெய்துவிடுகிறது. குற்றம் செய்தவர் எந்தக் குற்றமும் செய்யாமல் இருந்தால் சட்டப்படி எப்படி இருப்பாரோ அந்த நிலையில் சேர்க்கப்படுவார். தண்டனைக்கு

முன்பே மன்னிப்பு வழங்கப்பட்டால், தண்டனையால் ஏற்படும் அபராதம், பலஹீனம் இவற்றிலிருந்து அவர் காப்பாற்றப்படு கிறார். தண்டனை வழங்கப்பட்டபின் மன்னிப்பு வழங்கப்பட்டால் ஒரு குடிமகனின் உரிமைகளை அவருக்கு முழுமையாகக் கொடுப்ப துடன் அபராதம், பலமின்மை இவற்றைக் களைந்துவிடும் தன்மை யையும் மன்னிப்பு கொடுக்கிறது. ஆனால், அரசாங்கத்திடம் குற்றவாளியாகத் தண்டிக்கப்பட்டவர், ஏற்பட்ட இன்னல்களுக்கு நஷ்ட ஈடு எதுவும் கேட்க முடியாது. அரசாங்க ஊழியர் குற்றம் காரணமாக அவர் வகித்திருந்த பதவியிலிருந்து விலகிய பிறகு திரும்பவும் அப் பதவியில் சேர்க்கப்பட மாட்டார்.

### குறைந்த மன்னிப்பு (Limited Pardon)

இந்தவகை மன்னிப்புக் குற்றம் சுமத்தப்பட்டவர், குற்றம் செய்ததால் விளைந்த சில இன்னல்களிலிருந்து விடுவிக்கப்படுவார். ஆனால், குற்றத்தின் எல்லா விளைவுகளிலிருந்தும் அவர் விடுவிக்கப் படமாட்டார். அபராதத்திலிருந்து மீட்கலாம். ஆனால், தண்டனையிலிருந்து மீட்கப்படுவதில்லை.

### நிபந்தனைகளுடன்கூடிய மன்னிப்பு (Conditional Pardon)

இதில் சில நிபந்தனைகளுக்குட்பட்டுத்தான் மன்னிப்பு வழங்கப் படுகிறது. உதாரணமாக, குற்றம் செய்தவர் நன்னடத்தையோடு மன்னிப்புக்குப் பிறகு நடந்துகொள்வது போன்றவை. இந்த நிபந்தனை அவர் எத்தனை காலத்திற்குத் தண்டிக்கப்பட்டாரோ அதுவரைதான் செல்லும். வாழ்நாள் முழுவதும் அந்த நிபந் தனைக்கு உட்பட வேண்டியதில்லை. அந்த நிபந்தனைப்படி நடக்கத் தவறினால் மன்னிப்பு இருக்காது. நிபந்தனைப்படி நடக்கத் தவறு வது மன்னிப்பை ரத்து செய்ய இடமளிக்கும்.

### மரண தண்டனையைத் தாற்காலிகமாகத் தள்ளிவைப்பது (Reprieve)

இதன்படி, சட்டப்படி கொடுக்கப்பட்ட தண்டனையை உட னடியாக நிறைவேற்றாமல், தாற்காலிகமாக, கொடுத்த தண்டனை யை ஒத்திவைப்பது. உதாரணமாக, ஒரு கருப்பமுற்ற பெண்ணுக்கு மரண தண்டனை வழங்கித் தீர்ப்புக் கூறினால் அவளுக்குக் குழந்தை பிறக்கும் வரை தண்டனையை ஒத்திப் போடுவது வழக்கம். இத்தகைய முறை இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும், இந்தியா விலும் வழக்கத்தில் இருந்துவருகிறது.

### சட்டப்படி உள்ள தண்டனையைக் குறைத்துத் தண்டிப்பது (Respite)

இந்த முறையில் குற்றவாளியை, சட்டப்படியான தண் டனையை வழங்காமல், மனிதாபிமானத்திற்காகத் தண்டனையைக் குறைத்து வழங்குவதாகும். உதாரணமாக, சட்டப்படி ஒரு

கருப்பிணிக்கு மரண தண்டனை விதித்திருந்தாலும் பெண் என்ற காரணத்தினாலும் கருப்பிணி என்ற காரணத்தினாலும் ஆயுள் தண்டனையாக மரண தண்டனையைக் குறைக்கலாம்.

**தண்டனைக் காலக் குறைப்பு (Remission)**

தண்டனையின் தன்மையைக் குறைக்காமல் தண்டனைக் காலத்தை மட்டும் குறைப்பது இந்த வகை மன்னிப்பின் வேலை. உதாரணமாக, 2 ஆண்டு கடுமையான சிறைத் தண்டனையை 1 ஆண்டாகக் குறைப்பது, கைதியின் நன்னடத்தைக்காக நீண்ட நாள் சிறைவாசத்தைக் குறைப்பது போன்றவை இதில் அடங்கும்.

**தண்டனையைத் தளர்த்துவது (Commutation)**

இது கடுமையான தண்டனையை எளிதானதாக ஆக்குகிறது (A change from a heavier to a lighter penalty). குற்றச்சாட்டு நிருவாக விதிகளின் 402ஆவது பிரிவு, எப்படிப்பட்ட தண்டனைகளைத் தளர்த்தலாம் என்று கூறுகிறது (Sec. 402 of Cr.P.C). மரண தண்டனை, ஆயுள் தண்டனை, கடும் சிறை, சாதாரண சிறைவாசம், அபராதம் முதலியவற்றிலிருந்து, வழங்கப்பட்ட தண்டனையிலிருந்து அடுத்துவரும் தண்டனைக்குக் குறைக்கப்படலாம். உதாரணமாக, மரண தண்டனை வழங்கப்பட்டவருக்கு ஆயுள் தண்டனை வழங்கலாம். கடும் சிறைவாசத்தில் இருந்து சாதாரண சிறைவாசம் வழங்கலாம்.

மன்னிப்புத் தரும் அதிகாரமும் தண்டிக்கும் அதிகாரமும் மாறுபட்டவை. தண்டிக்கும் அதிகாரம் சட்டரீதியாகச் செயற்படுத்தும் பிரிவுக்கு அமைவது. மன்னிப்பு, சட்ட விரோதச் செயல்களை மாற்றிச் சட்டரீதியானதாக ஆக்குவதில்லை (Pardon does not make lawful what is unlawful). ஆனால், செய்த குற்றத்திற்கு மன்னிப்பு அளிக்கிறது.

இங்கிலாந்து, அமெரிக்கா மற்றும் இந்தியா போன்ற நாடுகளின் செயற்குழுப் பிரிவிற்குக் குற்ற விசாரணை செய்யும் அதிகாரம் இல்லாவிட்டாலும் தண்டனையைக் குறைக்கும் அதிகாரம் உள்ளது. மன்னிப்பு இரண்டு வகைப்படும். ஒன்று தனி நபருக்குக் கொடுக்கப்படுவது. அதை நாம் ஆங்கிலத்தில் (Pardon) என்று சொல்கிறோம். இன்னொருவகை ஒரு குறிப்பிட்ட இனத்திற்கோ அல்லது பல பேர் அடங்கிய கூட்டத்திற்கோ மன்னிப்பு வழங்குவது. இதை நாம் பொது மன்னிப்பு என்கிறோம் (Amnesty). இப் பொது மன்னிப்பு, தேசத் துரோகக்

குற்றங்கள் செய்தவர்கள் அல்லது சட்ட விரோதமான கிளர்ச்சிகளில் ஈடுபடும் அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களுக்குக் குடியரசு தலைவரால் கொடுக்கப்படுகிறது. உதாரணமாக, அமெரிக்கக் குடியரசு தலைவர் ஜெஃபர்சன் (Jefferson), தேசத் துரோகச் சட்டம் 1798-ன்கீழ் (Sedition Act, 1798) தண்டிக்கப் பட்டவர்களுக்குப் பொது மன்னிப்புக் கொடுத்து விடுதலை செய்தார். ஆகையால் மன்னிப்பு வழங்குதல் (Pardon) தனி நபருக்கும், பொது மன்னிப்பு வழங்குதல் (Amnesty) பலருக்கும் பொருந்தும்.

அரசியல் சட்டம் விதி எண் 72-ல் இந்தியக் குடியரசு தலைவருக்கு மன்னிப்பு வழங்குதல், தண்டனையை நிறுத்தி வைத்தல், தண்டனையைக் குறைப்பது அல்லது தளர்த்துவது போன்ற அதிகாரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. எந்தெந்த வழக்குகளின் குற்றங்களுக்குக் குடியரசு தலைவர் மன்னிக்கலாம் என்பதைக் கீழே காண்க :

(1) இராணுவ அதிகாரிகளின் தீர்மானத்திற்குத் தடங்கல் இல்லாத வகையில் இராணுவ நீதிமன்றங்களால் (Court Martial) தண்டிக்கப்பட்டவர்களுக்குச் சட்டப்படி கொடுக்கப்பட்டிருக்கும் தண்டனையைக் குறைத்தல்.

(2) மத்தியப் பட்டியலில் உள்ள விஷயங்கள் மீதான குற்றங்களுக்கான தண்டனை, பொதுப் பட்டியலில் உள்ள விஷயங்களுள் மாநில ஆட்சித்துறை அதிகாரம் செல்லுபடியாகா எனப் பாராளு மன்றத்தால் அங்கீகரிக்கப்பட்ட விஷயங்கள் மீதான குற்றங்களுக் கான தண்டனை ஆகிய இவற்றைக் குறைக்கலாம்.

(3) மரண தண்டனை விதிக்கப்பட்ட குற்றவாளியின் தண்டனையைக் குறைப்பது.

இந்த அரசியல் சட்டத்தின் விதி, இந்தியக் குற்றச் சட்டம் (I.P.C.) பிரிவு 54-லும், குற்ற நடவடிக்கைச் சட்டம் (Criminal Procedure Code) பிரிவு 401(2)-லும் ஆளுநருக்குக் கொடுக்கப் பட்டுள்ள மன்னிக்கும் அதிகாரத்தின் குறுக்கே வருவதில்லை. எனினும், மரண தண்டனைக்கு மன்னிப்பு வழங்கும் அதிகாரம் ஆளுநருக்கு இல்லை. இந்தியக் குடியரசு தலைவருக்கு மட்டுமே இந்த மரண தண்டனையை மன்னிக்கும் அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது. அரசியல் சட்ட விதி எண் 72ஐயும் 161ஐயும் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது இது நமக்குத் தெளிவாக விளங்கு கிறது. அரசியல் சட்ட விதி எண் 161, மாநில ஆளுநரின் மன்னிக்கும் அதிகாரத்தை விளக்குகிறது.

விதி எண் 161 கீழ்வருமாறு :

ஒரு மாநில ஆளுநருக்கு மன்னிப்புகள், தண்டனையைத் தள்ளி வைப்பது, குறைப்பது, தளர்த்துவது போன்ற அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த அதிகாரம், மாநில அரசின் செயற்குழுப் பிரிவின் (ஆட்சித்துறைப் பிரிவின்—Executive) கீழ் வரும் எல்லா விஷயங்கள் சம்பந்தப்பட்ட குற்றங்களைச் செய்து தண்டிக்கப்பட்டவர்கள் வகையில் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த வகையில் கேரள மாநிலத்தில் ஒரு சுவையான சம்பவம் மாநில ஆளுநரின் மன்னிக்கும் அதிகாரம் குறித்தும் குடியரசு தலைவரின் மன்னிக்கும் அதிகாரம் குறித்தும் 1957-ல் ஏப்ரல் மாதம் நடந்தது. வாசுப்பிள்ளை என்ற பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்தவர் (Communist), ஒரு காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த தொண்டரைக் கொலை செய்த குற்றத்திற்காக மரண தண்டனை விதிக்கப்பட்டார். அவர் குடியரசு தலைவருக்கு அனுப்பிய கருணை மனு நிராகரிக்கப்பட்டது. 1957ஆம் ஆண்டு ஆட்சிப் பொறுப்பிற்கு வந்த பொதுவுடைமைக் கட்சி (Communist Party) எல்லா அரசியல் கைதிகளுக்கும் மன்னிப்புக் கொடுக்கவும், மரண தண்டனை விதிக்கப்பட்ட எல்லா அரசியல் குற்றவாளிகளுக்கும் திரு. வாசுப்பிள்ளையையும் சேர்த்து, ஆயுள் தண்டனையாகக் குறைக்கவும் முடிவு செய்தது. இந்தச் சம்பவம் மத்திய-மாநில அரசுகளின் உறவு, அதிகாரம் சம்பந்தமான பிரச்சினைகளை எழுப்பியது. மரண தண்டனை விஷயத்தில் மன்னிக்கும் அதிகாரம் மத்திய அரசாங்கத்திடமும் குடியரசு தலைவரிடமும் மட்டுமே அரசியல் சட்டப்படி இருக்கிறது என்பதை மாநில அரசு ஒப்புக் கொண்டதால் இந்தப் பிரச்சினை அத்துடன் முடிந்தது. மரண தண்டனைகள் ஆயுள் தண்டனைகளாகக் குறைக்கப்பட்டன. கேரள அரசு, தனக்கு இருக்கும் மன்னிக்கும் அதிகாரத்தைப் பயன்படுத்தி, மரண தண்டனையிலிருந்து ஆயுள் தண்டனைக்கு, வாசுப்பிள்ளையின் தண்டனையைக் குறைத்ததிலிருந்து மேலும் குறைக்கக் கூடாது என்ற நிபந்தனையுடன்தான், அவருக்குத் தண்டனை குறைக்கப்பட்டது.

வரலாற்றுப் பெருமைமிக்க, மிகவும் பழைமையான கருணை காட்டும் விசேஷ உரிமை அரசர்களிடமும், சர்வாதிகார மன்னர்களிடமும்கூட இருந்தாலும் ஜனநாயகத்தை ஆட்சி முறையாகக் கொண்ட அரசுகளிடமும் இந்தப் பழக்கம் இருந்துவந்தது. ஆனால், இன்று இது பழக்கத்திலுள்ள ஒரு நெறியாகவும் அடிப்படைக் கொள்கையாகவும் மலர்ந்திருக்கிறது. எல்லா நாட்டு அரசியல் சட்டங்களிலும், இங்கிலாந்து அரசர், தம்முடைய

மன்னிக்கும் விசேஷ உரிமையை உள்நாட்டுத் துறை அமைச்சகத்தின் ஆலோசனைப்படி உபயோகப்படுத்துகிறார். மன்னரின் இந்த மன்னிப்புத் தீர்மானம் அரசரின் விருப்பத்திற்கேற்றாற்போலவோ பொதுமக்களின் கிளர்ச்சி காரணமாகவோ பிரயோகிக்கப்படுவதில்லை.

இந்தியாவிலும் மரண தண்டனைக்குள்ளான ஒருவர் கருணை விண்ணப்பத்தைக் குடியரசு தலைவருக்கு அனுப்பலாம். குடியரசு தலைவருக்கு அனுப்பப்பட்ட விண்ணப்பங்கள் உள் துறை அமைச்சகத்திற்கு அவர்களின் ஆலோசனைக்கும் பரிந்துரைக்கும் (சிபாரிசுக்கும்) அனுப்பப்படுகின்றன.

உள்துறை அமைச்சகத்தில் ஒரு தனிப் பிரிவு இவ் விண்ணப்பங்களைப் பரிசீலித்து அவர்களுக்குத் தோன்றிய பரிந்துரையுடன் குடியரசு தலைவருக்குத் திரும்ப அனுப்பிவிடுகின்றது. குடியரசு தலைவர் அமைச்சகத்தின் சிபாரிசை ஏற்றுக்கொண்டால் அதன்படி செயற்படுகிறார். அவர் அதை ஏற்றுக்கொள்ளாவிட்டால் தம்முடைய அபிப்பிராய பேதத்தைக் குறித்து அமைச்சகத்துக்கு அனுப்புவார். இச் சந்தர்ப்பத்தில் அமைச்சகம் குடியரசு தலைவரின் விருப்பத்திற்கு மாறாகச் செயற்படாது. குடியரசு தலைவரின் இந்த விசேஷ உரிமை காரணமாகவும் கருணையைப் பயன்படுத்தும் முயற்சியிலும் அமைச்சகத்துக்கும் குடியரசு தலைவருக்கும் இடையே சில வரவேற்கத்தக்க பழக்கங்களும் அடிப்படைக் கொள்கைகளும் ஏற்பட்டிருக்கின்றன. மன்னிப்பு, கருணை விஷயத்தில் குடியரசு தலைவர் தம் மனச்சாட்சிப்படி இல்லாமல் செயற்படுவதும், வளைந்து கொடுக்கும் தன்மையோடு இல்லாமல் செயற்படுவதும் கருணை உள்ளத்தோடு செயலாற்றுவதற்கு முரணானது. ஏற்படுத்தப்பட்ட கொள்கை, நியதிகளுக்குள் வராத சில வழக்குகள் இருக்கலாம். எனினும், அவை குடியரசு தலைவரின் கருணைக்கு உகந்தவையாக அமையலாம். இவ் விஷயத்தில், வளைந்து கொடுக்காத கண்டிப்பானமுறையில் விண்ணப்பங்களைப் பரிசீலித்தால், சட்ட வரம்புக்குள்ளான வேறு ஒரு நீதிமன்றம் போல்தான் குடியரசு தலைவரும் செயற்படவேண்டியிருக்கும். அமைச்சகத்தின் பரிந்துரையில் கையொப்பமிடும் சாதனமாகக் குடியரசு தலைவர் தம்மை ஆக்கிக் கொள்வதும் விரும்பத்தக்கது அன்று. ஒவ்வொரு கருணை விண்ணப்ப மனுவும் நன்கு பரிசீலிக்கப்பட்டு, மனச்சாட்சியின் குரலுக்குச் செவிமடுத்துக் கவனிக்கப்படல் வேண்டும்.

டாக்டர் இராஜேந்திரப் பிரசாத் குடியரசு தலைவராக இருந்தபொழுது கருணை மன்னிப்புக் கோரிவரும் எல்லா மனுக்

களையும் கவனமாகப் பரிசீலனை செய்த பிறகே ஒரு முடிவு எடுப்பார். எனவே, அவர் காலத்தில் வழக்குச் சம்பந்தப்பட்ட கோப்பு ஏடுகளை (Files) நன்கு அலசிப் பார்க்காமல் அவர் எவரையும் தூக்குமேடைக்கு அனுப்பவில்லை. மன்னிப்பு வழங்கவும் அவர் தவறியதில்லை.

சமீபகாலத்தில் இரண்டு வழக்குகள் சம்பந்தமாகக் குடியரசு தலைவர் தம் விசேஷ உரிமையைப் பயன்படுத்தியது காரணமாக நாட்டில் சலசலப்பு ஏற்பட்டது. ஒன்று சம்பல் கொள்ளைக் காரர்களைப்பற்றியது. இன்னொன்று டாக்டர் ஆனந்த் சிந்தாமன் லாகு (Dr. Anant Chintaman Lagu) என்பவரைப்பற்றியது. இந்த இரண்டாவது வழக்குச் சம்பந்தமாகப் படபடப்பு ஏற்பட்டது நியாயமானதன்று. நீதிபதிகளுள் ஒருவர்கூடக் குறைந்த தண்டனையே போதுமானது என்று தீர்ப்பளித்தார். எனவே, இவ்வழக்கில் குடியரசு தலைவரின் கருணை வடிவான மன்னிப்பு நியாயமானதும் தகுதியுள்ளதும் எனக் கொள்ளலாம். ஆனால், கொள்ளைக்காரர்கள் கொலைகள் பல செய்திருந்தும் மன்னிக்கப்பட்டார்கள். அவர்களுக்குக் கருணை காட்டி மன்னிக்க எந்தக் காரணமும் இல்லை. பொதுமக்களின் மரியாதைக்குப் பாத்திரமான ஒருவர் விரும்புகிறார் என்ற ஒரே காரணத்திற்காகக் குடியரசு தலைவர் தம் மனத்துக்குச் சரியென்று தோன்றுவதைச் செய்யாமல் ஒரு தனி மனிதரின் கருத்துக்குச் செவிசாய்த்து மன்னித்தார். எனவே, தேவையற்ற கண்டிப்பும், தாராள சிந்தையும் அகற்றி, ஒவ்வொரு மனுவின் தன்மையையும் அலசி அவை மன்னிப்புக்குத் தகுதி படைத்தவையா என்று முடிவு செய்து செயற்படுவது சாலச் சிறந்தது.

அமெரிக்க நாட்டில் அந் நாட்டுக் குடியரசு தலைவர் தம் மன்னிக்கும் அதிகாரத்தை எப்போது வேண்டுமானாலும் உபயோகிக்கலாம். குற்றம் நிரூபிக்கப்படுமுன்போ விசாரணையில் இருக்கும் பொழுதோ தண்டிக்கப்பட்ட பிறகோ எப்பொழுது வேண்டுமானாலும் மன்னிப்பு வழங்கலாம். இதுபோலவே இந்தியக் குடியரசு தலைவரும் குற்ற மன்னிப்பும், தண்டனையைத் தள்ளிவைப்பதும், தண்டிக்கப்படுமுன்பே மன்னிப்பு வழங்கவும் செய்யலாம்.

குடியரசு தலைவரின்மேலேயே தேசத்துரோகக் குற்றச்சாட்டு (Impeachment) இருந்தால் தமக்குத்தாமே மன்னிப்புக் கொடுத்துக் கொள்ள சட்டத்தில் இடமில்லை. அரசியல் சட்டப்படி ஆட்சித் தலைவரான குடியரசு தலைவரின்மேல்தான் துரோகக் குற்றச் சாட்டுக் கொண்டுவர முடியும். எனவே, குற்றம் சாட்டப்

பட்டவரே தமக்கு மன்னிப்புக் கொடுத்துக்கொள்ளச் சட்டம் இடம் கொடுக்கவில்லை. மன்னிப்பு என்று சொல்லும் பொழுது குற்றம் செய்தவர் என்றும், அவருக்கு மன்னிப்பு வழங்குபவர் என்றும் இருவரைக் குறிக்கிறது.

அமெரிக்காவில் இந்தியக் குடியரசு தலைவரைப்போலல்லாமல் அந் நாட்டுக் குடியரசு தலைவர் மட்டும் துரோகக் குற்றச் சாட்டுக்கு உட்பட்டவர் அல்லர். அமெரிக்கக் குடியரசு தலைவருடன் வேறு சில அரசாங்கத்தின் உயர் அதிகாரிகளும் இக் குற்றச்சாட்டுக்கு (Impeachment) உட்படுத்தப்பட்டிருக்கின்றனர். நம் நாட்டில் குடியரசு தலைவரை மட்டும்தான் துரோகக் குற்றசாட்டுக்குள் கொண்டுவரலாம். ஆக, அமெரிக்கக் குடியரசு தலைவருக்குத் துரோகக் குற்ற விசாரணை சம்பந்தமாக மன்னிக்கும் அதிகாரம் கொடுக்கப்படவில்லை. எனினும், குடியரசு தலைவராக இருக்கும் ஒருவர் அந் நாட்டில் குற்றச்சாட்டு தம்மேல் நிரூபிக்கப்பட்டு விடும் என்று உணர்ந்து பதவியை இராஜினுமா செய்கிறுர். அவர் மேல் குற்றச்சாட்டு, விசாரணையில் உள்ளபோதே புதிய குடியரசு தலைவராகப் பொறுப்பேற்றவர், பழைய குடியரசு தலைவருக்கு தம் அதிகாரத்தின்படி மன்னிப்புக் கொடுத்து அவரைக் குற்ற விசாரணையிலிருந்து நீக்க உத்தரவு போடுகிறுர். குடியரசு தலைவர் ஜெரால்டு ஃபோர்டு (President Jerold Ford) பழைய குடியரசு தலைவர் நிக்சனுக்கு இம்மாதிரி மன்னிப்பு வழங்கினுர்.

இங்கிலாந்து நாட்டில் பாராளுமன்றத்தின் மக்கள் சபை துரோகக் குற்றச்சாட்டு விசாரணையில் இருக்கும்பொழுது யாரும் மன்னிப்புக்கு விண்ணப்பிக்க முடியாது. குற்றச்சாட்டு விசாரணை முடிந்த பிறகு மன்னர் தம் மன்னிக்கும் உரிமையை உபயோகப் படுத்தலாம்.

**குடியரசு தலைவரின் மன்னிக்கும் அதிகாரத்தின்மேல் சட்டசபை செய்யும் கட்டுப்பாடு**

இந்தியக் குடியரசு தலைவரின் மன்னிக்கும் அதிகாரம் அமெரிக்கக் குடியரசு தலைவரின் அதிகாரம்போல் சட்டசபையின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதில்லை. இந்தியக் குடியரசு தலைவரின் இந்த அதிகாரத்தைப் பாராளுமன்றத்தால் ஒழுங்குபடுத்த முடியாமற்போனுலும், அரசியல் சட்டம் விதி எண் 53 (3) குடியரசு தலைவரைத் தவிர மற்ற அதிகாரிகளுக்கு மன்னிக்கும் உரிமையைச் சட்டத்தின் மூலம் கொடுக்கப் பாராளுமன்றத்திற்கு உரிமை கொடுத்திருக்கிறது. எனவே, குடியரசு தலைவருக்கு இருக்கும் மன்னிக்கும் அதிகாரத்திற்குத் தடங்கல் இல்லாத வகையில்

அவருக்குக் கீழுள்ள அதிகாரிகளுக்குச் சில குறிப்பிட்ட குற்றங்களுக்கு உள்ள தண்டனைகளைக் குறைக்கப் பாராளுமன்றம் அதிகாரம் வழங்கலாம். அமெரிக்காவிலும் பாராளுமன்றம் குடியரசு தலைவரைத் தவிர்த்து வேறு அதிகாரிகளை (உதாரணமாக, கஜானு காரியதரிசி) அபராதம், இழப்பு கட்டணம் முதலியவற்றை நீக்க, குறைக்க அதிகாரம் வழங்கலாம்.

அமெரிக்க அரசியல் சட்டப்படி பொது மன்னிப்பு (Amnesty) கொடுக்கும் அதிகாரம் பாராளுமன்றத்திடம் இருந்தாலும், விசாரணைக்குமுன் மன்னிப்பு வழங்கும் அதிகாரத்தின் அடிப்படையில் குடியரசு தலைவர், பொது மன்னிப்புக் கொடுக்கப் பிரகடனம் செய்யலாம். ஆனல், இந்திய அரசியல் சட்டப்படி பொது மன்னிப்பு பாராளுமன்றத்தின் சட்டமூலமாகத்தான் வழங்கமுடியுமேதவிரக் குடியரசு தலைவரின் மன்னிக்கும் அதிகாரத்தால் செயலாக்க முடியாது.

குடியரசு தலைவரும் தலைமை நீதிமன்றமும்

மேலே சொல்லப்பட்ட நீதித்துறை சம்பந்தமான குடியரசு தலைவரின் நேர்முக அதிகாரத்தைத் தவிர, இந்தியாவில் நீதியை நிலவச் செய்ய வேறுசில அதிகாரங்களும் அவருக்குக் கொடுக்கப் பட்டுள்ளன. உதாரணமாக, இந்தியாவின் தலைமை நீதிபதி (Chief Justice of India) தலைநகரான தில்லியைத் தவிர மற்ற இடங்களில் தலைமை நீதிமன்றம் அவ்வப்பொழுது கூட, குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைப் பெற்றிருக்கவேண்டும் (விதி எண் 130). இதுபோலத் தலைமை நீதிமன்றம் சரிவரத் தன் அலுவல்களைக் கவனிக்க, வழக்கறிஞர்கள் வழக்குகள் சம்பந்தமாய் அங்கு வந்து வாதாட, அவ் வழக்கு மன்றத்தின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தச் சட்ட திட்டங்கள் வகுத்து அவை குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைப் பெறவேண்டும் (விதி எண் 145). இந்தச் சட்ட திட்டங்கள் பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களுக்கு உட்பட்டு இருக்க வேண்டியது அவசியம். தலைமை நீதிமன்றத்தின் விதிகள் 1950-ல் குடியரசு தலைவரின் அங்கீகாரத்துடன் அரசின் அதிகார பூர்வமான அறிக்கையில் (Gazette) பிரசுரிக்கப்பட்டன.

குடியரசு தலைவர், சட்ட சம்பந்தமான ஒரு விஷயத்தைப் பற்றியோ அவருக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று தோன்றிய ஒரு நடவடிக்கை அல்லது நிகழ்ச்சியைக் குறித்தோ தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்தைக் கேட்க அரசியல் சட்டம் விதி எண் 143 (1) அவருக்கு அதிகாரம் அளித்துள்ளது. குடியரசு தலைவர், இம்மாதிரி விஷயங்கள் எங்கு நிகழ்கின்றனவோ

அல்லது நிகழ இருக்கின்றனவோ அவற்றையும் தலைமை நீதி மன்றத்தின் அபிப்பிராயத்தைக் கேட்டு அனுப்பலாம். அவர் பாராளுமன்றத்தில் கொண்டுவர இருக்கும் மசோதா, சட்ட சபையின் பரிசீலனைக்கு அப்பாற்பட்டதா, அதை அங்குத் தீர்மானிக்கத் தகுதி உள்ளதா என்று கேட்டும் அனுப்பலாம்.

விதி எண் 143 - பிரிவு (2)-ன் கீழ் அரசியல் சட்டம் அமலுக்கு வருமுன் செய்துகொண்ட உடன்படிக்கை, ஒப்பந்தம் விஷயமாய்க் கருத்து வேற்றுமை, பிரச்சினை ஏற்பட்டால் அவற்றையும் தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்துக்கு அனுப்பிவைக்கலாம். இந்த உடன்படிக்கைகள் இந்திய அரசு சமஸ்தானங்களுடன் (Princely States) 1947 முதல் 1950 வரை செய்து கொண்டவையாகும். இதற்கிடையில்தான் சமஸ்தானங்கள் இந்தியக் கூட்டாட்சியில் (Indian Union) சேர்க்கப்பட்டன. விதி எண் 143—பிரிவு (2) (Clause 2)-ன்படி குடியரசு தலைவரிடமிருந்து வரும் விஷயங்களைப் பரிசீலனைசெய்து பதில் அனுப்ப வேண்டிய பொறுப்பு தலைமை நீதிமன்றத்திற்கு (Supreme Court) உள்ளது. எனினும், விதி எண் 143—பிரிவு (1) (Clause 1)-ன் படி அது அபிப்பிராயம் தெரிவிக்க மறுக்கலாம். (இதன்படி 1958-ல் கேரளக் கல்வி மசோதாவைப்பற்றிய அபிப்பிராயத்தை அது தெரிவிக்கவில்லை.) தலைமை நீதிமன்றத்திற்கு, தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்க (எது சரியான விஷயம் அல்லது தகுதியில்லாதது என்று தீர்மானிக்க), முழுச் சுதந்திரம் இருக்கிறது. அது கொடுக்கும் தீர்ப்பும் அபிப்பிராயமும் பகிரங்கமாகவும் வெளிப்படையாகவும் இருக்க வேண்டும். அபிப்பிராய பேதம் நீதிபதிகளுக்குள் இருந்தால், கருத்துவேற்றுமையுடைய நீதிபதியும் தம் தீர்ப்பையும் அதற்கான காரணங்களையும் கொடுத்துப் பெரும்பான்மை நீதிபதிகளின் கருத்துடன் இதுவும் பிரசுரிக்கப்படும். தலைமை நீதிமன்றம் குடியரசு தலைவருக்கு இரகசியமாகக் கருத்துத் தெரிவிக்கின்றது என்பதைத் தவிர்க்க அதன் தீர்ப்பு வெளிப்படையாகக் கொடுக்கப்படுகிறது. தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயம் குடியரசு தலைவரைக் கட்டுப்படுத்தாது; ஏனெனில், அது நீதியின் அடிப்படையிலான தீர்ப்பு அன்று; அது வெறும் அபிப்பிராயம்தான். குடியரசு தலைவர் ஏற்கவும் செய்யலாம்; நிராகரிக்கவும் இடமிருக்கிறது. குடியரசு தலைவர் நீதிமன்றத்தின் முடிவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கட்டாயம் இல்லையென்றபோதிலும், சட்டரீதியாக ஏற்காமல் போனாலும், ஒழுக்க விதிகளின் சார்பில் (Under Moral Principles) ஏற்பது நலம். ஏனெனில், இந்தக் கருத்துகள் நாட்டின் மிக உயர்ந்த நீதிமன்றத்திலிருந்து வருகின்ற காரணத்தால் ஏற்கலாம்.

கடந்த ஆண்டுகளில் இதுவரை 5 முறை குடியரசு தலைவர், தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்தைக் கேட்டிருக்கிறார் முதலாவது, 1951-ல் இந்தியாவில் சட்டம் செய்யும் அதிகாரத்தை எந்த அளவிற்கு வைக்கலாம் என்பதுபற்றி (Scope of delegation of legislative power in India) தலைமை நீதிமன்றத்தின் கருத்துக் கோரப்பட்டது. தில்லி சட்டம், 1912; ஆஜ்மீர்-மார்வாரா (சட்ட விஸ்தரிப்பு) சட்டம், 1950; பாகம்-C, மாநிலங்களின் சட்டம், 1950 ஆகிய இம் மூன்று சட்டங்களின் செல்லுபடியாகும் நிலையைப்பற்றிக் (Validity) கருத்துத் தெரிவிக்கும்படி சொல்லப் பட்டது இதில் தலைமை நீதிமன்றம் ஏகமனதாக முடிவு சொல்ல வில்லையானாலும் அதன் தீர்ப்பு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தாகக் கருதப்படுகிறது.

இரண்டாவது முறையாகக் கேரள மாநிலக் கல்வி விஷய மாகக் கருத்துக் கேட்கப்பட்டது. 1957-ல் மசோதா மாநிலச் சட்ட சபையில் தீர்மானிக்கப்பட்டுக் குடியரசு தலைவரின் அங்கீ காரத்திற்கு அனுப்பப்பட்டது. சில அரசியல் சமூக வகுப்பு மக்களுக்கு, கல்வி மசோதாவின் பல விதிகள் அடிப்படை உரிமை களைப் பாதிப்பவையாக இருக்கின்றன என்று கடுமையான கிளர்ச்சி ஏற்பட்டு, அந்த மசோதாவிற்கு, குடியரசு தலைவர் தம் அங்கீகாரத்தை அளிக்கக் கூடாது என்று அவருக்குத் தந்திமேல் தந்தி அனுப்பியும் பிரதிநிதிகள் மூலம் நேரில் எடுத்துரைத்தும் குடியரசு தலைவரை அரசியல் செல்வாக்குள்ளவர்கள் கேட்டுக் கொண்டனர். இந்த மசோதாவிற்குப் பரவலாக எதிர்ப்பு இருப் பதை உணர்ந்த குடியரசு தலைவர், தலைமை நீதிமன்றத்தின் கருத்தை இவ் விஷயத்தில் கோரினர். தலைமை நீதிமன்றத்தின் கருத்துப்படி சில திருத்தங்களையும் மாற்றங்களையும் அந்த மசோதாவில் செய்து மாநில அரசு திரும்பக் குடியரசு தலைவரின் அங்கீகாரம் பெற அவருக்கு அனுப்ப வேண்டும் என்று நீதிமன்றம் சொன்னதன் பேரில், சிபாரிசு செய்யப்பட்ட திருத்தங்களுடன் மசோதாவை நிறைவேற்றி மாநில அரசு குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைப் பெற்றது.

மூன்றுவது முறையாக 1958-ல் இந்தியா-பாகிஸ்தானுடன் செய்துகொண்ட ஒப்பந்தப்படி, சில எல்லைத் தகராறுகளைப் போக்கும் வகையில் அவற்றைத் திருத்தி அமைப்பது, குடியரசு தலைவரால் தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்தைக் கேட்டு அனுப்பப்பட்டது. பெருபாரி கூட்டு எண் 12 (Berubari Union No. 12) விஷயத்திலும் கூச் பீகாரில் நம் நாட்டினிடையே உள்ள அன்னிய நாட்டுப் பகுதிகள் (enclaves) விஷயத்திலும் பாராளு

மன்றம் சட்டமியற்றவேண்டிய அவசியம் இருக்கிறதா, அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமா என்பவற்றைப்பற்றிய கருத்து கோரப்பட்டது. தலைமை நீதிமன்றம், அரசியல் சட்டத்தைத் திருத்தினுலொழிய அப் பகுதிகளை மாற்ற முடியாது என்று அபிப்பிராயம் தெரிவித்ததால் அரசியல் சட்டம் திருத்தப்பட்டது.

நான்காவது தடவையாக உத்தரப் பிரதேச மாநிலச் சட்ட சபைக்கும் அம் மாநில உயர்நீதி மன்றத்திற்கும் ஏற்பட்ட அதிகார வரம்புத் தகராறு விஷயமாய் 1964ஆவது ஆண்டு குடியரசு தலைவர் தலைமை நீதிமன்றத்தின் கருத்தைக் கோரினுர். ஐந்தாவது தடவையாகக் குடியரசு தலைவர் தேர்தல் முறையைப்பற்றித் தலைமை நீதிமன்றத்தின் கருத்து கேட்கப்பட்டது.

எந்தப் பிரச்சினையைத் தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள அனுப்பிவைக்கவேண்டும் என்பது பற்றிக் குடியரசு தலைவர்தாம் முடிவு எடுக்கவேண்டும். உத்தரப் பிரதேச மாநில மசோதாவின் சில ஷரத்துகள் அரசியல் சட்ட விதிகளுக்குப் புறம்பானவைகளா இல்லையா என்ற விஷயம் குறித்துத் தலைமை நீதிமன்றத்தின் கருத்தைக் குடியரசு தலைவர் கேட்கவில்லை அவருக்கு அம் மசோதாவின் சந்தேகத்துக்குரிய பகுதிகளின் விஷயமாகத்தான் கருத்தைக் கேட்டறிந்தார்.

நடைமுறையில், விதி எண் 143-ல் கண்டுள்ளபடி, அமைச்சர்களின் ஆலோசனைப்படிதான் குடியரசு தலைவர் செயற்படுவார். ஆனுல், குடியரசு தலைவர் சில விஷயங்களைப் பொறுத்தவரையில் தம் மனத்திற்குப்பட்டதை அமைச்சர்களின் பரிந்துரை இல்லாமலேயே செய்யலாம். உதாரணமாக, அரசியல் சட்டத்தின்கீழ்க் குடியரசு தலைவர் சில அதிகாரங்களைப் பிரயோகப்படுத்துவதில் அவருக்கும் அமைச்சரவைக்கும் கருத்து வேற்றுமை இருக்குமேயானுல் தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனைக்கு அவராகவே அனுப்பலாம்.

# 10. குடியரசு தலைவரும் அவரின் நெருக்கடி நிலை அதிகாரங்களும்

## (The President and His Emergency Powers)

பல உலகநாடுகளின் அரசியல் சட்டங்களில், அன்னியர் படையெடுப்பு உள்நாட்டுக் குழப்பங்கள் போன்ற நெருக்கடியான சூழ்நிலைகள் உருவாகும் பொழுது அந் நிலையைச் சமாளிக்க அசாதாரண அதிகாரங்கள் (Extraordinary Powers) அரசின் செயற்குழுப் பிரிவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நாட்டின் பாதுகாப்புக்கும் நலனுக்கும் இந்த நெருக்கடிநிலை அதிகாரங்கள் மிகவும் தேவையான ஒன்றாகும். உதாரணமாக, நெருக்கடி நிலையைச் சமாளிக்கும் முறைகள், விதங்கள் (விதிகள்) இந்திய அரசு சட்டம் 1935-லும் ஜெர்மன் நாட்டு வெய்மார் அரசியல் சட்டத்திலும் இருந்தன. இதைப் போல் இந்திய அரசியல் சட்டத்திலும் அசாதாரண நிலையையும், நெருக்கடிகளையும் சமாளிக்கப் போதிய அதிகாரங்கள் குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

மூன்று விதமான நெருக்கடிகள் ஏற்படலாம் என்ற கருத்தில் மூன்று விதமான பிரகடனங்கள் குடியரசு தலைவர் செய்து நாட்டின் அரசியல் அமைப்பில் விரிவான மாறுதல்கள் செய்ய வழி வகுக்கிறது, இந்திய அரசியல் சட்டம்.

(1) போர், அன்னியர் ஆக்கிரமிப்பு, உள்நாட்டுக் கலகம்.

(2) மாநிலங்களில் அரசியல் அமைப்புச் செயற்படாத தன்மையால் ஏற்படும் நெருக்கடியான சூழ்நிலை

(3) நாட்டின் பொருளாதாரச் சிதைவு. ஆகிய இவற்றிற்காக நெருக்கடி நிலையைக் (Proclamation of Emergency) குடியரசு தலைவர் பிரகடனப்படுத்தலாம்.

இ—11

## அன்னியர் ஆக்கிரமிப்பும் உள்நாட்டுக் கலகமும்

அரசியல் சட்ட விதி எண் 325 (1)-ன்படி நாட்டின் அமைதிக்கு ஊறுவிளைவிக்கும் உள்நாட்டுக் கலகங்கள் அல்லது அன்னியர் படையெடுப்பு, நாட்டின் ஒரு பகுதியை அன்னியர் ஆக்கிரமிப்புச் செய்து தம்வசமாக்கிக் கொள்ளும் முயற்சி போன்ற நிலை ஏற்பட்டு நாட்டின் பாதுகாப்பிற்கும் சுதந்திரத்திற்கும் ஊறு ஏற்படலாம் என்று குடியரசு தலைவருக்குத் தோன்றினல் அவர் நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்யலாம்.

இந்த விதியின்படி மூன்று குறிப்பிட்ட சம்பவங்கள்–போர், அன்னியர் ஆக்கிரமிப்பு, உள்நாட்டுக் கலகம்–நடந்தால் குடியரசு தலைவர் நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்யலாம் என்று கூறுகிறது. வரைவு அரசியல் சட்ட விதியில் (Original Draft of the article) ‘அன்னியர் ஆக்கிரமிப்பு’ என்ற வார்த்தையே இல்லை. பிறகுதான் இது அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. எனவே, போர் இல்லாமலேயே ‘ஆக்கிரமிப்பு’ ஏற்பட்டால் நெருக்கடி நிலைப் பிரகடனம் குடியரசு தலைவரால் செய்ய முடியும். ஒரு மாநிலம் மனம் போன போக்கில் அடுத்த மாநிலத்தில் ஆக்கிரமிப்பு நடத்தினல் (போர்ப் பிரகடனம் செய்யாமல்), அது ஆக்கிரமிப்பாகக் கருதப்படும். இவ்விதமான பலவந்தச் செயல்களில் ஒரு மாநிலம் இன்னொரு மாநிலத்தில் ஈடுபட்டால் அது போருக்கு ஆரம்பம் என்று கருதப்படுவதில்லை.

உள்நாட்டுக் கலகம், குழப்பம் ஒரு மாநில ரீதியில், ஏற்பட்டால் குடியரசு தலைவரின் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்யப்படலாம். ஆனல், அரசியல் சட்டத்தில் நெருக்கடிநிலையைப் பிரகடனம் செய்ய எந்தவிதமான கலகம் பொருந்தும் என்பது பற்றி விளக்கம் தரவில்லையாதலாலும், அரசியல் சட்டப் பழக்கத்தில் உள்நாட்டுக் கலகம் என்று சொல்லக்கூடிய வகையில் இதற்கு முன் ஒருநிலை ஏற்பட்டு, அதைச்சமாளிக்க நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்யாததாலும், எப்படிப்பட்ட சூழ்நிலையில் நெருக்கடிநிலை இருப்பதாகக் கருதுவது என்பதற்கு அனுபவக் கூறு எதுவும் இல்லை.

ஒரு மாநிலத்தில் நெருக்கடி நிலைப் பிரகடனத்திற்கான சூழ்நிலை இருப்பதாகக் குடியரசு தலைவருக்குத் தோன்றினல் பிரகடனம் செய்வதற்குமுன் மாநில அரசைக் கலந்தாலோசிக்கச் சட்டத்தில் விதி இல்லாதது வருந்தத்தக்கது. உதாரணமாக, மத்திய அரசின் பொறுப்பு வகிக்கும் அரசியல் கட்சிக்கு மாறுபட்ட கட்சி மாநில அரசின் பொறுப்பை வகிக்கும் பொழுது, அம் மாநிலத்தில் ஏதாவது கலகம் ஏற்பட்டால், அம் மாநில அரசு

நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யுமளவிற்கு நிலைமை மோசமாக வில்லை என்று கருதினாலும், மத்திய அரசு, தன் ஆளுங்கட்சியின் இலாபத்திற்கு, தன் கட்சியின் ஆதரவால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசு தலைவரை (ஏன் அவர் கட்சியின் உறுப்பினராகக் கூட இருக்கலாம்) நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்யச் சொல்ல லாம். இந்த முறையில் மாநில அரசின் சொந்தப் பிரச்சினைகளில், நெருக்கடிநிலை இருக்கிறது என்ற போர்வையில் குடியரசு தலைவர் தலையிட்டால் சட்டரீதியான குடியரசு ஆட்சி முறைக்கும், மாநில சுயாட்சிக்கும் பெருத்த கேடு விளைவிக்கும்.

அரசியல் சட்டத்தின் அட்டவணை 7 பட்டியல் 2 பிரிவு 1-ல் அமைதி, ஒழுங்கு இவற்றை நாட்டில் நிலவச் செய்வது மாநில அரசின் விசேஷப் பொறுப்பு. பாரபட்சமற்ற நீதியின் சார் பிலும், மக்களாட்சி முறையின் அனுபவ வாயிலாகவும் இவ் விஷ யத்தில் மாநில அரசின் அபிப்பிராயத்தை உதாசீனம் செய்யக் கூடாது. மக்களின் அன்றாட வாழ்க்கை சீராக இருக்கிறது என்றும், சட்டம், ஒழுங்கு, அமைதி இவற்றிற்கு எந்தவிதமான ஊறும் விளையவில்லை என்றும் மாநில அரசு கருதினால் மாநிலத்தின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட மத்திய அரசுக்கு உரிமை இல்லை.

இன்னுமொரு முக்கியமான விஷயம் என்னவென்றால் மத்திய அரசின் ஆட்சி பீடத்திலுள்ள ஓர் அரசியல் கட்சிக்கு நேர் எதிரான கட்சி மாநில அரசின் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கும் பொழுது, மத்திய அரசும் குடியரசுதலைவருடன் சதியாலோசனை செய்து அதன் விளைவாக உள்நாட்டுக் குழப்பம் அம் மாநிலத்தில் நிலவுவதாகச் சொல்லி, நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய் தால் அரசியல் சட்டம் எந்த வகையில் அம் மாநில அரசைக் காப்பாற்றும் ? மத்திய அரசு ஆட்சி புரியும் கட்சியின் மாநிலக் கிளையைச் சார்ந்தவர்களும் அம் மாநில ஆட்சியின் சில முற் போக்குக் கொள்கைகளில் வெறுப்புக் கொண்டவர்களும் கலகம், குழப்பம் ஏற்படுத்தினால் அரசியல் சட்டம் அச் சக்திகள் சார்பில் தலையிட இடமளிக்கிறதா ? இக்கேள்விகளுக்கு அரசியல் சட்டம் விதி எண் 355 ஆணித்தரமாகப் பதில் கூறுகிறது. அது கூறுவ தாவது : 'அன்னியர் ஆக்கிரமிப்பிலிருந்தும் உள்நாட்டுக் குழப் பத்திலிருந்தும் முழுமையாகப் பாதுகாத்து அரசியல் சட்டப்படி மாநில அரசு முறையாகச் செயற்பட உதவுவது மத்திய அரசின் தவிர்க்க முடியாத பொறுப்பு.' எனவே, சட்ட அடிப் படையில் முறையாக ஆட்சி நடக்கும் ஒரு மாநிலத்தில், குறுகிய கட்சி இலாபத்திற்காக உள்நாட்டுக் குழப்பம் விளைவிக்கும்

தீயசக்திகள் சார்பாக மத்திய அரசோ, குடியரசு தலைவரோ தலையிட்டால் அது நகைப்பிற்கு இடமளிக்கும்.

அமெரிக்க நாட்டில், ஒரு மாநிலத்தில் குழப்பமோ, கலகமோ ஏற்பட்டால், அம் மாநிலத்தின் சட்டசபை, குடியரசு தலைவரை தன் மாநிலப் பிரச்சினையில் தலையிட அழைப்பு விடுத்தால் மட்டும் தான் அவர் ஆவன செய்வார். மாநிலத்தின் சட்டசபைக் கூட்டத் தொடர் இருந்தால் சட்டசபை குடியரசு தலைவருக்கு அழைப்பு விடும். கூட்டத் தொடர் கலைக்கப்பட்ட நேரத்தில் மாநில ஆளுநர் அழைப்பு அனுப்புவார். இது போலவே ஆஸ்திரேலிய நாட்டின் அரசியல் சட்டம் 'எந்த ஒரு மாநிலத்திலும் உள்நாட்டுக் கலகம் நடந்தால், அந்த மாநில அரசு கேட்டுக் கொண்டால் தான் மத்திய அரசு மாநிலத்தின் பாதுகாப்பிற்குப் போக வேண்டும்,' என்று கூறுகிறது (பிரிவு 119, ஆஸ்திரேலிய அரசியல் சட்டம்). சுவிட்சர்லாந்து நாட்டில் மாநிலங்களுக்குள் (Cantons) குழப்பம் அதிகமாகி நாட்டின் பாதுகாப்பிற்கு அது கேடு விளைவிக்கும் என்று கருதினால் தானாகவே மத்திய அரசு தலையிட்டு நிலைமையைச் சீர்ப்படுத்த அந் நாட்டு அரசியல் சட்டம் வகை செய்துள்ளது.

அமெரிக்க, ஆஸ்திரேலிய நாடுகளின் அரசியல் சட்டத்தில் உள்ளது போல இந்தியக்குடியரசு தலைவரின் தலையீடு, மாநில அரசு உதவி கோரி விண்ணப்பித்த பிறகு இருப்பது மிகவும் விரும்பத்தக்கது. மேலும், மாநில அரசின் கீழ் உள்ள காவற்படை, விசேஷ ஆயுதப் படை, அதனுடைய இதர பிரிவுகள் குழப்பத்தை அல்லது கலகத்தை அடக்கி, அமைதி, சட்டம் இவற்றை நிலை நிறுத்த முடியாது என்று நினைத்தால்தான் குடியரசு தலைவரை உதவிக்கு அழைக்கலாம்— என்ற நிலை ஏற்பட்டால்தான், மத்திய அரசு ஏதாவது ஒரு காரணத்தைக் காட்டி, மாநில நிருவாகத்தில் அனாவசியமாகத் தலையிடாமல் இருக்கும்.

விதி எண் 352-ன் கீழ் உள்ள குடியரசு தலைவரின் 'திருப்தி'

இந்த விதி எண்ணில் கூறியுள்ள குடியரசுதலைவரின் 'திருப்தி' (Satisfaction) என்பது மற்றவர்கள் தூண்டுதல் இல்லாமல் குடியரசு தலைவரே நிலைமையை அனுசரித்துத் திருப்தி கொள்வது என்று பொருள்படும். நெருக்கடி நிலையைப் பிரகடனம் செய்யக் குடியரசு தலைவர் காரணங்களை விவரிக்கத் தேவையில்லை. அல்லது நீதிமன்றத்தில் நெருக்கடி நிலை இருப்பதற்கு வாக்கு மூலம் கொடுத்து அதை நிரூபிக்கத் தேவையில்லை. நீதிமன்றங்களுக்கு இவ் விஷயம் குறித்து ஏன்என்று கேட்பதற்கு அதிகாரம் இல்லை.

குடியரசு தலைவர் ஒருவர்தாம் உடனடியாக அவசரச் சட்டம் பிறப்பித்துச் செயற்படவேண்டிய சூழ்நிலை உருவாகி இருக்கிறதா என்று தீர்மானிக்க வேண்டும்.

இந்திய அரசு சட்டம் 1919 பிரிவு 72-ன்கீழ் ஆளுநர் தலைவர் (Governor General) நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்தபொழுது பகத்சிங் *Vs.* அரசர் (Bagath singh *Vs.* Emperor) வழக்கில் பிரிவி கவுன்சில் (Privy Council) கீழ்வருமாறு தீர்ப்புக் கூறியது.

'நெருக்கடி நிலை சம்பந்தமாகச் சரியான பொருள் கூறமுடியாது. தீவிரமாகச் செயற்படவேண்டிய ஒரு சூழ்நிலையைத்தான் அது குறிக்கிறது. இந்த வகையில்தான் செயற்படவேண்டும் என்று யாராவது ஒருவர்தாம் முடிவுசெய்யவேண்டும். அந்த யாராவது ஒருவர் ஆளுநர் தலைவராகத்தான் இருக்கவேண்டும் என்பது நமக்கு வெளிப்படையாகத் தெரிகிறது. வேறு விதமான கருத்து, இந்த விதியைப் பொருளற்றதாக ஆக்கிவிடும். நெருக்கடி நிலையில் உடனடியான செயல் தேவைப்படுவதால் அந்தச் செயலை, சூழ்நிலைக்கு ஒட்டிச் செய்ய ஆளுநர் தலைவரால் தான் முடியும்'.

இதைப்போலவே அரசருக்கும் பெனோரிலால் (Emperor *Vs.* Benoarilal) சர்மா என்பவருக்கும் ஏற்பட்ட வழக்கில் இளங்கோமகர் சைமன் (Viscount Simon) 'நெருக்கடி நிலை உள்ளதா இல்லையா என்பதைத் தீர்மானிக்கும் ஒரே நீதிபதி ஆளுநர் தலைவர் தாம்,' என்று தீர்ப்பளித்திருக்கிறார். பசந்த் என்பவருக்கும் அரசருக்கும் (Basant *Vs.* Emperor) உண்டான வழக்கிலும், இந்தியக் கூட்டாட்சி நீதிமன்றமும் (Federal Court) இதே கருத்தைத் தெரிவித்தது.

விதி எண் 352-ன் கீழ்க் குடியரசு தலைவர் அதிகாரம் செலுத்துவதற்கும் இதுவே பொருந்தும். 'திருப்தி' என்பது குடியரசு தலைவரின் மனத்தில் தோன்றுகிற முடிவு என்றுதான் பொருள்படுமே தவிர வேறில்லை.

காலவரையறை (Duration)

நெருக்கடி நிலைப் பிரகடனம் (Proclamation of Emergency) செய்த பிறகு குடியரசுதலைவர், ஒன்று அதை மறுபிரகடனம் மூலம் ரத்து செய்து விடலாம். அல்லது அது தொடங்கி 2 மாத காலத்தில் தானாகவே முடிவடைந்து விட விட்டுவிடலாம். அந்த அவசரநிலை தொடர்ந்து இருக்க வேண்டுமானால் அது ஆரம்பித்த

2மாத காலத்திற்குள் பாராளுமன்றத்தின் மக்கள் சபையில் அது நீடிக்க, தீர்மானம் நிறை வேற்றப்படவேண்டும் [விதி எண் 352 (2) (இ)]. இவ்விதமான பிரகடனம், மக்கள் சபை கலைக்கப்பட்ட பிறகு செய்யலாம். அல்லது பிரகடனம் செய்து 2 மாத காலத் திற்குள் மக்கள் சபை கலைத்துவிடலாம். இந்தத் தருணத்தில் மாநிலங்களின் அவை (Rajya Sabha) பிரகடனம் ஆரம்பித்த முதல் 2 மாதத்திற்குள் அது நீடிக்கத் தீர்மானிக்க வேண்டும். இதைப் புதிய மக்கள் சபை தொடங்கிய 30 நாள்களுக்குள் உறுதி செய்ய வேண்டும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் சபை அவசரநிலைப் பிரகடனத்திற்கு அனுமதி கொடுக்கா விட்டால் அந்தச் சபை தொடங்கி 30 நாள்கள் சென்றவுடன் அந்தப் பிரகடனம் செல்லுபடியாகாது.

அவசரநிலைப் பிரகடனம் பாராளுமன்றத்தின் இரு சபை களிலும் வைக்கப்பட வேண்டும். அப்படிச் சபையில் வைக்கப் பட்ட பிரகடனத்தின் மேல் மூன்றில் ஏதாவதொரு முடிவெடுக்க லாம்.

(1) பிரகடனத்தை உறுதி செய்வது

(2) அதுபற்றி எந்தத் தீர்மானமும் போடாமல் விட்டு வைப்பது.

(3) அதை நிராகரிப்பது.

இரண்டு சபைகளும் அவசரநிலை நீடிக்கத் தீர்மானங்கள் செய்து முடித்தால் அந் நிலை இரண்டு மாதங்களுக்குப் பிறகும் நீடிக்கும். ஒரு முறை பாராளுமன்றம் அவசரநிலைப் பிரகடனத் திற்குச் சம்மதம் தெரிவித்துத் தீர்மானங்களை நிறைவேற்றினல் அந் நிலை மறுபடி குடியரசு தலைவர் ஒரு பிரகடனத்தின் மூலம் ரத்து செய்யும் வரை நீடிக்கும்.

நெருக்கடிநிலைப் பிரகடனத்தை இரண்டு சபைகளும் தீர்மானங்கள் மூலம் ஆமோதித்தால், அந் நிலை 2 மாதங்களுக்குப் பிறகும் நீடிக்கும். பாராளுமன்றத்தின் இருசபைகளுள் ஒன்று நெருக்கடி நிலைப் பிரகடனத்தை ஆதரித்துத் தீர்மானம் நிறைவேற்றி அடுத்த சபை ஆதரிக்காமல் நிராகரித்து விட்டால் அந்தப் பிரகடனம் தொடங்கி 2 மாத காலத்திற்கு மேல் நீடிக் காது. இதைப் போலப் பாராளுமன்றத்தின் இருசபைகளும் அல்லது இரண்டில் ஒன்று எந்த நடவடிக்கையும் எடுக்காமல் இருந்தாலும் அல்லது நிராகரித்தாலும் அந்தப் பிரகடனம் 2 மாதங்களுக்கு மேல் அமலில் இருக்காது.

அவசரநிலைப் பிரகடனம் செய்யும் பொழுதே குடியரசு தலைவர் சட்டப்படி பாராளுமன்றத்தின் கூட்டத்தொடருக்கு அழைப்பு விடவேண்டும் என்பதன்று. அல்லது மக்கள் சபை கலைக்கப்பட்ட பிறகு மறுதேர்தலுக்கு உத்தரவு இடவேண்டும் என்றும் கட்டாயம் இல்லை. எனவே, குடியரசு தலைவர் விரும்பினால் பிரகடனம் செய்து 2 மாத காலத்திற்கு ஆட்சி செய்யலாம், மக்கள் சபை கலைக்கப்படாமல் இருந்தால். சபை கலைக்கப்பட்டு இருந்தால் 6 மாதங்களுக்குப் பிரகடன ஆட்சி நடத்தலாம்.

பாராளுமன்றத்தின் இருசபைகளும் அவசரநிலைப் பிரகடனத்திற்கு ஆட்சேபனை தெரிவித்த போதிலும், அந் நிலை 2 மாதங்கள் முடிய அமலில் இருந்தே தீரும். உதாரணமாகக் குடியரசு தலைவர் நெருக்கடிநிலை தொடர்ந்து இரண்டு மாதங்களுக்குப் பிறகும் செயற்பட வேண்டும் என்று நினைக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். ஆனால், பாராளுமன்றம் அந் நிலை நீடிக்க விரும்பவில்லை. நடைமுறையில் பாராளுமன்றத்தின் விருப்பத்திற்கிணங்கத்தான் செயற்குழுப் பிரிவு நடந்து கொள்ளும். எனினும், குடியரசு தலைவர் இந்த விஷயத்தில் பாராளுமன்றத்தின் முடிவை ஏற்காமல் நெருக்கடிநிலை இருந்தே தீரவேண்டும் என்று பிடிவாதமாக இருந்தால் 2 மாத முடிவில் நெருக்கடிநிலைப் பிரகடனம் தீர்ந்த பிறகு மறுபடி இன்னொரு நெருக்கடிநிலைப் பிரகடனம் கொண்டு வரலாம். இரண்டு மாத முடிவிலோ அதற்கிடையிலோ குடியரசு தலைவர் பிரகடனம் செய்து ஆட்சி நடத்தலாம்.

சட்ட சபைகளைக் கொண்ட அரசுகளில். சட்டசபைப்பிரிவிற்கும், செயற்குழுப் பிரிவிற்கும் இடையே பிணக்கு, முக்கியமாக, மக்கள் சபையுடன் நேர்வதில்லை. ஏனெனில், அப்படிப்பட்ட நிலை ஏற்பட்டால் ஒன்று அமைச்சரவை இராஜினமா செய்ய வேண்டும். அல்லது மக்கள் சபை கலைக்கப்பட வேண்டும். செயற்குழுப் பிரிவின்மேல் நம்பிக்கை இல்லாவிட்டால் அந்த அமைச்சரவை இராஜினமா செய்து மக்கள்சபையின் நம்பிக்கையை முழுமையாகப் பெற்றிருக்கும் அமைச்சரவைக்கு வழிவிட வேண்டும்.

## நெருக்கடிநிலைப் பிரகடனத்தின் விளைவுகள்

அரசியல் சட்ட விதிகள்- 83, 250, 353, 354, 358, 359, அவசர நிலைப் பிரகடனத்தின் விளைவுகளைப் பற்றியதாகும். அரசியல் சட்டம் சாதாரணமாகச் செயற்படுவதில் சில மாறுதல்

கள் கொண்டு வருகின்றன. இவற்றைக் கீழ்க்கண்ட 4 பிரிவுகளில் கவனிக்கலாம்.

(1) சட்ட சபைப் பிரிவு

நெருக்கடி நிலைப் பிரகடனம் அமலில் உள்ள போது, மக்கள் சபை செயற்படும் காலம் 5 ஆண்டுகள் ஆனபிறகு, பாராளு மன்றம் சட்டத்தின் மூலம் தன் கால வரம்பை ஓர் ஆண்டு காலத்திற்கு அதிகமாகாமல் நீடிக்கலாம். நெருக்கடி நிலைப் பிரகடனம் செயற்படுவது நின்று போனதிலிருந்து 6 மாதங்களுக்கு மேல் பாராளுமன்றத்தின் நீடித்த பதவி காலம் இருக்க முடியாது.

நெருக்கடிநிலைப்பிரகடனம் செய்த கணமே பாராளுமன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரம் விரிவாக்கப்படுகிறது. நாடு முழுவதற்குமோ நாட்டின் ஒரு பாகத்திற்கோ, மாநிலச் சட்டசபைகள் சட்டமியற்றும் விஷயங்கள் உட்பட, எல்லாவற்றிற்கும் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெறுகின்றது. நடைமுறையில் பாராளுமன்றம், மாநிலச்சட்டசபைகள் எந்தெந்த விஷயங்கள் குறித்துச் சட்டம் செய்யலாம் என்று நிர்ணயிக்கப் பட்டுள்ளதோ அந்த விஷயங்கள் பற்றிச் சட்டமியற்ற அருகதை இல்லை. அப்படிச் செய்தாலும் அது அரசியல் சட்டப்படி செல்லாது. ஆனல், நெருக்கடிநிலைப் பிரகடனம் அமலில் உள்ளபோது மக்கள்சபை, மாநிலங்களின் சட்டமியற்றும் பொறுப்பையும் ஏற்றுக்கொள்கிறது. குடியரசு தலைவரின் பிரகடனம் மாநிலச் சட்டசபையின் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒதுக்கி வைத்துவிட வில்லை என்ருலும் ஒரு விஷயம் குறித்துப் பாராளுமன்றம் இயற்றும் சட்டத்தின் விதிகளுக்கு மாநிலம் இயற்றும் சட்டத்தின் விதிகள் ஏதாகிலும் முரணுக இருந்தால் அம் மாநிலச் சட்டவிதிகள் செல்லுபடியாகாது (விதி எண் 251).

மத்திய அரசின்மேலும் அதனுடைய அதிகாரிகள்மேலும் அதிகாரங்களையும் பொறுப்புகளையும் பாராளுமன்றம் சட்டமியற்றி வினியோகம் செய்ய, நெருக்கடிநிலைப் பிரகடனச் சட்டத்தின் கீழ்ப் பாராளுமன்றத்தின் விரிவாக்கப்பட்ட அதிகாரவரம்பு (Jurisdiction) இடமளிக்கிறது [விதி எண் (ஆ) 353].

மாநிலச் சட்டசபைகளின் சட்டங்களைப் புறக்கணிக்கப் பாராளுமன்றத்திற்கு இருக்கும் தகுதி நெருக்கடிநிலைப் பிரகடன காலம் முடிந்தவுடன் தீர்ந்து விடுகிறது. பிரகடன காலத்தில் பாராளுமன்றம் இயற்றிய சட்டம், பிரகடனம் செல்லுபடியாகாத தேதியிலிருந்து 6 மாத காலம் அமலில் இருக்கும். பிரகடனம்

அமலில் இருக்கும்பொழுது பாராளுமன்றத்தின் இருசபைகளின் கூட்டத் தொடர் இல்லாத சமயத்தில், மாநில அரசின் கீழ் வரும் விஷயங்கள் (Subjects under State list) பற்றியும் குடியரசு தலைவர் நெருக்கடிநிலைச் சட்டம் இயற்றலாம். சாதாரணமாகக் குடியரசு தலைவரின் நெருக்கடி நிலைப் பிரகடனத்திற்குப் பிறகு அவசரக் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரம் மத்திய அரசைச் சார்ந்த விஷயங்கள் குறித்துத்தான் இருக்கும். நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்த காரணத்தால், பாராளுமன்றத்திற்கு மாநில அரசைச் சார்ந்த விஷயங்கள் குறித்தும், சட்டமியற்றும் அதிகாரம் இருப்பதுபோலக் குடியரசு தலைவருக்கும் பாராளுமன்றத்திற்கு இருக்கும் அளவிற்கு நெருக்கடிநிலைச் சட்டம் பிறப்பிக்க அதிகாரம் இருக்கிறது (விதி எண் 123).

(2) செயற்படுத்தும் பிரிவு (Executive)

விதி எண் 73-ன் கீழ் மத்திய அரசின் செயற்குழு அதிகாரம் பாராளுமன்றம் எந்தெந்த விஷயங்கள் குறித்துச் சட்டமியற்ற அதிகாரம் உண்டோ அந்த அளவிற்கு மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், அவசரநிலைப் பிரகடனம் செய்த பிறகு பாராளுமன்றம் மாநில அரசைச் சார்ந்த விஷயங்கள் பற்றியும் சட்டமியற்றலாம். அதே சமயத்தில் மத்திய அரசின் செயற்குழுப் பிரிவும் மாநில அரசின் செயற்குழுப் பிரிவுக்கு அதிகாரத்தை எப்படிப் பிரயோகிக்க வேண்டும் என்று வழி காட்டலாம். உதாரணமாகக் காவல் துறை மாநில அரசின்கீழ்ச் செயற்படுகிறது. ஆனால், நெருக்கடி நிலைப் பிரகடனத்திற்குப் பிறகு காவற்படை எப்படிச் செயற்பட வேண்டும் என்று மத்திய அரசு உத்தரவுகள் பிறப்பிக்கும். மத்திய அரசைச் சார்ந்த அதிகாரிகள் மாநிலத்தில், அம் மாநிலக் காவல் துறை அதிகாரிகள் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யச் சொல்லி உத்தரவு இடலாம். இதை மாற்றிச் சொல்ல வேண்டுமானால் இணைக்கப்பட்ட மாநிலங்களின் சுயாட்சி கணிசமான அளவிற்குக் குறைந்து, அதிகாரங்கள் பிரித்துக் கொடுக்கப்பட்ட ஒரே நாட்டின் பாகங்கள்போல் காட்சியளிக்கும். அதாவது கூட்டாட்சித் தன்மை மாறுபட்டு ஒருமுகஆட்சியாக விளங்கும் (the autonomy of the Constituent states vanishes and they become parts of a decentralised unitary State).

(3) நிதி சம்பந்தமாக (Financial)

நெருக்கடிநிலைப் பிரகடனம் அமலில் இருக்கும் காலத்தில் மத்திய-மாநில அரசுகளுக்கிடையே உள்ள நிதி சம்பந்தமான ஏற்பாடுகள் அரசியல் சட்டத்தின் 268-லிருந்து 279வரையுள்ள

விதிகளைத் தழுவியிருந்தாலும், நெருக்கடிநிலையினுல் ஏற்பட்ட நிதி நெருக்கடியைச் சமாளிக்கவும், மத்திய அரசின் கூடுதல் நிதித் தேவையை ஓரளவுக்குப் பூர்த்தி செய்யவும் மேற்படி விதிகள் குடியரசு தலைவரின் உத்தரவால் சிறிது திருத்தி அமைக்கப்படலாம். குடியரசுதலைவரின் உத்தரவுகள், பிறப்பிக்கப்பட்டவுடன், பாராளுமன்றத்தின் இருசபைகளிலும் வைக்கப்பட வேண்டும் [விதி 354 (2) ]. எந்த நிதி ஆண்டில் நெருக்கடிநிலைப் பிரகடனம் அமலில் இல்லாமல் நின்று விடுகிறதோ அந்த ஆண்டு முடிவில் குடியரசுதலைவரின் உத்தரவுகளும் ரத்து ஆகிவிடும்.

(4) அடிப்படை உரிமைகள்

சாதாரண காலங்களில் இந்தியக் குடிமக்களின் அடிப்படை உரிமைகள் பறிக்கப்படுவது சட்டவிரோதமான செயல். இந்த அடிப்படைஉரிமைகளின் விவரம் அரசியல் சட்டத்தின் 3ஆம் பாகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவின் தலைமை நீதிமன்றமும் குடியுரிமைகளை, செயற் குழுப்பிரிவின் ஊடுருவலிலிருந்து பாதுகாக்கின்றது. விதி எண் 32 அடிப்படை உரிமையைப் பறிகொடுத்த குடிமக்களுக்குத் தலைமை நீதிமன்றத்தில் வழக்குகள் தாக்கல் செய்து நீதிபெற உரிமையை அளிக்கிறது.

அவசரநிலைப் பிரகடனத்திற்குப் பிறகு, விதி 354-ன் கீழ்க் குடியரசு தலைவர், அரசியல் சட்டம், பிரிவு 3-ல் வழங்கப்பட்ட அடிப்படை உரிமைகள் சம்பந்தமாக நீதிமன்றங்களில் வழக்குகள் தொடுக்கும் உரிமையை, தாற்காலிகமாக, பிரகடனம் அமலில் இருக்கும்வரை நிறுத்திவைக்கப்பட்டதாக ஓர் உத்தரவு பிறப்பிக்கலாம். இப்படி நிறுத்தி வைக்கப்படுவது பாகம் 3-ல் கண்டுள்ள எல்லா உரிமைகளுக்கும் அல்லது அதில் ஒரு பகுதிக்கு மட்டும் என்று குறிப்பிடப்பட்டிருக்கும். மேலும், அந்த உத்தரவில் வழக்குகள் போடும் உரிமை நிறுத்தி வைப்பது பிரகடன காலம் வரையிலோ அதற்குக் குறைந்த காலம் வரையிலோ இருக்கலாம். நீதிமன்றங்களில் பிரகடனத்திற்குமுன் பதிவு செய்யப்பட்ட வழக்குகளின் மேல் உள்ள விசாரணைகளும் நிறுத்தப்பட்டுவிடும். பிரகடனம் அமலில் இருக்கும் வரை சமீபத்தில் தலைமை நீதிமன்றம், வழக்குமன்றங்களில் அரசியல் சட்ட விதி எண் 359 (1)- ன் கீழ் வழக்குகள் தொடரும் உரிமை (தலைமை நீதிமன்றம், உயர்நீதிமன்றம்) ஏற்கெனவே தொடரப்பட்ட வழக்குகள் இனித்தொடர இருக்கும் வழக்குகள் எல்லாவற்றிற்கும் பொருந்தும் என்று தீர்ப்பளித்துள்ளது. இதில் வழக்குகள் சம்பந்தமாக எல்லாச் சட்ட நடவடிக்கைகளும் அடங்கும். வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானுல் விதி எண் 359, விதி எ[illegible]2,

226, குற்ற நடவடிக்கை விதி-பிரிவு 491 (Section 491 of the Criminal Procediure Code) ஆகியவைகளின் கீழ்வரும் எல்லா நடவடிக்கைகளுக்கும் பொருந்தும்.

அரசியல் சட்டத்தின் மூலப்பிரதியில் (Original Draft) விதிஎண் 359 -ன் கீழ் எல்லா உரிமைகளையும் நிறுத்தி வைக்கும் அளவுக்கு இருந்தது. அது நியாயமற்றதாகத் தோன்றியதால் அடிப்படை உரிமைகளுள் சிலவற்றையே குடியரசு தலைவர் உசிதப்படி நிறுத்தி வைக்க, திருத்தப்பட்டது. சீனநாட்டின் (China) ஆக்கிரமிப்பின் போது (அக்டோபர் 26. 1962) நெருக்கடி நிலையை அப்போதிருந்த குடியரசு தலைவர் பிரகடனம் செய்தார். மறுபடி நவம்பர் 62-ல் குடியரசு தலைவர் விதிஎண் 358 (1) -ன் கீழ்க் குடிமக்களின் உரிமை சம்பந்தமான வழக்குகள் போடும் உரிமை நிறுத்தி வைக்கப்படுவதாக உத்தரவு போட்டார்.

அடிப்படை உரிமைகளை அமலாக்குதலை நிறுத்தி வைக்கும் குடியரசு தலைவரின் அதிகாரம் பூரணமானதன்று. குடியரசு தலைவரின் உத்தரவு செல்லுபடி ஆகாத வகையில் மறு உத்தரவு சட்டம்மூலம் போட வைக்கவும், நெருக்கடி நிலை நடவடிக்கைகளை மேற்பார்வையிடும் அதிகாரத்தைப் பெற்றதாகவும் பாராளுமன்றம் விளங்குகிறது. குடியரசு தலைவர் பிறப்பிக்கும் உத்தரவுகளைப் பாராளுமன்றத்தின் அங்கீகாரத்திற்கு எத்தனை காலத்திற்குள் வைக்க வேண்டும் என்று அரசியல் சட்டம் கூறவில்லை. அரசியல் சட்டம் சொல்லுவதெல்லாம் 'குடியரசு தலைவரின் ஒவ்வோர் உத்தரவும் பாராளுமன்றத்தின் அங்கீகாரத்திற்கு எவ்வளவு விரைவில் வைக்க முடியுமோ அவ்வளவு விரைவில் வைக்கப்பட வேண்டும்,' என்றுதான். இதனால் குடியரசு தலைவரே அவர் உத்தரவுகளைப் பாராளுமன்றத்திற்குச் சமர்ப்பிக்கும் காலத்தை நிர்ணயிக்க இடமளிக்கிறது. குடியரசு தலைவர், இவ்விஷயத்தில் நியாயமாக நடப்பார் என்று நினைப்பதற்கு இடமிருந்தாலும் அவர் விரும்பினால் இந்த அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யலாம். அவசரச் சட்டங்களின் கொடுமையை ஓரளவுக்குக் குறைக்கவும், குடியாட்சி முறையை அனுசரிக்கவும், குடியரசு தலைவர் தம்முடைய நெருக்கடிநிலை உத்தரவுகளைப் பாராளுமன்றத்தின் அங்கீகாரத்திற்கு வைக்க ஒரு காலவரம்பை நிர்ணயித்து அரசியல் சட்டம் குறிப்பிடுவது விரும்பத்தக்க விஷயம். இம்முறை இங்கிலாந்து, இத்தாலிய நாடுகளின் அரசியல் சட்டங்களில் காணப்படுகின்றது.

விதி எண் 359-ன் படி நெருக்கடி நிலை உத்தரவுகள், குடிமக்களின் அடிப்படை உரிமைகளை முழுமையாகப் பறிக்க

உத்தேசிக்கவில்லை. நெருக்கடிநிலைக் காலத்தில் அடிப்படை உரிமைகளை நிலைநாட்ட, சட்டப்படி வழக்குகள் போடும் மக்களின் உரிமைகள் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுகிறது. எனவே, அவசரநிலைப்பிரகடனம் அடிப்படை உரிமைகளைப் பறித்து விடுவதில்லை. அதை நிலைநாட்டும் உரிமையைத்தான்-அதைக்கூடத் தற்காலிகமாகத்தான் நிறுத்துகிறது. நெருக்கடி நிலை தீர்ந்தவுடன் நீதிமன்றங்களில் வழக்குகள் மூலம் உரிமைகளை நிலைநிறுத்த முயற்சிகள் எடுக்கலாம். விதி எண் 19-ம் அடிப்படை உரிமைகளை நிலைநாட்டும் அதிகாரத்தையும் நீதிமன்றங்களுக்குத் திரும்பக் கொடுக்கின்றது. அரசியல் சட்ட விதிகளைப் புறக்கணித்துச் செய்யப்பட்ட எல்லாவற்றையும் வழக்குகள் மூலம் தகுந்த நடவடிக்கை எடுத்து நீதிமன்றங்களில் வழக்காடலாம்.

இந்திய அரசியல் சட்டத்தைக் கூர்ந்து கவனித்தால் நெருக்கடிநிலைப் பிரகடனம் ரத்தானவுடன் பாராளுமன்றம் ஒரு நஷ்டஈடு சட்டம் கொண்டு வரத் தகுதி படைக்கவில்லை. இங்கிலாந்து பாராளுமன்றம் அவசரநிலைப் பிரகடன காலம் முடிவடைந்தவுடன் நஷ்ட ஈடு சட்டங்கள் அடிக்கடி நிறைவேற்றுகின்றது. ஏனெனில், இங்கிலாந்து பாராளுமன்றம் முழுமையான சுதந்திரம் உடைய ஓர் அமைப்பு. அதன் அதிகாரத்திற்கு நிகர் எதுவுமே இல்லை. 'ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை ஆணாகவும் இயற்கைக் குப்புறம்பாக மாற்றம் செய்வதைத் தவிர இங்கிலாந்தின் பாராளுமன்றம் எதையும் செய்யும்,' என்று நகைச்சுவைபட அதன் அதிகாரத்தைக் குறிக்கும் பொழுது சொல்லுவார்கள். ஆனால், இந்திய அரசியல் சட்டத்தின் கட்டுப்பாட்டின் கீழ் இந்தியப் பாராளுமன்றம் செயற்படுவதாலும் இந்திய அரசியல் சட்டத்தில் நஷ்டஈடு சட்டம் பற்றி எதுவும் கூறாத காரணத்தாலும் இந்தியப் பாராளுமன்றத்திற்கு நஷ்ட ஈடு சட்டம் நிறைவேற்ற அதிகாரம் இல்லை.

### மாநிலத்தில் சட்ட ரீதியான அரசு செயற்படாவிட்டால் (Failure of the Constitutional Machinary in a State)

ஒவ்வொரு மாநிலத்திலும், அரசியல் சட்டத்தின் விதிகளின்படி நிருவாகம் நடக்கவும், அன்னிய ஆக்கிரமிப்பிலிருந்து மாநிலத்தைப் பாதுகாக்கவும், 'உள்நாட்டுக் கலகம்' பலாத்கார சம்பவங்கள் இல்லாமல் பார்த்துக் கொள்ளவும், அரசியல் சட்டம். மாநில அரசுக்கு அதிகாரம் கொடுத்துள்ளது (விதி எண்-355). விதி எண் 356-ன் கீழ்க் குடியரசு தலைவர், இவ் விஷயத்தில் தம் கடமையைச் செவ்வனே செய்ய விசேஷ அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. மாநில ஆளுநரின் அறிக்கையிலிருந்தோ

வேறு வழிகளிலோ, ஒரு மாநிலத்தின் அன்றாட நிருவாகத்தை ஒழுங்காக அரசியல் சட்ட விதிகளுக்கேற்ப நடத்த முடியாதபடி சூழ்நிலை உருவாகியுள்ளது என்று தோன்றினால் உடனே குடியரசு தலைவர் பிரகடனம் மூலம் கீழ்க்கண்ட அதிகாரங்களைப் பிர யோகிக்கலாம்.

(1) மாநில அரசின் எல்லா அல்லது தேவைப்படும் கடமை களையும், ஆளுநரின் அதிகாரங்கள் உட்பட, குடியரசு தலைவர் ஏற்றுக் கொள்ளலாம்.

(2) மாநிலச் சட்டசபையின் அதிகாரங்கள், பாராளு மன்றத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டுச் செயற்படும் என்று அறிவிக்கலாம்.

(3) பிரகடனத்தின் குறிக்கோளைப் பெறுவதற்கான நட வடிக்கைகளை மேற்கொள்வது. இதில் மாநில அரசின் சட்ட திட்டங்களைத் தேவைக்கேற்றபடி தாற்காலிகமாக நிறுத்தி வைப்பது.

உயர்நீதிமன்றத்தின் அதிகாரத்தைக் குடியரசு தலைவர் வகிக்க முடியாது. மேலும், நீதிமன்றம் செயற்படக் காரணமாக இருக்கும் அரசியல் சட்டவிதிகளை நிறுத்திவைக்க அவருக்கு அதிகாரம் இல்லை [Proviso to Art. 356 (1)].

உத்தரவுகள் போடுவது, எச்சரிக்கைகள் செய்வது புதிய தேர்தல் போன்ற அரசியல் சட்ட ரீதியான வழிகள் பயனளிக்கா விட்டால் கடைசி ஆயுதமாக மத்திய அரசு விதி எண் 356-ன் கீழ் உள்ள அதிகாரத்தைச் செயற்படுத்தும். சட்டப்படி மாநில அரசின் நிருவாகம் நடக்க அரசியல் சூழ்நிலை இடம்தரவில்லை என்று குடியரசு தலைவருக்குத் தோன்றினாலொழிய அல்லது மாநில ஆளுநர் குடியரசு தலைவருக்கு அனுப்பும் இரகசிய அறிக் கையிலிருந்து முடிவு செய்தாலொழிய விதி எண் 356-ன் கீழ்க் குடியரசு தலைவர் செயற்படுவது நியாயமானதாக இருக்கமுடி யாது. சட்ட ரீதியான அரசு மாநிலத்தில் நடக்கிறதா இல்லையா என்பது சட்ட ரீதியான கண்ணோட்டத்தில் குடியரசுதலைவர் முடிவு செய்ய வேண்டிய விஷயம் அது.

அரசியல் சட்ட விதிகள் 357 மாநிலச்சட்டசபையின் அதி காரங்கள், அச் சட்டசபை செயற்படுவதை விதி எண் 356-ன் கீழ் நிறுத்தி வைத்திருக்கும் போதும் அம் மாநிலத்தின் அதிகாரங்கள் மத்திய அரசின் பொறுப்பில் இருக்கும் பொழுதும் எப்படி வகிக்கப்பட வேண்டும் என்று விவரிக்கிறது. விதி எண் 357, மேலும், மத்தியப் பாராளுமன்றத்திற்கு, (பிரகடனத்தின் காரண

மாக) கொடுக்கப்பட்ட அதிகாரங்களைக் குடியரசுதலைவருக்கு மாற்றிக் கொடுப்பதுடன், குடியரசுதலைவரும் அவர் தேர்ந்தெடுக்கும் அதிகாரங்களுக்கு அவ் வதிகாரங்களை மாற்றிக் கொடுக்க வகை செய்கிறது. குடியரசு தலைவர் மேலும் அவருடைய உத்தரவால் மாநிலத்தின் ஒருங்கிணைக்கப்பட்ட நிதியிலிருந்து, நிருவாகச் செலவினங்களைச் செய்ய அனுமதிக்கலாம். பாராளுமன்றத்தின் முன் அனுமதி இல்லாமல் இதைத்தவிர விதி எண் 123-ன் கீழ்ப் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் கூடாத காலத்தில் அவசரச் சட்டங்கள் அம் மாநிலத்தின் சார்பில் பிறப்பிக்கலாம்.

மாநிலத்தின் சார்பில் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றம் சில நிபந்தனைகளுடன் குடியரசுதலைவருக்கு மாற்றிக் கொடுக்கிறது. உதாரணமாக, பஞ்சாப் மாநிலத்தில், பஞ்சாப் மாநிலச் சட்டசபை (அதிகாரங்கள் மாற்றுதல்) சட்டம் XLVI. 1951-ல் [Puujab State Legislature (Delegation of powers) Act (XLVI) 1951-ல் குடியரசு தலைவருக்கு மாற்றிக் கொடுக்கப் பட்ட அதிகாரம் பாராளுமன்றத்தால் கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் வழங்கப்பட்டது.

(1) பஞ்சாப் மாநிலச் சட்டசபையின் சட்டமியற்றும் அதிகாரம் பிரகடனம் மூலம் பாராளுமன்றம் அல்லது அதன் அதிகாரம் பெற்றவர்களால் நிருவகிக்க வேண்டியது குடியரசு தலைவரிடம் ஒப்படைக்கப்படுகிறது.

(2) இந்த அதிகாரத்தைப் பிரயோகிக்கும் பொழுது குடியரசு தலைவர் அவ்வப்பொழுது பாராளுமன்றக் கூட்டத் தொடர் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தேவையான விதிகளைக் கொண்ட ஒரு மசோதாவைச் சட்டமாக அமல் நடத்தலாம்.

(3) குடியரசு தலைவரால் கொண்டு வரப்பட்ட ஒவ்வொரு அவசரச்சட்டமும் பாராளுமன்றத்திற்கு வெகு விரைவில் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.

(4) பாராளுமன்றம் ஒரு தீர்மானத்தின் மூலம் குடியரசு தலைவரின் சட்டம் சமர்ப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து 7நாள்களுக்குள் தேவைப்பட்ட திருத்தங்களைச் செய்து அத் திருத்தங்களைக் குடியரசுதலைவருக்கு அனுப்பி வைக்கும். திரும்பவும் குடியரசு தலைவர் ஒரு திருத்த மசோதா மூலம் சட்டமாக்கி அமல் நடத்த வேண்டும் [உப பிரிவு (2)ன் கீழ் உள்ளபடி].

அப்படித் திருத்தம் செய்வதற்குமுன் அமலில் இருந்த சட்டத்தின் சரத்துக்கள் செல்லுபடியாகும்,

குடியரசு தலைவர், அவருடைய பெருவாரியான கடமைகளை அமைச்சரவை ஆலோசனையின்மேல் செய்வதால் ஒரு மாநிலத்தின் சட்டரீதியான நிருவாகம் நடக்கச் சாத்தியக்கூறு இல்லை என்று பிரகடனம் செய்வது, இங்கிலாந்து அரசியைப் போல் சட்டரீதியாக ஆள்பவராதலால், அமைச்சரவையின் விருப்பப்படிதான் செய்கிறார். இந்தக் கருத்தை ஆதரித்துத் திரு. நேரு அவர்கள், 1959-ல் பாராளுமன்ற காங்கிரசுக் கட்சியின் கூட்டமொன்றில் (Congress Parliamentary Party) பேசும் பொழுது 'கேரள மாநிலத்தில் அரசியல் கட்சி ஆட்சியைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்த பொழுது குடியரசு தலைவர் அமைச்சரவையின் திருப்தி படிதான் செய்தாரே அல்லாமல் அவருடைய உசிதப்படியே செயற்படவில்லை'' என்று சொன்னார்.

நாம் விதி எண் 356-ன் கீழ் இன்னுமொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டும். மத்திய அமைச்சரவையின் முடிவுகள் குடியரசு தலைவரைக் கட்டுப்படுத்தும் என்று நினைத்தால், மத்திய அரசு மாநிலங்களின் அதிகாரவரம்புக்குள் அத்துமீறிச் செயற்பட்டால் குடியரசு தலைவர் தடுத்து நிறுத்த முடியாமற்போகும். இப்படிப்பட்ட தலையீடு மத்திய அரசை நடத்தும் அரசியல் கட்சிக்கு எதிர்க்கட்சியாக உள்ள ஓர் அரசியல் கட்சி அம் மாநிலத்தின் ஆட்சிப் பொறுப்பில் இருந்தால் அதிகமாகவோ அனுவசியமானதாகவோ வேண்டுமென்றே மாநில அரசுக்குத் தொல்லை கொடுக்கக்கூட இருக்கலாம். இப்படிப்பட்ட தலையீடுகளால் மாநிலங்களின் தனியாட்சி என்பது பெயரளவில்தான் என்ற நிலை ஏற்பட்டு, மாநில அரசுகள் நகராட்சி மன்றங்களின் நிலைக்கு (Municipal Boards) தள்ளப்பட்டு விடும்.

இதற்கு மாறாக, குடியரசு தலைவர் விதி எண் 356-ன் கீழ், சுயேச்சையாக. தம் விருப்பப்படி செயற்படுவதாக ஏற்பட்டால் அரசியல் கட்சிகளின் பூசல்களில் பங்கு கொண்டு அவர் அனுதாபம் உள்ள கட்சிக்கு ஆதரவு கொடுக்கிறார் என்ற அவச் சொல்லுக்கும் இடமளிக்கலாம். எனவே, குடியரசு தலைவர் இங்கிலாந்து அரசியைப் போல் கட்சிப் பூசல்களுக்கு அப்பாற்பட்டவராக, நடுநிலையாகவே இருந்து ஆக வேண்டும். மேலும், இங்கிலாந்தில், இந்தியாவைப் போல் மாநிலங்களில் தனி அரசும் மத்திய அரசில் கூட்டும் இல்லை. எனவே, மாநிலங்களின் சுயாட்சியில் மத்திய அரசின் தலையீடு என்பது இல்லை. ஆனால், இந்தியாவில் மாநிலங்களின் ஒருங்கிணைந்த அரசு செயற்படுவதால் மத்திய அரசின் தலையீடுகளிலிருந்து மாநிலங்களின் சுயாட்சியைப் பாதுகாப்பது இன்றியமையாததாகிறது. இந்திய அரசியல் முழுமை

யாகச் செயற்பட வேண்டுமென்றால் இக் காரணங்களால் குடியரசு தலைவர் விதி எண் 356-ன் கீழ் அவரின் சொந்த அபிப்பிராயப்படி செயற்பட வேண்டியது அவசியமாகிறது. இல்லாவிட்டால் மத்திய அரசு தன் கட்சியின் நலனுக்காக விதி எண் 356ஐத் துஷ்பிரயோகப்படுத்தினால் குடியரசு தலைவர் வேறு வழியின்றி ஒரு சாதாரணப் பார்வையாளரின் பரிதாப நிலைக்கு ஆளாவார்.

குடியரசு தலைவரால் பிறப்பிக்கப்படும் அவசரச் சட்டம் தொடர்ந்து அமலில் இருக்கப் பாராளுமன்றத்தால் அது பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து 2 மாதத்திற்குள் அங்கீகரிக்கப்படாவிட்டால் இரண்டு மாத முடிவில் செல்லுபடி ஆகாமற்போகும் யூனியன் பாராளுமன்றத்தின் ஒவ்வொரு தீர்மானமும் அவசரச் சட்டத்திற்கு 6 மாத கால உயிரைக் கொடுக்கிறது. 6 மாதத்திற் கொருமுறை 3 வருடங்கள்வரை பாராளுமன்றத்தின் இரு சபைகளும் தீர்மானங்கள் போட்டு அவசரச் சட்டம் அமலில் இருக்கும் காலத்தை நீடிக்கலாம். 3 ஆண்டுகளுக்கு பிறகு, அரசியல் சட்டப்படி, பாராளுமன்றத்திற்கோ, குடியரசு தலைவருக்கோ அவசரச் சட்ட நீடிப்புக்கு அதிகாரமில்லை.

தேசிய நெருக்கடிநிலைப் பிரகடனத்திற்கும், மாநிலத்தின் சட்ட ரீதியான நிருவாகம் முறிந்தது என்ற பிரகடனத்திற்கும் வித்தியாசம் உள்ளது. நெருக்கடிநிலைப் பிரகடனம் அன்னிய ஆக்கிரமிப்பு அல்லது போர் வரலாம் என்று நினைப்பதற்கு இடமிருந்தாலோ உள்நாட்டுக் குழப்பம், கலகம் ஏற்படலாம் என்றாலோ, நாட்டில் பொருளாதாரச் சீர்கேடு ஏற்பட்டு அதன் விளைவாக நிதி நிலை மோசமாக்கப்பட்டாலோ, செய்யலாம். சட்டரீதியான அரசு முறிந்துவிட்டது என்ற பிரகடனம், மாநிலங்களின் அளவில் உள்நாட்டு அல்லது வெளிநாட்டுப் பலாத்காரம் அல்லது அரசியல் முட்டுக்கட்டை போன்ற சூழ்நிலை இருக்கும் பொழுது செய்யப்படுவது. ஒரு மாநிலத்தில் அரசியல் சட்டப்படி நிருவாகம் நடக்கத் தவறினாலும் அல்லது அம் மாநில அரசு சட்ட ரீதியான கடமைகளைச் செய்யத் தவறினாலும் இரண்டாவது வகைப் பிரகடனம் செய்யப்படுகிறது. நெருக்கடிநிலைப் பிரகடனம் அமலில் இருக்கும்பொழுது 7 வகை அடிப்படை உரிமைகளும் தாற்காலிகமாக நிறுத்திவைக்கப்படுகின்றன. அவையாவன : (1) சமத்துவ உரிமை (Right to equality), (2) சுதந்திர வாழ்வுபெறும் உரிமை (Right to freedom), (3) சுரண்டலுக்கு எதிரான பாதுகாப்பு உரிமை (Right against exploitation), (4) விரும்பிய சமயத்தைப் பின்பற்றும் உரிமை (Right to freedom

of Religion), (5) பண்பாடு மற்றும் கல்வி உரிமை (Cultural and Educational Rights), (6) சொத்துரிமை (Right to property), (7) அரசியலமைப்புக்கு உட்பட்டு அடிப்படை உரிமைகளுக்கு ஊறு ஏற்பட்டால் பரிகாரம் தேடுகிற உரிமை (Right to Constitutional Remedies).

மாநிலத்தில் சட்டரீதியான அரசு செயற்படுவதில் முறிவு ஏற்படும்பொழுது செய்யப்படும் பிரகடனம் அடிப்படை உரிமைகள் குறித்து நீதிமன்றங்களில் வழக்குத் தொடரும் உரிமையைப் பாதிப்பதில்லை. இரண்டாவதாக நெருக்கடி நிலைப் பிரகடனத்தால் மத்திய அரசுக்கு மாநிலஅரசின் அது செயற்படுத்தும் விஷயங்கள் பேரிலும் அதிகப்படியான கட்டுப்பாடு இருந்த போதிலும் மாநில அரசின் நிருவாகம் நின்றுபோவவதில்லை. இப் பிரகடனத்தால் மத்திய அரசுக்கு மாநில அரசின் அதிகார வரம்புக்கு உட்பட்ட விஷயங்கள் குறித்துச் சட்டமியற்றவோ, உத்தரவுகள் போடவோ அதிகாரம் உண்டு. நிதி சம்பந்தப்பட்ட வகையில் அரசியல் சட்டப்படி உள்ள விதிகளைக் குடியரசு தலைவர் உத்தரவுகள் மூலம் திருத்தி அமைக்க அதிகாரம் உண்டு (விதி எண் 354). இதற்கு மாறாகச் சட்டரீதியான நிருவாகம் ஒரு மாநிலத்தில் முரிந்து விட்டால் மத்திய அரசே அம் மாநிலத்தின் நிருவாகப் பொறுப்பை ஏற்றுச் செயற்படுகிறது. இதனால் மாநிலத்திலுள்ள உயர்நீதிமன்றம் பாதிக்கப்படுவதில்லை. விதி எண் 356-ன் கீழ் மத்திய அரசு மாநிலச்சட்டப் பிரிவையும், முழுமையாகவோ ஒரு பகுதியாகவோ செயற்குழுப் பிரிவையும் தாற்காலிகமாக நிறுத்திவைக்கலாம். அரசியல் சட்ட விதிகளின்படி ஒவ்வொரு மாநில அரசின் நிருவாகமும் சரிவர நடப்பதில் மத்திய அரசுக்குப் பூரணப் பொறுப்பு இருப்பதன் காரணமாக, மாநில அரசின் சட்ட பூர்வமான நிருவாகம் முறியும் பொழுது அவ் வரசின் நிருவாகப் பொறுப்புகளை மத்திய அரசே ஏற்கிறது. ஆனால், நெருக்கடிநிலைப் பிரகடனத்தில், அன்னியர் ஆக்கிரமிப்பு, உள்நாட்டுக் கலகம் இவற்றிலிருந்து மாநில அரசுக்கு அது பாதுகாப்பளிக்கிறது. ஆகவே, இவ் விரண்டு செயல்களுக்கான அடிப்படைக் காரணங்கள் மாறுபாடு உடையனவாக இருக்கும்.

**விதி எண் 356**

மத்திய அரசுக்கு மாநிலங்களை அன்னியர் ஊடுருவலிலிருந்தும் உள்நாட்டுக் கலகங்களிலிருந்தும் பாதுகாப்பதைத் தவிரச் சட்டரீதியான அரசு மாநிலங்களில் செயற்படும்படியாகப் பொறுப்

புடன் கவனித்துக் கொள்ளவேண்டிய அரசியல் கடமையும் உள்ளது. ஆகவே, மாநில அரசின் நிருவாகத்தில் தலையிட மத்திய அரசுக்கு 3 காரணங்கள் உள்ளன. விதி எண் 352-ன் கீழ் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்வதற்கும், விதி எண் 356-ன் கீழ் மாநில அரசு நிருவாகம் முறிந்துவிட்ட பிரகடனத்திற்கும் சம்பந்தமில்லாவிட்டாலும், விதிகள் 352, 353-ன் கீழ் மத்திய அரசு எடுக்கும் நடவடிக்கைகள் மாத்திரம் போதா என்று குடியரசு தலைவருக்குத் தோன்றினால் விதி எண் 356-ன் கீழ் நடவடிக்கைகள் எடுக்கலாம்.

விதி எண் 356-ல், [5] மாநில அரசு நிருவாகம் அரசியல் சட்ட விதிகளின்படி நடக்க இயலாத நிலை' என்பதற்கு விரிவான பொருள் உள்ளது. உதாரணமாக ஒரு மாநிலத்தில் கலகம் ஏற்பட்டால் அரசை நிருவகிக்கும் கட்சி இயன்றதைச் செய்து நிருவாகம் சீர் குலையாமல் பார்த்துக்கொள்ளும். இத் தருணத்தில் மத்திய அரசும் மாநில ஆளுநரும், மாநில அரசு கையாளும் எல்லா நடவடிக்கைகளுக்கும் ஒத்துழைப்புத் தருவார்கள். ஆனால், இந்தக் கலகம் அடுத்துள்ள மாநிலத்திற்கும் பரவுமானால் விதி 352-ன் கீழ் மத்திய அரசு தேசிய நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்யலாம். இப் பிரகடனத்தின் முக்கிய நோக்கம் அடிப்படை உரிமைகளை நிறுத்தி வைப்பதும், மாநில அரசின் நிதி நிலையை விரிவாக்குவதும்தான்; மாநிலத்தின் சுயாட்சியை அடக்குவது அன்று. அம் மாநிலத்தில் அரசு பொறுப்பில் உள்ள கட்சியை அப்புறப்படுத்துவதனால் அதிக உறுப்பினர்களின் செல்வாக்கைப் பெற்ற கட்சியின் கோபத்திற்கு ஆளாவதுதான் மிஞ்சும். இத் தருணத்தில்தான் எல்லாருடைய ஒத்துழைப்பும் அவசியமாகிறது. சில சந்தர்ப்பங்களில் அரசு பொறுப்பிலிருக்கும் கட்சியே கலகக்காரர்களுக்கு மறைமுக ஆதரவு தரலாம். இத் தருணத்தில் அம் மாநில அமைச்சரவையும் சட்டசபைப் பிரிவும் ஒதுக்கப்படவேண்டியிருக்கும். இதற்கு விதி எண் 356-ன் கீழ் நடவடிக்கை எடுக்க நேரிடும். நடைமுறை குடியரசு முறைப்படி சட்டசபை ஆளுநரால் கலைக்கப்பட்டு மறு தேர்தல் நடக்க வேண்டும். ஆனால், இவ் வழி நிதானமாகச் செயற்படும் சாதனமாகையால் உடனடியாக நடவடிக்கை விதிஎண் 356-ன் கீழ்தான் மேற்கொள்ளவேண்டும்.

ஜூலை 1959-ல் கேரளத்தில் அம் மாநில அரசுக்குச் சட்டசபையில் அதிகப்படி செல்வாக்கு இருந்த போதிலும் மக்களின் வெறுப்புக்கு ஆளாக நேர்ந்தது. இத் தருணத்தில் இடைக்காலத் தேர்தலுக்கு ஒப்புக் கொள்ளவில்லையானால் விதி எண் 356-ன் கீழ்க் குடியரசு தலைவர் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்ய நேரிடும்.

ஆனால், சட்ட ரீதியான அரசு அம் மாநிலத்தில் செயற்பட்ட போதிலும், உள்நாட்டுக் கலகம், மக்களின் நேர்முக நடவடிக்கை மறியல் போன்ற செயல்கள் கட்டுக்கடங்காமல் போனதால் தான் குடியரசு தலைவர் விதி எண் 356-ன் கீழ் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்தார்.

இதற்கு மாறாக மாநில அரசின் கொள்கைகள் மத்திய அரசின் கொள்கைகளுக்கு எதிரானதாக இருந்தாலும் விதி எண்356-ன் கீழ் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்யலாம். உதாரணமாக ஒரு மாநிலத்தில் நிலச்சுவான்தார்கள் (மிராசுதார்கள்) ஆட்சிப் பொறுப்பில் இருந்தால் அவர்கள் நில உச்சவரம்புச் சட்டத்தை மத்திய அரசின் ஆலோசனைப்படி இயற்ற மறுக்கலாம்; அல்லது, சணல் போன்ற மற்றவற்றின் உற்பத்தியைக் குறைத்து நெல் சாகுபடியைத் தீவிரமாக்கலாம். இதனால் நாட்டின் பொருளாதாரம் சீர்குலைய ஏதுவாகலாம். இச் சமயத்திலும் விதி எண் 356-ன் கீழ் மத்திய அரசு செயற்படலாம். அதே போன்று மத்திய அரசின் குடும்பக்கட்டுப்பாட்டுக் கொள்கையை ஏற்காமல் மாநில அரசு செயற்படலாம். இச் செய்கை மாநிலச் சட்டசபையின் ஆதரவைப் பெற்றிருந்தால் சட்டரீதியான கொள்கைதான் என்று கூறலாம். ஆனால், மத்திய அரசின் அடிப்படைக் கொள்கைக்கு மாறுபட்டு இது இருப்பதால், மத்திய அரசு விதி எண் 356-ன் கீழ் நடவடிக்கை மேற்கொள்ளுமா என்பது விவாதிக்கப்பட வேண்டிய விஷயம்.

அரசியல் சட்ட விதிகளின்படி ஆட்சி செலுத்த முடியாதபடி மாநில அரசு நிருவாகம் முறிந்து விட்டது என்று குடியரசு தலைவர் நெருக்கடிநிலையைப் பிரகடனம் செய்யலாம். மாநிலச் சட்டசபையில் பெரும்பான்மை உறுப்பினர்களைக் கொண்ட அரசியல் கட்சிஎதுவும் இல்லாத காரணத்தாலும் அல்லது கட்சிகளின் கூட்டு அரசு அமைய வழியில்லா விட்டாலும் இப் பிரகடனத்தைச் செய்யலாம். அல்லது மறுதேர்தலுக்குப் பிறகும் மேற்கூறிய நிலை நீடித்தால் குடியரசு தலைவரின் பிரகடனம் தவிர்க்க முடியாததாகி விடும். அல்லது ஒரு மாநில அரசை நடத்தும் கட்சி வரிகளை ரத்து செய்து மக்களின் ஆதரவைப் பெற முற்படலாம். இம் மாதிரி நிகழ்ச்சி நடந்தாலும் மத்திய அரசு தலையீடும், பிரகடனமும் நேரலாம்.

டாக்டர் அம்பேத்கார், அரசியல் சட்ட விதிகள் மத்திய அரசுக்கு மாநில அரசின் நிருவாகத்தை ஏற்று நடத்த அதிகாரங்கள் வழங்கியுள்ளதன் அவசியத்தைப் பற்றிக் கூறும்

பொழுது 'இந்த அதிகாரம் மத்திய அரசுக்கு இருப்பது மிகமிக அவசியம். அமெரிக்காவிலும் மத்திய அரசுக்கு அதன் இணைந்த மாநிலங்களில் குடியாட்சி முறையில் அரசு செயற்படுகிறதா என் பதில் பொறுப்பு உள்ளது. இந்த அதிகாரங்களை மத்திய அரசு அரசியல் இலாபத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதில் உண்மை இருக்கிறது. எனவே, இந்த வாதம் அரசியல் சட்டத்தின் எந்தெந்த விதிகள் மத்திய அரசுக்கு மாநிலங்களின் மேல் அதிகாரம் கொடுக்கின்றனவோ அவை எல்லாவற்றிற்கும் பொருந்தும். ஆனால், இந்த அதிகாரங்கள் உண்மையில் பிரயோகிக்கப்படமாட்டா. அப்படிப் பிரயோகித்தாலும் குடியரசு தலைவர் தம் விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்தி இந்த விஷயத்தில் முன் எச்சரிக்கையாக இருப்பார்', என்று கூறுகிறார்.

டாக்டர் அம்பேத்காரின் எண்ணங்கள் கைவிடப்பட்டு விதி எண் 356 அதிகமாக அரசியல் காரணங்களுக்காகவே செயற் படுத்தப்பட்டுள்ளது. உதாரணமாகப் பழைய பஞ்சாப் மாநிலம், பெப்சு, ஆந்திரா, திருவாங்கூர், கொச்சி, கேரளம் (Pre-reorganised States of Punjabs, PEPSU, Andhra, Trivancore-Cochin & Kerala) முதலிய மாநிலங்களில் அரசியல் இலாபத்திற் காக விதி எண் 356 செயற்பட்டது. மாநில அரசு இயந்திரம் முறிந்த காரணத்தால் மத்திய அரசு அம் மாநிலப் பொறுப்பை ஏற்றது என்ற ஓர் ஒத்த காரணமாக இல்லாமல், வேறு காரணங் களுக்காக இவ் விதியைப் பயன்படுத்தி ஆட்சிப் பொறுப்பை அரசியல் காரணங்களுக்காக ஏற்பது நல்ல அரசுக்கு முரணானது.

நிதி சம்பந்தமான நெருக்கடிநிலை

நாட்டின் நிதி நிலைமைக்குச் சீர்குலைவு ஏற்படலாம் அல்லது நாட்டின் பொருளாதாரம் குலைந்து நிதிநிலை மோசமடையலாம் என்று நினைத்தாலும் நிதிநிலை அவசரப் பிரகடனம் குடியரசு தலைவரால் செய்யப்படலாம் (Proclamation of Financial Emergency). இப் பிரகடனம் திரும்ப ஒரு பிரகடனத்தின் மூலம்தான் ரத்து செய்யப்படும். இப் பிரகடனம் அமல் செய்யப்பட்ட தேதி யிலிருந்து 2 மாதங்களுக்குள் பாராளுமன்றத்தின் இரு சபை களிலும் வைக்கப்படவேண்டும். அது நீடிக்கவேண்டுமானால் பாராளுமன்றம் அதை அங்கீகரிக்க வேண்டும். இல்லையேல் பிரகடன தேதியிலிருந்து 2 மாத முடிவில் தானாகவே ரத்து ஆகிவிடும். நாடாளுமன்றம் கலைக்கப்பட்ட பிறகோ பிரகடனம் செய்து 2 மாதங்களுக்குள் மக்கள்சபை கலைக்கப் பட்டாலோ மாநிலங்களின் அவையால் (Rajya Sabha) அங்கீகரிக்கப்பட வேண்டும். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றத்

தால் அது செயற்படத் தொடங்கி 30 நாள்களுக்குள் அங்கீகரிக்கப் படவேண்டும். இப் பிரகடனம் அதிகப்படி 6 மாத காலத்திற்குப் பாராளுமன்றத்தின் அங்கீகாரத்துடன் அமலில் இருக்கலாம். இவ் விதம் 6 மாதங்களுக்கு ஒரு முறை பாராளுமன்றத்தின் ஆதர வுடன் மொத்தம் 3 ஆண்டுகளுக்கு இப் பிரகடனத்தைச் செயற் படுத்தலாம்.

இப் பிரகடனத்தின் விளைவுகள்

(1) இப் பிரகடனம் அமலில் உள்ள காலத்தில், மாநிலங்கள் எவ்விதம் தங்கள் வருவாயை உபயோகிக்கவேண்டும் என்று குடி யரசு தலைவர் வழி முறைகளை உபயோகிக்கலாம்.

(2) இவ் வுத்தரவுகள்பேரில் மாநில அரசு ஊழியர்களின் சம்பளம், வருவாயை எந்த அளவுக்குக் குறைக்கவேண்டும் என்று கூறலாம்.

(3) சட்டசபை தீர்மானித்த எல்லா நிதி மசோதாக்களையும் குடியரசுதலைவர் பரிசீலனை செய்ய உத்தரவு போடலாம்.

(4) இப் பிரகடன காலத்தில் தலைமை நீதிமன்ற நீதிபதிகள் உட்பட மத்திய அரசு ஊழியர்கள் சம்பளத்தைக் குறைக்க உத்தரவு பிறப்பிக்கலாம்.

இந்த விதிகள் அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டதற்கு முக்கிய காரணம் அமெரிக்காவில் தேசிய மீட்புச் சட்டம் 1930 (National Recovery Act 1930)-ல் அந் நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவைச் சமாளிக்கக் குடியரசு தலைவருக்குப் போதிய அதி காரங்கள் வழங்க உருவாக்கப்பட்டது. ஆனால், அந் நாட்டுத் தலைமை நீதிமன்றம் (Supreme Court) அதைச் சட்ட விரோத மானது என்று தீர்ப்பளித்ததால் குடியரசு தலைவர் எந்த நட வடிக்கையையும் மேற்கொண்டு எடுக்க முடியாமற்போய் விட்டது. இந்த நிலை நம்நாட்டில் ஏற்படாவண்ணம் இந்த விதிகள் அரசியல் சட்டத்தில் இணைக்கப்பட்டது (விதி எண் 360).

தேசிய நெருக்கடி நிலைப் பிரகடனம் முதன் முதலில் 1962-ல் அக்டோபர் 26-ல் சீன நாட்டின் (China) ஆக்கிரமிப்புக் காலத்தில் செயற்பட்டது. குடியரசுதலைவர், டாக்டர் இராதாகிருஷ்ணன். நாட்டின் பாதுகாப்பிற்குக் குந்தகம் விளைவிக்கும் விரோதிகள் படையெடுப்பு நடப்பதாக நெருக்கடிநிலைப்பிரகடனம் செய்தார். விதி எண் 362-ன் கீழ். விதி எண் 360-ன் கீழ் நிதி நெருக்கடிநிலை அதிகாரத்தை உபயோகப்படுத்த இதுவரை சந்தர்ப்பம் ஏற்பட வில்லை. ஆனால், மாநிலங்களின் சட்டரீதியான அரசு நிருவாகம்

முறிந்தது என்று பல முறை பிரகடனம் செய்துள்ளார்கள். அவற்றுள் சில: (1) விதி எண் 356ன் கீழ்ப் பஞ்சாப் மாநிலத்தில் பார்கவா அமைச்சரவை (Dr. Bhargava) கவிழ்ந்த பிறகு குடியரசு தலைவர் ஆட்சிப் பிரகடனம் செய்யப்பட்டது. இவ் விதியின் கீழ் (356) இரண்டு உத்தரவுகள் (Viz. S. R. O. 925 & 926) பிறப்பிக்கப்பட்டன. சிறிது காலத்திற்குப் பிறகு சட்டசபை அரசு நிருவாகப் பொறுப்பை ஏற்றதும் குடியரசு தலைவர் ஆட்சிப் பிரகடனம் ரத்து செய்யப்பட்டது.

(2) இரண்டாவதாக, பெப்சு மாநிலத்தில் 1952 பொதுத் தேர்தலுக்குப் பிறகு நிலையான அரசு அமைக்க வழி அமையவில்லை. காங்கிரசு கட்சிக்கு இருந்த பெரும்பான்மை ஆதரவு போய் ஒரு கூட்டாட்சி ஏற்பட்டது. அந்தக் கூட்டாட்சிக்குச் சட்டசபையில் மிகக் குறைந்த அளவில் அதிகப்படி உறுப்பினர்கள் ஆதரவு இருந்ததால் நிருவாகம் செய்ய இயலாமல் குடியரசு தலைவர் ஆட்சிப் பிரகடனம் வந்தது. இதனால் அரசப் பிரதிநிதி (Rajpramukh) ஆலோசகர் இருவருடன் நிருவாகத்தைக் கவனித்தார். அந்த மாநிலத்தின் சட்டமியற்றும் பொறுப்புப் பாராளுமன்றத்திடம் மாற்றப்பட்டது. புதுத் தேர்தலுக்குப் பிறகு காங்கிரசுக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடைத்ததால் சட்ட ரீதியான அரசு ஏற்பட்டுக் குடியரசு தலைவர் ஆட்சிப் பிரகடனம் 1954-ல் ரத்து செய்யப்பட்டது.

(3) 1954-ல் ஆந்திராவில் பிரகாசம் அமைச்சரவை ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது, அக் கட்சிக்குக் காங்கிரசும் சுயேச்சை உறுப்பினர்களும் ஆதரவு கொடுத்தார்கள். ஆனால், மதுவிலக்கு ஆய்வுக் குழுவின் அறிக்கையின்பேரில் நடந்த விவாதத்தில் அமைச்சரவை ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் பேரில் தோற்றது. எதிர்க் கட்சிகள், அரசு அமைக்க முன்வரவில்லை. திரு. பிரகாசமும் தோற்ற பிறகு தொடர்ந்து மறு தேர்தல்வரை பதவியில் இருக்க விரும்பவில்லை. இதனால் அம் மாநில ஆளுநரின் அறிக்கையின் பேரில் நெருக்கடிநிலைப் பிரகடனம் குடியரசு தலைவரால் செய்யப்பட்டது. தேர்தலுக்குப் பிறகு பிரகடனம் ரத்து செய்யப்பட்டது.

(4) 1952-தேர்தலுக்குப் பிறகு 109 உறுப்பினர்களைக் கொண்ட சட்டசபையில் காங்கிரசுக்கு 45 இடங்களே கிடைத்தன. திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரசு கட்சியைக் கூட்டுச் சேர்த்து அரசு பொறுப்பை ஏற்ற காங்கிரசு சட்டசபையில் தோற்கடிக்கப்பட்டது. கூட்டுக் கட்சி அமைச்சர்களுள் சிலர் இராஜினாமா

செய்த பிறகு, குடியரசு தலைவர் சட்டசபையைக் கலைக்கப் பிர கடனம் செய்து திரு. ஜான் அமைச்சரவை தொடர்ந்து அடுத்த தேர்தல்வரை அரசு நிருவாகத்தைக் கவனிக்கச் சொன்னார். 1954 மார்ச்சு மாதம் பட்டம் தாணுப்பிள்ளை அமைச்சரவை பதவியேற்றது. காங்கிரசு கட்சி தன் ஆதரவை இவ் வமைச் சரவைக்கு நிறுத்திக் கொண்ட பிறகு காங்கிரசு கட்சியே 1956-ல் அமைச்சரவையை நிர்ணயித்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றது. இதுவும் தோல்வியடைந்த பிறகு அரசப் பிரதிநிதியே (Raj-pramukh) ஆலோசகருடன் நிருவாகப் பொறுப்பை ஏற்று நடத் தினர். தேர்தலுக்குப் பிறகு 1957-ல் பொதுவுடைமைக் கட்சி (Communist party) அரசு பொறுப்பை ஏற்க நேர்ந்தது.

5. 1959-ல் ஜூலை மாதம் விதிஎண் 356-ன் கீழ்க் கேரள மாநிலத்தில் நெருக்கடிநிலை குடியரசு தலைவரால் பிரகடனம் செய்யப்பட்டது. இந்தக் கம்யூனிஸ்ட் கட்சி அரசுக்குச் சட்ட சபை ஆதரவு இருந்தபோதிலும் மற்ற அரசியல் கட்சிகள், மத வகுப்பு வாதிகள் எல்லாரும் சேர்ந்து உள்நாட்டுக் குழப்பத்தை உண்டாக்கி நிருவாகத்தைச் செயற்பட முடியாமல் செய்ததால் தான் குடியரசு தலைவரின் பிரகடனம் வந்தது.

6. பிறகு ஒரிஸா மாநிலத்தில் 1961-ல் விதி எண் 356-ன்கீழ்க் குடியரசு தலைவர் பிரகடனம் வந்தது. அரசு பொறுப்பில் இருந்த இரு கட்சிகளும், (காங்கிரஸ்-கனடன்ட்ரா Congress G͏natantra coalition) கூட்டணி முறிவால் அரசு பொறுப்பை ஏற்க மறுத்த தால் மத்திய அரசு, மாநில அரசின் பொறுப்பைப் பிரகடனத்தின் மூலம் ஏற்றது.

குடியரசு தலைவரின் முடிவு மாநிலத்தின் ஆளுநர் அறிக்கை யைத் தழுவியதாக இருக்கும். அல்லது தம் கீழ் உள்ள அதிகாரி களின் அபிப்பிராயத்தின்படியும், தம் கருத்துக்குச் சரி என்று தோன்றியதைச் செய்வதாகவும் இருக்கலாம். பெப்சு மாநிலத் தில் குடியரசு தலைவர் ஆட்சிப் பிரகடனம் செய்தபொழுதும் ஒரிஸா மாநிலத்தின் தோற்கடிக்கப்பட்ட காங்கிரசு கட்சியைத் தொடர்ந்து அரசு பொறுப்பில் இருக்க உத்தரவு போட்டதும் மத்திய அரசில் ஆளுங்கட்சியின் அரசியல் இலாபத்திற்காகத் தான் என்பதில் சந்தேகமில்லை. எனவே, நெருக்கடிநிலைப் பிரகடனம் அனாவசியமாக, அடிக்கடி அரசியல் இலாபத்திற்குப் பிரயோகிக்கப்பட்டால் ஜெர்மனி நாட்டின் வேய்மர் அரசியல் சட்டம் அழிந்ததுபோல் இங்கும் ஏற்படலாம். அரசியல் சட்டம் மாநில ஆளுநருக்குப் போதிய அதிகாரம் நெருக்கடிநிலைச் சூழ்நிலை

களில் கொடுக்கிறது. நெருக்கடிநிலையைப் பற்றி ஒரு தீர்மானமோ முடிவோ எடுக்கக் கீழ்க்கண்ட ஏதாவது ஒரு வழிமுறையை அவர் பின்பற்றலாம் ;—

1. அவர் தம் அமைச்சரவையைக் கலந்தாலோசிக்கலாம். ஆனால், அமைச்சரவையின் அதிகாரத்திற்குத் தம்மை உட்படுத்திக் கொள்ளக் கூடாது.

2. அரசியல் தொடர்பு இல்லாத ஒரு குழுவை நியமித்து அதன் முடிவைப் பரிசீலித்துத் தம் விவேகத்தின்படி நடக்கலாம்.

3. தம் சொந்தக் கருத்தைக் கொண்டு நிலைமையை ஆராய்ந்து முடிவெடுக்கலாம்.

மாநில ஆளுநர் அம் மாநிலத்தில் நிருவாகம் முறிந்து விட்டது என்று அறிக்கை சமர்ப்பிக்க விரும்பாவிட்டால் அல்லது குடியரசு தலைவரே வேறு வழிகளில் நிலைமையைத் தெரிந்துகொள்ள விரும்பினால் ஒரு குழுவை நியமித்து அறிக்கையைக் கொடுக்கச் செய்யலாம். இந்தக் குழுவின் பரிந்துரைப்படி குடியரசு தலைவர் முடிவெடுக்கலாம். ஆனால், இந்தவிதமான குழுக்கள் அரசியல் தொடர்போ, கட்சிகளைச் சார்ந்ததாகவோ இருக்கக் கூடாது. இப்படிப்பட்ட குழுக்களின் பரிந்துரைப்படி நடந்தால் குடியாட்சி முறையில் அமையும் குடியரசு தலைவரோ, ஆளுநரோ ஒருதலைப் பட்சமாகவோ ஆளுங்கட்சிக்குச் சாதகமாகவோ நடந்தார்கள் என்ற அவச்சொல் வராது; அரசியல் சட்டம், கட்சிகளுக்கு மேலே நாட்டை மதிக்கிறது. எனவே, ஓர் அரசியல் கட்சியின் ஆலோசனையை ஏற்று நடக்காமல் குடியரசு தலைவரோ, ஆளுநரோ குடியாட்சி முறையில் செயற்பட்டால் அவர் நாட்டின் நடுநாயகமாகச் செயற்படுகிறார் என்ற ஒரு திருப்தி எல்லாருக்கும் ஏற்படும்.

ஒரு நாட்டின் வரலாற்றில் சில இக்கட்டான சூழ்நிலைகள் உருவாகும் காலம் வரலாம். எனவே, இந் நிலையினைச் சமாளிக்கத் தகுந்த உத்திகள் அரசியல் சட்டத்தில் இருப்பது மிக அவசியம். ஒரு நாட்டிற்குத் தற்காப்பு மிகவும் அத்தியாவசியமானது. எனவே, தற்காப்புக்கான தகுதியான வழிமுறைகள் கண்டிப்பாக இருக்க வேண்டும். எனவே, ஒவ்வொரு நாட்டிலும் மத்திய அரசு தன் மாநிலங்களை எதிரிகள் படையெடுப்பு, கலகம் இவற்றிலிருந்து பாதுகாக்கச் சட்டரீதியான பொறுப்புகளை வகிக்கிறது. இம் மாதிரி பொறுப்புகளைச் செவ்வனே செய்ய மத்திய அரசின் அதிகாரங்கள், நெருக்கடிநிலைப் பிரகடன காலத்தில் ஒரேயடி

யாகக் குவிக்கப்பட்டு இருக்கின்றன. இந்த அதிகாரங்களின் விவரம், அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கனடா நாடுகளின் அரசியல் சட்டங்களில் விவரித்து உள்ளவை போல் இந்திய அரசியல் சட்டத்தில் குறிக்கப்படவில்லை. இதற்கு மாறாக இந்திய அரசியல் சட்டத்தில் நெருக்கடி காலத்தில் அதிகாரக் குவியலை அடையும் நிலை, இந்திய அரசு சட்டம் 1935-லிருந்து அப்படியே எடுத்து இந்திய அரசியல் சட்டத்தில் இணைக்கப்பட்டுள்ளது.

அமெரிக்க அரசியல் சட்டம் நெருக்கடி நிலையைச் சமாளிக்க வழிவகையை விவரிக்கவில்லை; குடியரசு தலைவருக்கு அதிகப்படி அதிகாரங்களையும் கொடுக்கவில்லை. அரசியல் சட்டத்தில் கொடுக்கப்பட்ட குடியரசு தலைவரின் அதிகாரங்கள், அவசர நிலையில் அதிகமாவதும் இல்லை; குறைவதும் இல்லை. எனினும், நடைமுறையில் குடியரசு தலைவர் பாராளுமன்றம் இவற்றின் அதிகாரம் அவசரநிலையில் அபரிமிதமாக அதிகரிக்கின்றது. அப்படியிருந்தாலும் நீதிமன்றங்கள் 'இவ்வதிகாரங்கள் கட்டுக் கடங்காதவை அல்ல', என்று தீர்ப்புக்கூறியுள்ளன. போர்ப் பிரகடனம் அரசியல் சட்டம் செயற்படுவதைத் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கவில்லை என்று தீர்ப்புக் கூறியுள்ளது, அமெரிக்கத்தலைமை நீதிமன்றம். இவ் வதிகாரங்கள் சட்டரீதியான கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை என்று நமக்கு விளங்குகிறது.

அயர்நாட்டு (Eire) அரசியல் சட்டத்தின்படி உண்மையிலேயே படையெடுப்பு ஏற்பட்டு அதைச் சமாளிக்கத் திடீர் நடவடிக்கைகள் எடுப்பதைத் தவிர, பாராளுமன்றத்தின் அனுமதி இல்லாமல் செயற்குழு நெருக்கடிநிலை அதிகாரங்களை உபயோகிக்க முடியாது. திடீர்ப் படையெடுப்பின் காரணமாக உடன் நடவடிக்கை மேற்கொள்ளும் பொழுது எவ்வளவு விரைவில் பாராளுமன்றத்தைக் கூட்டமுடியுமோ அவ்வளவு விரைவில் கூட்டி, அனுமதி பெற வேண்டும்.

இங்கிலாந்து நாட்டில் அவசரநிலைப் பிரகடனம் செய்ய மன்னருக்குத் தனி உரிமை கிடையாது. நெருக்கடிநிலை அதிகாரங்கள் அமைச்சரவைக்குத்தான் தரப்பட்டுள்ளன. போர்க் காலத்திலும் உள்நாட்டுக் கலகம் ஏற்படும் போதும் சட்டசபையின் அதிகாரத்தின்கீழ்ச் செயற்படவேண்டும் என்பது முறை. பாராளுமன்றம் இயற்றும் சட்டம் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்ய மன்னருக்கு அதிகாரம் வழங்குகிறது. பிரகடன காலத்தில்

விதிகள் சட்ட பூர்வமாகத் தரப்படுவதால் அச்சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு விதிகள் அமைவது அவசியம்.

ஜெர்மன் நாட்டு வேய்மர் அரசியல் சட்டத்திலும் நெருக்கடிக் காலங்களில் அவசரநிலை அதிகாரங்கள் இணைக்கப்பட்டு இருந்தன. விதிஎண் 48-ன் கீழ் ஜெர்மன் நாட்டுக் குடியரசு தலைவர் தேவைப் படும் அதிகாரங்கள் வகித்துக் குடிமக்களின் அடிப்படை உரிமைகளையும் கூட நிறுத்தி வைக்க அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்தன. ஆனால், அவர் செயற்படுத்தும் அதிகாரங்கள் ஜெர்மன் நாட்டுப் பாராளுமன்றத்திற்குத் (Reich Stag) தெரியப்படுத்தப் படவேண்டும். அது விரும்பினால் அவசரநிலை அதிகாரங்களின் கீழ் உருவான சட்டங்களை ரத்து செய்யவும் கோரலாம். இவ்வரசியல் சட்டவிதிகள் காராணமாக, வான்ஹின்டன் பர்க் (President Von Hindenburg) என்ற ஜெர்மன் நாட்டுக் குடியரசு தலைவர் 1920-ல் பெர்லின் நகர முழுவதற்கும் இராணுவ ஆட்சியை அமல் நடத்தினர். 1924-25-ல் நாடு முழுவதும் இந்த இராணுவச் சட்டம் ஹிட்லருக்கு எதிராக அமலாக்கப்பட்டது. 1930 முதல் 1933 வரை குடியரசு தலைவரின் அவசரச் சட்டங்கள் அந் நாட்டுப் பாராளு மன்றத்தின் அதிகாரத்தைத் தாழ்த்தி அதனுடைய அரசியல் அதிகாரத்தை முழுமையாகப் பறித்தது.

சுவிட்சர்லாந்து நாட்டின் அரசியல் சட்டத்திலும் அவசர நிலைக்கான விதிகள் காணப்படுகின்றன. 1914-லும் 1939-லும் அந் நாட்டுச் சட்டசபை செயற் குழுப்பிரிவுக்கு அதிகமான அதிகாரங்களை வழங்கி, நாட்டின் சுதந்திரம் நிதிநிலை, பொருளாதாரவளர்ச்சி, உணவுப் பொருள்களின் தேவை, இவற்றைச் சரிவரச் செயற்படுத்தக் கோரியது.

எனவே, எல்லா நாடுகளிலும் நெருக்கடி நிலைகளைச் சமாளிக்க அவசரச் சட்டங்களின் கீழ் அதிகாரங்கள் வழங்கப்படுகின்றன.

இந்த அதிகாரங்கள் அமைதி நிலவும்போது கொடுக்கப்படுவதில்லை. சட்டசபைப் பிரிவின் அதிகாரத்தின் கீழ்ச் செயற்குழுப் பிரிவு அவசரநிலை அதிகாரங்களை வகிக்கின்றது.

ஜெர்மன் நாட்டு வேய்மர் அரசியல் சட்டப்படி இந்திய அரசியல் சட்டமும் குடியரசு தலைவருக்கு அவசரநிலை அதிகாரங்களை வழங்குகிறது. அவசரநிலைப் பிரகடனம் 2 மாத காலம்தான் அமலில் இருக்கும். பாராளுமன்றத்தின் இரண்டு சபைகளிலும்

பிரகடனம் சமர்ப்பிக்கப்பட்டு அச் சபைகளின் அங்கீகாரம் வேண்டுமென்பது உண்மைதான். இப் பிரகடனம் நீடிக்க வேண்டுமானால் பாராளுமன்றத்தின் ஆதரவு தெரிவிக்கும் தீர்மானமும் தேவைப்படுகிறது. விதி எண் 359-ன் கீழ் அடிப் படை உரிமைகளை நிலைநாட்டும் வகையில் நீதிமன்றத்தில் வழக்குகள் போடும் உரிமையும் நிறுத்திவைக்கப்படுகிறது. இருந்தும் ஒவ்வோர் உத்தரவும் பாராளுமன்றத்தால் அங்கீகரிக் கப்படவேண்டியிருப்பதால், அவசரநிலை தொடர்வதற்கும் அதன் கீழ் உத்தரவுகள் பிறப்பித்து அமல் செய்வதற்கும் பாராளுமன்றத் திற்குத்தான் முழுமையான அதிகாரம் உள்ளது.

ஆனால், நெருக்கடிநிலை அதிகாரம் வகிப்பதின் உண்மைநிலை இதுவன்று. உதாரணமாக, குடியரசு தலைவர் 2 மாத காலம் நீடிக்கக்கூடிய அவசரநிலைப் பிரகடனம் செய்யலாம் —பாராளு மன்றத்தின் அங்கீகாரம் இல்லாமல். எனவே, குடியரசு தலைவரின் அவசரச் சட்டம் 2 மாத காலம் நீடிக்க எந்தவிதத் தடையும் இடையாது.

அமெரிக்காவில் நீதிமன்றம், பாராளுமன்றம் அவசரச் சட்டத்தைத் தள்ளிவைக்கவேண்டிய சூழ்நிலை இருக்கிறதா என்பதை ஆராய்ந்து கூற இடமளிக்கிறது. நீதிமன்றங்களுக்கு அவசரநிலை அதிகாரங்களைச் செயற்படுத்தும் அவசியத்தைப் பரிசீலித்துத் தீர்மானிக்க அதிகாரமில்லை. இங்கிலாந்தில் போரினால் ஏற்படும் அவசர நிலைக்கும், உள்நாட்டுக் கலகம் போன்ற அவசர நிலைக்கும் வித்தியாசம் செய்யப்பட்டுள்ளது. போர் அல்லாத அவசர நிலையில் குடிமக்களின் அடிப்படை உரிமைகள் பாதிக்கப்படுவதில்லை. ஆனால், இந்திய அரசியல் சட்டத்தில் இந்த வித்தியாசம் தெரியவில்லை. இரண்டுவித அவசர நிலையும் ஒரே கோணத்தில் காணப்படுகின்றன. விதிஎண் 352-ன் கீழ் எவை எவை உள்நாட்டுக் கலகம், அமைதியின்மை என்று கருதப்படும் என்று விவரிக்கவில்லை. ஜெர்மன் நாட்டு வேய்மர் அரசியல் சட்டத்திலும் பொதுவாக 'அமைதி, பாது காப்பு, ஒழுங்கு இவற்றிற்குத் தீங்கு ஏற்பட்டால் நெருக்கடிநிலைப் பிரகடனம் செய்யலாம்', என்று கூறப்பட்டிருந்ததால் அரசியல் கட்சிகளின் பூசல்கள் போன்றவற்றிற்கும் அவசரநிலைப் பிரகடனச் சட்டங்கள் பரவலாகப் பயன்படுத்தப்பட்டன. இதே முறை இந்திய அரசியல் சட்டத்திலும் ஒரு பொது வேலை நிறுத்தம் போன்ற நிலைமையைச் சமாளிக்கக்கூட அவசரநிலைப் பிரகடனமும் அவசரச் சட்டமும் போர்க் காலத்தில் செயற்படுத்துவதுபோல் தாராளமாக உபயோகப்படுத்தப்பட வழியிருக்கிறது. அவசர

நிலைப் பிரகடனம் செய்யப்படுவதில் விதிஎண் 19-ல் கண்டுள்ள ஏழு அடிப்படை உரிமைகளும் நாடு முழுவதும் தாற்காலிகமாக நிறுத்தி வைக்கப்படுகின்றன. இது சில சமயங்களில் விரும்பத் தகாத விளைவுகளை உண்டாக்கலாம். நாட்டின் ஒரு பாகத்தில் அவசரநிலை விதிஎண் 358-ன் கீழ் அதிகாரங்கள் செலுத்த இட மளிக்கும். ஆனால், எந்தவித சம்பந்தமும் இல்லாத நாட்டின் வேறொரு பகுதியில் மக்கள் அவசரநிலைப் பிரகடன அவதிக்கு உட்படுத்தப்படுவார்கள். மேலும், விதிஎண் 352-ன் கீழ் மற்றொரு பிரகடனம் செய்து நீதிமன்றங்கள் அடிப்படை உரிமைகளை நிலை நாட்டும் அதிகாரத்தையும் நிறுத்திவைக்கலாம். இந்த உரிமை களை நாடு முழுவதிலும் அல்லது ஒரு பகுதியில் குடியரசு தலைவர் முடிவுப்படி நிறுத்தி வைக்கலாம்.

அமெரிக்க அரசியல் சட்டத்தில் இந்திய சட்ட விதிஎண் 358-ஐப் போல் சரத்துகள் இல்லை. எனவே, அடிப்படை உரிமை களை நிறுத்த அதிகாரம் கிடையாது. ஆளுரிமைக் காப்புக்கட்டளை (Habeas Corpus) உரிமை ஒன்று மட்டிலும் படையெடுப்பு, கலகம் நாட்டில் ஏற்பட்டால் நிறுத்தி வைக்கப்படலாம். வேலை நிறுத்தம் போன்ற விஷயங்கள் இந்த உரிமையைப் பறிக்கப் போது மானதன்று.

இங்கிலாந்தில் நெருக்கடிநிலைப் பிரகடனம் பாராளுமன்றத் தில் சமர்ப்பிக்கப்பட வேண்டும். பாராளுமன்றத்தின் கூட்டத் தொடர் நடக்காவிட்டால் 5 நாள்களுக்குள் அந்தச்சபை கூட அழைப்பு அனுப்பவேண்டும். இம்மாதிரியான காலவரம்பு சட்ட சபைக் கூட்டம் தொடங்க இத்தாலிய நாட்டின் அரசியல் சட்டத் திலும் காணப்படுகின்றது. இந்தியாவிலோ விதிகள் 354, 356-ன் கீழ்க் குடியரசுதலைவரின் உத்தரவுகள் பாராளுமன்றத்தில் வைக்கப் படவேண்டுமானாலும் அவை வைப்பதற்கான காலவரம்பை அரசியல் சட்டம் நிர்ணயிக்கவில்லை. எனவே குடியரசு தலைவர் விரும்பினால் பாராளுமன்றம் அவர் உத்தரவுகளின் மேல் முடிவு எடுப்பதைத் தாமதப்படுத்தலாம்.

இந்திய அரசியல் சட்டத்தில் காணும் நெருக்கடிநிலைப் பிரகட னத்தின் கீழ்க் குடியரசு தலைவர் வகிக்கும் அதிகாரங்கள் அபரிமித மானவை. எனவே, ஜெர்மன்நாட்டு வேய்மர் அரசியல் சட்டத் தில் உள்ள அவசரநிலை விதிகளுக்குத்தான் ஓரளவுக்கு ஒப்பிட்டாக வேண்டியிருக்கிறது. ஜெர்மன் நாட்டில் அவசரச் சட்டம் எந்த அளவுக்குத் துஷ்பிரயோகம் ஆனது என்பது பலர் அறிந்த

உண்மை. வேய்மர் அரசியல் விதி 48-ன் கீழ்க் குடியரசு தலைவரின் அவசரச் சட்டங்கள் அந் நாட்டுத் தலைவரால் (Chancellor) உறுதி யளிக்கும் முறையில் கையொப்பமிடப்படவேண்டும். அந் நாட்டுப் பாராளுமன்றம் அவற்றை ரத்து செய்யவும் இடமுண்டு. இந்தக் கட்டுப்பாடுகளுடன் இருந்த போதிலும் ஒரு திறமை வாய்ந்த சர்வாதிகாரி இந்தக் கட்டுப்பாடுகளை மீறித் தம்மிச்சையாகச் செயற்பட இடமளித்தது. ஜெர்மன் நாட்டுப் பிரதமரை நியமிக் கவும், பாராளுமன்றத்தைக் கலைக்கவும் அதிகாரம் மேற் கொள்ளப்பட்டது, அந் நாட்டுத்தலைவரால்.

பிரதமர் நியமனம், பாராளுமன்றக் கலைப்பு, அவசரச் சட்டங்கள் மூலம் ஆட்சி நடத்துவது இவை இந்தியக் குடியரசு தலைவரின் அதிகாரங்கள். இவை தவிர ஜெர்மன் நாட்டு அரசியல் சட்டத்தில் இல்லாத, இயற்றிய சட்டத்திற்கு அவரின் அங்கீகாரத்தைத் தராமல் நிறுத்துவது (Legislative Veto) ஒரு முக்கிய அம்சம்.

தனித்திறமையுள்ள ஓர் இந்தியக் குடியரசு தலைவர் தம் அதிகாரங்களை நெறிதவறி உபயோகித்து ஒரு சர்வாதிகாரியாகத் தம்மை ஆக்கிக் கொண்டு, பாராளுமன்றத்தைக் கலைத்து, தமக்கு ஆதரவாக உள்ள ஒருவரைப் பிரதமராக்கித் தம்மிச்சையாக அரசு நடத்த இந்திய அரசியல் சட்டம் இடமளிக்கிறது என்று நம்பு வதில் உண்மை இல்லாமல் இல்லை. அரசியல் சட்ட நிர்ணய சபை யின் கருத்துக்கு மாறாக (இங்கிலாந்து அரசியைப் போல் குடியரசு தலைவர் செயற்படத்தவறி) குடியாட்சி மரபுகளைப் புறக்கணித்துச் செயற்பட்டால் அவரது செய்கை சட்டவரம்புக்குள்தான் இருக்கும். ஏனெனில், நமது அரசியல் சட்டம் இதற்கான விதிகளைத் தெளிவாகக் கொண்டுள்ளது. குடியரசு தலைவர் பாராளுமன்றத்தைப் புறக்கணித்து அவசரச் சட்டம் மூலம் நிருவாகம் நடத்தினால் அவரின் செய்கை மேலே குறிப்பிட்டபடி தான் இருக்கமுடியும். அவசர நிலைப் பிரகடனம் எல்லாச் சுதந் திரத்தையும், அடிப்படை உரிமைகளையும் தாற்காலிகமாக நிறுத்தி நீதிமன்றங்களையும் இவ்வுரிமைகளை நிலைநாட்ட இயலாதபடி செய்து விடுகிறது.

குடிமக்களின் அடிப்படை உரிமைகளை நிறுத்துவது என்பது ஜனநாயக நெறிக்கே முரண்பட்ட செயல்.

முடிவில் விசேஷ அதிகாரங்களை அவசரநிலைக் காலத்தில் செயற்குழுப் பிரிவுக்குப் (Executive) பல தேசங்களின் அரசியல்

சட்டங்கள் அனுமதித்தாலும், செயற்குழுப் பிரிவுச் சட்டப் பிரிவின் அதிகாரத்தின் கீழ்தான் இவ் வதிகாரங்களை நெருக்கடிக் காலங்களில் வகிக்கின்றன. ஆனால், இந்தியாவில் செயற்குழுப் பிரிவுக்கு ஒரு தனிச்சலுகை கொடுக்கப்பட்டுள்ளது. செயற்குழுப் பிரிவு சட்டத்துறைப் பிரிவுகளுக்கு அடங்கியில்லாமல் ஒருபடி மேலே உள்ளது. இந்த நிலை குடியரசு நெறிக்கு ஏற்றது என்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில், மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட சட்டசபைதான் மிக முக்கியத் துவம்—குடியரசு ஆட்சியில் உடைத்தாயிருக்கிறது.

அவசரநிலைக் காலத்தில் மூன்று பிரிவுகளும் இணைந்து செயற் படவேண்டும். அப்படி இல்லாமல் செயற்குழுப் பிரிவுக்கு விசேஷ அதிகாரங்களைக் கொடுத்து அது உயர்ந்த நிலையில் இயங்குவது முறையில்லை. டாக்டர் அம்பேத்கார் கூட அவசர நிலை சரத்துகள் குடியரசு தலைவரை ஒரு சர்வாதிகாரியாக மாற்றி அவர் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதிலிருந்து தடுத்துப் பாதுகாக்க எந்தத் தடையும் சட்டத்தில் இல்லை என அபிப் பிராயப்படுகிறார். இருப்பினும் இந் நிலைக்கு மிக நேர்த்தியான பரிகாரம் பலம் வாய்ந்த பாராளுமன்றம்தான். அதிலும் முக்கிய மாக மக்கள் சபையாகும். பாராளுமன்றம் கூடியுள்ளபொழுது, பெரும்பான்மை உறுப்பினர்கள் அவசரநிலைப் பிரகடனத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்தால் குடியரசுதலைவர் தம் அவசரச் சட்ட மியற்றும் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்யவே இயலாது. குடியரசு தலைவரின் நெருக்கடிநிலைப் பிரகடனத்தின் அடிப்படை யில் செய்யப்படும் சட்டங்களில் கீழ்க்கண்ட சில ஆலோசனைகளை, அதிகாரங்களைத் துஷ்பிரயோகம் செய்யாமல் தடுக்கக் கூறலாம்.

1. நெருக்கடிநிலைப் பிரகடனம் அமலில் இருக்கும்பொழுது பாராளுமன்றத்தைக் கூட்டுவது, கலைப்பது, தள்ளிவைப்பது போன்ற அதிகாரங்களைக் குடியரசு தலைவரிடம் இருந்து எடுத்து விடவேண்டும். நெருக்கடிநிலை தீர்ந்தவுடன் அந்த அதிகாரங்கள் திரும்ப அவருக்குப் போய்ச் சேரும்.

2. அவசரநிலைப் பிரகடனம் செய்த 7 நாள்களுக்குள் பாராளுமன்றக் கூட்டத் தொடர் இல்லாவிட்டால் கூட்டப்பட வேண்டும்.

3. தற்சமயம் இருக்கும் மக்கள் சபை, வர இருக்கும் தேர்தலை முன்னிட்டுக் கலைக்கப்பட்டுவிட்டால் அதன் காலம் நீடிக் கப்பட வேண்டும்.

4. சபையைக்கலைப்பது, கூட்டுவது அதன் பதவிக்காலம் நீடிப்பு இவற்றிற்கான அதிகாரம் பாராளுமன்றத்தின் சபைகளுக்கேசொந்தமாகஇருக்கவேண்டும். குடியரசு தலைவரின்சம்மதத்தின் பேரில் மசோதா மூலம் பதவிக்காலத்தை நீடித்துத் தீர்மானம் செய்வதில் உள்ள தாமதம் நீங்க வேண்டுமானல் ஒரு சாதாரணத் தீர்மானம் மூலம் அதுவே அதன் பதவிக்காலத்தை நீடிக்க வகை செய்ய வேண்டும்.

இவை அரசியல் சட்டத்தில் இடம் பெற்றால் குடியரசு தலைவரின் அதிகாரத் துஷ்பிரயோகத்திற்கு இடமளிக்காமல் பாராளுமன்றத்தின் சுதந்திரம் நிலைநாட்டப்படும்.

# 11. குடியரசு தலைவரும் மாநில ஆளுநர்களும்
## (The President and the State Governors)

மத்திய அரசில் எப்படிக் குடியரசு தலைவர், அமைச்சரவை, பாராளுமன்றம், தலைமை நீதிமன்றம் என்று இருக்கின்றனவோ அதேமாதிரி மாநிலங்களிலும் ஆளுநர், அமைச்சரவை சட்ட மன்றங்கள், உயர்நீதிமன்றம் என்று இருக்கின்றன. எப்படி இந்திய அரசு தலைமையில் குடியரசு தலைவர் இருக்கிறாரோ அம் மாதிரி மாநிலங்களின் அரசு தலைமையில் ஆளுநர் இருக்கிறார். மாநில அரசின் தலைவர் ஆளுநர்.

ஆளுநர் நியமனம்

மாநில ஆளுநர் குடியரசு தலைவரின் கையெழுத்து, முத்திரை பொதிந்த உத்தரவின் (Warrant) கீழ் நியமனம் பெறுகிறார் (விதி எண் 155). சாதாரணமாகப் பதவி ஏற்ற தேதியிலிருந்து 5 ஆண்டு காலம் வரை பதவி வகிப்பார். விதிஎண் 156-ன் படி, குடியரசு தலைவரின் விருப்பத்தின் மேல்தான் பதவியிலிருப்பார்.

அரசியல் சட்ட நிர்ணய சபை ஆளுநரைத் தேர்ந்தெடுப்பதில் 4 விதமான மாற்றுக் கருத்துகளை விவாதித்த பிறகுதான் முடிவாக ஆளுநரைக் குடியரசு தலைவர் நியமனம் செய்வதை ஏற்றுக் கொண்டது. அவை பின்வருமாறு :

(1) வயது வந்த வாக்காளர்களால் தேர்ந்தெடுப்பது.

(2) மாநிலச் சட்டமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால் தேர்வு அல்லது இரண்டு சபைகளும் சேர்ந்தே தேர்ந்தெடுப்பது.

(3) மாநிலச் சட்ட மன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் சபை (M. L. As) தயாரிக்கும் பட்டியலிலிருந்து குடியரசு தலைவர் ஒருவரை நியமனம் செய்வது.

(4) குடியரசு தலைவர்மட்டுமே ஒருவரை நியமனம் செய்வது.

இந்த நான்கு முறைகளும் அரசியல் நிர்ணய சபையால் நன்கு பரிசீலனை செய்யப்பட்டு முடிவில் நான்காவதுவகைத் தேர்வு ஆளுநர் நியமன விஷயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. குடியரசு தலைவர் ஆளுநரை நியமனம் செய்வதுதான் சிறந்த முறையாகத் தெரிகிறது. ஏனெனில், தேர்தல் மூலம் வரும் ஆளுநர் அமெரிக்க மாநில ஆளுநரை ஒத்து இருப்பார். அமெரிக்க நாட்டில் உள்ளது போன்ற குடியரசு தலைவர் ஆட்சியை இந்தியாவில் நிராகரித்த காரணத்தால் தேர்தல் இன்றி ஆளுநரைக் குடியரசுதலைவர் நியமனம் செய்வது ஏற்றுக் கொள்ளப்பட்டது.

எனவே, இந்திய அரசியல் சட்டம் ஆளுநர் நியமன விஷயத்தில் அமெரிக்காவில் மாநிலங்கள் ஒருங்கிணைந்த முறையைக் (Federal System of Govt.) கையாளாமல் கானடா நாட்டில் எப்படி ஆளுநர்தலைவர், ஆளுநரைப் பிரதேசங்களுக்கு நியமிக்கிறரோ அதே முறையைப் பின்பற்றுகிறது. அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், ஆளுநர் நியமனம் பற்றிப் பேசுகையில் 'பொதுவாகச் சுமுக உறவு, நல்ல நிருவாகம், ஆளுநருக்கும்அமைச்சரவைக்கும் இடையே நிலவ வேண்டிய நெருங்கிய உறவு இவற்றிற்காகக் கானடா நாட்டு முறையை நாம் ஏற்றுக் கொள்வது நல்லது', என்று கூறினார்.

உண்மையில் ஆளுநர் நியமன விஷயத்தில் மற்ற விஷயங்களைப் போல் அமைச்சரவை ஆலோசனையை ஏற்றுத்தான் குடியரசு தலைவர் செயற்படுகிறார். எனவே, ஆளுநர் மத்திய அரசின் நியமனம் பெற்றவர். எனினும், ஆளுநரை நியமிப்பதற்கு முன் மத்திய அரசு சம்பந்தப்பட்ட மாநில அரசைக் கலந்தாலோசித்த பிறகு செயற்படுத்தும் மரபு வளரவேண்டும் என்று அரசியல் நிர்ணய சபை ஒரு நம்பிக்கை தெரிவித்தது. இந்த அரசியல் மரபு இன்று அமலில் உள்ளது. ஆகவே, குடியரசு தலைவர், மாநில அரசு விரும்பாத ஒரு நபரை மாநில ஆளுநராக நியமிக்க மாட்டார்.

ஆளுநர் பதவி நீக்கம்

இந்திய அரசியல்சட்டம் குடியரசு தலைவரைப் பதவி நீக்கம் செய்யத் துரோகக் குற்றச்சாட்டு (Impeachment) மூலம்தான் முடியும் என்று கூறுகிறது. ஆனால், மாநில ஆளுநரைப் பொறுத்த வரையில் குடியரசு தலைவரே அவரைப் பதவியிலிருந்து நீக்கி

விடலாம். இந்த அதிகாரத்தைக் குடியரசு தலைவர் மத்திய அரசின் அமைச்சரவையைக் கலந்துதான் செயற்படுத்துவார். எனவே, குடியரசு தலைவர் ஆளுநரைப் பதவிநீக்கம் செய்தாலும் உண்மையில் பிரதம அமைச்சரின் சிபாரிசின்படிதான் செயற் படுவார். எந்தக் காரணமும் காட்டாமல் ஆளுநரைப் பதவி நீக்கம் செய்யக் குடியரசுதலைவருக்கு உரிமையிருப்பதால் அரசியல் காரணத்திற்காகக்கூடப் பதவி நீக்கம் செய்யலாம். ஆனால், கானடா நாட்டின் ஆளுநர் தலைவர் Governor-General)- உதவி ஆளுநரைப் பதவிநீக்கம் செய்யக் காரணங்கள் காட்டித்தான் செய்வார். எனவே, இந்த விஷயத்தில் கானடா நாட்டு அரசியல் சட்டத்திற்கு மாறுபட்டு உள்ளது இந்திய அரசியல் சட்டம்.

அமெரிக்க நாட்டில்கூடச் சட்டப்படி ஒரு மாநில ஆளுநரைப் பதவி நீக்கம் செய்யத் துரோகக்குற்றச்சாட்டுத் தேவைப்படும். அவர் அம் மாநிலச் சட்டசபையில் குற்றச்சாட்டுப் பத்திரிகையின் பெரும்பான்மைத் தீர்மானத்தின் மேல பதவி நீக்கம் செய்யப் படுவார். எனவே, ஆளுநரைப் பதவி நீக்கம் செய்வது இந்திய அரசியல் சட்டத்தில் கானடா, அமெரிக்காவில் உள்ளது போலில் லாமல் தனித்துக் காணப்படுகிறது. அமெரிக்கக் கூட்டாட்சியில் இருக்கும் சில மாநிலங்களின் அரசியல் சட்டத்தின்படி பொது மக்களின் வாக்குமூலம் ஆளுநரைத் திருப்பி அழைத்துக் கொள்ள வழி வகுக்கின்றது.

**மாநில ஆளுநர்களின்மேல் குடியரசு தலைவருக்கு உள்ள கட்டுப்பாடு**

இந்திய அரசு சட்டம் 1935-ன்படி, ஆளுநர் தலைவரின் அறி வுரைப்படி ஆளுநர் தம் உசிதப்படி செய்யும் காரியங்களில் நடக்க வேண்டும் என்று கண்டுள்ளது. இதே ரீதியில் இந்திய அரசியல் சட்டத்திலும், ஆளுநர் மாநில அமைச்சரவையின் ஆலோ சனைப்படி செயற்படாமல் குடியரசுதலைவரின் ஆலோசனையை ஏற்றுச் செயற்பட வழி வகுக்கப்பட்டுள்ளது. மத்திய அரசையும் மாநில அரசையும் இணைத்து நாட்டின் ஒருமைப்பாட்டைச் சட்ட ரீதியாக உறுதிப்படுத்தும் கருவி, ஆளுநர் என்று சொன்னால் அது மிகையாகாது.

அரசியல் நிர்ணய சபையில் டாக்டர் அம்பேத்கார், 'மாநில அரசுகள் அரசியல் சட்டவிதிகளுக்குக் கட்டுப்பட்டும் மத்திய அரசுக்குக் கீழ்ப்படிந்தும் நிருவாகத்தை நடத்துகின்றனவா என் பதைக் கவனிக்க ஆளுநர் சில விஷயங்களை ஒதுக்கிக் குடியரசு தலைவரின் ஆய்வுக்கு வைக்கலாம்', என்று கருத்துத் தெரிவித்தார். ஆனல, ஆளுநர் மத்திய அரசுக்கு எதிராகவும் தம்மிச்சையாகவும்

செயற்பட்டால் குடியரசு தலைவர், விதிஎண் 156(1)-ன்படி ஆளுநர் தொடர்ந்து பதவியிலிருக்கும் தம் விருப்பத்தை மாற்றிக் கொள்ளலாம். அதாவது ஆளுநரைப் பதவி விலக்கம் செய்யலாம். எனவே, நாம் குடியரசு தலைவரிடம் ஆளுநருக்கு இருக்க வேண்டிய பொறுப்புகளின் தன்மையைக் கவனிக்குங்கால் அது ஒழுங்கு நெறிக்கு ஒத்தாற் போலவும் சட்டரீதியாகவும் இருக்கிறது. ஆளுநரின்நிலை மாநில அரசியல் அமைப்பில் மாறுபட்டு அரசியல், சட்டசபை சம்பந்தமான மரபுகளால் நிருவாகத்தில் அவரின் பாகம் வகுக்கப்பட்டு இருக்கிறது. கீழ்க்கண்ட விஷயங்களில் மாநில அமைச்சரவையின் ஆலோசனையில்லாமல் ஆளுநர் சுயேச்சையாகச் செயற்படலாம்.

1. ஓர் அவசரச் சட்டத்தில் இணைக்கப்பட்ட சரத்துகள், ஒரு மசோதாவாக உருவெடுத்தால் மாநிலச் சட்ட சபையில் வைக்குமுன் குடியரசு தலைவரின் முன் அங்கீகாரம் தேவைப்படும் விஷயங்கள்

அல்லது

2. குடியரசு தலைவரின் முடிவுக்கு விடவேண்டிய சரத்துகளைக் கொண்ட மாநில மசோதா

அல்லது

3. மாநிலச் சட்டசபை நிறைவேற்றிய சட்டத்தில் அடங்கிய சரத்துகள் குடியரசு தலைவரின் அங்கீகாரம் இல்லாமல் சட்டமாக முடியாதவை.

மாநில அரசு விரும்பும் ஓர் அவசரச்சட்டத்தைக் குடியரசு தலைவரின் அறிவுரைக்கு ஒதுக்கி வைக்கும் ஆளுநரின் அதிகாரம் அவர்தம் அபிப்பிராயப்படி செய்யும் காரியங்களுள் ஒன்று. அரசியல் சட்டவிதி எண் 200-ன் கீழ் ஒரு மசோதாவைக் குடியரசு தலைவரின் பரிசீலனைக்கு ஒதுக்கி வைக்கும் அதிகாரம் ஆளுநருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. விதி எண் 200, இரண்டாவது சரத்து அரசியல் சட்டஅமைப்பில் நீதிமன்றங்களின் அதிகாரம் பங்கப்படுத்தப்படும் எந்த மாநில மசோதாவையும் குடியரசு தலைவரின் பரிசீலனைக்கு ஆளுநர் வைக்கவேண்டும். அது ஆளுநரின் கடமையும்கூட என்று உரைக்கிறது.

மாநிலச் சட்டசபையின் சட்டமியற்றும் அதிகாரத்தினுள் வரும் எந்த ஒரு மசோதாவிலும் பாராளுமன்றம் இயற்றியுள்ள சட்டத்தின் விதிகளுக்கு முரண்பட்டதாக எந்தச் சரத்தும் இருந்தால், சட்டப்படி செல்லுபடியாக வேண்டுமானால்

அம் மசோதா சட்டமாக்கப்படுமுன் குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைப் பெற வேண்டும். ஆளுநர் குடியரசுதலைவரின் பரிசிலனைக்கும் அங்கீகாரத்திற்கும் ஒதுக்கி வைக்கவேண்டிய அரசியல் சட்டத்தின் சரத்துகள்.

(1) விதி எண் 31, பிரிவு (3)-ன் கீழ்க் கண்டிப்பாகச் சொத்துகளை அரசுடைமை ஆக்கும் மாநிலச் சட்டங்கள்.

(2) விதி எண் 31, பிரிவு (4)-ன் படி அரசியல் சட்டம் அமலுக்கு வந்த சமயத்தில் மாநிலச் சட்டசபையின் பரிசிலனையிலிருந்து வந்த சொத்துகள் பொதுநலத்திற்கு எடுத்துக் கொள்வது சம்பந்தமான மசோதாக்கள்.

(3) தண்ணீர் வரி, மின்வரிச் சட்டங்கள் இவ் வரிகளின் அளவுகள் பற்றிய மசோதாக்கள்

(4) விதி எண் 207-ன் சரத்துகள்படி வரும் எல்லா நிதி மசோதா, மற்ற மசோதாக்கள் சம்பந்தமானவை.

ஆளுநர் மசோதாக்களைக் குடியரசு தலைவரின் பரிசிலனைக்கோ அங்கீகாரத்திற்கோ ஒதுக்குவது அமைச்சகத்தின் ஆலோசனைப் படியோ மத்திய அரசின் அறிவுரைப்படியோ அன்று. இது சட்ட வல்லுநர்களின் ஆலோசனைப்படி செய்யப்படுவது.

அரசியல் சட்ட விதி எண் 201-ன் கீழ்ப் பரிசிலனைக்கு வந்த மாநில மசோதாக்கள்மேல் கீழ்க்கண்ட மூன்றில் ஒரு முடிவை குடியரசுதலைவர் எடுக்கலாம்.

(1) மசோதாவை அங்கீகரிப்பது

(2) அங்கீகாரம் கொடுக்காமல் இருப்பது

(3) ஆளுநருக்கு மசோதாவை அனுப்பிச் சட்டசபையின் மறுபரிசிலனைக்கு மசோதாவை வைத்துத் திருத்தங்களுடன் 6 மாதத்திற்குள் குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு அனுப்புவது. அப்படித் திரும்ப வந்த மசோதாவிற்கு அங்கீகாரம் கிடைக்கலாம்; கிடைக்காமலும் போகலாம். நிச்சயமான முடிவை இது குறித்துச் சொல்லுவதற்கில்லை.

மாநில மசோதாக்களைக் குடியரசு தலைவர் நிராகரிப்பது ஒரு முடிவான விஷயம். யாரும் கேள்வி கேட்கமுடியாது. ஆனல், பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களைக் குடியரசு தலைவர் அங்கீகரிக்க வில்லையானல அதே மசோதாவை மக்கள்சபை மறுபடி ஏற்றுக்கொண்டால் கண்டிப்பாக அங்கீகாரம் கொடுக்கப்பட்டே ஆக வேண்டும். ஒதுக்கி வைத்த மாநில மசோதாவை அங்கீகரிக்

காமல் இருப்பதில் குடியரசு தலைவரின்மேல் எந்தக்கட்டுப்பாட்டையும் அரசியல்சட்டம் குறிப்பிடவில்லை. குடியரசு தலைவரின் முடிவை எந்த நீதிமன்றமும் கேட்கமுடியாது.

உதாரணமாகக் கேரள சட்டசபை கேரளக் கல்விமசோதாவை 1957-ஆம் ஆண்டு அங்கீகரித்துத் தீர்மானம் நிறைவேற்றியது. மாநில ஆளுநர் இந்த மசோதாவைக் குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு ஒதுக்கி வைத்து அனுப்பினார். குடியரசுதலைவர் அம் மசோதாவில் சில அம்சங்கள் சட்ட விரோதமாக இருக்கலாம் என்று நினைத்ததால் தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனைக்கு அனுப்பி வைத்தார். குடியரசு தலைவர் பிறகு மசோதாவை மாநில அரசுக்குத் திருப்பி அனுப்பி என்ன மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டார். திருத்தங்கள் செய்து மறுபடி குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்பட்ட பொழுது குடியரசு தலைவர் அம் மசோதாவிற்கு அங்கீகாரம் வழங்கினார்.

மாநில அரசின்கீழ் வரும் விஷயங்கள் குறித்து அம் மாநில அரசு சட்டமியற்றுவதற்குப் பூரண உரிமை அரசியல் சட்டம் வழங்குகிறது என்றாலும், குடியரசு தலைவர் சட்டப்படி நேர்முகமாக அச்சட்டத்திற்கு அங்கீகாரம் கொடுப்பதை மறுப்பதற்கு அதிகாரம் இல்லை. இந் நிலை இந்திய அரசு சட்டம் 1935-லிருந்து முற்றிலும் மாறியுள்ளது. அச் சட்டப்படி ஆளுநர் தலைவர் மாநிலச் சட்டத்தை நிராகரிக்க அதிகாரம் பெற்றிருந்தார். ஆனால், இந்திய அரசியல் சட்டத்தில் இந்தச் சரத்துச் சேர்க்காமல் விடப்பட்டது. ஆளுநரால் ஒதுக்கி வைக்கப்பட்ட மசோதாக்கள் விஷயங்களில் மாத்திரம் குடியரசு தலைவர் அங்கீகாரம் கொடுக்க மறுக்கலாம். மாநில ஆளுநர் குடியரசு தலைவரால் நியமிக்கப்படுவதால் குடியரசு தலைவரின் நல்லெண்ணத்தை, நம்பிக்கையைப் பெற ஆளுநர் வேண்டுமென்றே மாநில மசோதாக்களைக் குடியரசு தலைவரின் முடிவுக்கு அனுப்பலாம். இம் முறையில் இந்திய அரசியல் சட்டம் வழங்காத மற்றோர் உரிமையையும் மறைமுகமாகக் குடியரசு தலைவர் பெறலாம். இந்தச் சந்தேகத்திற்கு இடமில்லாமல் இதுவரை நடந்துள்ளது என்றால் அதுமிகைபடச் சொல்வதாகாது.

இன்னொரு விஷயம் யாதெனில், மாநில அரசு நிருவாகம் மத்திய அரசை நிருவகிக்கும் அரசியல் கட்சிக்கு எதிர்க்கட்சியாக இருக்கலாம். அப்பொழுது பொருளாதார அரசியல் கொள்கைகளில் பலமான கருத்து வேற்றுமை மாநில-மத்திய அரசுகளுக்கிடையே உருவாகலாம். மாநில அரசு தன் சட்டமியற்றும் அதி

காரத்தினுள் அடங்கிய விஷயமாகப் பார்த்துச் சட்டமியற்றி அதன் மூலம் மத்திய அரசின் அடிப்படைக்கொள்கை தோல்வியுறும் வகையில் செயற்படலாம். இச்சமயத்தில் ஆளுநர் அப்படிப்பட்ட மசோதாக்களை ஒதுக்கிக் குடியரசு தலைவரின் முடிவுக்கு அனுப்பலாம். அப்பொழுது குடியரசு தலைவர் ஓர் இக்கட்டான நிலைக்குப்போக நேரிடலாம். அம் மாநில மசோதாவைக் குடியரசு தலைவர் நிராகரித்தால் (பிரதமரின் ஆலோசனைப்படி) மாநில அரசின் சட்டமியற்றும் உரிமையைப் பறித்ததாகவும் குடியரசு தலைவர் மத்திய அரசு பொறுப்பில் இருக்கும் கட்சியின் அனுதாபி என்ற இழி சொல்லும் மிஞ்சும். அப்படியில்லாமல் அம் மாநில மசோதாவை அங்கீகரித்தால் சுதந்திர இந்தியப் பாராளுமன்றத்தின் அதிகார வரம்புக்குள் அத்துமீறிச் செல்வதாக முடியும். எனவே, பாராளுமன்றத்தின் சுதந்திரம் முடிவானதா? அப்படியானால் மாநிலச் சட்டமன்றங்கள் பாராளுமன்றத்தின்கீழ் இயங்குகின்ற சாதனங்களா? மாநிலச் சுயாட்சி என்று சொல்வது பெயரளவில்தான்? மாநிலச் சட்டசபை,: மத்திய அரசு பாராளுமன்றத்தில் உள்ள பெரும்பான்மை ஆதரவுக் கட்சியின் உறுப்பினர்களுக்கு அடங்கிச் செயற்பட வேண்டுமா? ஒரு மாநில அரசின் சட்டதிட்டங்கள் மத்திய அரசின் கொள்கைக்கு எதிராக அமையுமானால் குடியரசு தலைவரின் அங்கீகாரத்தைக் கொடுக்காமல் இருக்க ஆலோசனை பிரதமர் கூறுவதா ? எனவே, மாநிலங்களில் நிலையான அரசு ஏற்படாமல் இருக்க மத்திய அரசின் பொறுப்பில் இருக்கும் கட்சிக்கு எதிர்க் கட்சி மாநிலங்களின் நிருவாகத்தில் இருந்தால் விபரீதங்கள் ஏற்பட வாய்ப்புகள் இருக்கின்றன. எனவே, குடியரசு தலைவரை ஆளுங்கட்சியின் கைப்பாவை என்று கருதாமல் இருக்க மாநிலச் சட்டசபைகள் இயற்றும் சட்டங்களை ஆளுநர் ஒதுக்கிக் குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு அனுப்பினால், குடியரசு தலைவர் இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தின் ஆலோசனைப்படி செயற்பட்டால், மத்திய ஆட்சிப் பொறுப்பில் உள்ள அரசியல் கட்சியின் பொம்மை அவர் என்று யாரும் பழித்துச் சொல்ல இடமிருக்காது. மேலும், மாநில அரசின்கீழ் வரும் சட்டமியற்றும் அதிகாரம்மூலம் உருவாகும் சட்டதிட்டங்களைக் குடியரசு தலைவரின் அங்கீகாரத்திற்கு அனுப்பும் பழக்கம் மாநிலச் சுயாட்சி நெறிக்கு முரணானது.

அமெரிக்காவில் மாநிலங்களுக்கு வழங்கியுள்ள விஷயங்கள் குறித்து மத்திய அரசு தலையீடு இன்றி அம் மாநில அரசுகள் சட்டங்கள் செய்ய உரிமை பெற்றிருக்கின்றன. ஆஸ்திரேலிய நாட்டிலும் இதே விதமான முறையைக் காண்கிறோம்.

மாநிலச் சட்டங்களை ஆமோதிக்கும் அதிகாரம் ஆளுநர் தலைவருக்குக் கொடுக்கப்படவில்லை.

குடியரசு தலைவரும் மாநில அரசு நிருவாக முறிவும்
(President and constitutional Breakdown in a State)

'மாநிலத்தின் சட்ட ரீதியான நிருவாகம் முறிந்தது', என்று குடியரசு தலைவர் பிரகடனம் செய்தால் அம் மாநிலத்தின் ஆளுநரின் பங்கு மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. ஏனெனில், எந்த மாநில நிருவாகப் பொறுப்பில் உள்ள அமைச்சரவையும் தன் அழிவுக்குத் தானே ஆளுநரிடம் தன்னுடைய அரசு நிருவாகம் முறிந்துவிட்டது என்று கூறுது. ஆளுநரே நிலைமையைப் பரிசீலித்துக் குடியரசு தலைவருக்குத் தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க வேண்டும் (விதி எண் 356). அப்படி அரசியல் சட்டரீதியாக மாநிலத்தில் நிருவாகம் நடத்துவது முறிவுற்றது என்று அறிக்கை சமர்பிக்கப்படுவது அம் மாநில அரசின் தன்மையைத் தான் காட்டும். 1959ஆம் ஆண்டு ஜூலை மாதம் குடியரசு தலைவர் அவசரநிலைப் பிரகடனம் செய்து கேரள மாநிலத்தில் குடியரசு தலைவரின் ஆட்சியை ஏற்படுத்தியது, அம் மாநில ஆளுநரின் அறிக்கையின் பேரில்தான் என்று மத்திய அரசு பாராளுமன்றத்தில் அப் பிரகடனம் சமர்ப்பிக்கப்பட்டபொழுது கூறியது. ஆளுநரின் அறிக்கையைக் குடியரசு தலைவர் ஏற்றுச் செயற்பட்டால் குடியரசு தலைவர் ஆட்சி அம் மாநிலத்தில் ஏற்படுகிறது. இதனால், ஆளுநர் அம் மாநிலத்தின் ஆட்சித் தலைமையில் இருந்த போதிலும் குடியரசு தலைவரின் துணை அலுவலர் என்றுதான் பொருள்படும். மேலும், ஆளுநர் குடியரசு தலைவரின் பிரதிநிதியாக மாநிலத்தில் செயற்படுவதால் குடியரசு தலைவரால் கொடுக்கப்பட்ட அதிகாரங்களைத்தான் வகிக்கிறார்.

அரசியல் ரீதியான நிருவாகம் மாநிலத்தில் முறிந்து போவது அபூர்வமானது. நடைமுறையில் இதுவரை பல மாநிலங்களில் நிருவாகம் முறிந்து குடியரசு தலைவரின ஆட்சி ஏற்பட்டிருக்கிறது. பாராளுமன்ற முறை அரசு மாநிலங்களில் நிலையானதாக இல்லாத வரையில, குடியரசு தலைவரின மாநில அரசுகள் நிருவாகத்தில் தலையீடு, தவிர்க்க முடியாததாக இருக்கும்.

குடியரசு தலைவரால் தரப்படும் உத்தரவுகளை மதியாததன் விளைவுகள்

அரசியல் சட்டத்தின்கீழ்த் தீர்மானங்களைச் செயற்படுத்தும் மாநில நிருவாகப் பிரிவுகளுக்கு, இன்னின்ன 'வழிகளில் தான நிறைவேற்ற வேண்டும என்று மத்திய அரசு உத்தரவுகள் பிறப்பிக்க விதி எண் 365 இடம் தருகிறது. இந்த

உத்தரவுகள் செயலாக்கப்படுகின்றனவா என்று ஆளுநர் கண்காணிக்கக் கடமைப்பட்டுள்ளார். மாநில அரசு மத்திய அரசின் உத்தரவுகளுக்கு ஏற்பச் செயற்படத் தவறினாலும் அல்லது மறுத்தாலும், ஆளுநரின் இரகசிய அறிக்கையின் பேரில் குடியரசு தலைவர் சம்பந்தப்பட்ட மாநில அரசு நிருவாகம் முறிந்து விட்டது என்று பிரகடனம் செய்து குடியரசு தலைவரின் ஆட்சியைக் கொண்டு வரலாம். இந்தப் பிரச்சினை மாநிலங்களிலும் மத்திய அரசிலும் ஒரே ஓர் அரசியல் கட்சி ஆட்சிப் பொறுப்பில் இருந்தால் ஏற்பட வழியில்லை. ஆனால், இந்தக்கொள்கை ரீதியான அல்லது வேறுவிதமான சண்டை வெவ்வேறு கொள்கைகளுடைய கட்சிகள் மத்திய-மாநில அரசு பொறுப்புகளில் இருந்தால் நிச்சயம் ஏற்படும். இத் தருணத்தில் மாநில ஆளுநர்தாம், மத்திய அரசின் சார்பில் மத்திய அரசு வகுத்த கொள்கைகள் செயலாக்கப்படுகின்றனவா என்று விழிப்புடன் இருந்து, மத்திய அரசின் பிரதிநிதியாகச் செயற்படுவார். அப்படி இருக்கத் தவறினால் விதி எண் 156 (1)ன் கீழ்க் குடியரசுதலைவரின் நம்பிக்கையை இழந்து பதவி நீக்கம் செய்யப்படுவார்.

1956-ஆம் ஆண்டு மொழிவாரி மாநிலங்கள் அமைத்த சமயம் அரசியல் சட்டத்தில் ஒரு புது விதி எண் 371 சேர்க்கப்பட்டது. இவ்விதி பஞ்சாப், ஆந்திரா, மகாராஷ்டிரம், குஜராத் மாநிலங்களின் ஆளுநர்களுக்குத் தங்கள் அறிவுக்கேற்ற வகையில் செயற்பட விசேஷப் பொறுப்புகளைக் குடியரசு தலைவர் கொடுக்க வகை செய்கிறது. விதி எண் 371 பிரிவு (1)ன் படி சட்டசபைகளின் பிராந்தியக் குழுக்களின் அமைப்பு (Regional Committees) நிருவாக விதிகள் முதலியவற்றை நிர்ணயிக்கக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் வழங்குகிறது அரசு நிருவாகத்தில் மாறுதல்கள் சட்டசபை செயற்படும்வகையில் திருத்தங்கள், விதிகள் மாற்றம், ஆளுநரின் விசேஷப் பொறுப்புகளில் மாற்றம் இவற்றைச்செய்து பிராந்திய குழுக்கள் ஆந்திரா, பஞ்சாப் மாநிலங்கள் செவ்வனே செயற்பட உதவுகிறது. அதே விதி எண்ணின் பிரிவுகளில் (2) மகராஷ்டிரா, குஜராத் மாநிலங்கள் சம்பந்தமாகப் பிராந்திய வளர்ச்சிக்கான குழுக்களை நிறுவி ஆளுநர்களுக்கு விசேஷப் பொறுப்புகளைக் கொடுத்து விதர்ப்பா, மரத்வாடா, மகராஷ்டிரா, சௌராஷ்டிரா, கட்ச், குஜராத்தின் இதர பகுதிகளின் வளர்ச்சிக்கான வாரியங்களின் அறிக்கைகளைச் சம்பந்தப்பட்ட சட்டசபையில் சமர்ப்பிக்கக் கோரியது. இவ் வளர்ச்சிக்காகப் போதுமான நிதி ஒதுக்கல் ஆளுநரின் விசேஷப் பொறுப்பாக அமைந்துள்ளது. மாநிலத்தின் வருவாயைப் பொறுத்துத்தான் இந்த நிதிப்பங்கீடு இருக்க முடியும். தொழில் நுணுக்கப்

படிப்பு, பட்டப்படிப்பு, அப் பிரதேசங்களின் மக்களுக்கு வேலை வாய்ப்பு, மாநில அரசின் கீழ் வேலைக்குச் சலுகைகள் போதுமானவையாக உள்ளனவா என்று எல்லாத் துறைகளிலும் இவ் வாரியங்கள் அக்கறைகாட்டிச் செயற்படும்.

1957-ல் நவம்பர் மாதம் வந்த குடியரசு தலைவர் உத்தரவு பஞ்சாபில் 2 பிராந்தியக் குழுக்களை நியமித்தது. ஒன்று இந்தி மொழிப் பிரதேசம்; அடுத்தது பஞ்சாப் மொழிப் பிரதேசம். இரண்டாவது பட்டியலில் (அரசியல் சட்டம்) காணும் விஷயங்கள் பற்றிச் சட்டமியற்ற வேண்டுமானால் இவ் விரண்டு குழுக்களின் பரிந்துரைப்படி சட்டமியற்ற வழி செய்யப்பட்டது. மாநில அரசும் இக் கமிட்டிகளின் பரிந்துரைப்படி செயற்பட வேண்டும். அமைச்சரவைக்கும் குழுக்களுக்கும் கருத்து வேற்றுமை ஏற்பட்டால் முதல் அமைச்சர் ஆளுநர் தீர்ப்புக்கு அவ் விவகாரத்தை விட்டுவிடவேண்டும். ஒரு மசோதா பிராந்திய மசோதாவா இல்லையா என்ற சந்தேகம் வந்தால் ஆளுநரின் முடிவுக்கு விட்டு அவர் கொடுக்கும் அத்தாட்சிப் பத்திரம் எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படவேண்டும். குடியரசு தலைவரின் உத்தரவின் 40ஆவது பிரிவு ஆளுநருக்குப் பிராந்தியக் குழு செயற் படுவதில் விசேஷப் பொறுப்புகளைக் கொடுக்கிறது.

இந்திய அரசு சட்டம் 1935. ஆளுநருக்கு விசேஷப் பொறுப்புகளைக் கொடுத்து அவர் உசிதப்படி அதிகாரத்தைச் செலுத்த வகை செய்தது. விதி எண் 371-ன் கீழ் ஆளுநருக்கு விசேஷப் பொறுப்புகளை அரசியல் சட்டத்தில் இணைத்தது-அன்னாரின் மனத்துக்குத் தோன்றியதைச் செயற்படுத்துவதற்குத்தான். குடியரசுதலைவரால் பஞ்சாப் மாநிலப் பிராந்தியக் குழுக்கள் சம்பந்தமாகப் போடப்பட்ட உத்தரவுகளில் ஆளுநருக்கு விசேஷ அதிகாரங்களைக் கொடுத்தது பிராந்தியக் குழுக்கள் அவற்றிற்கான விதிகளின்படி செயற்படுகின்றனவா என்பதைக் கண்காணிப்பதற்குத்தான். மாநில அமைச்சரவை பிராந்தியக் குழுக்களின் பரிந்துரையை ஏற்காவிட்டாலும், அவற்றின் பரிந்துரை அவற்றின் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டது என்று நினைத்துப் பரிந்துரையை ஏற்க மறுத்தாலும் ஆளுநரின் முடிவு இவ் விஷயங்களில் அமைச்சரவையைக் கட்டுப்படுத்தும். ஆளுநரின் முடிவு எவ்வளவு அதிருப்தியைத் தந்தாலும் அமைச்சரவை அம் முடிவை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

ஆளுநரின் மனத்தில் பட்ட முடிவு அமைச்சரவையையும் சட்ட சபையையும் கட்டுப்படுத்தும் தன்மை வாய்ந்தது. ஒரு

குறிப்பிட்ட மசோதா சட்டசபையின் ஆளுங்கட்சி உறுப்பினர் களால் பிராந்தியச் சம்பந்தப்பட்ட மசோதா இல்லை என்று நினைத்தாலும் ஆளுநர் அம் மசோதா பிராந்திய சம்பந்தப்பட்டது தான் என்று அத்தாட்சி வழங்கினால் அம் முடிவை அமைச்சரவை யும் சட்டசபையும் ஏற்றுச் செயற்பட வேண்டும்.

எனவே, விதி எண் 371-ன் கீழ்ப் பிரிவுகள் (1). (2)-ன் கீழ் வரும் விஷயங்களில் ஆளுநர் தம் மனத்திற்குப்பட்டதைச் செய்யக் கடமைப்பட்டுள்ளார். மனத்திற்குப்பட்டதைச் செய்யும்பொழுது குடியரசுதலைவரின் உத்தரவில் கண்டுள்ளபடி மத்திய அரசின் மேற்பார்வைக்கு ஆளாகிறார்.

முடிவில், ஆளுநர் தம் உசிதப்படி மத்திய அரசு அக்கறை காட்டும் விஷயங்களில் நடக்கும்பொழுது குடியரசு தலைவரின் உத்தரவுகளுக்கேற்றாற்போல் செயற்பட வேண்டும். இக் கண் ணோட்டத்தில் நாம் ஆளுநரைப் பார்க்கும்பொழுது, அவர் மத்திய அரசின் அதிகாரம்பெற்ற ஏஜண்ட் அல்லது பிரதிநிதி யாகத்தான் செயற்படுகிறார் என்று கொள்ளவேண்டும். எனவே, மாநில அரசுகள், பாதுகாப்பு, வெளிநாட்டு வர்த்தகம் முதலிய வற்றில் மத்திய அரசின் உத்தரவுகளைப் பின்பற்றவேண்டும். இதற்கு எல்லா மாநிலங்களின் சிறந்த ஒத்துழைப்பும் ஒருமைப் பாட்டு உணர்ச்சியும் இருந்தால்தான் எதிர்பார்க்கும் பலன்களைப் பெறமுடியும். இந் நிலையை உருவாக்குவதில் மத்திய அரசுக்கு முழுமையான பங்கு உண்டு.

### குடியரசு தலைவரின் இதரக் கட்டுப்பாடுகள்

குடியரசு தலைவர் ஆளுநர்கள் மூலம் மாநிலங்களுடன் தொடர்பு கொள்கிறார். மத்திய அரசின் கொள்கைகளை, திட்டங்களை ஆதரிக்கும் வகையில் மாநில அரசுகளின் கொள் கைகள் அமைந்துள்ளனவா என்று ஆளுநர்கள்மூலம் குடியரசு தலைவர் தெரிந்து கொள்கிறார். இதற்காக ஆளுநர்கள் அவ்வப் பொழுது குடியரசு தலைவருக்கு அறிக்கைகள் அனுப்பி மாநில அரசின செயல்கள், அரசு சம்பந்தமில்லாத செயல்களின் தன்மை இவற்றை எடுத்துரைப்பார்கள். ஆளுநர், குடியரசு தலைவரின் முழுமையான கட்டுப்பாட்டிற்கு உட்பட்டவர். ஆகையால், அவர் அனுப்பும் அறிக்கைகளை மாநில அமைச்ச ரவையைக் கலந்தாலோசிக்காமல் அனுப்பக் கடமைப் பட்டுள்ளார். ஆனால், ஜனநாயக மரபு வளர்ச்சிக்காகவும், அமைச்சரவையுடனும் மாநில அரசுடனும் முழுமையான உறவு நிலைக்கவும், முதல் அமைச்சரிடம் உள்ள மரியாதையின் அறிகுறி யாகவும் ஆளுநர் தம் அறிக்கையின் பிரதியை அல்லது நகலை மாநில முதல் அமைச்சருக்கு அவ்வப்பொழுது அனுப்பி

வைப்பார். சில சமயங்களில் மாநில அரசு நிருவாகம் சீர் குலையும்பொழுது அந் நிலையை விளக்கி அதற்குப் பரிகாரமும் கூறிக் குடியரசு தலைவருக்கு அறிக்கை அனுப்புவார். இவ்வறிக்கை ஆளுநர் இரண்டு வாரங்களுக்கொருமுறை அனுப்பும் அறிக்கை யோடு இணைத்துக் குடியரசு தலைவருக்கு மாத்திரம் அனுப்பப் படும். இத்தகைய அறிக்கைகள் மாநில அமைச்சகத்துக்கு அனுப்பப்பட மாட்டா. ஆளுநரின் அறிக்கையின் பேரில் தகுந்த நடவடிக்கை எடுப்பது மத்திய அரசின் பொறுப்பு.

மாநில ஆளுநர்கள்மேல் குடியரசு தலைவருக்கு உள்ள அதிகாரத்தின் இன்னுமொரு அமிசம் வருடாந்தர ஆளுநர்கள் மாநாடு குடியரசு தலைவரால் கூட்டப்படுவது. இம் மாநாடு கூடும் நாள் குடியரசு தலைவரால் நிச்சயிக்கப்படுகிறது. இத் தேதி குறிப்பிடுவதில் குடியரசு தலைவர் எல்லா ஆளுநர்களையும் கலந்தாலோசித்து முடிவெடுப்பார். இம் மாநாட்டில் கவனிக்க வேண்டிய விஷயங்களைக் குறிப்பிட்டு, ஆளுநர்கள், வேறு விஷயங் களைப் பற்றி விவாதிக்கவும் முன்கூட்டியே தெரிவிக்க வேண்டும். எல்லா விஷயங்கள் குறித்தும் மனம் விட்டுப் பேச வேண்டும். ஆளுநர்கள் தங்கள் மாநிலங்களின் பிரத்தியேக விஷயங்கள், பிரச்சினைகள் குறித்தும் விவாதிக்கலாம். குடியரசு தலைவரின் காரியதரிசியும், பிரத்தியேகச் செயலாளரும் இக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசிய விஷயங்கள், எடுத்த முடிவுகள் சம்பந்த மான பூரண அறிக்கையைத் தயார் செய்வார்கள். ஆளுநர்கள் மாநாடு, கருத்துகள் பரிமாறிக் கொள்ளவும், அபிப்பிராய மாற் றத்துக்கும், ஒரு மேடையாகத் திகழ்கிறது. ஆனால், அரசு கொள்கைகளை உருவாக்குவதிலோ அவற்றைச் செயற் படுத்துவதிலோ பங்கு கிடையாது. ஏனெனில், அரசு கொள் கைகள் சம்பந்தப்பட்ட விஷயங்கள் மாநில முதலமைச்சர்கள் மாநாட்டிற்குரியவை என்பதை மனத்திற் கொள்ள வேண்டும்.

இம் மாநாட்டில் குடியரசு தலைவரின் உரை சம்பிரதாயமாக அமையாமல், பொதுவாக நாட்டின் கொள்கை, வளர்ச்சித் திட் டங்களைச் செயற்படுத்துவது, உணவுப் பிரச்சினை, அமைதி நிலவச் செய்வது, சட்டம் ஒழுங்கு பற்றியும் இன்னும் முக்கியத்துவம் கொடுக்கப்படும் விஷயங்கள் அடங்கியதாகவும் அமையும். குடி யரசு தலைவரின் அறிவுரை ஓர் உத்தரவு போல் இல்லாவிட்டாலும், ஆளுநர்கள் மாநில நிருவாகத்தில் எந்தக் கண்ணோட்டத்தில் அரசு கொள்கைகளைச் செயற்படுத்த வேண்டும் என்பதற்கான ஓர் அறிகுறியாகவே பாவிக்க வேண்டும். இவ் வறிவுரையில் பிரதமரைக் கலக்காமல் குடியரசு தலைவர் தம் மனத்திற்குத்

தோன்றியதைச் சொல்லியிருப்பார். எனவே பிரதமர், உள்துறை அமைச்சர் இன்னும் சில அமைச்சர்கள் இம் மாநாட்டில் கலந்து கொண்டு அவரவர் இலாக்கா சம்பந்தப்பட்ட விஷயங்கள் குறித்தும் ஆளுநரின் நடவடிக்கைகள் குறித்தும் சொற்பொழிவு ஆற்றுவார்கள். குடியரசு தலைவர் மத்திய அமைச்சர்களின் கருத்துகளையே அவருடைய உரையில் இணைத்தால் இவ் வமைச்சர்கள் ஆளுநர்கள் மாநாட்டில் கலந்துகொண்டு உரை ஆற்ற அவசியம் ஏற்படாது.

மாநில ஆளுநரின் பங்கு குறித்துச் சில அரசியல் அறிஞர்கள் கீழ்க்கண்ட கருத்துகளைத் தெரிவிக்கின்றனர்.

நாட்டின் அரசியல் சட்டத்தின் கீழ் ஆளுநருக்குத் திட்டவட்டமான இடம் உள்ளது. அவர் குடியரசு தலைவரின் முகவரும் (Agent) இல்லை; மத்திய அரசின் சிப்பந்தியும் இல்லை.

ஆளுநரின் பங்கு அவர் எடுத்துக் கொள்ளும் பதவிப் பிரமாணத்தில் ஆணித்தரமாகக் கண்டுள்ளது.

> 'கடவுளின் பெயரால் நான் சத்தியமாகச் சொல்கிறேன். அல்லது உண்மையாக உறுதி கூறுகிறேன். ஆளுநர் பதவியின் கடமைகளை உண்மையாகச் சரிவரச் செய்வேன்; என் முழுமையான ஆற்றலுடன் அரசியல் சட்டத்தையும் இதரச் சட்டங்களையும் அப்படியே பத்திரப்படுத்தி, காப்பாற்றிப் பாதுகாப்பதுடன் அந்த மாநில மக்களின் நல்வாழ்வுக்கும், தொண்டுக்கும் என்னை அர்ப்பணித்துக் கொள்வேன்',என்பது.

இந்தப் பிரமாணப்படியே ஆளுநர் நடந்து கொள்ளக் கடமைப் பட்டுள்ளார்.

நடைமுறையில் அவர் இக் கடமைகளை ஆற்றுவதற்கு ஓர் அமைச்சரவையின் உதவியும் ஆலோசனைகளும் இருக்கும். ஆனால், அவர் அரசியல் சட்டத்தின்கீழ்த் தம் சொந்த அபிப்பிராயப்படி செய்ய வேண்டிய கடமைகளைத் தவிர்த்து, மற்ற எல்லா விஷயங்களிலும் அமைச்சரவையின் ஆலோசனைப்படியே நடக்க வேண்டும் என்பது சட்டத்தின் குறிக்கோள். இந்த முறையிலே ஆளுநர் தம் உசிதப்படி எடுக்கும் முடிவு சரிதானா? அமைச்சரவை ஆலோசனைப்படி எடுக்க வேண்டிய முடிவா என்ற கேள்வி எழுந்தால் அரசியல் சட்ட விதி 163 (2)-ன்படி முடிவு எடுத்தால் அன்னாரின் முடிவு பிரச்சினைக்குரியதன்று. அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்கள், ஆளுநர் தம் கடமைகளை, ஜனநாயக அடிப்படையில் அமைச்சரவையின் ஆலோசனைப்படி செய்ய வேண்டும் என்று நினைத்த போதிலும் ஆளுநர் எடுத்துக் கொண்ட பதவிப் பிரமாணப்படி அமைச்சரவையின் ஆலோசனைக்குச் செவி சாய்க்

காமல் தம் இச்சையாகச் செயற்படும் சந்தர்ப்பங்கள் ஏற்படும் என்று அவர்கள் எதிர்பார்த்து இருக்கலாம். சுதந்திரம் கிடைத்த சில ஆண்டுகள் வரை, மத்திய அரசிலும், மாநில அரசிலும், ஒரே அரசியல்கட்சி அதிகமான பிரதிநிதிகளுடன் சட்ட ரீதியான ஜனநாயக மரபுகளின் அடிப்படையில் செயற்பட்டதால் ஆளுநரின் முக்கியத்துவம் ஓர் அளவிற்கு மறைக்கப்பட்டது. எனவே, 'ஆளுநரின் பதவி அலங்காரமானது; ஆளுங்கட்சியின் மூத்த அரசியல் வாதிகளுக்கும் பிறர்க்கும், அன்பளிப்பாகத் தரக்கூடிய ஒரு பதவி' என்ற பிழையான அபிப்பிராயம் பரவலாக இருக்கிறது. இந்தக் காலத்தில் தம் அபிப்பிராயப்படி செயற்பட்ட ஒரே ஒரு விஷயம், அதிகப் பிரதிநிதித்துவம் கொண்ட அரசியல் கட்சியின் தலைவரைத் தேர்தலுக்குப் பிறகு அரசு அமைக்க அழைப்புவிடுவது தான். இந்தத் துறையில் எந்த அமைச்சரின் ஆலோசனையும் கேட்க அவசியம் இல்லை. இந்த விஷயத்தில் அவர் சொந்த அபிப் பிராயமும் மிகமிகக் குறைவுதான். ஏனெனில், தேர்தலுக்குப் பிறகு அதிகமான பிரதிநிதித்துவம் கொண்ட கட்சியின் தலைவரைத்தான் அரசு அமைக்க அழைக்க வேண்டுவது ஒரு சட்ட பூர்வமானகடமையாகும்.

1957 தேர்தலுக்குப் பிறகுதான் மத்திய அரசிலும், மாநிலங்களிலும் அரசு ஆட்சி பீடத்தில் இருந்த காங்கிரஸ் கட்சிக்குச் சரிவு ஏற்பட்டது. சில மாநிலங்களில் ஒரு சில பிரதிநிதிகளைக் கொண்ட அனேக அரசியல் கட்சிகள் தோன்றின. மேலும், சில மாநிலங்களில் எந்தக் கட்சிக்கும் அதிகப்படியான பிரதிநிதித்துவம் கிடைக்கவில்லை. ஏனெனில், அதிகப்படியான பிரதிநிதிகள் இல்லாத இரண்டு மூன்று கட்சிகள் ஒருங்கிணைந்து அரசு அமைக்க முன் வந்தன. இந்தச் சூழ்நிலையில்தான் ஆளுநர் பங்கு அரசியலின் மேல் மட்டத்துக்கு வந்தது. இந்த நிலையிலே, சீர்கேடு அடைந்த இந்தச் சந்தர்ப்பத்திலே, கட்சி தாவிகளும், சந்தர்ப்ப வாதிகளும் கட்சி மாறிச் சீர்கேடு அடைந்த நிலையை மேலும் மோசமாக்கினார்கள். எனவே, ஆளுநர் அதிகமான பிரதிநிதித்துவம் உள்ள கட்சியின் தலைவரை அரசு அமைக்கக் கூப்பிடுவதில் சிக்கல்கள் பல தோன்றின.

கட்சி தாவுவதால் அதிகமான பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் அரசியல் கட்சியின் பலம் குன்றினால் எப்படி ஆளுநர் அதிகமான பிரதிநிதிகளைக் கொண்ட கட்சிதான் ஆட்சி பீடத்தில் தொடர்ந்து செயற்பட வேண்டுமென்று முடிவு எடுப்பது. அரசியல் சட்ட ரீதியாகச் சட்டசபையைக் கூட்டும் விஷயத்தில் அமைச்சர்களின் ஆலோசனைப்படி செயற்படுகிறார், ஆளுநர். விதி 174 (1)-ன்படி ஒரு சட்டசபை கூட்டத்தொடரின் கடைசி

தாளுக்கும், அதனை அடுத்த கூட்டத்தொடருக்கும் இடையில் ஆறு மாத கால தாமதம் தான் இருக்கலாம். இந்த விதிப்படி பலம் குன்றி ஆட்சி பீடத்தில் உள்ள கட்சியின் முதல் அமைச்சர் தம் அமைச்சரவையின் ஆட்சிக்காலத்தை நீடிக்க முற்பட்டால் அரசியல் சட்டப்படி ஜனநாயக மரபுகளின் அடிப்படையில் ஆளுநர் என்ன செய்ய வேண்டும்? ஜனநாயக மரபுகள் புறக்கணிக்கப்படுவதைப் பார்த்துக்கொண்டு செயல் இழந்த பார்வையாளராக இருக்க வேண்டுமா? முதல் அமைச்சர் சட்ட சபையைக் கூட்டத் தமக்கு ஆலோசனை கூறப் போதிய அவகாசம் கொடுத்தபின் அமைச்சரவையை நீக்கிவிட்டுப் புதிதாக அதிகப்படி பிரதிநிதி கொண்ட கட்சியின் தலைவரை அரசு அமைக்க அழைப்பதா? இக் கேள்விகள் எழும்போது ஓர் அரசுக்கு அதிகப்படியான ஆதரவு உள்ளதா, இல்லையா என்பதைச் சட்டசபையைக் கூட்டி முடிவு செய்யவேண்டுமே தவிர வேறு வழிகளில் இல்லை என்பதை நினைவில் வைக்க வேண்டும். இச் சந்தர்ப்பங்களில் இப்படிப்பட்ட சிக்கலான பிரச்சினைகளைத் தம் அபிப்பிராயப்படி ஆளுநர் முடிவு செய்தால், அவர் கட்சி அரசியலில் மூழ்கும் பேராபத்திற்கு இடம் கொடுத்தவர் ஆவார். எனவே, மிகக் கடுமையான சந்தர்ப்பங்களில் ஜனநாயக முறைப்படி அரசியல் சட்ட ரீதியாக ஆளுநர் தம் அபிப்பிராயப்படி செயற்படலாம். அரசியல் சட்டத்திலே இப்படி விடப்பட்ட விஷயங்களுக்குப் பரிகாரம் தேடுவது விரும்பத்தக்கது. முதலமைச்சரின் ஆலோசனையை நிராகரித்துச் சில சந்தர்ப்பங்களில் சட்டசபையைத் தம் அபிப்பிராயப்படி ஆளுநர் கூட்டுவதற்கு வசதி இருக்க வேண்டும். அப்படிச் செய்தால் முழுமையாகவும் முடிவாகவும் ஓர் அரசுக்கு அதிகப்படி ஆதரவு உள்ளதா என்பதை நிர்ணயிக்கலாம்.

முன்னே கூறியபடி ஓர் அமைச்சரவை முழு ஆதரவுடன் ஆட்சியில் இருக்கும் பொழுது சாதாரண காலங்களில் ஆளுநர்க்கு மாமூலாகச் செய்யவேண்டிய கடமைகளைத் தவிர வேறு இல்லை. எனினும், திறமைமிக்க முதிர்ந்த அனுபவம் உள்ள ஒருவர் ஆளுநராக இருந்தால் ஆலோசனைகள், வழிகாட்டுவது போன்ற விஷயங்களில் அமைச்சர்களுக்குப் பேருதவியாக இருப்பார். ஒரு சில விஷயங்களில் மத்திய அரசையும், மாநில அமைச்சரவையையும் இணைக்கும் பாலமாகச் செயற்படலாம். இந்திய அரசியல் சட்டத்தின் கீழ் ஆளுநருக்கு நல்ல பங்கும், இடமும் கொடுக்கப்பட்டுள்ளன. அரசியல் சட்டத்தின் கீழ் அவர் ஓர் அம்சம் என்பதும், குடியரசு தலைவர் அல்லது மத்திய அரசின் மாநிலப் பிரதிநிதி என்ற பரவலான எண்ணமும் தவறானவை. இந்தத் தவறான எண்ணத்

தின் கீழ்ச் சில ஆளுநர்கள் செயற்படுவதால் தான், ஆளுநர்களின் பங்கு என்ன என்பதில் குழப்பங்களும், சிக்கல்களும் சமீபகாலத்தில் ஏற்பட்டுள்ளன.

மத்திய அரசின் உத்தரவுகளை ஆளுநர்கள் செயற்படுத்த வேண்டும் என்பதும், மாநில அமைச்சரவை அவரைக் குடியரசு தலைவரின் அல்லது மத்திய அரசின் கை ஆள் என்பதும் சரியல்ல. இதனால் ஆளுநர் பதவிக்குத் தகுதி உள்ளவர்களைத் தேர்ந்து எடுப்பதற்கு அதிகக் கவனம் செலுத்த வேண்டும். ஒன்றுக்கும் உடம்போசம் இல்லாத வயதான ஒருவரை ஒரு மாநிலத்தின் சட்ட ரீதியான தலைவரின் கடமைகளை ஆற்றும் ஆளுநராக இனிச் செய்வது கடினம். ஆளுநர் தம் கடமைகளை இன்றைய சூழ்நிலையில் சரிவரச் செய்ய வேண்டுமானால் அனுபவம் முதிர்ந்த ஆரோக்கியமான நிலையில் உள்ள ஒருவரைத் தான் தேர்ந்து எடுக்க வேண்டும். சாதாரணக் காலங்களில் கீழே வரும் பொறுப்புகளை ஆளுநர் மேற்கொள்ள வேண்டும்.

(1) முதல் அமைச்சரைத் தேர்ந்தெடுப்பது

(2) மாநிலத்தின் ஆட்சித் தலைவர் என்ற முறையிலே சட்டரீதியான கடமைகளை ஆற்றுவது

(3) மாநில அமைச்சரவையுடன் சுமுகமான உறவை ஏற்படுத்திக் கொண்டு தக்க சமயத்தில் தகுந்த ஆலோசனை கூறுவது.

(4) மாநில அரசுக்கும், மத்திய அரசுக்கும் இடையே ஒரு பாலம் போன்று செயற்படுவது.

அதன் பிறகு மாநில அமைச்சரவையின் ஆதரவு குறைந்து செயற்படும்போது ஆளுநர் அரசியல் கூட்டத்தின் உண்மையான பாதுகாப்பாளர் ஆகிறார். இச் சமயங்களில் ஆளுநர், சட்டரீதியாகவும் குடியாட்சி மரபுகளின் அடிப்படையிலும் பாரபட்சம் இல்லாமலும் செயற்பட வேண்டும். இது கடினமான காரியம் என்ற போதிலும் அவற்றைச் சரிவரச் செய்யத்தான் ஆளுநர் பதவிக்கு நியமிக்கப்படுகிறார்.

# 12. குடியரசுதலைவரும் அமைச்சரவையும்

அரசியல் சட்டவிதி எண் 74 (1)ன் கீழ்க் குடியரசுதலைவர் ஓர் அமைச்சரவையை வைத்துக் கொள்வது கடமையாகக் கருதப் படுகின்றது. குடியரசுதலைவர்தாம் அமைச்சரவையின் தலைவ ரான பிரதமரை நியமனம் செய்கிறார் இதர அமைச்சர்கள் பிரதமரின் பரிந்துரையின்படி குடியரசுதலைவரால் நியமிக்கப்படு கிறார்கள். அமைச்சர்களுள் சிலரைப்பிரதமர் கேபினட் அந்தஸ் துள்ள அமைச்சர்களாக (Cabinet Ministers) அந்தரங்க ஆலோசனைகளுக்கு வைத்துக்கொள்கிறார். அமைச்சரவையில் கேபினட் என்பது ஒரு சிறிய உள்வட்டமாகச் செயற்படுகிறது. அமைச்சரவையில் எத்தனை அமைச்சர்கள் இருக்கவேண்டும் என்ற வரையறை இல்லை. கேபினட் அமைச்சர்கள், கேபினட் அந்தஸ் தில்லா இராஜாங்க அமைச்சர்கள், துணை அமைச்சர்கள், பாராளு மன்றச்செயலாளர்கள் (Parliamentary Secretaries) எல்லாரும் சேர்ந்த அமைப்புத்தான் அமைச்சரவை.

### பிரதமரைத் தேர்ந்தெடுக்கும் விதம்

அரசியல் சட்டம் பிரதம அமைச்சரைக் குடியரசுதலைவர் எவ்விதம் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று விவரிக்கவில்லை. அப்படிப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் மக்கள்சபை உறுப்பினராக அல்லது இரண்டு சபைகளுள் ஏதாவது ஒன்றில் உறுப்பினராக இருக்கவேண்டுமா என்பதும் சொல்லப்படவில்லை. சட்டப்படி பிரதமரைத் தேர்ந்தெடுப்பதில் குடியரசுதலைவருக்குப் பிரதமராகும் நபர் மக்கள்சபையின் பெரும்பாலான உறுப்பினர் களின்நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருப்பதல்லாமல் வேறு எந்த விதியும் கிடையாது (விதி எண் 75(3)). பாராளு மன்றத்தின் இருசபைகளிலும் உறுப்பினராக இல்லாதநபரும் அமைச்சரவையில் சிறிது காலம் இடம்பெறலாம். குடியரசு

தலைவரும் மக்கள்சபை கடைசியாகக் கூடிய நாள் முதல் 6 மாத காலம் வரை அக் கூட்டத்திற்கு அழைப்புவிடாமலும் இருக்கலாம் [விதி எண் (851)]. இத்தகைய விதியின் காரணமாக, குடியரசு தலைவர் தம் விருப்பம்போல் யாரை வேண்டுமானாலும் 6 மாதத்திற்குள்ளாகப் பதவியில் இருக்கும்படி, பிரதமராக நியமனம் செய்யலாம். அப்படி நியமனம் பெற்றவர் மக்கள் சபையில் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவைப் பெறாமல் இருந்தாலும் பரவாயில்லை.

ஆனால், இந்தியாவில் பாராளுமன்றமுறை அரசு அமலில் இருப்பதால் இங்கிலாந்து நாட்டில் பிரதமரைத் தேர்ந்தெடுக்கும் வழியையே, குடியரசு தலைவரும் பின்பற்றுகிறார். இங்கிலாந்து நாட்டில் அரசி, யார் ஒருவர் பாராளுமன்றத்தின் மக்கள் சபையில் அதிகப்படியான உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றிருக்கிறாரோ அவரையே அரசு பொறுப்பை ஏற்றுப் பிரதமராகப் பணிபுரிய அழைப்பு விடுகிறார். அரசியல் பேராசிரியர் லாஸ்கி என்பவர், 'எங்கு ஒரு கட்சியின் விருப்பம் வெளிப்படையாகத் தெரிகிறதோ எங்கு அரசியல் சூழ்நிலையில் அமைதி நிலவுகிறதோ, அங்கு அரசியல் மரபுப்படி மன்னர் அக் கட்சியின் விருப்பப்படி செயற்பட வேண்டும்', என்கிறார். இங்கிலாந்தில் நடப்பதைப்போல் இந்தியக் குடியரசு தலைவரும் யார் ஒருவர் மக்கள் சபையின் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றிருக்கிறாரோ அவரையே பிரதமராக இருக்க அழைப்புவிடுகிறார். எனவே, பிரதமரை நியமனம் செய்யும் விஷயத்தில் குடியரசு தலைவர் தம் மனம் போல் நடக்க முடியாது என்பது உண்மையாகிறது. மக்கள் சபையின் பெரும்பாலான உறுப்பினர்களின் நம்பிக்கைக்கும் ஆதரவுக்கும் யார் ஒருவர் பாத்திரமாக இருக்கிறாரோ அவரைத்தான் பிரதமராகப் பணியாற்ற அழைப்புவிடக் குடியரசு தலைவர் கடமைப்பட்டிருக்கிறார். அரசியல் சட்டம் விதிஎண் 75-ல் மக்கள் சபைக்கு அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு வலியுறுத்தப்படுவதால் மேலே கூறியுள்ள கருத்து உறுதிப்படுத்தப்பட்டதாகக்கொள்ள வேண்டும். எனவே, ஓர் அரசியல் கட்சி, பெரும்பாலான உறுப்பினர்களை மக்கள் சபையில் தேர்தல் வாயிலாகப் பெற்றிருந்து, சட்டசபைத் தலைவரையும் நியமனம் செய்திருந்தால் குடியரசு தலைவர் அவரைத் தவிர, வேறு யாரையும் ஆட்சிப் பொறுப்பை ஏற்க அழைப்பது முறையாகாது.

பாராளுமன்ற ஆட்சி முறையின் மற்றோர் அம்சம், மக்கள் சபையில் அரசு தோற்கடிக்கப்பட்டால், அந்த அமைச்சரவை இராஜினாமா செய்வதுடன் குடியரசு தலைவர் எதிர்க்கட்சித்

தலைவரை அரசு பொறுப்பை ஏற்க அழைப்பு அனுப்பியாக வேண்டும். இதில் குடியரசு தலைவரின் ஊகத்தின்படி செயற்பட இடமே இல்லை. மக்கள் சபையில் அரசு பொறுப்பில் இருக்கும் கட்சிக்கு எதிர்க் கட்சியாக இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட எதிர்க் கட்சிகள் இருக்கலாம். ஆனால், இன்றைய பாராளுமன்ற நிருவாகத்தில் அதிகார பூர்வமான எதிர்க்கட்சி என்று ஏற்பட்டு அதன் தலைவர் என்று ஒருவரை அடையாளம் கண்டு கொள்ளப்படுகிறது. எதிர்க் கட்சிகளிலேயே அதிகப்படியான உறுப்பினர்களைக் கொண்ட கட்சிதான் எதிர்க் கட்சியாக அதிகார பூர்வமாக ஒப்புக் கொள்ளப்படுகிறது. இங்கிலாந்து நாட்டின் பாராளுமன்ற அரசு முறையின் இன்னுமொரு முக்கிய அம்சம், பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் பாராளுமன்றத்தின்கீழ்ச்சபையின் உறுப்பினராக இருத்தல் வேண்டும். இவ் வரசியல் மரபு 1923-ல் மன்னர், திரு.பால்டுவின், கர்சான் பிரபு (Mr. Baldwin & Lord Curzon) இவ் விருவருள் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய சமயத்தில் திரு. பால்டுவினை, அவர் கீழ்ச்சபையின் உறுப்பினராக இருந்த காரணத்தால் பிரதமராகத் தேர்ந்தெடுத்தபோது உண்டாக்கப்பட்டது. கர்சான் பிரபு பிரதமராக உரிமை கொண்டாடிய போதிலும் மன்னர் அதை நிராகரித்துத் திரு பால்டுவின் அரசு பொறுப்பை ஏற்க இசைந்தார். கர்சான் பிரபு அப்பொழுது மேல் சபை உறுப்பினராக இருந்தார். 1940-ல் திரு சர்ச்சில் பிரதமராக நியமனம் பெற்றார். ஹாலிஃபாக்ஸ் பிரபுவின் (Lord Halifox) உரிமை இவ்விஷயத்தில் மன்னரால் நிராகரிக்கப்பட்டது. சர் ஐவர் ஜென்னிங்ஸ் (Sir. Ivor Jennings) என்பவர், பிரதமராக இருப்பவர் பாராளுமன்றத்தின் நாடித் துடிப்பை அவ்வப்பொழுது தெரிந்து கொள்ள வேண்டிய அவசியம் இருப்பதால், கீழ்ச்சபை உறுப்பினருக்குத்தான் இந்தவாய்ப்பு உள்ளது. ஆகவே, கீழ்ச்சபை உறுப்பினர்களிலிருந்து ஒருவரைப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்படும் அரசியல் மரபை ஆதரிக்கிறார். 1963ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 18ஆம் நாள் திரு மாக்மில்லன் (Mr. Harold Macmillan) பிரதமர் பதவியை இராஜினமா செய்த பிறகு அரசி, ஹோம் பிரபுவை (Earl of Home) அவர் மேல்சபை உறுப்பினராக இருந்த போதிலும் பிரதமர் பொறுப்பை ஏற்கும்படி கேட்டுக் கொண்டார். ஹோம் பிரபு, 1902க்குப் பிறகு, மேல்சபை உறுப்பினராக இருந்து கொண்டு பிரதமர் பதவியை அரசியல் மரபுக்கு எதிராக வகிக்கும் இங்கிலாந்தின் முதல் பிரதமராக ஆகி இருப்பார். ஆனால், அவரை ஆட்சிப் பொறுப்பை ஏற்கும்படி அரசி கூறியதும் தமது மேல்சபை உறுப்பினர் பதவியையும் தம் சொந்தப் பதவியையும் விட்டு விட்டு உபதேர்தலில்

நின்று கீழ்ச்சபை உறுப்பினராகத் தேர்வு பெற்றார். 1902-ல் கன்சர்வேடிவ் கட்சியின் (Conservative Party) சார்பில் பிரதமராக இருந்த சேலிஸ்பரி பிரபு (Lord Salisbury) போயர் சண்டை முடிவில் பதவி விலகினார். எனவே, ஹோம் பிரபு தம் பிரபுத் துவத்தைத் துறந்து கீழ்ச்சபைக்கு (House of Commons) தேர்வு பெற்றதால் 1923-ல் ஏற்படுத்தப்பட்ட அரசியல் மரபு இவ் விஷயத்தில் உறுதிப்படுத்தப்பட்டது.

இந்தியாவில் இராஜ்ஜிய சபை உறுப்பினர், பிரதமர் பதவியை வகிப்பதை அரசியல் சட்டம் தடுக்கவில்லை. ஆங்கிலேய அரசியல் மரபுப்படி மக்கள் சபை உறுப்பினர்தாம் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்படுவார் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. மாநிலங்களில் இவ் விஷயத்தில் மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. உதாரணமாக, திரு மொரார்ஜி தேசாய், 1952-மாநிலச் சட்ட சபைத் தேர்தலில் தோற்றாலும் மேல்சபை உறுப்பினராக ஆக்கப் பட்டுப் பம்பாய் மாநிலத்தில் முதல் அமைச்சர் பதவியை ஏற்றார். திரு. இராஜகோபாலாச்சாரி தமிழ்நாட்டில் மேல்சபை உறுப்பின ராக ஆளுநரால் ஆக்கப்பட்டுப் பிறகு முதல் மந்திரியாகப் பதவி ஏற்றார். உத்தரப் பிரதேசத்தில் திரு. C. B. குப்தா என்பவர் இருமுறை தேர்தலில் தோற்று இரு சபைகளிலும் உறுப்பினராக இல்லாதபொழுது முதல் அமைச்சர் பதவியை வகித்தார். இதி லிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது யாதெனில், அரசு பொறுப்பில் மாநிலங்களிலும் மத்திய அரசிலும் இருக்கும் அரசியல் கட்சிக்கு இங்கிலாந்து அரசியல் மரபில் அவ்வளவு அக்கறை இவ் விஷயத்தில் கிடையாது. இங்கிலாந்து அரசியல் மரபை நாம் பின்பற்ற வேண்டும் என்ற அவசியமும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஏனெனில், அந்த நாட்டில் மேல்சபை (Houses of Lords) அங்கத்தினர்கள் பரம்பரையாக உள்ளவர்கள். ஆனால், இந்தியாவில் மேல்சபை பிரதிநிதித்துவத்தன்மை பெற்றது. மேலும்,இங்கிலாந்து நாட்டில் அமைச்சராக உள்ள ஒரு மேல்சபை உறுப்பினர் கீழ்ச்சபை நடவடிக்கைகளில் கலந்து கொள்ள உரிமை கிடையாது. ஆனால், இந்திய அரசியல் சட்டப்படி ஒரு மத்திய அரசு அமைச்சர் இருசபை நடவடிக்கைகளிலும் பங்கு கொள்ள லாம் (விதி எண்-88).

இங்கிலாந்து அரசியைப் போல் இந்தியாவிலும் குடியரசு தலைவர் பிரதமரை நியமனம் செய்யும் விஷயத்தில் சில சூழ்நிலைச் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப அவர் சொந்தத் தீர்ப்பாக முடிவு செய்ய லாம். உதாரணமாக இராஜினாமா செய்த அல்லது இறந்து

போன பிரதமருக்குத் தக்க வாரிசு இல்லாமல் போனாலும் வேறு எந்த அரசியல் கட்சியும் மக்கள் சபை ஆதரவுடன் அரசு பொறுப்பை வகிக்க முடியாமல் போனாலும், குடியரசு தலைவர் பிரதமரை நியமனம் பண்ணுவதில் தம் விருப்பப்படி செயற் படலாம்.

இங்கிலாந்து நாட்டில் 1894ஆம் ஆண்டில் பிரதமராக இருந்த திரு க்ளாட்ஸ்டோன் (Mr. Gladstone) உடல் நலக் குறைவு காரணமாக இராஜினாமா செய்த பொழுது இங்கிலாந்து அரசி தம் மனத்திற்குத் தோன்றியதைச் செய்த சம்பவம் நடந்தது. கட்சியில் யாரும் திரு. க்ளாட்ஸ்டோனுக்குப் பதிலாகத் தலைவராக நியமிக்கப்படவில்லை. திரு. ரோஸ்பரி பிரபுவும், (Lord Rosebury) சர் வில்லியம் ஹர்கோர்ட்டும் (Sir William Hurcourt) கட்சியில் ஒரே அந்தஸ்தில் உள்ளவர்கள். இராஜினாமா செய்த திரு. க்ளாட்ஸ்டோன், திரு ஸ்பென்சர் பிரபுவை (Lord Spencer) இராணிக்குச் சிபாரிசு செய்ய இருந்தாலும் அரசி அவருடைய ஆலோசனையை நாடவில்லை. அமைச்சர்களின் ஆலோசனையையும் கேட்காமலேயே தம்மிச்சையாகத் திரு. ரோஸ்பரி பிரபுவைப் பிரதமராகப் பொறுப்பை ஏற்க அழைப்பு விடுத்தார்.

1923ஆம் ஆண்டில் பிரதமராக இருந்த திரு. போனர்லா (Bonarlaw) இராஜினாமா செய்தார். கன்சர்வேட்டிவ் கட்சியில் ஒரு புதிய பிரதமரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியம் ஏற் பட்டது. திரு. கர்சான் பிரபுவும் (Lord Curzon) திரு. ஸ்டான்லி பால்டுவினும் (S. Baldwin) கட்சியில் ஒரே அந்தஸ்தில் இருப்பவர் களாயினும் அரசி. திரு. பால்டுவினைப் பிரதமர் பொறுப்பை ஏற்கச் சொன்னார். சனவரி 1957-ல் சர். அந்தோணி ஈடன் (Sir Anthony Eden) உடல் நலக் குறைவு காரணம் காட்டிப் பிரதமர் பதவியை இராஜினாமா செய்தபோது அவர், அரசிக்கு அந்தப் பொறுப்பை யாருக்குக் கொடுக்கலாம் என்று சிபாரிசு செய்யவில்லை. திரு. ஈடனுக்குப் பதிலாகத் திரு. பட்லர் (R.A. Butler) பிரதமராகப் பொறுப்பைத் தாற்காலிகமாகக் கவனித்ததால், அவரைத்தான் பிரதமர் பதவியை வகிக்க அரசி அழைப்பு விடுப்பார் என்று எல்லாரும் நினைத்ததற்கு மாறாக அரசி திரு. மாக்மில்லனைப் புதிய பிரதமராக்கினார். அரசி, திரு. சர்ச்சில் போன்ற மூத்த அரசியல் வாதிகளைக் கலந்துதான் இந்த முடிவுக்கு வந்தார். அதன் பிறகு தான் கட்சி திரு மாக்மில்லனைக் கட்சித் தலைவராகத் தேர்ந் தெடுத்தது. இச் சமயத்தில் தொழிற்கட்சி ஒரு புதிய பிரச்சினையை எழுப்பியது. கன்சர்வேட்டிவ் கட்சி தன் தலைவரைத் தேர்ந்தெடுப் பதற்கு முன்பே பிரதமர் பொறுப்பைத் திரு. மாக்மில்லனுக்குக்

கொடுத்தது அரசியை அரசியல் கட்சிப் பூசல்களில் விரும்பத் தகாத முறையில் உட்படுத்தியது என்று குறை கூறினார்கள். ஆனால், அன்றைய நிலையில் கன்சர்வேட்டிவ் கட்சி இராணி திரு. பட்லர், திரு. மாக்மில்லன் இருவருள் யாரைத் தேர்ந்தெடுக்கிறாரோ அவரையே தலைவராக்கிக் கொள்ள முடிவு செய்ததில் தவறில்லை.

இங்கிலாந்து நாட்டின் கீழ்ச்சபையில் எந்த அரசியல் கட்சிக்கும் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு கிடைக்காவிட்டால் தான் இராணி பிரதமர் பொறுப்பைக் கொடுப்பதில் தம் மனத்திற்குத் தோன்றியதைச் செய்வார். சாதாரணமாகப் பதவி விலகும் பிரதமரின் ஆலோசனையை அரசி ஏற்கக்கூடும் என்றாலும் 1894, 1908, 1923-ல் நடந்தவை இந் நிலையை உறுதிப்படுத்துவதாக அமையவில்லை. அரசி ஆலோசனைகளைக் கேட்க அவசியமில்லை என்றாலும் அவர் விரும்பினால் பிரிவி கவுன்சிலிலுள்ள (Privy Council) மூத்த அரசியல் வாதிகளைக் கலந்தாலோசிக்கலாம்.

1923-ல் திரு. போனர்லா பிரதமர் பதவியை இராஜினாமா செய்த போது, 5-ஆம் ஜார்ஜ் மன்னர், அரசு பொறுப்பில் இருக்கும் கட்சியின் மற்றத்தலைவர்கள், அமைச்சர்கள் இவர்களைத் தான் அடுத்த பிரதமர் யாராக இருக்கலாம் என்பது பற்றிக் கலந்து ஆலோசனை நடத்தினாரே தவிர, அரசு பொறுப்பில் இல்லாத கட்சித் தலைவர்களைக் கலக்கவில்லை. அரசு பொறுப்பில் இருக்கும் கட்சி கீழ்ச்சபையில் தோற்கடிக்கப் படாதவரையில் மாற்றுக்கட்சிகளை அரசர் கலந்தாலோசிப்பதும் முறையில்லை. ஆனால், ஆளுங்கட்சியிலேயே பூசல்கள் ஏற்பட்டு அதன் விளைவாகப் பிரதமர் பதவி விலகினால், மன்னர், ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் கட்சியை முதலில் கலந்து கொண்டு மாற்றுக் கட்சிகள் அக்கறை காட்டினால் மட்டுமே மன்னர் அவர் விரும்பியவரைக் கலந்தாலோசிக்கப் பூரண உரிமை உண்டு.

மேலே குறிப்பிட்டபடி சந்தர்ப்பச் சூழ்நிலைகள் உருவானால் இந்தியக் குடியரசு தலைவர் தம் விருப்பப்படி செயற்படலாம். எனினும், இவ் விஷயங்களில் குடியரசு தலைவரின் பங்கு நுண்மையானதாகவும் சிக்கல் நிறைந்ததாகவும் இருக்கலாம். இப்படிப் பட்ட சந்தர்ப்பங்களில் இங்கிலாந்து மன்னர் செயற்படும் கண்ணோட்டத்தில் இந்தியக் குடியரசு தலைவரும் செயற்படுவது அவசியமாகிறது. அவர் அச் சூழ்நிலையைச் சார்ந்த எல்லா விஷயங்களையும் சீர்தூக்கிச் செயற்படுவது முக்கியம். அவர் எடுக்கும் முடிவு எல்லாராலும் அல்லது பெரும்பான்மையானவர்களால் ஒப்புக் கொள்ளக்

கூடியதாகவும், தவறில்லாமலும் நியாயமற்றதாக இல்லாமலும் இருக்க வேண்டும். குடியரசு தலைவரும் ஓர் அரசியல் கட்சியைச் சேர்ந்தவராக இருப்பதால் அக் கட்சிக்குப் பதவியிலிருக்கும் பொழுது தம் கட்சி நலனில் அக்கறை கொண்ட அனுதாபியாக இருப்பார் என்றாலும் அவர் நாட்டின் முதன்மைத் தலைவராதலின், அரசியல் சட்டப் பொறுப்புகளில் கடமை உணர்ச்சியோடும் நடுநிலையாளர் என்று சொல்லக் கூடிய தன்மையிலும் அவர் செயற்பட்டு, யார் ஒருவர் மக்கள் சபையின் ஒத்துழைப்பைப் பெறத் தகுதிவாய்ந்தவராக இருக்கிறாரோ அவரையே பிரதமராக நியமிக்க வேண்டும். குடியரசு தலைவர் எடுத்துக் கொண்ட பதவிப் பிரமாணத்தை நிலை நாட்டும் வகையில் அவருடைய தீர்ப்பு இவ் விஷயங்களில் அமையவேண்டும். அவர் தம் கடமையைப் பாரபட்சமின்றி, பயமின்றி, துணிச்சலாக, நியாயமாக, சட்டரீதியாகச் செயற்படுத்தும் வரை எந்த அரசியல் கட்சி ஆட்சிப்பொறுப்பை ஏற்றாலும் கவலையில்லை. குடியரசு தலைவருக்குச் சில நபர்களிடம், கட்சிகளிடம் அதிருப்தி இருக்கலாம். இங்கிலாந்து இராணி விக்டோரியாவுக்கும் திரு க்ளாட்ஸ்டோனிடம் அதிருப்தி இருந்தது. எனினும், எந்தத் தவறான எண்ணமும் குடியரசு தலைவரை ஒரு வெறும் அரசியல்வாதியாகவோ கட்சிச் சார்புடையவராகவோ தாழ்த்தக் கூடாது. அவர் வகிக்கும் உன்னதப் பதவியின் தன்மை அப் பதவிக்கேற்றாற் போல் பெரும்பாலான மக்களின் நன்மைக்குச் செயற்பட வேண்டுமேயல்லாது ஓர் அரசியல் கட்சியின் சொந்த நன்மைக்கோ ஒரு சாராரின்நன்மைக்கோ இருக்கக் கூடாது.

### மற்ற அமைச்சர்கள் நியமனம்

இந்திய அரசியல் சட்டம் 'மற்ற அமைச்சர்களைப் பிரதமரின் ஆலோசனைப்படி குடியரசு தலைவர் நியமிக்க வேண்டும்', என்று தெளிவுபடுத்துகிறது [விதிஎண் (75-1)]. எனவே, மற்ற அமைச்சர்கள் நியமன விஷயத்தில் குடியரசு தலைவர் பிரதம அமைச்சரின் சிபாரிசுப்படி நடக்க வேண்டியது வலியுறுத்தப்பட்டதால் அன்னாரின் உசிதப்படி நியமனம் செய்யச் சட்டம் இடமளிக்கவில்லை. இதர அமைச்சர்கள் இரு சபைகளின் அங்கத்தினர்களாக இருப்பது அவசியம். அவர்கள் பிரதமரால் இயக்கப்படுகிறார்கள். அமைச்சரவையில் சேரப் பிரதமர் பாராளுமன்றத்தில் உறுப்பினராக அல்லாத ஒருவரைத் தேர்ந்தெடுக்கலாம். அல்லது தமது கட்சியில் உறுப்பினராக இல்லாதவர்களையும் அமைச்சரவையில் சேர அவர்களின் தனித் தகுதியைப் பொறுத்து அழைக்கலாம். பாராளுமன்றத்தின் இரு சபைகளுள் ஏதாவதொன்றில் உறுப்பின

ரல்லாதவரை அமைச்சராக்கினால் அவர் பதவியில் சேர்ந்து 6 மாதத்திற்குள் ஏதாவதொரு சபையின் உறுப்பினராக வேண்டும். தவறினால் அமைச்சர் பதவியை இராஜினாமா செய்ய வேண்டும் [விதி எண் 75 (5)]. பிரதமர், பண்டித நேரு பல காலங்களில் அமைச்சரவையில் டாக்டர் ஜான் மத்தாய் (Dr. John Mathai) என்ற தொழிலதிபரான முன்னாள் ஐ.சி.எஸ். அதிகாரியையும், திரு. சிந்தாமணி தேஷ்முக் (Mr. Chintamani Deshmukh) என்ற ரிசர்வ் பாங்க் ஆளுநரையும் திரு C.C. பிஸ்வாஸ் (C.C. Biswas) என்ற முன்னாள் நீதிபதியையும் திரு. கோபாலசாமி ஐயங்கார், திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி போன்றவர்களையும் அமைச்சர்களாக்கினார். இதைத் தவிர, பின்தங்கிய வகுப்பினரின் தலைவரான டாக்டர் அம்பேத்கார், ஷியாம்பிரசாத் முகர்ஜி (Dr. Shyam Prasad Mukherjee) என்ற இந்து மகாசபைத் தலைவர், அகாலிதளக் கட்சி பல்தேவ்சிங் (Sardar Baldev Singh) போன்ற எதிர்க்கட்சிக்காரர்களையும் தமது அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டார்.

### அமைச்சர்கள் பதவி நீக்கம்

அரசியல் சட்ட விதி எண் 75, பிரிவு (2)-ல், அமைச்சர்கள் குடியரசு தலைவரின் விருப்பப்படி பதவியில் இருப்பார்கள் என்று கண்டுள்ளது. இதனால் குடியரசு தலைவர் தம் விருப்பப்படி அமைச்சர்களைப் பதவி நீக்கம் செய்யலாம் என்று பொருள்படுகிறது. குடியரசு தலைவர் அப்படிச் செய்வதில் எந்த விதத் தடங்கலும் இருக்க முடியாது. இங்கிலாந்து அரசியல் சட்டத்திலும் அரசி தம் விருப்பப்படி அமைச்சர்களைச் சட்டப்படி பதவி நீக்கம் செய்யலாம். ஆனால், நன்றாக வளர்ந்துவிட்ட அரசியல் மரபின் காரணமாக இந்த உரிமையை அரசி பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படிதான் பிரயோகிப்பார். எனவே, அரசி பிரதமரின் சம்மதம் இல்லாமல் ஓர் அமைச்சரைப் பதவி நீக்கம் செய்யலாம் என்பது உண்மைக்குப் புறம்பானது. இந்த முறையைப் பின்பற்றி இந்தியாவிலும் குடியரசுதலைவர் பிரதமரின் ஆலோசனைப்படிதான் அமைச்சரைப் பதவிநீக்கம் செய்வார். இவ் விஷயத்தில் குடியரசு தலைவர் சுயேச்சையாக எதுவும் செய்வதற்கில்லை. ஏனெனில், பிரதமர் தம் அமைச்சரவை கூட்டுப் பொறுப்பின் நெறியில் செயற்படுவதால் அவ் வமைச்சரவை விழுந்துவிடாமல் பார்த்துக் கொண்டு ஒரு தனிப்பட்ட அமைச்சரைப் பதவிநீக்கம் செய்ய விரும்பலாம். எனவே, சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு மக்கள் சபையில் பேராதரவு இருந்த போதிலும், அவ் வமைச்சரைப் பதவிநீக்கம் செய்யக் குடியரசு தலைவருக்கு ஆலோசனை கூறலாம்

பதவி நீக்கம் செய்வது, சம்பந்தப்பட்ட அமைச்சர் பிரதமரின் வேண்டுகோளுக்கு இணங்கி இராஜினமா செய்யாவிட்டால்தான் ஏற்படும். பிரதமரிடம் கொள்கை ரீதியில் கருத்து வேற்றுமை இருந்தாலும், நிருவாகத்தில் நேர்மை, ஒழுங்கு இவற்றில் அவர் பேரில் சந்தேகம் எழுந்தாலும் பொதுமக்களிடம் தொடர்பு கொள்வதில் ஒழுங்கீனம் இருந்தாலும் அவரைப் பதவிநீக்கம் செய்வது அவசியமாகலாம்.

இது விஷயமாக டாக்டர் அம்பேத்கார் அரசியல் நிர்ணய சபையில் விளக்கும்போது கூறியதாவது : 'என்னுடைய தீர்ப்பில் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு என்பது இரண்டு நியதிகளைக் கொண்டு செயற்படுவது. ஒன்று, எவரும் பிரதமரின் ஆலோசனையின் பேரில் அமைச்சராக நியமிக்கப்படுகிருர் என்பது. மற்ருென்று பிரதமர் எந்த அமைச்சரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்று சொல்கிருரோ, அவர் பதவி விலகியாகவே வேண்டும் என்பது. அமைச்சர்கள் நியமனத்திலும், பதவி நீக்கத்திலும் பிரதமரின்கீழ்ச் செயற்பட்டால்தான் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு நிலைக்கும். இந்த நிலையை அடைய எனக்கு வேறு வழி தோன்றவில்லை'.

பிரதமரிடம் ஓர் அமைச்சரைப் பதவியிலிருந்து நீக்க எத்தனையோ வழிகள் இருக்கும்போது குடியரசு தலைவருக்கு ஆலோசனைகூறி அவர் மூலம் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்பதில்லை. திருப்திகரமான முறையில் தம் அமைச்சரவையின் இராஜினமாவைக் கொடுத்து விட்டு வேண்டாத நபர்களை நீக்கி அமைச்சரவையைத் திருத்தி அமைக்கலாம். அல்லது இதைவிடக் கண்ணியமான வழி பிரதமர் விரும்பாத அமைச்சரை, ஓர் ஆளுநர் பதவிக்கு உயர்த்தி அல்லது வெளிநாட்டுத் தூதுவராக நியமித்து அமைச்சரவையிலிருந்து எடுத்து விடலாம். இங்கிலாந்து நாட்டில் ஒரு மரபு வழக்கத்தில் இருக்கிறதாகப் பொதுப் பள்ளிக்கூடங்களில் கதையாகச் சொல்லுவார்கள். 'நம் நாட்டில் யாரும் அமைச்சராக விரும்பவில்லை; ஆனல்', பொது நன்மைக்காகப் பதவி வகிக்கத் தயாராக இருப்பார்கள்', என்று. இந்த ஆங்கிலேய மரபுப்படி பிரதமரின் குறிப்பறிந்து, அவர் ஒரு சிறு கோடி (clue) காட்டினுலும் அதைப் புரிந்து கொண்டு சம்பந்தப்பட்ட அமைச்சர் இராஜினமா செய்ய வேண்டும் என்பது. எந்த ஓர் அமைச்சர் தம் பதவியை இராஜினமா செய்ய மறுக்கிருரோ அவர் விஷயத்தில் மாத்திரம் நிலைமையைச் சமாளிக்க மன்னரிடம் அந்த அமைச்சரைப் பதவி நீக்கம் செய்யப் பிரதமர் ஆலோசனை கூறலாம். சாதாரணமாக எல்லா அமைச்சர்களும்

பிரதமர் பதவி விலகும்படி சொல்வதற்கு முன்பே இராஜி ஞமாவைப் பிரதமரிடம் கொடுத்து விடுகிறார்கள்.

இந்தியாவிலும் இந்தப் போற்றத்தக்க அரசியல் மரபு பொது நன்மையைக் கருதிப் பலப்படுத்தப்பட்டால் நல்லது. பிரதமரிட மிருந்து ஒரு சைகை குறிப்பிட்ட அமைச்சருக்குப் போதுமானதாக இருக்க வேண்டும் பதவி விலக. முன்பு திரு. வி வி. கிரி, தொழில் துறை அப்பீல் கோர்ட்டின் முடிவைத் திருத்த ஒப்புக் கொள்ளாத தால் இராஜிஞமா செய்தார். திரு. S. P. முகர்ஜி, நேரு-லியாகத் அலி ஒப்பந்தத்தை 1950-ல் ஏற்காததால் இராஜிஞமா செய்தார். திரு. தேஷ்முக் பம்பாய் நகரத்தை ஒரு தனி மாநிலமாக்க அரசு முடிவு செய்தபோது அதை ஒப்புக்கொள்ள முடியாமல் இராஜிஞமா செய்தார்.

ஓர் அமைச்சர் இராஜிஞமா செய்ய ஏற்ற முறை, அவர் பிரத மருக்குத் தெரியப்படுத்த, அதைப் பிரதமர் குடியரசு தலைவருக்கு அனுப்பி ஏற்றுக் கொள்ளச் சிபாரிசும் செய்வார். அதன் பிறகு அதைப்பற்றி விளம்பரம் செய்வதுதான் முறையானது.

### பிரதமரைப் பதவி நீக்கம் செய்தல்

அமைச்சர்களைப் பதவிநீக்கம் செய்யும் குடியரசுதலைவரின் உரிமை ஒரு ருசிகரமான கேள்விக்கு இடமளிக்கிறது, எந்தச் சூழ்நிலையில் பிரதமரைக் குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்ய லாம்? ஒரு பிரதமர் ஊழல் குற்றத்திற்கும் ஒழுங்கீனத்திற்கும் ஆளாகலாம். இந்தக் காரணங்களுக்காக எப்படி ஓர் அமைச்சர் பிரதமரின் ஆலோசனைப்படி பதவிநீக்கம் செய்யப்படுகிறரோ அதே மாதிரி ஒரு பிரதமரைக் குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்வதால் அமைச்சரவையே விலகும்படி நேரிடும். ஒரு சாதாரண அமைச்சரைப் பிரதமரின் ஆலோசனைப்படி பதவி நீக்கம் செய்யலாம். அப்படியானல் யாருடைய ஆலோசனைப்படி பிரதம அமைச்சரைப் பதவி நீக்கம் செய்ய முடியும்? குடியரசு தலைவர் ஒரு பிரதம அமைச்சரைப் பதவி நீக்கம் செய்வது என்பது சாதாரண விஷயமில்லை. பாராளுமன்றத்தின் ஆதரவு, பொது மக்களின் விருப்பமும் ஆதரவும் ஆகிய இவற்றைப் பொறுத்து இருப்பினும் குடியரசு தலைவர் இதைச் செய்வது சுலபமான காரியம் இல்லை. பாராளுமன்றத்தின் நம்பிக்கையைப் பிரதமர் இழந்து விட்டார் என்று நிச்சயமாகத் தெரிந்தால்தான் குடியரசு தலைவர் அவரைப்பதவி நீக்கம் செய்ய முடியும். இந்த அளவுக்கு ஒரு பிரதமர் பாராளுமன்றத்தின் நன்மதிப்பை இழந்து விட்டால் பாராளுமன்றமே குற்றம் சாட்டி அவரைப்பதவி விலகும்படி செய்யலாம்.

### அமைச்சரவையைப் பதவிநீக்கம் செய்தல்

குடியரசுதலைவர் அமைச்சரவையையே பதவி நீக்கம் செய்ய முடியுமா? இங்கிலாந்தில் மன்னருக்கு இந்த விசேஷ உரிமை இருந்த போதிலும் (பெயரளவில்) இதை உபயோகப்படுத்தாத தால் பழக்கத்தில் இல்லை. தற்காலச் சூழ்நிலையில் அமைச்சரவை கீழ்ச்சபையின் நம்பிக்கையை இழந்த பிறகும் இராஜிநாமா செய்யாவிட்டால்தான் மன்னர் அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்யலாம். மற்றப்படி அது சட்ட விரோதமாகக் கருதப் படும்.

இந்தியாவிலும் இந்த நிலைதான் இருக்கிறது. அரசியல் சட்ட விதி எண் 75-ல் இதற்கான ஆதாரங்கள் தெரிகின்றன. விதி எண் 75-ல் பிரிவு(2)-ல் அமைச்சர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார்கள். பிரிவு (3)-ல் அமைச்சரவை குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த அமைச் சரவையின் கூட்டுப் பொறுப்பு மக்கள் சபைக்குத்தான் உண்டு; குடியரசு தலைவருக்கு அன்று. இதன் பொருள், குடியரசு தலைவர் அமைச்சர்களைத் தனித்தனியாகப் பதவி நீக்கம் செய்யலாமே தவிர அமைச்சரவையையே பதவி நீக்கம் செய்யச் சட்டமில்லை; அதிகாரமும் இல்லை. மக்கள் சபை செயற்படும் விதிகளில், நம்பிக்கையில்லாத் தீர்மானம் அமைச்சரவையின்மேல்தானே தவிரத் தனிப்பட்ட அமைச்சர்களின் மேல் அன்று என்று குறிப் பிடப்பட்டுள்ளது.

அமைச்சரவைப் பதவி நீக்கம் குறித்து இன்னொரு கேள்வி எழுகிறது. பாராளுமன்றத்தின் மக்கள் சபை ஆதரவைப் பெற்ற ஓர் அமைச்சரவை வாக்காளர்களின் நம்பிக்கை கலந்த ஆதரவை இழந்து விட்டதாகக் குடியரசு தலைவர் முடிவு செய்தால் அவர் அமைச்சரவையைத் தம் அதிகாரத்தைப் பயன்படுத்திச் சட்டரீதி யாகப் பதவிவிலக உத்தரவிடலாமா? இத்தகைய சூழ்நிலையில் இங்கிலாந்து மன்னரின் நிலையை விவரிக்கும்பொழுது பேராசிரியர் டைசி (Prof. A. V. Dicey) 'அரசர் அமைச்சர்கள் ஆலோசனையின்றி எதுவும் செய்ய இயலாது என்ற நிலையை நான் ஒப்புக் கொள் கிறேன். ஆனால், மேலே குறிப்பிட்டதிலிருந்து யாராகிலும் மன்னர் நாட்டினுடைய முடிவைத் தெரிந்து கொள்ள வேண்டி அமைச்சர்களைப் பதவி நீக்கம் செய்ய முடியாது என்று சொன்னால் அதை நான் ஏற்க முடியாது', என்று கூறியுள்ளார். எனவே, இப் பேராசிரியர் மன்னருக்கு அமைச்சரவை கீழ்ச் சபையின் ஆதரவைப் பெற்றிருந்தபோதிலும் மக்களின் ஆதரவைப் பெறவில்லை என்று தோன்றினால் பதவி விலக்கம் செய்யும் உரிமை உள்ளது என்கிறார்.

இந்திய அரசியல் சட்ட நிபுணர்கள், குடியரசு தலைவர், அமைச்சரவை மக்களின் ஆதரவை இழந்து விட்டது என்று தோன்றினால் பதவி நீக்கம் செய்வது சட்ட விரோதமான செயல் இல்லை என்கிறார்கள்.

இந்தக் கருத்துக்கு மாறாகத் திரு. ஜென்னிங்ஸ் என்பவர் இங்கிலாந்து அரசி, அமைச்சரவை மக்களின் ஆதரவை இழந்த காரணத்திற்காகப் பதவி நீக்கம் செய்வது நீதியன்று; கீழ்ச் சபையின் ஆதரவைப் பெற்றிருக்கும்வரை அமைச்சரவையை அரசி அசைக்க முடியாது என்று கூறுகிறார். டாக்டர் வேட் (Dr. Wade) என்பவரும் இந்தக் கருத்தை ஆதரிக்கின்றார். 'மன்னர், அமைச்சரவை மக்களின் ஆதரவை இழந்து விட்டது என்று நினைப்பதே சரியில்லை. ஏனெனில், அரசியல் சட்டத்தில் இதைப் பரீட்சை செய்ய 4, 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை பொதுத் தேர்தல் வருகின்றது. மக்கள் ஆதரவு அரசுக்கு இருக்கிறதா இல்லையா என்பதைப் பார்க்க அதுவே சரியானதருணம்', என்று கூறுகிறார். பொதுதேர்தலுக்குப் பயந்து மேல்சபை, கீழ்ச்சபை உறுப்பினர்கள் ஒன்று சேர்ந்து பாராளுமன்றத்தின் செயற்படும் காலத்தைக் காலவரையின்றி நீடிக்க முடிவெடுக்கலாம். வாக்குப் பெட்டிமூலம் மக்களின் முடிவை 4, 5 ஆண்டுகளுக்கு ஒருமுறை தெரிந்து கொள்வதைத் தடைப்படுத்தும் விதத்தில் பரம்பரை உறுப்பினர்களைக் கொண்ட மேல்சபையும் மக்களின் வாக்குகளைப் பெற்று உறுப்பினர்களாக வந்த கீழ்ச்சபையும் கண்ணியமற்ற முறையில் சதியாலோசனையின் பலனாகக் குடியாட்சியின் அடித் தளத்தையே தகர்க்கும் முறையில் பாராளுமன்றத்தின் செயற் படும் காலத்தை நீடித்தால் அது முறை கேடானதாகத்தான் இருக்க முடியும். டாக்டர். ஜென்னிங்ஸ் என்பவர் 'மன்னரின் கடமை அரசியல் சட்டம் நல்ல முறையில் செயற்படுகிறதா என் பதைப் பார்ப்பது', என்கிறார். இது அமைச்சர்களின் கடமையு மாகும். உரிய காலத்தில் வாக்காளர்களின் சம்மதமும் இதில் அடங்கியுள்ளது. 'பதவியில் இருக்கும் அமைச்சரவை தேர்தல் வர வேண்டியதைத் தடுக்கும் பண்பிலோ, தேர்தலைத் தள்ளி வைத்து வாக்காளர்களின் முடிவைத் தெரிந்து கொள்ள இயலாத படி நடந்தாலோ, மன்னர் பாராளுமன்றத்தைக் கலைப்பது நியாய மாகும். மக்கள் சபையைக் (House of Commons) கலைத்தாலே அது அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்ததற்குச் சமம்', என்கிறார்.

இங்கிலாந்து நாட்டில் 1783-லிருந்து அமைச்சரவை பதவி நீக்கம் செய்யப்படவில்லை. 1834-ல் மெல்போர்ன் பிரபு (Lord

Melbourn) அரசு பதவி விலகியது ஒப்பந்தத்தின் பேரிலேயே ஒழிய மன்னரால் பதவிநீக்கம் செய்யப்படுவதற்கு ஒரு முன்னோடியாக அமையவில்லை. டாக்டர். ஜென்னிங்சும் எந்தச் சூழ்நிலையிலேயும் மன்னர் அமைச்சரவையைப் பதவிநீக்கம் செய்யக் கூடாது என்று கருதவில்லை. குடியாட்சி அடிப்படையில் அமைந்த அரசியல் சட்டத்தைக் குழிதோண்டிப் புதைக்கும் வகையில் பாராளு மன்றத்தின் காலத்தை நீடிக்கவும், ஆளுங்கட்சியின் அரசியல் இலாபத்திற்குத் தொகுதியைத் திருத்தி அமைக்கவும், தேர்தல் முறையைக் கட்சிக் கண்ணோட்டத்தில் மாற்றி அமைக்க முயன் றாலும் மன்னர் அனுமதிக்கக் கூடாது என்கிறார்.

குடியாட்சி அமைப்பைக் கொண்ட அரசியல் சட்டத்தில் அரசுரிமை மக்களிடம் உள்ளது. மக்கள் அமைச்சரவையின் கொள்கையில் நம்பிக்கையில்லாமல் இருக்கும் பொழுது அமைச் சர்கள் பதவியில் ஒட்டிக் கொண்டு இருக்க விரும்பினால் அது குடியாட்சி முறையிலான அரசியல் சட்டத்திற்குப் புறம் பானதன்றோ? எனவே, அமைச்சர்களிடம் மக்களுக்கு வெறுப்பு வளர்ந்த பிறகும், அரசு கொள்கைகள் அக் கட்சியின் இலாப நோக்கத்தின் அடிப்படையில் உருவாக்கப்பட்டுச் செயற்படு கின்றது என்ற பரவலான அபிப்பிராயம் நிலவும் போதும், அமைச்சர்கள் சட்டமன்ற உறுப்பினர்களின் நேர்மையற்ற ஆதரவைக் கொண்டு மாத்திரம் செயற்பட்டால், குடியரசு தலைவர் அவ் வமைச்சரவையைத் தொடர்ந்து பதவியில் நீடிக்க அனுமதிப்பது சட்ட விரோதமான செயலாகக் கருதப்பட வேண்டும்.

மக்களின் ஆதரவை இழந்த ஓர் ஆளுங்கட்சியின் அமைச்ச ரவையைப் பதவி நீக்கம் செய்வதில் சில சிக்கல்கள் இருக்கின்றன. உதாரணமாக மக்கள் அமைச்சர்களை முழுமையாக வெறுக் கிறார்கள் என்பதைக் குடியரசு தலைவர் எவ்விதம் அறிய முடியும்? குடியரசு தலைவருக்கு இது விஷயமாய்த் தகவல் கொடுக்கும் அமைப்புகளே ஒழுங்கீனமானதாகவும், களங்கம் கொண்டவை களாகவும் இருக்கலாம். பதவி நீக்கம் செய்த அரசியல் கட்சியே மறுபடியும் தேர்தலில் தகாத முறைகளைக் கையாண்டு அரசு பொறுப்பில் அமராது என்று எப்படிச் சொல்ல முடியும்? குடியரசு தலைவரின் நடவடிக்கை எவ்வளவு நேர்மையானதாக இருப்பினும் அவர் பதவி நீக்கம் செய்த அமைச்சரவையே மறுபடி அரசு பொறுப்பை ஏற்றால் குடியரசு தலைவரின் நிலை நகைப்புக்கு இட மாகி விடும்.

எனவே, மக்கள் சபையின் ஆதரவைப் பெற்றுச் செயற்படும் ஓர் அமைச்சரவை எவ்வளவு ஒழுங்கீனமாக, ஊழல் மன்னர்களாகச் செயற்பட்டாலும் அது துணிச்சலாகப் பெருந்தவறுகளைச் செய்து ஒரு மோசமான நெருக்கடியை உருவாக்கினுலொழிய அதைப் பதவி நீக்கம் செய்வது ஒரு சிக்கலான விஷயம் தான்.

அமைச்சர்களின் இலாக்காக்கள்

இங்கிலாந்து நாட்டில் பிரதமர் அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்துஇலாக்காக்களையும்பிரித்துக் கொடுக்கிறுர். தற்போதைய நிலையில் அரசிக்கு இதில் எந்தப் பங்கும் கிடையாது. இந்த நிலை இந்தியாவிலும் இருக்க வேண்டும் என்றுலும் குடியரசுதலைவர் விதி எண் 77 (B)-ன் கீழ் அரசு அலுவல்களுக்கான விதிகளை அமைத்து இலாக்காக்களை அமைச்சர்களிடையே பிரித்துக் கொடுக்க அதிகாரம் இருக்கிறது. ஆனுல், நடைமுறையில் குடியரசுதலைவரால் இதைச் செய்ய முடியும் என்று எண்ணவும் முடியாது. ஏனெனில், அமைச்சரவையின் தலைமையில் பிரதமர் இருப்பதாலும், அவரே அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதாலும் அவர் இடும் கட்டளைப்படி அவர் காட்டும் வழியில் மற்றவர்கள் செயற்பட வேண்டியிருப்பதாலும் அரசு இலாக்காக்களைப் பிரித்துக் கொடுக்கும் பொறுப்பு அவரையே சாரும். இதில் குடியரசு தலைவரின் தலையீடு அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பிற்கு உகந்ததாக இருக்காது.

குடியரசுதலைவரின் செயல்களுக்கு அமைச்சர்கள் சட்ட ரீதியாகப் பொறுப்பு வகிக்க இடமில்லை. இங்கிலாந்தில் பொது நிருவாகம் சம்பந்தப்பட்ட வகையில் அமைச்சரவை மக்கள் சபையிடமும் (House of Commons) கூட்டுப் பொறுப்புடன் இருப்பதல்லாமல் அவர்களுக்கு ஒரு தனிப் பொறுப்பும் உள்ளது. மன்னரின் அதிகாரபூர்வமான எந்தச் செயலிலும் சம்பந்தப்பட்ட அமைச்சர் உறுதிக் கையொப்பமிட வேண்டும். மன்னரின் செயலுக்குச் சட்டபூர்வமாக அமைச்சர்தாம் பொறுப்பு ஏற்க வேண்டும். சட்ட விரோதமான செயலாக இருந்தால் அமைச்சர்தாம் பதில் சொல்லியாக வேண்டும்.

இந்திய அரசியல் சட்டத்தில் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு ஏற்கப்பட்ட போதிலும், இம்மாதிரியான சட்ட ரீதியான பொறுப்புப் புகுத்தப்படவில்லை. அரசியல் சட்டம் குடியரசு தலைவரின் செயல்களை ஒரு பொறுப்பு வாய்ந்த அமைச்சர் உறுதி

செய்ய வேண்டும் என்று கூறவில்லை. விதிஎண் 77 பிரிவு (2)-ல் இந் நிலை உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இவ் விதிப்படி குடியரசு தலைவரின் உத்தரவுகள் செயலாளரால் உறுதிப்படுத்தப்படு கின்றன. குடியரசு தலைவருக்கு என்ன ஆலோசனைகள் அமைச்சர் களால் கொடுக்கப்பட்டன என்பதை விசாரணைசெய்ய நீதிமன்றங் களுக்கு உரிமையில்லை. இந்தியாவில் அமைச்சர்களின் ஆலோசனை களின் பேரில் குடியரசுதலைவர் அதிகாரபூர்வமாகச் செய்யும் செயல்களுக்கு அமைச்சர்கள் பொறுப்பேற்க மாட்டார்கள்.

குடியரசுதலைவரின் உத்தரவுகளை அமைச்சர் உறுதிப்படுத்தும் முறை இல்லாவிட்டாலும் குடியரசுதலைவர் சட்டரீதியான தலைவர் என்பதற்கேற்ப நடந்து கொள்வதில் எந்தத் தடங்கலும் இல்லை. இங்கிலாந்து மன்னர் சட்டத்திற்கு அப்பாற்பட்டவர். எனவே, அமைச்சர் மன்னரின் உத்தரவுகளை உறுதிப்படுத்தா விடில் குடிமக்களுக்கு அரசு சட்டவிரோதமாக நடந்தால் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்து நீதி கேட்க வாய்ப்பு இருக்காது. இந்தியாவில் குடியரசுதலைவருக்கு தனிப்பட்ட முறையில் அவரின் அதிகாரபூர்வமான செயல்களுக்குச் சிவில், கிரிமினல் சட்டங்களின்படி வழக்குத் தொடர முடியாது. ஆனால், விதிஎண் 361-ன் இரண்டாவது பிரிவு (Proviso) குடியரசுதலை வரின்மேல் வழக்குத் தொடர எவருக்கும் உரிமை வழங்கா விட்டாலும், இந்திய அரசுமேல் வழக்குத் தொடரும் குடி உரிமை நீக்கப்படவில்லை என்று விவரமாகக் கூறுகிறது.

## குடியரசு தலைவருக்குத் தகவல்கள் பெறும் உரிமை

அமைச்சரவையின் விவாதங்களில் அல்லது கூட்டத்தில பங்கு கொள்ளவோ அல்லது கலந்து கொள்ளவோ இங்கிலாந்து அரசி யைப் போல் குடியரசு தலைவருக்கு உரிமையில்லாவிட்டாலும் செயற்படுத்தும் பிரிவின் (Executive Branch) செயல்களை விமரிசனம் செய்ய உரிமையுண்டு. இதற்காகச் சட்டமியற்றும் விஷயங்கள் பற்றியும் அரசு நிருவாக சம்பந்தமான முடிவுகளும் குடியரசு தலைவருக்கு அவ்வப்பொழுது பிரதம அமைச்சர் மூலம் தெரிவிக்கப்படும். குடியரசு தலைவருக்கு எல்லா அமைச்சரவை முடிவுகளையும் தெரிவிக்கப் பிரதமர் கடமைப்பட்டுள்ளதல்லாமல் குடியரசு தலைவர் விரும்பும் இதர விஷயங்கள் பற்றியும் பிரதமர் அவரைத் திருப்தி செய்ய வேண்டும். விதி எண் 78ன்-படி குடியரசு தலைவர் நாட்டின் நாடித் துடிப்பைக் கண்காணிக்க உரிமை உடையவர். இவ்வாறு செயற்படும்போது நாட்டிற்குச் சட்ட மியற்றும் கொள்கை பற்றியும் நிருவாக சம்பந்தமான அமைச்ச

ரவையின் முடிவுகளைப் பற்றியும் குடியரசு தலைவர் அமைச்சரவையைப் பாராட்டலாம் அல்லது எச்சரிக்கலாம். பிரதமருக்கு அவ்வப்பொழுது அரசின் கொள்கைகளை விமரிசித்துக் குடியரசு தலைவர் எழுதும் கடிதம் ஓர் அரசியல் மரபாக மலர்ந்துள்ளது. இக் கடிதத்தை கேபினட் அந்தஸ்து பெற்ற அமைச்சர்களுக்குப் பிரதமர் அனுப்பி வைப்பார். இவ்விதத்தில் குடியரசு தலைவரின் கருத்துகளை அமைச்சர்கள் தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுகின்றது. இது ஒரு வரவேற்கத்தக்க நல்ல பழக்கம். ஏனெனில், அரசு செயற்படுத்தும் அல்லது செயற்படுத்த உத்தேசிக்கும் கொள்கைகளின் பேரில் குடியரசுதலைவரின் அபிப்பிராயம் ஓரளவுக்குத் திருத்த உபயோகிக்கப்படும்.

அன்றுட அரசு நடவடிக்கைகளை, நிருவாகத்தைத் தெரிந்து கொள்வது நாட்டுத் தலைவரின் முக்கிய பணிகளிலே ஒன்று. இங்கிலாந்து மன்னர்களுள் சிலர் இந்த உரிமையை வற்புறுத்தியிருக்கிறார்கள் என்பது எல்லாரும் அறிந்த ஒரு விஷயம். விக்டோரியா இராணியார் இது விஷயத்தில் கண்டிப்பாக இருந்திருக்கிறார். அவர் பிரதமருக்கு அனுப்பிய கடிதங்களுள் ஒன்று அரசு கொள்கையில் இராணியாரின் உரிமையைப் பிரதிபலிக்கிறது. பால் மர்ஸ்டன் பிரபு (Lord Palmerston) பிரதமராக இருந்த பொழுது, பிரதமர் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் அவர் உத்தேசித்துள்ள நடவடிக்கையைத் தெளிவாக்கினுல்தான் தம்முடைய ஒப்புதலை அதைப் பரிசீலித்துத் தர உதவும் என்று *கூறியுள்ளார். அப்படி ஒரு கொள்கைக்குச் சம்மதம் இராணியார் தெரிவித்தபிறகு அந்தக் கொள்கையை இராணியாரின் அனுமதியில்லாமல் வெளி நாட்டு இலாக்கா அமைச்சர் மாற்றிக் கொள்ளவோ திருத்தவோ உரிமை கிடையாது என்றும் கூறியிருக்கின்றார்.

ஏழாம் எட்வர்ட் மன்னர் முக்கியமான விஷயங்களிலும் நூதனமான நடவடிக்கைகளிலும் 'தகவல்களைப்' பிரதமரிடமிருந்து எதிர்பார்த்தார்.

தனிப்பட்ட அமைச்சரின் பேரில் குடியரசு தலைவரின் கட்டுப்பாடு

அரசியல் சட்டவிதி 78-ன் சரத்து C பகுதியில் (clause C of Art. 78) அமைச்சரவை முடிவு எடுக்காத விஷயங்கள் பேரில் சம்பந்தப்பட்ட அமைச்சர் முடிவு எடுத்திருந்தால் அம் முடிவைக் குடியரசு தலைவருக்கு அவரே நேரிடையாகத் தெரிவிக்க வேண்டும் என்று கண்டுள்ளது. குடியரசு தலைவர் தனி அமைச்சரின் முடி

வைப் பிரதமருக்கு அனுப்பி அமைச்சரவையின் முடிவைத் தெரிந்து செயற்படுமாறு கூறுவார். இதிலிருந்து குடியரசுதலைவர் தனிப்பட்ட அமைச்சர்களுக்கும் கேபினட்டுக்கும் (cabinet) உள்ள உறவை ஒழுங்குபடுத்த அதிகாரம் பெற்றுள்ளார் என்று தெரிகிறது. ஆனால், இந்த உரிமை உண்மையில் பிரதமரையே சாரும். விதி எண் 78-ல் சரத்து (a)வில் அமைச்சரவையின் முடிவுகளைக் குடியரசு தலைவருக்குத் தெரிவிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளதால் இவ் விஷயங்களில் குடியரசு தலைவர் அதிகமாகத் தலையிடுவது சரியில்லை. பாராளுமன்ற அரசு முறையில் மேலே குறிப்பிட்டுள்ள சரத்து முரண்பாடாகத் தோன்றுகிறது. இங்கிலாந்து பிரதமர் க்ளாட்ஸ்டோன் (Gladstone) தமது புத்தகத்தில், 'அமைச்சர்களுக்குள் எவ்வளவு கருத்து வேற்றுமைகள் இருப்பினும் மன்னரைக் காணும் போது வேற்றுமைகள் இல்லாதது போல் காட்சியளிக்க வேண்டும்' என்கிறார். அவர் மேலும், 'அரசியாருக்கு கேபினட்டுக்குள் கொள்கையில் கருத்து வேற்றுமை இருப்பது தெரியக் கூடாது. கேபினட் எடுக்கும் முடிவைத்தான் தெரிந்து கொள்ள வேண்டுமேயல்லாது விவாதத்தில் அமைச்சரவையில் தோன்றிய கடும் கருத்து வேற்றுமைகளை அன்று' என்கிறார். மேற்கூறிய பிரதமர் க்ளாட்ஸ்டோனின் கருத்துகளை மற்றப் பிரதமர்கள் ஏற்றுக் கொள்ள இயலவில்லை. இராணியார் கூடத் திரு. சர். பீல் (Peel) போன்ற பிரதமர்கள் தம்மிடம் அமைச்சரவையில் நடந்த விவாதத்தைத் தெரிவித்துள்ளார்கள். இது பழக்கத்தில் உள்ள ஓர் அரசியல் மரபு என்று கூறுகிறார். இராணியார், திரு. டிஸ்ரேலி (Disreli) என்னும் பிரதமர்தாம் இராணியிடம் அமைச்சரவையில் நடந்த எல்லாவற்றையும் ஒன்று விடாமல் கூறி நல்ல பெயர் எடுத்தவர் என்கிறார்.

அரசியல் சட்ட விமரிசகர்கள், மன்னரிடம் பிரதமர் அமைச்சரவையின் கூட்டு முடிவைத்தான் கொடுக்க வேண்டுமே தவிர முழுவிவரங்களையும் அன்று என்கிறார்கள். மேலும், மன்னர் விவாதத்தில் வந்த எல்லா விஷயங்களைப்பற்றியும் கேட்பதோ தெரிந்து கொள்ள விரும்புவதோ சரியில்லை என்கிறார்கள். பாராளுமன்ற அரசு முறையின் அடிப்படைச் சின்னம் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு. நாட்டின் தலைவர் ஒரு தனி அமைச்சரின் முடிவையும் அமைச்சரவை முடிவையும் வேறுபட்டதாகக் கொள்வது முறையாகாது. ஏனெனில், ஓர் அமைச்சரின் முடிவே அமைச்சரவையின் முடிவாகப் பரிணமிக்கும். இதுதான் அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பின் முக்கிய அம்சம்.

ஜான்மார்லி (Jon Morley) என்பவர் (Li of Walpole) வால்போலின் வாழ்க்கை என்ற புத்தகத்தில் 'பொதுவாக

இலாக்காக்களின் கொள்கைகளின்பேரில் எடுக்கும் முக்கிய முடிவுகள் அமைச்சரவையின் முடிவாகக்கருதப்படும். வெளி உறவு இலாக்கா அனுப்பும் ஒரு விஷேதமான அறிவிப்பு நிதி அமைச்சரைப் பதவி விலகும்படி செய்யலாம். ஒரு மதியீனமான யுத்த அமைச்சரின் முட்டாள்தனமான செயல் உள்துறைச் செயலாளரைப் பதவி விலகும்படி செய்யும். அமைச்சரவை (Cabinet) என்பது ஒரு பிரிவு (Unit). சட்டசபை சம்பந்தப்பட்ட வகையிலும் அமைச்சரவை ஒரு பிரிவு தான். அதனுடைய கருத்துகள் மன்னர் முன்பும் பாராளுமன்றத்தின் முன்பும் ஒரு தனி மனிதனின் அபிப்பிராயம் போல் வைக்கப்படுகின்றன அக் கருத்துகளை ஏற்றுக் கொள்ளாவிட்டால் அக்கருத்துகள் அமைச்சரவைக்கு முக்கியமானதாகப்பட்டால், வாக்காளர்களுக்கு விண்ணப்பம் விடுத்துப் பதவி விலகும். அமைச்சரவை அரசின் முக்கிய அம்சம். அது பல பேரைக் கொண்டிருந்தாலும் ஒருங்கிணைந்து ஒருவர் போல் செயற்படும் அமைப்பு அல்லது எல்லாரும் ஒருவருக்காக ஒருவரே எல்லாருக்கும் என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்', என்று கூறியிருக்கிறார். அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு நெறி என்பது அமைச்சரவையின் அனுமதி ஒரு காரியத்திற்கு இல்லாத போது ஒரு தனி அமைச்சர் செய்யும் காரியத்தை அமைச்சரவையின் காரியமாக ஏற்றுக் கொள்வது தான். பிரதமரின் நம்பிக்கையை இழந்து விட்டாலொழிய ஓர் அமைச்சரின் செயலை மற்ற அமைச்சர்கள் விமரிசிக்க இடமே இல்லை. அப்படிப் பிரதமரின் நம்பிக்கையை இழந்த அமைச்சரின் மேல் பிரதமர் தாமாகவே நடவடிக்கை எடுப்பது குடியரசு தலைவரின் விருப்பத்தின்மேல் அவரின் கருத்துக்கிணங்க மரியாதைக்கு எடுப்பதை விட மேலானது. இப்படிப்பட்ட ஒரு விரும்பத்தக்க அரசியல் மரபு ஏற்படுவது அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பைப் பிரதிபலிப்பதாகவும் அமைச்சர்களுக்கிடையே பரஸ்பரம், வெளிப்படையான சுமுகமான உறவுக்கு எடுத்துக்காட்டாகவும் இருக்கும். அமைச்சரவை நிருவாகம் நல்ல முறையில் வெற்றி நடைபோட வேண்டுமானால் அமைச்சர்களுக்கிடையே கள்ளம் கபடமில்லாத அன்னியோன்னியமான, நேர்மையான உறவு முழுமையாக நிலவ வேண்டும்.

அமைச்சரவை கூட்டாக ஒருமைப்பாட்டுடன் செயற்படுவதால் தனிப்பட்ட முறையில் அமைச்சர்கள் குடியரசுதலைவருக்கு அறிக்கைகள் அனுப்புவதும் அவரைத் தனித்தும், பிரதமரின் முன் அனுமதியில்லாமல் சந்திப்பதும் முறையில்லை. ஏனெனில், அமைச்சர்கள் தனித்துச் சந்திக்க வாய்ப்புக் கிடைத்தால் குடியரசு தலைவருக்கு அமைச்சரவையிடமிருந்து (Cabinet) கிடைக்கும்

தகவல்களைக்காட்டிலும் அதிகமாகவே விஷயங்கள் கிடைத்து அமைச்சாவையுடன் அரசியல் விளையாட்டில் இறங்க ஏதுவாகும். ஏனெனில், ஒரு தனி அமைச்சரின் கொள்கைகள் சம்பந்தமான குடியரசு தலைவரிடம் நடத்தும் உரையாடல், மற்ற அமைச்சர் களுக்குத் தெரியாது.

குடியரசுதலைவர் தனி அமைச்சரின் கொள்கையை ஏற்காமல் பிரதமரிடம் அமைச்சரவையுடன் விவாதித்து முடிவு எடுக்க ஆலோசனை கூறும்பொழுதுதான் பிரதமருக்குத் தனிப்பட்ட முறையில் அமைச்சர் குடியரசுதலைவருடன் உரையாடியது தெரிய வரும். எனவே, விதிஎண் 78-ல் பிரிவு 'C' யில் வரும் சரத்து அமைச்சரவை ஆட்சி சுமுகமாகச் செயற்படுத்துவதற்கு இடையூறாக இருப்பதால் அதை அரசியல் சட்டத்திலிருந்து நீக்குவது நல்லது என்று பலர் கருத்துத் தெரிவித்துள்ளார்கள்.

அமைச்சர்கள் குடியரசு தலைவருக்கு உதவியாக ஆலோசனை கூறல்

அரசியல் சட்ட விதி எண் 74 (1)-ல் அமைச்சரவையின் கடமை குடியரசு தலைவருக்கு உதவியாக ஆலோசனை கூறுவது என்று தெளிவாகக் குறிப்பிடுகிறது. உதவியோடு ஆலோசனை என்ற சொற்றொடர் கானடா நாட்டில், பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம் (British North American Act 1867) 1867, பிரிவு-II-ல் காணப்படுகிறது. 'கானடா நாட்டு அரசிக்கு உதவியோடு ஆலோசனையையும் கூற அரசியின் அந்தரங்கக்குழு' (Queen's Privy Council for Canada) என்ற பெயருடன் இருக்கும். இதன் உறுப்பினர்கள் ஆளுநர்-தலைவரால் (Governor-General) பதவிப் பிரமாணம் செய்யப்பட்டு, பதவி நீக்கமும் செய்யப்படு வார்கள்.

ஆரம்பத்தில் ஆளுநர்-தலைவர் ஓர் எதேச்சாதிகாரி போல் தான் செயற்பட்டிருக்கவேண்டும். 1867-ல் நிறைவேற்றிய வட அமெரிக்கச் சட்டம் அமலில் வந்த பிறகு ஏற்படுத்தப்பட்ட அரசியல் மரபின் தன்மையால் இன்று ஆளுநர்-தலைவர் ஒரு சட்டரீதியான, இங்கிலாந்து மன்னரைப் போல், நாட்டுத் தலைவராய் விளங்குகிறார்.

'உதவியோடு ஆலோசனை' என்ற சொற்றொடர் இதிலிருந்து இந்திய அரசு சட்டம் 1935-ல் புகுத்தப்பட்டு இந்திய அரசி யல் சட்டத்திலும் சேர்க்கப்பட்டது. சமீபகாலத்தில் உருவான அரசியல் சட்டங்களில் அந் நாட்டுத் தலைவர்களாக உள்ள

குடியரசு தலைவர்கள் அமைச்சரவையின் முடிவின்படி நடந்து கொள்ளும்படி குறிப்பிடப்பட்டுள்ளது. உதாரணமாக அயர் நாட்டு (Irish Republic) அரசியல் சட்டம் தெளிவாகச் சந்தேகத்திற்கோ, தர்க்கத்திற்கோ இடமில்லாமல் குறிப்பிடுவது யாதெனில், 'சட்டப்படி குடியரசு தலைவருக்குக் கொடுக்கப் பட்டுள்ள எல்லா அதிகாரங்களும் அமைச்சரவையின் ஆலோசனைப் படிதான் செயற்படுத்தப்பட வேண்டும்', என்பது.

இந்தியாவில் அரசியல் சட்டம் தயாராகிக் கொண்டிருந்த பொழுது, ஒரு பட்டியல் உத்தரவுகள் (Schedule of directives) அரசியல் சட்டத்தின் ஒரு பகுதியாக இருந்தன. ஆனால், அரசியல் சட்டம் முழுமையாகத் தீர்மானிக்கப்பட்ட நிலையில் இந்த அதிகாரங்களின் பட்டியல் கைவிடப்பட்டது. எனவே, இன்று அமலில் இருக்கும் அரசியல் சட்டப்படி குடியரசு தலைவரின் செயலைக் கட்டுப்படுத்தும் எந்தச் சரத்தும் இணைக்கப்படவில்லை. எனவே, குடியரசு தலைவர் அமைச்சரவையின் முடிவுப்படி நடப்பது கட்டாயப்படுத்தப்படவில்லை. அமைச்சரவை முடிவின் பேரிலேயே குடியரசு தலைவர் செயற்படுவது இன்றைய பாராளு மன்ற அரசு முறையின் ஒரு முக்கிய அம்சம். இருந்த போதிலும் இந்திய அரசியல் சட்டத்தில் மேலே குறிப்பிட்ட நிலை வற்புறுத்தப் படவில்லை. எனவே, அரசின் தன்மை குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் உள்ள உறவை யொட்டித்தான் இருக்க வேண்டும்.

அரசியல் சட்ட மேதைகள் விதி 74 (1)-ஐயும் மற்ற விதி களையும், சரத்துகளையும் இந்திய அரசு சட்டம் 1935-ன் முன்னால் வைத்துப் பரிசீலிக்கும் பொழுது, குடியரசு தலைவர் அமைச்சரவையின் சொற்படிதான் நடக்க வேண்டும் என்பதைக் காட்டுகிறது. விதிகள் 75 (3), 78 மேற்படி நிலையை வலியுறுத்து வனவாக அமைந்துள்ளன. விதி எண் 75 (3)-ல் மக்கள் சபைக்கு அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்புக் கூறப்பட்டுள்ளது. விதி எண் 78-ல் குடியரசு தலைவருக்குத் தகவல் கொடுக்கும் பொறுப்பைப் பிரதமரிடம் ஒப்படைத்துள்ளது.

அரசியல் நிர்ணய சபையினர் நாளாவட்டத்தில் உருவாகும் அரசியல் மரபுகளைக் கொண்டு குடியரசுதலைவருக்கும் அமைச்ச ரவைக்கும் உள்ள உறவு தீர்மானிக்கப்படவேண்டும் என்ற முடிவையே ஆதரித்தார்கள்.

விதி எண்-78-ல் பிரதமரின் சட்டபூர்வமான கடமைகள் கீழ் வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

1. அமைச்சரவையின் எல்லா முடிவுகளையும், நிருவாக சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும், சட்டமியற்றும் வகையில் எல்லா ஆலோசனைகளையும், பிரதமர் குடியரசு தலைவருக்கு அனுப்புவது.

2. அரசு நிருவாக சம்பந்தமாகவும், சட்டமியற்றுவது பற்றியும் குடியரசுதலைவர் கோரும் எல்லா விஷயங்களையும் தருவது.

3. அமைச்சரால் அவரின் இலாக்கா சம்பந்தமாக எடுக்கப் பட்ட முடிவைக் குடியரசுதலைவர் விரும்பினால் அமைச்சரவையின் பரிசீலனைக்கு வைத்து முடிவு செய்வது.

அரசியல் சட்டவிதி 78-ல் 'முடிவு' என்ற சொல் ஓரளவுக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியதில் இரண்டுவிதமான அபிப்பிராயங்கள் நிலவுகின்றன. ஒன்று-அமைச்சரவையின் 'முடிவு' அரசு நிருவாக சம்பந்தமாக எடுக்கப்பட்ட கடைசி முடிவு. ஏனெனில், அமைச் சரவை எடுக்கும் முடிவுகள் எல்லாமே இத்தன்மை வாய்ந்தது என்பது. மற்றொன்று அமைச்சரவையின் 'முடிவு' நிருவாகத் துறையில் கடைசி முடிவாக இருக்க முடியாது; குடியரசு தலைவருக்கு விவரம் தெரிவிப்பதற்காக அல்லது ஆலோசனை கூற எடுத்த முடிவாகத்தான் இருக்க வேண்டும். கடைசி முடிவு (final decision) குடியரசு தலைவரைச் சாரும் என்பது. எனவே, விதி எண் 78-ல் வரும் 'முடிவு' அமைச்சரவையின் முடிவு என்றும், அமைச்சரவைதான் செயற்படுத்தும் பிரிவின் தலைமையில் உள்ளது என்றும் கூறுவதும் இந்தியப் பாராளுமன்ற அரசு முறையை ஸ்திர மில்லாததாக்கும் தன்மையைப் பெற்றிருக்கும்.

அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களுள் ஒருவரான திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் விதி 74 (1)-ல் குடியரசுதலைவர் அமைச்சரவையின் உதவி கலந்த ஆலோசனையின் பேரில்தான் செயற்படவேண்டும்; வேறுவிதமாகக் குடியரசு தலைவர் செயற் பட்டால் அது சட்ட விரோதமாகக் கருதப்படும் என்றார். விதி எண் 74 (1)-ன் வாசகம் அமைச்சரவையின் ஆலோசனைப்படி தான் குடியரசு தலைவர் செயற்படவேண்டும் என்று வற்புறுத்த வில்லை. எனவே, குடியரசுதலைவர் அமைச்சரவையின் அறிவுரையை உதாசீனம் செய்தால் அது சட்ட விரோதமான செயல் என்று குற்றஞ்சாட்ட இயலாது.

அரசியல் சட்டம், அமைச்சரவையின் ஆலோசனைகளைக் குடியரசுதலைவர் ஏற்றுச் செயற்பட வேண்டும் என்று தீர்மானித்து இருந்தால் அந்தநிலை சந்தேகத்திற்கு இடமில்லாமல் சரத்துகளில் (அரசியல் சட்டத்தில்) இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால், இதற்கு மாறாக அரசியல் சட்டவிதிகள் மேற்படிநிலைக்கு மாறுபட்ட கருத்தைத்தான் கூறுகின்றன. தெளிவாகச் சொல்ல வேண்டிய தைச் சொல்லாமல் விட்டதால்தான் குழப்பத்திற்கும் முரணான கருத்துகளுக்கும் இடம் தருவதாக அமைகிறது. பானர்ஜி (Banarji) என்ற அரசியல் விரிவுரையாளர் இது விஷயமாய் விமரிசிக்கும் பொழுது 'அரசியல் சட்ட விதி எண் 74 (1) சட்டரீதியாகக் குடியரசுதலைவர் எல்லாச் சமயங்களிலும் அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுச் செயற்படுவது அவசியம் என்று கூறவில்லை. எனவே, அமைச்சரவையின் ஆலோசனைகளை நிராகரிக்கக் குடியரசு தலைவருக்கு உரிமை பூரணமாக உள்ளது சட்டப்படி', என்று கூறுகிறார்.

டாக்டர் இராஜேந்திர பிரசாத் அரசியல் நிர்ணய சபைத் தலைவராக இருந்த பொழுது குடியரசுதலைவர் அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுச் செயற்பட ஒரு சரத்தைச் சேர்க்க ஆலோசனையும் கூறினார். ஆனால், அப்படி எதுவும் சேர்க்கப்பட வில்லை.

அரசியல் சட்டத்தின் வாசகப்படி நடப்பதானால் குடியரசு தலைவர், அமைச்சரவையின் ஆலோசனைப்படி நடக்கச் சட்டத்தில் இடமில்லை. ஆகையால், அமைச்சரவையின் ஆலோசனையை நிராகரிப்பது மாத்திரம் அன்றித் தம்மிச்சையாகவும் செயற்பட அரசியல் சட்டம் குடியரசு தலைவருக்கு இடமளிக்கிறது. இந்த நிலையின் உண்மை நிலை குடியரசுதலைவர் ஓர் அரசியல் கட்சியைச் சேர்ந்தவராக இருந்து, அரசு பொறுப்பை ஏற்றுச் செயற்படும் கட்சியாளர்கள் மாற்றுக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்கும் பொழுது புலப்படும். மாற்றுக் கட்சியைச் சேர்ந்தவராக இல்லாமல் ஆளுங்கட்சியைச் சேர்ந்தவராக இருந்தாலும் எத்தனையோ உட்பிரிவுகள் (வலசாரி, இடசாரி, நடுநிலை யாளர்கள்) ஒரு கட்சியில் உள்ளன. அப்படி அமைச்சரவைக் கொள்கைக்கு மாறுபட்ட கொள்கைப் பிடித்தமுள்ள குடியரசு தலைவராக இருந்தால் அரசு நிருவாகம் சுமுகமாக இருக்க முடியாது. ஏனெனில், குடியரசு தலைவர் அமைச்சரவைக்குத் தீராத சங்கடங்களை ஏற்படுத்தலாம். இந்த நிலைக்குக் குடியரசு தலைவரின் தேர்தல் முறையும் உதவுவதாக அமைந்துள்ளது.

இங்கிலாந்து மன்னர், பிரதமர் மூலமாக அமைச்சரவையின் முடிவின்மேல்தான் செயற்படுகிறார். அமைச்சரவை தீர்மானித்தது போல் நடப்பது இங்கிலாந்து நாட்டில் வளர்ந்துள்ள ஒரு விரும்பத் தக்க அரசியல் மரபு. அந்த நாட்டில் மன்னரின் ஒவ்வோர் அதிகார பூர்வமான செயலும் சம்பந்தப்பட்ட அமைச்சரால் உறுதி யளிக்கும் வகையில் கையொப்பமிடப்பட வேண்டும். இந்திய அரசியல் சட்டத்தில் இம்மாதிரியான சரத்து இல்லை. விதி எண் 77-ன் கீழ், பிரிவு 2-ல் அமைச்சர் குடியரசுதலைவரின் உத்தரவை உறுதிப்படுத்தும் வகையில் கையொப்பமிடக் கூறவில்லை. இலாக் காவின் காரியதரிசியால்தான் உத்தரவுகள் உறுதியளிக்கப்படு கின்றன. அமைச்சருக்கும் செயலாளருக்கும் உள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் போல் இருக்கிறது. அமைச்சரவையின் ஆலோசனையின்றிக் குடியரசுதலைவர் செயற் பட முடியாது என்று கூறமுடியாது. அரசியல் சட்டத்தி லேயே அமைச்சரவையைக் கலக்காமல் குடியரசு தலைவர் செயற்பட எத்தனையோ சந்தர்ப்பங்களைக் காட்டியுள்ளார்கள். உதாரணமாக அமைச்சரவையின் முடிவுக்கு விடவேண்டிய விஷயத்தைப் பிரதமரைக் கலந்து மாத்திரம் செய்ய முடியாது. அமைச்சரவையின் முடிவுக்கு விடும் ஒரு விஷயத்தில் பிரதமரே தம் இலாக்கா சம்பந்தப்பட்ட பிரச்சினை என்று இலாக்காவைப் பொறுத்த முடிவை எடுத்திருந்தால் அம் முடிவைக் குடியரசு தலைவர் நிராகரிக்க உரிமையுண்டு. குடியரசு தலைவர் தம் சொந்த அதிகாரத்தின் மேல் ஒரு மசோதாவைப் பாராளுமன்றத்தின் மறு பரிசீலனைக்கு அனுப்பலாம். அல்லது பரிசீலனையில் இருக்கும் விஷயத்தின் மேல் ஒரு குறிப்பு எழுதி அனுப்பலாம்.

இந்த முடிவுக்கு ஆதாரமாக அரசியல் சட்டத்தில் எத்தனையோ வாசகங்கள் இருக்கின்றன. உதாரணமாகக் 'குடியரசு தலைவர் நெருக்கடிநிலை உருவாகியுள்ளது என்று அவர் திருப்தி அடைந்தால்' என்ற வாசகம் குடியரசு தலைவரின் திருப்தி என்பது அவர் செய்ய வேண்டிய அலுவல்களைக் குறிப்பிடவில்லை. மனநிலையைத்தான் குறிக்கிறது. எனவே, அரசியல் சட்ட விதி எண் 74-ன் கீழ் இது வரவில்லை. இந்தியத் தலைமை நீதிமன்றம், உயர்நீதி மன்றங்களின் தீர்ப்புகள் 'அதிகாரியின் திருப்தி' என்ற சொல்லைச் சந்தேகத்திற்கிடமின்றி விளக்கிக் கூறியுள்ளன. ஒரு மாநிலத்தில் உள்ள நிலையைப் பற்றி அமைச்சரவையே திருப்தி அடைந்தாலும் அது குடியரசு தலைவரைக் கட்டுப்படுத்தாது. ஏனெனில், மத்திய அமைச்சரவையின் திருப்தி என்பது மாநிலத்

தில் அரசு பொறுப்பில் இருக்கும் மாற்றுக் (வேறு) கட்சியைப் பதவி யிலிருந்து இறக்கச் செய்த சூழ்ச்சியின் சின்னமாகவும் இருக்கலாம். எனவே, குடியரசுதலைவரின் திருப்தி என்றால், அவர் சொந்த மனநிலைப்படி என்ற முடிவுதான் சரியானது. மத்திய அரசு நிருவாகத்தில் இருக்கும் அரசியல் கட்சி குடியரசு தலைவரை ஆட்டிப் படைப்பதாக இருந்தால், 'அரசியல் சட்டம் இந்திய மக்களின் உரிமைகள், சுதந்திரங்களின் சின்னமாக இருக்காமல் ஒரு கட்சிச்சார்புடைய சர்வாதிகாரப் போக்குக்கு உறுதுணை யாக அமையும்'. ஆகவே, குடியரசு தலைவரின் முன் வைக்கப்பட்ட தகவல்கள், விவரங்களைக் கொண்டு அவரே அரசியல் சட்டத்தில் கூறியுள்ளபடி அவசரநிலை உள்ளது என்று திருப்தி அடைய வேண்டும்.

இதைத்தவிர, அரசியல் சட்டத்தில் குடியரசுதலைவர் அமைச்ச ரவையின் ஆலோசனையைத்தவிர இதர சில குழுக்களின் ஆலோசனைப்படி நடக்க இடமளிக்கிறது. இதற்கு எடுத்துக்காட் டாக விதி எண் 103 (1)-ல் (இருசபைகளுள் ஒன்றின்) ஒரு குறிப் பிட்ட உறுப்பினர் விதி எண் 102 பிரிவு (1), விதி 103 பிரிவு (2)-ல் குறிப்பிட்டுள்ள தகுதியின்மைக்கு அருகதையாகிவிட்டாரா என்பதைத் தேர்தல் கமிஷன் பரிசீலனைக்கு விட்டு அதன் முடிவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. உறுப் பினரின் தேர்தல் வெற்றித் தகுதியைப் பொறுத்தவரையில் குடி யரசுதலைவர் எடுக்கும் முடிவில் அமைச்சரவைக்கு எந்தச் சம்பந்த முமில்லை. இதைப் போல் விதி எண் 356-ல் மாநில ஆளுநரிட மிருந்து அம் மாநிலத்தின் நிருவாகம் அரசியல் சட்ட விதிகளின் படி நடப்பதற்கான சூழ்நிலை இல்லை என்ற அறிக்கை குடியரசு தலைவருக்குக் கிடைத்தவுடன் அவர் பிரகடனம் செய்து,

(1) மாநில அரசின் நிருவாகப் பொறுப்பை, அதிகாரங் களைத் தாமே முழுமையாகவோ பகுதியாகவோ ஏற்றுக் கொண்டு, சட்டசபையைத் தவிர ஆளுநராலோ ஒரு குழுவினாலோ அல்லது வேறு அதிகாரம் பெற்ற வாரியத்தாலோ செயற்படுத்தி

(2) சட்டசபையின் அதிகாரங்கள் பாராளுமன்றத்தாலோ பாராளுமன்றத்தின் அதிகாரம் பெற்றவர்களாலோ செயற் படுத்தப்படும் என்று அறிவித்து

(3) இப் பிரகடனத்தை நடைமுறையில் அமல்படுத்தத் தேவைப்படும் உத்தரவுகளைப் பிறப்பித்து அரசியல் சட்டத்தின் சில சரத்துகளைத் (விதிகளை) தாற்காலிகமாக நிறுத்தி வைத்துச் செயற்படலாம்.

இந்தப் பிரிவில் உள்ள எதுவும் உயர்நீதிமன்றத்தின் அதிகாரத்தை மேற்கொள்ளக் குடியரசு தலைவருக்கு அதிகாரத்தை வழங்கவில்லை. மேலும், நீதிமன்றங்கள் செயற்படக் காரணமாக உள்ள எந்த அரசியல் சட்டவிதிகளையும் நிறுத்தி வைக்கக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் கிடையாது. எனவே, மாநில ஆளுநரின் அறிக்கையின் பேரிலேயே குடியரசு தலைவர் ஒரு முடிவுக்கு வரலாம். அவர் எடுக்கும் முடிவை அமைச்சரவையின் அபிப்பிராயத்துக்கு வைக்கத் தேவையில்லை. ஆனால், இவ் விஷயத்தில் அமைச்சரவையையும் கலந்தாலோசிக்க இடமுண்டு. மேலும், ஆளுநரின் அறிக்கையின் பேரில் மாநில அரசு நிருவாகம் சட்ட ரீதியாக நடக்க இயலாது என்றுதெரிந்து அவசரநிலைப் பிரகடனம் செய்யும்வரை அமைச்சரவையைக் கலக்க அவசியம் இல்லை என்பதும் தெளிவாகிறது.

இதைத் தவிர அரசியல் சட்டத்தில் சிறுபான்மையினருக்காகச் சில பாதுகாப்புகள் புகுத்தப்பட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் சில சூழ்நிலையில் பெரும்பான்மையினர் சிறுபான்மையினருக்கு நியாயம் வழங்கத் தவறலாம் என்ற எண்ணத்தில் இந்தப் பாதுகாப்புகள் அரசியல் சட்டத்தில் புகுத்தப்பட்டிருக்கின்றன. மத்திய அரசில் மக்கள்சபையின் பெரும்பாலான உறுப்பினர்களின் சிறிய குழுவாக அமைச்சரவை இருப்பதால், குடியரசுதலைவர் இவ்வமைச்சரவையின் ஆலோசனைப்படியே செயற்பட வேண்டியிருந்தால், ஆளுங்கட்சி விரும்பினால் சட்டத்தில் புகுத்தப்பட்ட சிறுபான்மை மக்களின் பாதுகாப்புகளை உபயோகமில்லாமல் செய்து விடலாம். சிறுபான்மையினருக்குச் சட்டத்தில் ஒருகையால் கொடுத்த பாதுகாப்புகளை மறுகையில் எடுத்துக் கொள்ளும் நோக்கத்துடன் அரசியல் நிர்ணயசபை இந்தப் பாதுகாப்புகளை வழங்கவில்லை. எனவே, குடியரசு தலைவர் சிறுபான்மையினரின் உரிமைகளின் காவலராக விளங்குகிறார். எனவே, அரசியல் சட்ட விதி எண் 331-ன் படி ஆங்கிலோ இந்திய சமூகத்திற்குத் தகுந்த பிரதிநிதித்துவம் மக்கள்சபையில் கொடுக்கப்படவில்லை என்று குடியரசுதலைவர் கருதினால் இரண்டு உறுப்பினர்களுக்கு அதிகப்படாமல் அச் சமூகத்திற்குப் பிரதிநிதித்துவம் கொடுக்க நியமனம் செய்யலாம். இந்த முடிவு குடியரசுதலைவரைச் சார்ந்ததே தவிர வேறு எந்த அதிகார, சமூக வர்க்கத்தினுடையதும் அன்று. கேரள மாநில ஆளுநர் முன்பு ஆங்கிலோ இந்திய சமூகத்தின் பிரதிநிதியாக ஒருவரைச் சட்டசபையில் நியமனம் செய்ததில் வேறு எவரையும் கலந்து செய்யவில்லை. அவர் மனத்திற்குத் தோன்றியபடி செய்தார். அரசியல் சட்ட விதி எண் 331-க்கு நிகரான மாநிலத்திற்கு ஏற்ற விதியின் கீழ் ஆளுநர் செயற்பட்டார்.

அதேபோல விதி எண் 347-ல் மாநிலத்திலுள்ள மொழிவாரிச் சிறுபான்மையினருக்கும் சில பாதுகாப்புகள் வழங்கப்படுகின்றன. ஒரு மாநிலத்திலுள்ள பெருவாரியான மக்கள் ஒரு குறிப்பிட்ட மொழியை உபயோகிக்க விருப்பம் தெரிவிக்கிறார்கள் என்று குடியரசுதலைவருக்குத் தெரிந்தால் அவர் அம் மாநில அரசுக்கு இது சம்பந்தமாக உத்தரவுகள் பிறப்பிக்கலாம்.

அரசியல் சட்டத்தில் குடியரசுதலைவரின் அலுவல்கள் பொறுப்புகள், கடமைகளை விவரிக்கும் பொழுது அவர் மனத்திற்குப்பட்டதைச் செய்யலாம் என்பதற்கு ஆதாரமாகக் கீழ்க் கண்ட சொற்றொடர்களைத் தாராளமாக உபயோகப்படுத்தியுள்ளார்கள். 'அவர் இந்தக் கருத்தைக் கொண்டிருந்தால்' விதி எண் 124 (3). 'அவருடைய சம்மதம்' விதி-127. 'தீர்மானம்' விதி எண் 128. 'தேவை என்று நினைத்தால்' விதி எண் 124, (2). 'அவர் நினைத்ததை அறிவித்தால்' -விதி எண் 108. 'அவருக்குத் தோன்றினால்' -விதி எண் 263 போன்றவை.

மேற்கூறியவற்றிலிருந்து குடியரசுதலைவருக்கு அவரின் விருப்பத்திற்கேற்ப என்று கூறும்பொழுது அவர் மனத்திற்குத் தோன்றியது என்று பொருள்படும் என்று தெரிகிறது. அரசியல் சட்டப் பாதுகாப்பு, சிறுபான்மையினரின் உரிமைகள் சிறுபான்மையினருக்குப் பாதுகாப்புகள், மாநிலங்களின் பாதுகாப்புகள் முதலியவற்றைப் பொறுத்த வரையில் குடியரசு தலைவர் அமைச்சரவையின் ஆலோசனைப்படியே செயற்பட வேண்டிய நிர்ப்பந்தம் சட்டத்தில் இருக்குமானால் மேற்கூறிய சொற்றொடர்களைச் சட்டத்தில் புகுத்தியிருக்க மாட்டார்கள்.

இன்னொரு முக்கியமான விஷயத்தில் குடியரசு தலைவர் அவர் மனத்திற்குப் பட்டதைச் செய்யலாம். அதுதான் பிரதமரைத் தேர்ந்தெடுப்பது. சாதாரணமாக மக்கள் சபையில் பெரும்பான்மை உறுப்பினர்களைக் கொண்ட அரசியல் கட்சியின் தலைவரைத்தான் அரசு பொறுப்பை ஏற்க அழைப்பு விடுவார். சில சூழ்நிலையில் மேற்கூறிய அளவுகோலைக் கொண்டு குடியரசு தலைவர் செயற்பட முடியாது. உதாரணமாக ஒரு பொதுத் தேர்தலுக்குப் பிறகு எந்த ஓர் அரசியல் கட்சிக்கும் பெரும்பாலான உறுப்பினர்கள் மக்கள் சபையில் இல்லாமற் போகலாம். பல கட்சிகளினால் அமைந்த கூட்டு அமைச்சரவையும் தோற்கடிக்கப் படலாம். ஒரு பொதுத் தேர்தலுக்குப் பிறகு அமைக்கப்பட்ட இணைந்த கட்சிகளின் அரசு மக்கள் சபையில் ஒரு சாராரின் ஆதரவு

கிடைக்காத காரணத்தால் அமைச்சரவை தோற்றுப்போய் மறுபடி பொதுத் தேர்தல் நடத்த இயலாமல் போகலாம். தோற்கடிக்கப்பட்ட அமைச்சரவை வேறு எந்தக் கட்சி அரசு பொறுப்பை ஏற்கலாம் என்று ஆலோசனைகூற உரிமை இல்லாது போகும்.

மேலும், பாராளுமன்றத்தின் மக்கள சபையின் காலத்தைக் காரணமில்லாமலும் ஒரு காலவரையில்லாமலும் நீடித்தும், அரசியல் சட்டத்தின் குடியாட்சித் தன்மைக்கு உலைவைக்கும் வகையில் கொள்கைகளை அமைத்தும், ஆளுங்கட்சியின் அரசியல் இலாப நோக்குடன் தொகுதிகளைத் திருத்தி அமைத்தும், தேர்தல் முறையைத் தன் கட்சிக்குச் சாதகமாக அமைத்துக் கொள்வது போன்ற செயல்களில் ஈடுபட்டுள்ள ஆளுங்கட்சியின் ஆலோசனைகளை ஏற்கக் குடியரசுதலைவர் மறுக்கலாம். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், குடியரசுதலைவர் நாட்டின் நிருவாகத்தைத் தமக்குத் தோன்றிய விதத்தில் நடத்திச் செல்ல வழி கிடைக்கிறது. இம் மாதிரி சந்தர்ப்பங்கள், எப்படியிருப்பினும், மிகவும் அபூர்வ மானவைகள்தாம் என்பதை ஒப்புக்கொண்டே ஆக 'வேண்டும்'. திரு. வேடும், திரு. பிலிப்சும் (Wade & Phillips) சுட்டிக்காட்டுவது போல் இங்கிலாந்து நாட்டிலும் மன்னர் சில விஷயங்களில் அவரின் சொந்த அபிப்பிராயப்படி நடக்கிறார். பிரதமரை நியமனம் செய்யும் விஷயத்திலும், சில சந்தர்ப்பங்களில் பாராளுமன்றத் தைக் கலைக்கும் விஷயத்திலும் சில சமயங்களில் இங்கிலாந்து நாட்டு மன்னர் அமைச்சரவையின் பதவி விலக உத்தரவு போட்டு அதன் ஆலோசனைப்படி நடக்க மறுத்ததுண்டு. 1932-ல் நியூ சௌத்வேல்ஸ் மாநிலப் பிரதமராக இருந்த திரு லாங் (Long) என்பவர் சட்ட விரோதமான காரியத்தில் ஈடுபட்டு, அரசியல் சட்டம், 'நாட்டின் சட்டதிட்டங்களை' உதாசீனம் செய்து செயற்பட்டதால் ஆளுநரின் முதற் கடமையாகத் திரு லாங்கைப் பதவிநீக்கம் செய்வது அமைந்தது. இது போன்ற சந்தர்ப்பங் களில் மன்னரோ அவரின் பிரதிநிதியோ அல்லது இந்தியக் குடியரசு தலைவரோ அமைச்சரவையின் ஆலோசனையை நிரா கரித்துத் தம் மனத்திற்கு தோன்றியதைச் செய்ய விசேஷ உரிமை பெற்றுள்ளார்.

முடிவில், அரசியல் நிர்ணய சபையில் அனேக அங்கத்தினர்கள் குடியரசு தலைவரின் நிலையை இங்கிலாந்து மன்னரின் நிலைக்கு ஒப்பிட்டுப் பேசியபோதிலும், குடியரசுதலைவருக்கும் அமைச்ச ரவைக்குமிடையே நிலவும் உறவு முடிவானதாகக் கொள்ள முடியாது. எப்படி ஒரு மசோதாவின் சரத்துகள் மேல் நடக்கும்

விவாதம் அது சட்டமான பிறகு அச் சட்டத்தில் குறிப்பிட்ட வற்றைத் திருத்தி அமைக்க முடியாதோ அதேபோல இந்தியக் குடியரசுதலைவரின் அந்தஸ்து இங்கிலாந்து மன்னருக்குச் சமம் என்பதையும் முழுமையாக ஏற்றுக் கொள்ள இயலாது. மேலும், அரசியல் நிர்ணயசபையில் குடியரசு தலைவரின் நிலைபற்றி எழுந்த விவாதங்கள் அனைத்தும் ஆர அமர ஆலோசனை செய்யாமல் உணர்ச்சி வேகத்தில் எழுந்த வாதங்கள். ஆகையால், அவற்றை ஒப்புக் கொள்ளவும் முடியாது. இதுகுறித்து விவாதம் நடந்த பொழுது அரசியல் சட்டத்தின் சரத்துகளை யாரும் அலசிய பிறகு விவாதித்தார்கள் என்று சொல்லவும் இடமில்லை. அடிப்படைச் சட்டம் என்பது தானேபேசக்கூடிய தன்மை வாய்ந்ததாகத் திகழ வேண்டும். 395 விதிகளும் அனேக அட்டவணைகளும் (Shedules) இணைக்கப் பெற்ற ஒரு மாபெரும் அரசியல் சட்டம் குடியரசு தலைவரின் கடமைகளையும் பொறுப்புகளையும் சரிவர விவரிக்காமல் போனது வருந்தத்தக்க விஷயமாகக் கொள்ள வேண்டும். அரசியல் சட்ட விதிகளிலிருந்து நாம் அறிவது-குடியரசு தலைவர் சாதாரண மாக அமைச்சரவையின் ஆலோசனைப்படி செயற்பட வேண்டும். ஆனால், இந்தியக் குடியரசுதலைவர் ஒரு தலையாட்டி பொம்மை; கோடிட்ட இடத்தில் கையொப்பம் செய்பவர்; பெயரளவில் குடியரசு தலைவராக இருப்பவர்; அதிகாரங்களின் நிழல்தான் அவரிடம் உள்ளது என்றெல்லாம் விமரிசிப்பது உண்மை நிலையை எடுத்துக் காட்டுவதாகாது. இதை இன்னும் வெளிப்படையாகக் கூறவேண்டுமானால் அமைச்சரவை சிபாரிசு செய்த ஒரு விஷயம் சட்ட விரோதமானதாக இருக்க லாம் என்று நினைத்தால் குடியரசு தலைவர் விதி எண்-143-ன் கீழ் இந்தியத் தலைமை நீதிமன்றத்தின் அபிப்பிராயத்தைக் கேட்டு அனுப்பி வைக்கலாம். தலைமை நீதிமன்றம் குடியரசு தலைவரின் அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்தால் அமைச்சரவையின் சிபாரிசை நிராகரிக்கலாம். அப்படிச் செய்தால் குடியரசு தலைவர் விதி எண் 74 (1)-ன் படி தம் கடமையைச் செய்தவராவார். மேற் படி விதியில் குடியரசு தலைவருக்கு உதவியுடன் ஆலோசனை கூறத் தான் அமைச்சரவையே தவிர அமைச்சரவை சொற்படி குடியரசு தலைவர் நடக்க வேண்டும் என்பது கட்டாயப்படுத்தப்படவில்லை. விதி எண் 53-ம் யூனியன் அரசின் செயற்படுத்தும் அதிகாரத்தைக் குடியரசு தலைவருக்கு வழங்கி அரசியல் சட்டப்படி நிருவாகம் செய்ய வேண்டும் என்று கூறுகிறதே தவிர அமைச்சரவையின் ஆலோசனைப்படி செயற்படச் சொல்லவில்லை.

பதவிப்பிரமாணம் செய்துகொள்ளும் பொழுது அரசியல் சட்டத்தை நல்ல நிலையில் வைத்துக் காப்பாற்றிப் பாதுகாக்கவும், சட்டத்தை நிலைநாட்டவும் உறுதி எடுத்துக் கொள்வதாகும், விதி எண் 60-ன்படி. எனவே, குடியரசுதலைவர் அரசியல் சட்டத்தின் காவலராகத் திகழ்வதால் அமைச்சரவை அரசியல் சட்டத்திற்கு விரோதமாகவோ அதைப் புறக்கணிப்பதாகவோ உள்ள செயல்களில் ஆலோசனைகளைக் குடியரசு தலைவருக்குக் கொடுத்தால் அவர் அவற்றை ஏற்காமலிருப்பது முக்கிய கடமைகளுள் ஒன்றாகும். உதாரணமாக விதிஎண் 85-ன் கீழ்ப் பாராளுமன்றம் காலாகாலத்தில் கூடக் குடியரசு தலைவர் அழைப்பு விடவேண்டும். அமைச்சரவை பாராளுமன்றக் கூட்டத்தைத் தொடங்கக் குடியரசு தலைவருக்கு ஆலோசனைகூறத் தவறினால் குடியரசு தலைவரே அச் சபைகள் கூட அழைப்பு விடலாம், விதி எண் 85-ன் படி. இப்படிக் குடியரசு தலைவர் பாராளுமன்றக் கூட்டத்திற்கு அமைச்சரவையின் ஆலோசனைக்கு எதிராக அழைப்பு விடுத்தால் அது சட்ட விரோதமான செயல் ஆகாது. அதற்கு மாறாகக் குடியரசு தலைவர் அரசியல் சட்டக் காவலராகவும் அதன் சரத்துக்களின் படியும் செயற்படுபவர் ஆவார்.

# 13. மாநிலச் சட்டசபைச் சபாநாயகர் பதவி நீக்கம்

இந்திய அரசியல் சட்டம் மாநிலச் சட்டசபைச் சபாநாயகரின் நியமனத்திற்கும், பதவி நீக்கத்திற்கும் வகை செய்துள்ளது. சபாநாயகரைப் பதவியிலிருந்து நீக்கத் தீர்மானம் பரிசீலனையில் உள்ள போது அவர் சட்ட சபைக் கூட்டத்தில் தலைவராக இருக்கக் கூடாது. இருந்த போதிலும் அவருக்குச் சபை விவாதத்தில் கலந்துகொண்டு பேச உரிமை இருக்கிறது. மேலும், சட்ட சபையில் அவரைப் பதவியிலிருந்து நீக்கும் தீர்மானம் விவாதிக்கப்படும் நிலையில் உள்ள பொழுது, அவர் முழுமையாகக் கலந்து கொண்டு (விதி எண் 189-ன்படி) வாக்கெடுப்பிலும் கலந்துகொண்டு தம்வாக்கை, அவைமுன் இருக்கும் தீர்மானங் களின்மேல் அளிக்கலாம். ஆனால், சபையில் இருதரப்பு வாக்கு களும் ஒரே அளவாக உள்ள பொழுது சபாநாயகர் தம் வாக்கை (No casting vote) அளிக்க உரிமை இல்லை.

அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்கள் சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்யும் சரத்தைச் சேர்த்ததற்கு முக்கிய காரணம் இந்திய மக்கள் அரசியல் அனுபவமில்லாமல் இருந்ததாலும், பிற்காலத்தில் அரசியல் நேர்மை, ஒழுங்கு கெடலாம் என்ற சந்தேகத்தின் காரணத்தாலுமேயாம். சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டிய சூழ்நிலை எதிர்காலத்தில் உருவாகலாம் என்பதை உணர்ந்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள். மாநிலச் சட்ட சபையின் சபாநாயகர்கள் பொதுவாக ஆளுங்கட்சி யைச் சார்ந்தவர்களாக இருப்பார்கள். இனிமேலும் அப்படித் தான் இருப்பார்கள் என்று சொல்லுவதற்கில்லை. சபையின் நடுவர் என்ற முறையில் எல்லாக் கட்சியினரையும் அவர் சமமாகக் கருத வேண்டும். தம் கட்சிக்காகவோ, தமக்காகவோ அவர்

பணியாற்றினால் சபையின் நடுவர் என்று அவரை அழைப்பதில் பொருளே இல்லை.

மேற்கு வங்காளம், பஞ்சாப் மாநிலங்களின் (1967 Statesman) முன்பு சபாநாயகர்களாக இருந்த டாக்டர். பி. சி. கோஷ் (Dr. P. C. Ghosh), ஜோகிந்தர் சிங் மான் (Jogindar singh Maun) போன்றவர்கள் அரசியல் சட்டத்தைப் பகிரங்கமாகப் புறக் கணிக்கச் செயற்பட்டதைப் போல வேறு எங்கும் நடைபெற வில்லை. மேற்கு வங்கச் சட்ட சபையின் சபாநாயகராக இருந்த திரு. கோஷ் அமைச்சரவையை அங்கீகரிக்காமல் அரசியல் சட்டத்தை மீறிச் செயற்பட்டார். கல்கத்தா உயர்நீதிமன்றம் 'ஆளுநருக்கு முதல் அமைச்சரை நியமிக்கவும் பதவி நீக்கம் செய்யவும் அதிகாரம் உள்ளது', என்று தீர்ப்புக் கூறிய பிறகும் சட்ட விரோதமாகச் சபாநாயகர் நடந்து கொண்டார்.

பஞ்சாப் மாநிலச் சபாநாயகர் சட்டசபைக் கூட்டத்தை 2 மாதங்கள் ஒத்திப் போட்டுச் சட்டவிரோதமாக நடந்து கொண்டார். அம்மாநில வரவு-செலவு கணக்கின் மேல் தீர்மானம் வரும் சமயத்தில் இவ்வாறு ஒத்திப் போட்டார். அரசு வரவு செலவு கணக்கைக் காலா காலத்தில் சட்டசபை ஏற்காதவாறும், தம் மேல் உள்ள நம்பிக்கை இல்லாத் தீர்மானம் நிறைவேறாமல் இருக்குமாறும் இவ்வளவு நீண்ட காலத்திற்குச் சட்டசபைக் கூட்டத்தைத் தள்ளி வைத்தார். அம்மாநில ஆளுநர் சபைகூடும் விதிகளை மாற்றி அரசியல் சட்ட விதி 213 (1)-ன் கீழ் ஓர் அவசரச் சட்டம் பிரகடனம் செய்து அரசு வரவு செலவு கணக்கின் மேல் தீர்மானம் முடியும் வரை சட்டசபையைத் தள்ளி வைக்கக் கூடாது என்று உத்தரவு போட்ட போதிலும், சபாநாயகராக இருந்த திரு. ஜோகிந்தர் சிங்மான் (Joginder Singh Maun) என்பவர் இவ்வுத்தரவை மீறிச் சட்டசபைக் கூட்டத்தைக் கூட்டி அது எந்த விஷயத்தையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளுமுன் கலைத்தார். பஞ்சாப் மாநிலத்தில் குடியரசுதலைவர் ஆட்சியைத் திணிக்க மத்திய அரசை வற்புறுத்தவே இப்படி நடந்து கொண்டார், அம் மாநிலச் சபாநாயகர்.

அரசியல் சட்டம் மாநிலச் சபாநாயகருக்கு மாநில அமைச்சரவையை அங்கீகரிக்கும் அதிகாரத்தைக் கொடுக்கவில்லை என்றாலும் வங்கச் சபாநாயகர் அரசியல் சட்டத்தை மீறி இந்த அதிகாரம் தமக்கு உள்ளது என்று அதைச் செலுத்த முனைந்தார். 1968-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 14ஆம் தேதி மேற்கு வங்கச் சட்டசபை கூடிய பொழுது கல்கத்தா உயர்நீதி மன்றத்தின் தீர்ப்

பைப் புறக்கணித்துச் சபாநாயகர் தம் தீர்ப்பைக் கீழ்வருமாறு கூறினர். 'மரியாதைக்குரிய உறுப்பினர்களே! சென்றமுறை என் முடிவை நவம்பர் மாதம் 29ஆம் தேதியில் தெரிவித்தேன். நான் அன்று கொடுத்த தீர்ப்பை மாற்றிக் கொள்வதற்கான தகுதி படைத்த எந்த அதிகாரப் பிரிவும் ஒரு தீர்மானமான முடிவை விவாதத்திற்குப் பிறகு தரவில்லையாதலாலும் சட்டரீதியாக எந்த ஒரு தீர்ப்பும் என் முடிவுக்கு மாருக இல்லாததாலும் நான் இந்தச் சபையைக் காலவரையின்றி தள்ளி வைக்கிறேன்'.

சட்டரீதியாக வங்கச் சபாநாயகர் எடுத்தமுடிவு நிலைநாட்ட முடியாது என்ருலும் அவர் அரசியல் சட்டரீதியான ஓர் எண்ணத்தை (constitutional point) வெளிக்கொணர்ந்தார். ஆனல், பஞ்சாப் சபாநாயகரோ தம்மைப் பதவிநீக்கம் செய்வதைத் தடுக்க ஓர் அரசியல் நெருக்கடியைச் சட்டசபையை 2 மாதங்களுக்குத் தள்ளிவைத்ததில் உண்டாக்க முயற்சிசெய்தார்.

சட்டசபை உறுப்பினர்களின் உரிமைகளுக்கு இருப்பிடமாக உள்ள ஒரு மாநிலச்சபாநாயகர் தமக்கு அரசியல் சட்டம் வழங்காதஅதிகாரங்களைப் பிரயோகித்து, தம் மேல்உள்ள நம்பிக்கையில்லாத்தீர்மானம் நிறைவேருமல் தடுக்கச் சட்டசபைக் கூட்டத் தொடரையே 2 மாதங்களுக்குத் தள்ளிவைத்து ஆளுநரின் சட்டசபைக்கூட்ட அறிவுரையைச் சபையில் வைக்க மறுத்துச் சட்டப்படி கூட்டப்பட்ட சட்டசபைக் கூட்டத்தையே சட்டவிரோதமானது என்று கூறிய பிறகும் அக் கூட்டத்திற்கே இருமுறை தலைமைதாங்கி உயர்நீதிமன்றத் தீர்ப்பை ஏற்றுக் கொள்ளாமல், அரசு வரவு செலவு கணக்கைச் சபை பரிசீலிக்காமல் தடுத்து ஆளுநரின் சட்டரீதியான அவசரச்சட்டத்தை உதாசீனம் செய்து அதை மதிக்காமல் செயற்பட்டால் எப்படிக் குடியாட்சி இச் சூழ்நிலையில் செயற்படும்? அரசியல் சட்டத்தில் கொடுக்கப்பட்ட அதிகாரங்களைச் சபாநாயகர்கள் துஷ்பிரயோகம் செய்யாமல் தடுத்தாலொழிய மக்கள் ஆட்சி வளர்ச்சி அடையாது 1967ஆம் ஆண்டில் மேற்குவங்க, பஞ்சாப் மாநிலங்களின் சபாநாயகர்களான திரு. பி கே. பானர்ஜியும், ஜே. எஸ். மானும் சட்டவிரோதமாகச் சட்டசபையைக் காலவரையறையின்றியும் 2 மாதகாலத்திற்கும் தள்ளி வைத்து, தங்கள் மேல் கொண்டு வரப்பட்ட நம்பிக்கை இல்லாத் தீர்மானங்கள் சபையின் முடிவுக்கு வராமல் தடுத்து நிறுத்தி, சட்டமன்ற ஆட்சி முறையையும் அரசியல் சட்டத்தையும் குழி தோண்டிப் புதைக்க முற்பட்டபோது, அரசியல் சட்டவிற்பன்னர்களும் சட்ட மேதைகளும் சபாநாயகர்களின் அதிகாரத்தைக் குறைக்கவேண்டும் என்ற கருத்தை

வற்புறுத்தினார்கள். இச் சபாநாயகர்களின் உள்நோக்கம் குடியரசு தலைவர் ஆட்சியைக் கொண்டு வரவேண்டும் என்பதுதான். பஞ்சாப்மாநிலச் சபாநாயகர் இரண்டுமுறை சட்டசபைக்கூட்டத்தைச் சட்டவிரோதமான முறையில் தள்ளிவைத்தார். ஆளுநரின் அவசரச் சட்டம் இருந்தபோதிலும், அதையும் அத்துமீறி உதாசீனம் செய்து செயற்பட்டார்.

இவ்விரு சபாநாயகர்களின் செயல்கள் ஒரு நூதன அரசியல் நெருக்கடியை உண்டுபண்ணியதுமல்லாமல் மத்திய மாநில அரசுகளில் அபாயகரமான விளைவுகளுக்கு வித்திடுவது போல் அமைந்தவை. இச்சம்பவங்கள் எந்த அளவுக்குச் சபாநாயகர்கள் சட்டரீதியான அரசையும் அரசியல் சட்டத்தையும் மீறித் தங்கள் மனதிற்குத் தோன்றியபடி அவற்றை வளைக்கலாம் என்பதைத் தெளிவாக்குகின்றன. இப்பொழுது ஒரு கேள்வி எழுகிறது. சட்டசபை சாதாரணமாகச் செயற்படுவதில் குறுக்கே வரும் சபாநாயகரை என்ன செய்யலாம்? அரசியல் சட்டத்தில், சபாநாயகர் சபைக் கூட்டத்தொடரை ஒத்தி வைப்பதைத் தடுக்க எந்த விதியும் இல்லை என்பதையும் அவரைப் பதவிநீக்கம் செய்ய நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைத் தவிர வேறுவழி சட்டரீதியாக இல்லை என்பதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால், முக்கியமான பிரச்சினை என்னவெனில், வங்க மாநில, பஞ்சாப் மாநிலச் சபாநாயகர்கள் ஒரு தீர்மானத்தின் மேல் முடிவு எடுக்கவோ, விவாதிக்கவோ முடியாத வகையில் சபைக்கூட்டத் தொடரைத் தள்ளிவைக்கும்பொழுது என்ன பரிகாரம் உள்ளது என்பது தான். குடியாட்சியில் நம்பிக்கை கொண்ட எவரும் இப்படிப்பட்ட சம்பவங்கள் வராமல் இருக்க வேண்டும் என்று விரும்புவார்கள். சபாநாயகர்களே சட்ட விரோதமாகச் செயற்படும் பொழுது வேலியே பயிரை மேய்வது போன்ற சம்பவங்கள் ஏற்படா வண்ணம் அவர்களைக் கட்டுப் படுத்த வேண்டும். அதை எப்படிச் செய்யலாம் என்பது சட்ட மேதைகள் எடுக்க வேண்டிய முடிவு.

வங்க மாநிலச் சட்டசபை நெருக்கடியில் எல்லாரும் குடியரசு தலைவர் ஆட்சியைக் கொண்டு வருவதுதான் சரியான வழி என்று கருத்துக் கூறினார்கள். திரு. என். சி. சட்டர்ஜி என்ற மேதை 'வங்கச் சபாநாயகரின் செயல் ஓர் அரசியல் நெருக்கடியை உண்டாக்கி விட்டது; அதைச் சமாளிக்க விதி எண் 356–ன் கீழ், சட்டரீதியான அரசு செயற்பட இயலவில்லை என்று கொண்டு, ஆவன செய்யவேண்டும்', என்றார். காங்கிரஸ் கட்சியைச் சேராத பலர் இதே கருத்தைத் தெரிவித்தார்கள்.

ஆளுங்கட்சியின் அமைச்சர்கள் உறுப்பினர்கள் பலரும் மேலே கூறிய கருத்தையே ஏற்றுக்கொண்டார்கள். ஆனல், அவர்கள் முழுமையாகக் குடியரசுதலைவர் ஆட்சியைக் கொண்டுவர விரும்பவில்லை. விதி எண் 356-ல் பிரிவு 1-ல் உபபிரிவு (b) யும் (c) யும் மாத்திரம் ஏற்றுச் செயற்பட்டால் போதும் என்று கருதினர்கள். உபபிரிவு (b) யும் (c) யும் கூறுவது :

குடியரசு தலைவர் அவசரப் பிரகடனம் செய்து அதில் (b) மாநிலச் சட்டசபையின் அதிகாரங்கள், மத்திய பாராளுமன்றத்தால் அல்லது அதன் அதிகாரம் பெற்ற அமைப்பால் செயற்படும் என்பது,

(c) பிரகடனத்தின் குறிக்கோளைப் பெற என்ன என்ன வழிகளைக் கையாள வேண்டும் என்று குடியரசு தலைவருக்குத் தோன்றுகிறதோ அதைச்செய்து அரசியல் சட்ட விதிகள் முழுமையாகவோ ஒரு பகுதியோ செயற்படுவதை நிறுத்தி உத்தரவுகள் போடுவது.

வங்கக் காங்கிரஸ் தலைவர்கள், விதி எண் 356 (1) (b) யின் படி சட்டசபையைத் தாற்காலிகமாக நிறுத்தி உத்தரவு போட்டு இதன் அடிப்படையில் செய்ய வேண்டியவற்றின் ஒரு பிரிவாக 356 (1) (c) யின் படி சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். ஆனல், அரசியல் சட்டம் விதி 356-ன் உபபிரிவு (a) (b) பிரிவு-1 இவற்றைப் பிரித்துத் தனித்தனியாக அரசியல் சூழ்நிலைக்கு ஏற்றவாறு செயற்படுத்த முடியுமா என்ற சந்தேகமும் தோன்றுகிறது. சில சட்ட நிபுணர்கள் இவ் விரண்டையும் பிரிக்க இயலாது என்றூர்கள். அரசு சட்ட நிபுணர் (Attorney-General) டப்திரி என்பவர் சட்டசபையைத் தாற்காலிகமாக நிறுத்தம் செய்வதும், அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்வதும் ஒரே சமயத்தில் செய்ய வேண்டியவை என்று அபிப்பிராயம் தெரிவித்தார். திரு. அசோக்சந்தா என்பவரும் இதே கருத்தைக் கூறுகிறூர். ஆனல், சட்ட அமைச்சகம், அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்யாமல் சட்டசபையை மாத்திரம் விதி எண் 356 (1) (b) யின்படி தாற்காலிகமாக நீக்கம் செய்யலாம் என்றது. இந்தக் கருத்தைச் சில பத்திரிகைகளும் ஏற்றன. சட்ட விரோதமாகச் செயற்படும் சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்வது, மாநில அரசு சட்டரீதியாகச் செயற்படச் சட்ட சபைக்குப் பொறுப்பாகச் செயற்படக்கூடிய அமைச்சரவையை உருவாக்கிச் சட்டரீதியாகவும்

இருக்கும் விதிகளை அனுசரித்தும் நடக்கும் ஒரு புதிய சபாநாய கரைத் தேர்ந்தெடுத்துச் செயற்படுவது நல்லது என்ற கருத்தைப் பலர் ஏற்றுர்கள். இந்த முறையில் இரண்டுவித அனுகூலங்கள் உள்ளன. ஒன்று குடியாட்சி வழிமுறைகளுக்கு உதவியாக இருப்பது. இரண்டு ஒரு சட்டரீதியான அரசு சட்டசபைக்குப் பொறுப்புடன் நடந்து கொண்டு செயற்படுவது.

மேலே கூறியவற்றிலிருந்து நமக்குத் தெரிவதுயாதெனில், ஒரு சாரார் விதி 356-ன் பிரிவு-1-ல் வரும் உப பிரிவு (அ) (ஆ) (இ) மூன்றையும் பிரிக்காமல் செயற்படுத்த வேண்டும். ஏனெனில், (அ) விலிருந்து வருவது (ஆ). (ஆ)வில் கூறியிருப்பதிலிருந்து வருவது (இ). எனவே, மூன்று பிரிவுகளையும் ஒன்ருக இணைத்துத் தான் உத்தரவுகள் போடமுடியும் குடியரசு தலைவர்—என்பது. இன்னொரு சாரார் 3 உபபிரிவுகளையும் தனித்தனியே சூழ்நிலைக்கு ஏற்றவாறு பிரித்து உத்தரவுகள் போடலாம் என்கிருர்கள்.

விதி எண் 356-ஐ விமரிசிக்கும் வகையில் அலசினுல் உபபிரிவு களைப் பிரித்து உத்தரவு போடமுடியாது என்பது விளங்கும். உபபிரிவு (ஆ)வும் (இ)யும் மாத்திரம் ஏற்கப்பட்டுக் குடியரசு தலைவர் மாநில நிருவாகத்தைத் தாமே ஏற்காமல் செயற்பட்டால் அதன் விளைவுகளை மறப்பதற்கு ஒப்பாகும். குடியரசுதலைவர் அரசு நிருவாகத்தையும் ஏற்றுச் செயற்பட வேண்டும். மாநில அரசின் சட்டசபைப் பிரிவு மாத்திரம் தாற்காலிகமாக நிறுத்தப் பட்டு [விதி எண் 356(1) 6-ன்படி] மாநில அமைச்சரவை நீக்கப் படாமல் இருந்தால், அந்த அமைச்சரவை பாராளுமன்றத் திற்கோ பாராளுமன்றத்தின் அதிகாரத்தைப் பெற்ற குடியரசு தலைவருக்கோ பொறுப்பாக இருக்கும்—விதி 357(1)ன் படி. ஆனுல், அரசியல் சட்ட விதி 162 (2)-ன் படி அமைச்சரவை மாநிலச் சட்டசபைக்குப் பொறுப்புடன் நடக்க வேண்டும். எனவே, மாநில அமைச்சரவையைக் குடியரசுதலைவருக்கோ பாராளுமன் றத்திற்கோ பொறுப்புடன் இருக்கச் செய்வது அரசியல் சட்டவிதி 164(2)க்குப் புறம்பானது. எனவே, சட்டவிரோதமானதாகக் கரு தப்படும். அப்படிச்செய்தால் மேற்கூறிய விதியைத்திருத்தி அமைத் ததுபோ லாகிவிடும் ஆனுல், குடியரசுதலைவருக்கு அரசியல் சட்ட விதியைத் திருத்த அதிகாரம் இல்லை. அவசரநிலைப் பிரகடனத்திற் கான விதி எண் 352-லும் சட்ட ரீதியான அரசு முரிந்து விட்ட தாகப் பிரகடனம் செய்யும் விதி எண் 356-லும் குடியரசுதலைவ ருக்கு இந்த அதிகாரம் கொடுக்கப்படவில்லை. மேலும், விதி எண் 356-ன் உபபிரிவு (அ) வையும் (ஆ) வையும் பிரிப்பதால் ஏற்படும்

விளைவு- குடியரசுதலைவர் சட்டசபைப் பிரிவைத் தொடாமல் மாநில அரசு நிருவாகத்தை மாத்திரம் ஏற்றுக் கொள்கிறார் என்று கொள்வோம். அமைச்சரவை இல்லாமல் சட்டசபை மாத்திரம் செயற்படுமா? செயற்படாது. ஏனெனில், உள்துறை, சட்ட அமைச்சகங்கள் 'முதல் அமைச்சரின் ஆலோசனைப்படிதான் ஆளுநர், சட்டசபையைக் கூட்ட அழைப்பு விட வேண்டும்', என்ற கருத்தைத் தெரிவித்துள்ளன. அப்படியானால் அமைச்சரவை இல்லாத போதும் ஆளுநருக்கு முதலமைச்சரின் ஆலோசனை கிடைக்காத சமயம் எப்படிச் சட்டசபையை ஆளுநர் கூட்ட முடியும்? ஆளுநரின் அறிவுரையை எழுதுவது, சட்டம், நீதி சம்பந்தப்பட்ட அலுவல்களைச் சட்டசபைக்குச் சமர்ப்பிப்பது போன்ற பிரச்சினைகள் வரும். எனவே, விதி எண் 356, பிரிவு 1-ன் உப பிரிவு (அ) செயற்படும் பொழுது உபபிரிவு (ஆ) வும் சேர்ந்தே செயற்பட வேண்டும். இவற்றைப் பிரிக்க இயலாது. ஆனால், உபபிரிவு (இ)யின் நிலை என்ன? அதுவும் தனித்துச் செயற்பட முடியாது. ஏனெனில், உபபிரிவான (இ) யை (அ) விலிருந்தும் (ஆ) விலிருந்தும் பிரித்துச் செயற்படுத்த முடியாது திரு. அசோக் சந்தா என்பவர் கருத்துப்படி (இ) சரத்து, முதல் சரத்தில் கண்டுள்ளதைச் செயற்படுத்த உதவுகிறது. சட்டசபையின் அலுவல் விதிகளைத் திருத்திச் சட்டசபை கூடுவதற்கான வழிவகை ஏற்பட (இ) உபபிரிவு தனித்துச் செயற்படக்கூடும் என்கிறார்.

மேற்கூறிய வாதம் உண்மை என்று தோன்றக் காரணம், சபாநாயகர் குடியரசுதலைவரால் உபபிரிவின்படி பதவி நீக்கம் செய்யப்பட்டால் [உபபிரிவு (ஆ)வைச் செயற்படுத்தாமல்] அது அரசியல் சட்டவிதி 179 (இ)யை மீறியதாகச் சொல்லப்பட்டுச் சட்ட விரோதமான செயலாகக் கருதப்படுவதற்கு ஏதுவாகிறது. சட்டசபை இருக்கும் வரை சபாநாயகர் விதி 179 (இ) யில் கூறியுள்ளபடிதான் பதவிநீக்கம் செய்யப்பட வேண்டும். எனவே, உப பிரிவு (இ)யை (ஆ) உப பிரிவிலிருந்து பிரிக்க முடியாது. மேலும், உபபிரிவு (இ)யின் உதவியால் குடியரசுதலைவர் சபாநாயகரைப் பதவிநீக்கம் செய்தால் அது மிக அபாயகரமான விளைவுகளுக்கு இடம் தருவதாகும். ஏனென்றால், மத்தியஅரசு தன் இஷ்டம் போல் சபாநாயகரைப் பதவிநீக்கம் செய்து மாநிலச் சட்டசபைகளின் அலுவல்களை ஸ்தம்பிக்கச் செய்ய இடமளிக்கும்.

ஆகவே, இம் மூன்று உபபிரிவுகளும் தனித்தனியாகச் செயற்படமுடியாது. விதிஎண் 356-ஐச் செயற்படுத்த வேண்டுமானால் முழுமையாகச் செயற்படுத்த வேண்டும். விதிஎண் 356(1)-ஐச் சரி

யாகப் புரிந்து கொள்ளாதவர்கள் இவ் விதியின் ஒரு பகுதியை மாத்திரம் செயற்படுத்தலாம் என்று கருதினார்கள். இவ் விதியில் வரும் வார்த்தையான 'செய்யலாம்' என்பதைச் 'செய்ய வேண்டும்' என்று பொருள்படக் கொள்ளவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அரசியல் சிக்கல்களை உருவாக்க இடம்தரும். உதாரணமாக,மேலே கூறியவகையில் விதிஎண் 356 (1)ஐப் புரிந்து கொள்ளாவிட்டால், சட்டசபை விதி 356-ன்கீழ்க் கலைக்கப்படும் பொழுது, சட்டசபையின் அதிகாரங்கள் பாராளுமன்றத்தால் அல்லது அதன் அதிகாரம் பெற்ற அமைப்பால் செலுத்தப்படும் என்று உபபிரிவு 356(1) (b)யில் கூறியுள்ளபடி குடியரசுதலைவர் அறிவிக்கத் தேவையில்லை. ஆனல், இப்படிப்பட்ட நிலையை நாம் கற்பனை செய்து பார்க்கக்கூட இடமில்லை. ஏனெனில், சட்டசபையின் சட்டமியற்றும் அதிகாரம் பாராளுமன்றத்தால் செலுத்தப்பட வேண்டும்; விதிஎண் 357(1) (a) வின்படி பாராளுமன்றம் மேற்படி அதிகாரத்தைக் குடியரசுதலைவருக்கு மாற்றிக் கொடுக்காத வரையில்). எனவேதான் விதிஎண் 356(1) (a) (b) (c) உபபிரிவுகளைத் தனித்தனியாகவோ, பிரித்தோ செயற்படுத்த முடியாது.

இன்னுமொரு கோள்வியைக்கூட நாம் எழுப்பலாம். எந்த அளவுக்குக் குடியரசுதலைவர் விதிஎண் 356-ஐப் பிரயோகித்து மாநிலச் சட்டசபைச் சபாநாயகரைப் பதவிநீக்கம் செய்யச் சாத்தியக் கூறு உள்ளது என்பது. கலைக்கப்பட்ட மேற்குவங்கச் சட்டசபையின் சபாநாயகரான திரு பி.கே. பானர்ஜி என்பவர், 'சட்டசபையைக் குடியரசுதலைவர் கலைத்தாலும் சபாநாயகரைப் பதவி விலகச் செய்யமுடியாது; எனவே, தன்னைப் பதவிநீக்கம் செய்த குடியரசுதலைவரின் உத்தரவை நீதிமன்றத்தில் எதிர்க்கலாம் என்று முடிவு செய்தார். 'தேசாபிமானி' (patriot) என்ற ஒரு தினசரி பத்திரிகையும் தலையங்கம் தீட்டிச் சபாநாயகரின் கருத்தைக்கீழ் வருமாறு ஆதரித்தது. 'குடியரசுதலைவர் அரசு பொறுப்பை முழுமையாக ஏற்றுச், சட்டமியற்றும் அதிகாரத்தைப் பாராளுமன்றத்திடம் விடலாம்; ஆனல், அரசியல் சட்டத்தின்படி, சட்டசபையில் தலையிடவோ அதனல் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிகாரிகளை அப்புறப்படுத்தவோ குடியரசுதலைவருக்கு அதிகாரம் இல்லை. சபாநாயகரின் உரிமைகளைச் சட்டசபையால் தான் பறிக்க முடியும்; மேற்கு வங்கத்தில் இவ்வுரிமையில் மத்திய அரசு, குடியரசுதலைவரின் மூலம் தலையிடுவது மத்திய அரசு மாநிலச்சட்டசபைகளுக்கு விடும் சவால் என்றும் கொள்ளவேண்டும். மாநிலச் சட்டசபையின் சபாநாயகர் பதவிநீக்கம் செய்யப்பட்டால்

பாராளுமன்றத்தின் மக்கள்சபை (Lok Sabha) சபாநாயகருக்கும் பாதுகாப்பு இல்லை என்று கொள்ளவேண்டும். மாநில அமைச்சரவையைப் பதவிநீக்கம் செய்த பிறகு அதன் சபாநாயகரையும் பதவிநீக்கம் செய்தால் அது எதேச்சாதிகாரப் போக்கு ஆகும்'. திரு என்.சி.சட்டர்ஜியும் இதே கருத்தைத் தெரிவித்தார். அவர் கூறியதாவது: 'சட்டசபையின் அதிகாரங்களுக்கும் சட்டசபையை உருவாக்கும் அமைப்புகளின் அலுவல்களுக்கும் வித்தியாசம் உள்ளன. குடியரசுதலைவரின் ஆட்சியைக் குறிக்கும் விதிஎண் 356-லும் இந்த வித்தியாசம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. அரசியல் சட்டவிதி எண் 356 (1) (b) மாநிலச் சட்டசபை விதிகள் 245, 246-ன் கீழ்ச்சட்டமியற்றும் அதிகாரத்தை விவரிக்கிறது. இச் சட்டமியற்றும் அதிகாரத்தைச் சட்டசபையின் உரிமையோடோ சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்ய அதன் தீர்மானம் நிறை வேற்றும் அதிகாரத்துடனேயோ கலக்கக்கூடாது. சட்டசபை செயற்படாமல் அலுவல்கள் ஸ்தம்பித்து விட்டால், குடியரசு தலைவரின் உத்தரவுகள் காரணமாக அச் சட்டசபையின் அதிகாரங்கள் பாராளுமன்றத்திற்கு மாற்றப்பட்டால் சபாநாய கரைப் பதவிநீக்கம் செய்யும் தீர்மானத்தைப் பாராளுமன்றத் திற்குக்கொண்டுவர உரிமையில்லை. விதிகள் 179, 180-ன் கீழ் அது மாநிலச்சட்ட சபையின் விசேஷ உரிமை. இவ்விதிகளின் படி இல் லாமல் வேறு விதமாகச் சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்ய லாம் என்பதை நினைத்துக்கூடப் பார்க்கமுடியாது', என்பது.

பாராளுமன்ற உறுப்பினர்களுள் பலர் விதிஎண் 356 (1) (c) யின் கீழ்க் குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் சட்டசபைச் சபாநாயகர் பதவியைப் பொறுத்த வரையில் கட்டுப் படுத்தாது. எனவே, மாநில அரசு பொறுப்பை ஏற்றுச் சட்ட சபையைக் கலைக்கத்தான் குடிரயசு தலைவரின் பிரகடனம் செல்லு படியாகும். சபாநாயகரைப் பதவி நீக்கம் செய்ய அதிகாரம் சட்டப்படி குடியரசு தலைவருக்குக் கொடுக்கப்படவில்லை என் கிறார்கள்.

இன்னுமொரு சாரார், சபாநாயகரும் துணைச் சபாநாயகரும் விதி எண் 356-ன் கீழ்க் குடியரசு தலைவரால் பதவி நீக்கம் செய்யப் படலாம் என்கிறார்கள். சபாநாயகரைக் குடியரசு தலைவர் பதவி நீக்கம் செய்வது பற்றி மாறுபட்ட பல கருத்துகள் கூறப்படுவ தால், அதைப் பற்றி முழுமையாக ஆராய்வது அவசியமாகிறது. திரு N.C. சட்டர்ஜி (N.C. Chatterji) போன்றவர்கள் 'மாநிலச் சட்டமன்றம் என்பதற்கும் மாநிலச் சட்டசபை என்பதற்கும் நிறைய வித்தியாசம் உள்ளது (State Legislature and Legislative

Assembly); அரசியல் சட்ட விதி எண் 356 (1) (b)யின்படி மாநிலச் சட்ட மன்றத்தின் (மாநிலச் சட்டசபை அன்று) அதிகாரம் பாராளுமன்றத்தால் பிரயோகிக்கப்படும் என்று குடியரசுதலைவர் பிரகடனப்படுத்தலாம்', என்றும் கூறுகிறார்கள். ஆனால், அரசியல் சட்ட விதி 356 (1) (b)-யில் அரசியல் சட்ட விதிகள் 245, 246-ஐப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது என்பது மறுக்கமுடியாத உண்மை. இந் நிலையை ஏற்றுக் கொண்டால் சட்டமன்றத்தின் (சட்டசபை சேர்த்துத்தான்) அதிகாரங்கள் அனைத்தும் பாராளு மன்றம் வகிக்கும் என்றாகிறது. இது ஏன் என்றால் விதி எண் 245 (3)-ன் படி எந்த மாநிலச் சட்ட மன்றத்திற்கும் 7-ஆவது அட்டவணையில் உள்ள பட்டியல்: II-ன் படி மாநிலத்தைப் பொறுத்த வரையில் சட்டமியற்ற அதிகாரம் உள்ளது. இந்தப் பட்டியலில் சட்டசபை உறுப்பினர்களின் சலுகைகள், பாதுகாப்புகள், அதிகாரங்கள், உரிமைகள் விவரிக்கப்பட்டுள்ளன. மேலும், அதே பட்டியலில் சபைமுன் உறுப்பினர்கள் ஆஜர் ஆகவும், சபைமுன் சாட்சியம் கூறவும், கோப்பு ஏடுகள் சமர்ப்பிக்கவும் அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே, விதி எண் 246-ல் குறிப்பிட்டுள்ளபடி எல்லா மாநிலச் சட்டப் பிரிவின் அதிகாரங்களும் விதி எண் 356 (1) (b) யின்படி பாராளுமன்றம் வகிக்கலாம். மாநிலச்சட்டப் பிரிவின் விளக்கம் விதி எண்-168-ல் கொடுக்கப்பட்டுள்ளதால்-விதி 356-(1)-(b)யின்படி மாநிலச் சட்டப்பிரிவின் கீழ் ஆளுநரைத் தவிர விதி 168-ல் விவரித்தபடி மற்ற எல்லாம் அடங்கும். எனவே, 356 (1) (b) யின்படி பாராளுமன்றத்திற்கு மாநிலச் சட்டப் பிரிவின் எல்லா அதிகாரங்களும் பாராளுமன்றத்திற்குப் போகும் பொழுது பாராளுமன்றம் மாநிலச் சபாநாயகரைப் பதவிநீக்கம் செய்ய அதிகாரம் உள்ளதா? இல்லை என்றுதான் கொள்ள வேண்டும். ஏனெனில், சபாநாயகர் எவ்விதமாகப் பதவிநீக்கம் செய்யப்பட வேண்டும் என்று அரசியல் சட்டத்திலேயே கூறப்பட்டுள்ளது. சட்டசபையின் அதிகாரங்கள் 356 (1) (c)யின் படி பாராளுமன்றத்திற்கு வந்த பிறகு, விதி எண் 179-ல் பிரிவு (c) இரண்டாவது சரத்தும், விதி, எண் 181-ன் பிரிவு (2) ம் குடியரசுதலைவர் பிரகடனத்தால் தாற்காலிகப் பதவிநீக்கம் செய்யப்பட்டால்தான் சபாநாயகரைப் பாராளுமன்றம் பதவி நீக்கம் செய்ய முடியும்.

மேற்படி வாதத்தை வங்காள அரசியல் அறிஞரான என். சி. சட்டர்ஜி போன்றவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏனெனில், பாராளுமன்றத்திற்கும் குடியரசுதலைவருக்கும் சபாநாயகரைப் பதவிநீக்கம் செய்யும் அதிகாரம் சட்டப்படி கொடுக்கப்படவில்லை.

விதிகள் 356-ம் 175 (2)-ம் மாநிலச் சட்டசபைச் சபாநாயகர்கள் அவர்களின் அதிகாரங்களைத் துஷ்பிரயோகம் செய்வதைக் கட்டுப்படுத்தாது. எனவே, குறும்புத்தனமாகவும், சட்ட விரோதமாகவும் நடக்கும் சபாநாயகர்களைக் கட்டுப்படுத்த விதிகள் எண் 356, 175 (2) ஐத் தவிரக் குடியரசு தலைவருக்கு விதி எண் 60-ம் மாநில ஆளுநருக்கு விதி எண் 159-ம் உள்ளன. இவ்விரு விதிகளும் அரசியல் சட்டத்தைப் பாதுகாத்து வைப்பதற்கு அதிகாரங்கள் கொடுக்கின்றன. மத்திய மக்கள் சபையின் சபாநாயகர் மேற்கு வங்கச் சபாநாயகர் நடந்து கொண்டது போல் நடந்து கொண்டால் அரசியல் சட்ட விதிஎண் 60-ன் கீழ்க் குடியரசு தலைவர் அதிகாரத்தை உபயோகிக்க வேண்டும். அரசியல் சட்டத்தின் காவலர் என்ற முறையில் குடியரசு தலைவர் வேறு ஒருவரைச் சபாநாயகராக நியமனம் செய்யவேண்டும். அப்படி நியமனம் செய்யப்படுபவர் முறைகேடாக நடக்கும் சபாநாயகர் மேல் உள்ள நம்பிக்கையில்லாத் தீர்மானம் பரிசீலனை செய்யப்படும் பொழுது தலைமைதாங்கிச் செயற்படுவார்.

மேற்கு வங்கச் சபாநாயகர் விஷயத்திலும் மேலே குறிப்பிட்ட ஆலோசனையைத் திரு. மகஜன் என்ற முன்னாள் பிரதம நீதிபதி கூறினார். ஆளுநர் சட்டசபைக் கூட்டத்தை முதல் அமைச்சர் ஆலோசனைப்படி கூட்டி ஓர் உறுப்பினரைத் தலைவராக நியமித்துச் சபாநாயகர் மேலுள்ள நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தின் மேல் முடிவு எடுத்து வேறொரு சபாநாயகரைத் தேர்ந்தெடுக்கலாம் என்று சொன்னார். குருமுக் நிகால் சிங் என்ற உறுப்பினர் கூட ஆளுநருக்கு விதி எண் 159-ன் கீழ் உள்ள விசேஷ அதிகாரத்தை உபயோகித்து வேறு ஒருவரைச் சபாநாயகராக நியமனம் செய்யலாம் என்றார். மத்திய அமைச்சரவையின் ஒரு பிரிவினர் கூட இதே கருத்தை ஆதரித்தனர். இப்படிச் செய்தால், இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தில் பதவிநீக்கம் செய்யப்பட்ட சபாநாயகர் வழக்குப் போடுவார். அதன் பிறகு இது விஷயமான தீர்ப்புக் கிடைக்க வாய்ப்பு ஏற்படும்.

25 வருட வரலாற்றைப் பெற்ற பிறகும் இந்தியக் குடியரசின் தலைவர் பதவி ஒரு சிறிய, புரியாத அரசியல் புதிராகத் தோன்றுகிறது. குடியரசுதலைவரின் பொறுப்புகளும் அதிகாரங்களும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் குடியரசுதலைவரின் அதிகார வரம்புக்கு வெகு தொலைவிலே உள்ளது என்றாலும் இங்கிலாந்து மன்னரின் கடமைகளுக்கும், விசேஷ உரிமைகளுக்கும் எவ்வளவு தூரம் ஒத்து இருக்கிறது? எழுதித் தீர்மானிக்கப்பட்ட அரசியல் சட்டமாக

இருந்த போதிலும் குடியரசு தலைவரின் அதிகாரம் தெளிவற்ற தாக உள்ளது.

ஒரு சிறிய கேள்வியைக் கேட்போமா? குடியரசு தலைவரின் பேரிலே அமைச்சரவையால் தீர்மானித்து எடுத்த எல்லா முடிவுகளுக்கும் கோடிட்ட இடத்திலே கையொப்பமிடுவது குடியரசு தலைவரின் தவிர்க்க முடியாத கடமைகளுள் ஒன்று? முன்பு ஒரிஸா மாநிலச் சட்டசபையைக் கலைக்குமாறு அம் மாநில ஆளுநர் செய்த சிபாரிசைக் குடியரசுதலைவர் ஏற்றிருக்காவிட்டால் என்ன நடந்திருக்கும்? அப்படி அவர் செய்திருந்தால் நாட்டில் ஒரு பெரிய அரசியல் நெருக்கடியை ஏற்படுத்தியிருப்பார்.

இப்படிப்பட்ட அசம்பாவிதங்கள் தவிர்க்கப்பட்டதற்குக் காரணம் குடியரசுதலைவரின் நல்லெண்ணமும் ஒத்துப்போகும் மனப்பக்குவமும் மாத்திரமல்லாமல் அவர் மத்திய அரசு பொறுப்பில் இருக்கும் அரசியல் கட்சியின் நியமனம் பெற்றவர் என்பது தான். வேறு விதமான அரசியல் சூழ்நிலையிலே, குடியரசு தலைவரின் உடனடிச் சம்மதம் குறைக்கப்படுமா? அல்லது இல்லாமலே போகுமா? இப்படிப்பட்ட கேள்விகள் அற்பமாகத் தோன்றினும், ஒருநாள் எழத்தான் போகின்றன.

பங்களாதேசத்தில் (Bangla Desh) விஷப்பரிட்சைக்கே இடம் தராமல் அந் நாட்டு அரசியல் சட்டத்தில் பிரதமரின் ஆலோசனைப் படிதான் குடியரசுதலைவர் செயற்பட வேண்டும் என்பது உறுதிப் படுத்தப்பட்டுள்ளது. ஆனால், நம் நாட்டின் அரசியல் சட்டத்திலோ, 'குடியரசுதலைவர் தம் பணிகளைச் செய்வதற்கு உதவியாகவும்ஆலோசனைகள் வழங்கவும் பிரதம அமைச்சரின் தலைமையில் ஓர் அமைச்சரவைக் குழு இயங்கும்', என்றுள்ளது.

குடியரசுதலைவர் உதவியுடன் கூடிய ஆலோசனையை ஏற்க மறுத்தால் என்ன ஆகும்? பிரதமர் இராஜினாமா செய்வாரா? குடியரசுதலைவர் குற்றச்சாட்டுக்கு உட்படுத்தப்படுவாரா? நம்முடைய அரசியல்சட்டமேதைகள் கருத்துப்படி குடியரசு தலைவருக்கு அதிகாரங்கள் இல்லை. ஆனால், சடங்குகளோடு கூடிய சில பணிகளைச் செய்ய வேண்டும். குடியரசு தலைவரின் பிரதிநிதிகளாகச் செயற்படும் மாநில ஆளுநர்களுக்கு அவர்களின் மனத்திற்குப்பட்டதைச் செய்யும் உரிமைகள் இருக்கும் பொழுது குடியரசு தலைவருக்கு அப்படிப்பட்ட உரிமைகள் இல்லை. குடியரசுதலைவரின் ஆட்சி (President's rule in the State) என்று மத்திய அரசு மாநிலங்களில் புகுத்தலாம். ஆனால், மத்திய அரசில் புகுத்த

முடியாது. தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழு மத்தியஅரசு நிருவாகப் பொறுப்பில் இல்லாத ஒரு சூழ்நிலையை அரசியல் சட்டத்தை உருவாக்கினவர்கள் நினைத்துப் பார்க்கவில்லை.

இருந்த போதிலும், பிரதமரைத் தெரிந்தெடுப்பதில் ஒரு சிக்கலான நிலையை ஏற்படுத்தலாம். அரசியல் சட்டப்படி குடியரசு தலைவர் பிரதமரை நியமனம் செய்வார். இது மிகச் சுலபமான காரியம். ஏனெனில், காங்கிரசு கட்சியின் பெரும்பாலான உறுப்பினர்களைக் கொண்ட பாராளுமன்றத்தில் அக் கட்சி யாரைத் தலைவராக ஏற்றுக் கொண்டுள்ளதோ அவரைத்தான் பிரதமராக நியமிக்க வேண்டும். ஆனால், எந்தக்கட்சிக்கும் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு இல்லாதுபோனால் அரசு அமைக்கக் கட்சித்தலைவர்கள் போட்டி போடும் பொழுது பலகட்சிகள் கூட்டுச்சேர்ந்து அரசுபொறுப்பை ஏற்றுச் செயற்பட வாய்ப்பு இல்லாத பொழுது குடியரசு தலைவர் தம் மனத்திற்குப் பட்டபடி தான் செயற்பட வேண்டும். டாக்டர் இராஜேந்திர பிரசாத் குடியரசு தலைவராய் இருந்த பொழுது குடியரசு தலைவரின் அதிகாரங்கள் பற்றித் திரு செதல் வாத் (Mr. Setalwad) என்ற அரசின் தலைமை வழக்கறிஞர் (Attorney-General) கருத்துத் தெரிவித்தார். குடியரசு தலைவர் சட்ட ஆராய்ச்சிக் கழகத்தில் உரையாற்றும் பொழுது குடியரசு தலைவரின் அதிகாரங்கள் பற்றிப் பொது மேடையில் பேசியதைப் பிரதமர் நேரு விரும்பாததால் சர்ச்சை ஏற்பட்டது. அதை வளரவிடாமல் தடுக்கச் செதல்வாத் 'அமைச்சரவை ஆலோசனைப்படிதான் குடியரசு தலைவர் செயற்படுவார் அரசியல் சட்டப்படி', என்ற கருத்தை முடிவாகத் தெரிந்தார்.

திரு. ஜவஹர்லால் நேருவும் 'நாட்டில் அரசு நிருவாகப் பொறுப்பில் அல்லது அமைப்பின் தலைமையில் ஒருவர் தாம் இருக்க முடியும்', என்பதையும் தெளிவுபடுத்தினார். திரு. நேரு குடியரசு தலைவரிடம் மரியாதையுடன் நடந்து கொண்டதல்லாமல் குடியரசுதலைவருக்கு அடுத்தபடி தாம் இருப்பதாக மக்களிடம் எண்ணம் எழாமல் இருக்கும்படி நடந்துகொண்டார்.

குடியரசுதலைவருக்கும் பிரதமருக்கும் உள்ளஉறவு பரஸ்பரம், நம்பிக்கை, மரியாதை இவற்றின் அடிப்படையில் அமைய வேண்டும். டாக்டர் இராஜேந்திர பிரசாத், டாக்டர் இராதா கிருஷ்ணன் இவர்கள் விருப்பத்திற்கு மாறான கருத்தைச் சில விஷயங்களில் நேரு கொண்டிருந்தார். உதாரணமாக, டாக்டர்

பிரசாத் குடியரசு தலைவராகப் பதவி ஏற்ற புதிதில், எப்பொழு தாவது மாலை வேளையில் குதிரைகள் பூட்டிய வண்டியில் உல்லாச மாக வெளியில் போகவிருப்பம் தெரிவித்தார். அவர் டில்லிவாழ் மக்களுக்குத் தம்மைக் காண ஒரு சந்தர்ப்பம் கொடுக்க விரும்பி னரா என்பது தெரியவில்லை. பிரதமர் நேருவின் காதிற்கு இச் செய்தி எட்டியவுடன் அவர் 'முடியாது' என்று 'தற்காப்பு'க் காரணம் காட்டித் தடை செய்தார். தம்மைவிடக் குடியரசு தலைவர் மக்களின் ஆதரவை அதிகமாகப் பெறக்கூடாது என்று திரு. நேரு நினைத்திருக்கலாம். டாக்டர் இராஜேந்திர பிரசாது தாம் குடியரசு தலைவராக இருந்த பொழுது செய்ய விரும்பியதை அவருக்குப் பின் குடியரசு தலைவராக வந்த டாக்டர் இராதாகிருஷ்ணன் செய்தார். வாரமொருமுறை மக்களைத் தர் பாரில் சந்தித்து அவர்களின் விண்ணப்பங்களைப் பெற்றுச் சம்பநதப்பட்ட அமைச்சகத்திற்கு அனுப்பி வைத்தார். பிரதமர் நேரு இதை விரும்பவில்லையானாலும் சில காலத்திற்குக் குடியரசு தலைவரின் தர்பார் நடக்கட்டும் என்று இருந்தார். ஆனால், பொது மக்களின் விண்ணப்பங்களின் பேரில் குடியரசுதலைவரே தீர்ப்புக் கூறமுடியாத காரணத்தாலும் அமைச்சகங்களில் வழக்கம் போல் முடிவு செய்வதில் தாமதம் ஏற்பட்ட காரணத்தாலும் இந்தப் பழக்கம் கைவிடப்பட்டது. இந்தச் சம்பவம் டாக்டர் பிரசாத் பதவியிலிருந்தபொழுது நடந்திருந்தால் பிரதமர் நேரு ஆத்திரப் பட்டிருப்பார். டாக்டர் இராதா கிருஷ்ணனிடம் பெருந்தன்மை யாக நடந்து கொண்டார். ஆனால், திரு. வி. வி. கிரி இதைச் செய் திருந்தால் நேரு கோபப்பட்டிருப்பார். ஆனால், பிரதமர் இந்திரா ஓரளவிற்கு வாளாவிருந்து விடுவார். ஆனால், முக்கிய விஷயங்களில் சந்தேகத்திற்கு இடமில்லாமல் யார் முடிவு நிலைக்கும் என்பதைத் தெளிவு படுத்திவிடுவார்.

இரயில்வே தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் நடத்திய பொழுது கண்டிப்பான நடவடிக்கை எடுத்து அதை முறியடிக்க அரசு முனைந்தது. இந்த முடிவு எதிர்பார்த்த பலனைக் கொடுக்க ஆரம்பித்த சமயம், குடியரசுதலைவர் திரு. கிரி முசுரியில் ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தவர் அவசரமாக டில்லிக்கு வந்து சமரசமான ஒப்பந்தத்தை ஏற்படுத்த விரும்பினார். ஆனால், பிரதமர் அதற்கு இடமளிக்கவில்லை. பிரதமரின் சம்மதம் இல் லாமல் இவ் விஷயத்தில் குடியரசு தலைவர் தலையிட்டதால் இரு வருக்கும் சங்கடமாக இருந்தது. பிரதமர் இந்திராகாந்தி குடியரசு தலைவரின் ஆலோசனையைப் புறக்கணிக்க வேண்டி யிருந்தது. எனவே, இந்தியக்குடியரசின் தலைவர் அரசியல் சட்டக்

கட்டுப்பாடுகளுக்குள் செயற்பட வேண்டியுள்ளது. எனவே, தம் அதிகாரத்தில் திடமான நம்பிக்கையுள்ள பிரதமரிடம் குடியரசு தலைவர் (போட்டிக்கே இடமின்றி) பிரதமர் சொற்படி செய்யவேண்டியதுதான். டாக்டர் இராதாகிருஷ்ணன் குடியரசு தலைவராக இருந்தபொழுது அரசு கொள்கைகள் விஷயத்தில் கடுமையான கருத்து வேற்றுமை இருந்தும் குடியரசு தலைவரால் ஒன்றும் செய்யமுடியவில்லை. டாக்டர். ஜாகீர்உசேன் குடியரசு தலைவராக இருந்த பொழுது எந்தக் கருத்துவேற்றுமையும் இல்லாமல் செயற்பட்டார்கள்.

அரசின் அலுவல்கள் இந்தியக்குடியரசு தலைவரைப் பிரதி தினமும் 2 அல்லது 3 மணி நேரத்திற்கு ஈடுபடுத்தும். ஆனால், பல தரப்பட்ட பிரமுகர்களும் மக்களும் அவரைப் பல விஷயங்களுக்குச் சந்திக்க வருவார்கள். அரசியல்வாதிகள், பத்திரிகை நிருபர்கள், நிருவாகிகள் அறிவாளிகள் போன்றவர்கள்.

எல்லா அமைச்சரவைக் காகிதங்களும் அவர் பார்வைக்கு வரும். பாராளுமன்றம், மாநிலச்சட்டசபைகளின் சட்டங்கள் குடியரசு தலைவரின் கையொப்பத்திற்கு வரும். வருடத்தில் சுமார் 100 கருணை விண்ணப்பங்கள் வரும். சிவில் இராணுவப் பிரிவுகளின் விருதுகள் யாருக்குக் கொடுக்கலாம் என்ற ஆலோசனையும் அவர் கூறுவார். பாதுகாப்புப்படைகளின் பிரதம தலைவர் என்ற முறையிலே இராணுவக் கடிதங்கள் அவருடைய உத்தரவைக்கோரி வரும். சொல்லொணு மற்ற அலுவல்களும் இருக்கின்றன விருந்தோம்பலைத்தவிர.

# 14. அரசு நிருவாகத்தில் ஆட்சித் தலைவரின் பங்கு

'ஸ்தாபனங்கள் வாழ்ந்து கொண்டிருப்பவைகளாதலால் அவற்றின் இரகசியங்களை அச்சடித்த வார்த்தைகளுக்குக் கொடுத்து விடுவதில்லை', என்று ஆங்கில எழுத்தாளரான திரு.வாங்கி என்பவர் கூறியுள்ளார். ('it has been truly said that institutions are living things and they do not easily yeild their secrets to a printed word'. H.J.laski) இந் நிலைக்குக் காரணம், ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் எந்த ஓர் அரசியலைச் சார்ந்த பதவியும் அப்பொழுது நிலவி வரும் சந்தர்ப்பச்சூழ்நிலைக்கு ஏற்ற வாறும் அப் பதவியை வகிக்கும் நபரின் ஆற்றலைப் பொறுத்தும் அரசியல் உலகில் மற்றவர்களுக்கும் அவருக்கும் இருக்கும் செல் வாக்கை ஒட்டியும், முக்கியத்துவம் உடையதாகவோ, முக்கியத் துவம் இல்லாததாகவோ இருக்கும் அரசியல் சம்பிரதாயத்தைப் பொறுத்து நிலைமை உருவாகும். சம்பிரதாயம் உருவாக்கப்பட்டு வளர்ச்சி அடைய வேண்டுமானால் அப் பதவியை ஆரம்பகாலத்தில் வகிக்கும் நபர்களின் தன்மையைப் பொறுத்தே இருக்கும். உதாரணமாக இங்கிலாந்தில் பிரதமர் பதவி யுத்த காலத்தில் திரு லாயிட் ஜார்ஜ் என்பவர் கையில் ஒரு தன்மை யுடையதாக இருந்தது. அமைதி நிலவும் காலத்தில் அதேபதவி திரு பால்டுவின் கையில் மாறுபட்டு வேறுவிதமாகக் காட்சியளித்தது. ஃபிரான்சு நாட்டுக் குடியரசுதலைவர் பதவியும் இதே தன்மையைப் பிரதி பலிக்கின்றது. போர்க்காலங்களில், ஃபிரான்சு நாட்டின் குடியரசு தலைவரின் நிலையானதன்மை, அவர் மன்னரைப்போல் ஆட்சி செலுத்துவதும் இல்லை; சர்வாதிகாரி போல் அடக்கி ஆள்வதும் இல்லை என்று எச்சரிக்கப்பட்ட போதிலும் அப் பதவி வகித்த பலரிடம் வெவ்வேறு விதமாக இருந்திருக்கிறது.

ஃபிரான்சு நாட்டில் திரு டோமர்க் (Doumergue) என்ற குடியரசு தலைவரின் கையில் அப் பதவி இருந்தது போலத் திரு. பாயின்கேர் (Poincare) கையில் இருந்ததில்லை. அமெரிக்காவில் திரு. ஜாக்சன் காலத்திலும் திரு லிங்கன் காலத்திலும் காங்கிரசை விடக் (பாராளுமன்றத்தைவிட) குடியரசு தலைவர் பதவி முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்தது. திரு. டெய்லர் குடியரசு தலைவராக இருந்த காலத்தில் பாராளுமன்றம் (காங்கிரஸ்) ஒழுங்கு நடவடிக்கை அவர்மீது எடுப்பதாகப் பயமுறுத்தியது. திரு ஆன்ட்ரூ ஜான்ஸன் காலத்தில் குடியரசு தலைவர் பதவியைப் பின்னுக்குத் தள்ளிவைத்துக் காங்கிரஸ் அதன் முக்கியத்துவத் தையே குலைத்தது.

பொதுவாக ஆட்சித்தலைவரின் கடமைகளை இரண்டு பெரும் பிரிவாக வைக்கலாம் :

(1) எல்லா நாடுகளிலும் ஆட்சித்தலைவர் சடங்குகளுடன் கூடிய தாம் வகிக்கும் பதவிக்கு எடுத்துக்காட்டாக உள்ள வைபவங் களில், நாட்டின் பிரதிநிதி என்ற முறையில் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் கலந்து கொள்கிறார். உள்துறையில் ஆட்சி செலுத்தும் பல மாநிலங்கள் இணைக்கப்பட்ட மத்திய ஆட்சிமுறை யில் ஆட்சித்தலைவர் சடங்குகளிலும் சம்பிரதாய நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்வதால் இணைந்த நாடுகளிடையே (Federal State) ஓர் ஒற்றுமை நிலவ உதவுவதுடன் அப் பதவிக்கே ஒரு சிறப்பான முக்கியத்துவம் கிடைக்கிறது.

(2) ஆட்சித்தலைவருக்கு அரசியல் ரீதியாகச் சில பொறுப்பு களும் கொடுக்கப்பட்டு இருக்கின்றன. இவை வேய்மார் ஜெர் மனியின் அரசியல் சட்டத்திலுள்ள சான்சலர் (ஆட்சித் தலைவர்) போலப் பிரசித்தி பெற்றதாகவும் இருக்கலாம்; அல்லது ஆஸ்திரியா நாட்டு 1920ஆம் ஆண்டு அரசியல் சட்டத்தின்படி பதவியேற்ற குடியரசு தலைவரைப் போல் ஆட்சியில் அவரது பங்கு அற்பமானதாகவும் இருக்கலாம்.

அரசியல் பொறுப்புகள் வகையில், பாராளுமன்ற ஆட்சி முறையில் இயங்கும் ஒரு குடியரசுதலைவர், ஆட்சிப் பொறுப்பை ஏற்கத் தகுந்த ஓர் அரசியல்வாதியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இப் பணி இரண்டு அரசியல் கட்சிகள் உள்ள நாடுகளில் மிகமிகச் சாதாரணமானது. ஆனால், பல அரசியல் கட்சிகள் ஒரு நாட்டில் செயற்பட்டு எந்தக்கட்சிக்கும் பாராளு மன்றத்தில் பெரும் பாலான உறுப்பினர்களின் ஆதரவு கிடைக்காத பொழுது நிரு வாகத்தை ஏற்று நடத்த ஒரு பிரதமரைத் தேர்ந்தெடுப்பது ஒரு

சிக்கல் நிறைந்த பணி. இதுபோலவே ஆட்சிப் பொறுப்பில் உள்ள ஒரு கட்சி பாராளுமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலம் தோற்கடிக்கப்பட்டாலும் அல்லது அக் கட்சியின் பதவிக் காலம் முடிவடைந்து போனாலும் குடியரசு தலைவர் தாம் அமைச் சரவையின் இராஜினாமாவை ஏற்றுக் கொண்டு அவ் வாட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும். அவர் தாம் மக்கள் சபையைக் கலைப்பதற்கு உத்தரவு போட்டுப் புதிய பொதுத் தேர்தலுக்கான ஏற்பாடுகள் மூலம் புதிய உறுப்பினர்களைப் பாராளுமன்றத் திற்குத் தேர்ந்தெடுக்க உதவுகிறார். பாராளு மன்றத்தால் தீர்மானிக்கப்பட்ட மசோதாக்களை அங்கீகரித்துச் சட்டப்புத்த கத்தில் வைக்கவும் உதவுகிறார். மசோதாக்களில் குடியரசு தலைவர் கையொப்பமிட்டால்தான் சட்டமாகிறது. அப்படிச் செய்யும்பொழுது சட்டரீதியான வழிமுறைகள் சட்டமியற்று வதில் அனுஷ்டிக்கப்பட்டன என்று பொருள்படும். மசோதாக் களில் கையொப்பமிட மறுத்தால் மேற்கூறிய வழிமுறைகள் பின் பற்றப்படவில்லை என்று பொருள்படும்.

ஆட்சித் தலைவருக்கு அமைச்சரவைக் கூட்டங்களில் தலைமை தாங்க உரிமை அளிக்கப்படலாம் அல்லது அமைச்சரவையின் கொள்கை முடிவுகள்பற்றி அவரிடம் கலந்தாலோசிக்கப்படலாம். அப் பதவியை வகிக்கும் நபரின் முக்கியத்துவத்தைப் பொறுத்தும் அமைச்சரவையில் அவரது செல்வாக்கைப் பொறுத்தும் கொள்கை முடிவுகளில் அவரின் ஆலோசனையைப் பெறும் உரிமை செயற்படும்.

எனவே, அரசியல் அதிகாரங்களைப் பெற்று விளங்கும் குடி யரசுதலைவர் அரசியல் சட்டத்தின் கடைசி காவலராகவும், பிரதி நிதித்துவக் குடியாட்சி முறை செயற்படுவதைச் சுலபமாக்கவும் பயன்படுகிறார். குடியரசு தலைவர், நாட்டின் முழுமைக்கும், முதல் குடிமகனாகவும் (First Citizen) பிரதிநிதியாகவும் இருக்கும் காரணத்தால் சடங்குகளிலும் அரசியல் வைபவங்களிலும் அவர் பங்கு எடுத்துக் கொள்ளும்பொழுது கட்சிகளின் கருத்து வேற்றுமைகளுக்கும் பூசல்களுக்கும் அப்பாற்பட்டவராக அவர் நடந்து கொள்வது அவர் வகிக்கும் பதவிக்கே மேன்மை தரும். ஒரு குறிப்பிட்ட அரசியல் கட்சியின் ஆதரவாளர் போல் அவரின் நடத்தை இருந்தால், அது அவர் வகிக்கும் பதவிக்கே இழுக்கைத் தேடித்தருவதுமல்லாமல் ஆட்சித் தலைவருக்கு மக்க ளிடம் இருக்கும் மரியாதை, அன்பு ஆகியவை தகர்க்கப்பட்டு, எள்ளி நகைத்து உதாசீனம் பண்ணக்கூடிய அளவுக்கு அவர்

தம்மையே தாழ்த்திக் கொள்பவர் ஆவார். அரசியல் கட்சிப் பூசல்களில் ஒருதலைப் பட்சமாக ஆட்சித்தலைவர் நடந்து கொள்கிறார் என்ற எண்ணம் பரவலாக இருந்தால் அவர் நாட்டின் தலையாய பிரதிநிதி என்ற எண்ணத்திற்கு அருகதை இல்லாமல் போய்விடுகிறார். மக்களின் நன்மதிப்பையும் இழக்கிறார். எனவே, அமைச்சரவை அரசுமுறையின் மையமாகப் பாரபட்சமில்லாத ஒருவர் தலைவராக இருந்து செயற்படுவது, அரசு பொறுப்பை ஏற்றுச் செயற்படும் கட்சிச் சார்புடைய ஸ்தாபனங்கள் செயற்படுவதைச் சில நேரங்களில் சில காரணங்களுக்காக நிறைவு படுத்த உதவுகிறது.

அமெரிக்காவில் ஆட்சித்தலைவரும் செயற்குழுப் பிரிவின் தலைவரும் ஒருவராதலால், அப் பதவிக்கு அடையாளமான வைபவங்களில் கலந்து கொள்வது மிகக் குறைவு. ஓர்அரசியல் கட்சியின் தலைவராக ஆட்சித்தலைவர் இருப்பதால், மாற்றுக் கட்சிகள், அவரைப் பலதரப்பட்ட சுயேச்சைநாடுகள் ஒன்றாக இணைந்த நாட்டின் அடையாளமாக எடுத்துக் கொள்வதில்லை. எனவே, ஐக்கிய அமெரிக்கநாடு தன் தேசக் கொடியையும், அரசியல் சட்டத்தையும் மாத்திரம் நாட்டின் ஒருமைப்பாட்டின் அடையாளங்களாகக் கொள்கிறது.

### பொது வாழ்வில் இந்தியக் குடியரசுதலைவரின் பாகம்

நாட்டின் பொதுவாழ்வில் (public life) குடியரசுதலைவரின் பாகம் அனேக அபிப்பிராயங்களுக்கு இடமளித்துள்ளது. இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கினவர்கள் இந்தியஅரசியல் சட்டப்படி அமையும் ஆட்சிமுறையில் குடியரசுதலைவரின் பாகம் இங்கிலாந்து நாட்டு மன்னர் அல்லது அரசியைப் போலச் சட்டரீதியானதாக இருக்கும் என்று அடிக்கடி வற்புறுத்தி வந்தார்கள். டாக்டர் அம்பேத்கார் அரசியல் சட்டத்தை உருவாக்கும் குழுவில் பணியாற்றிய போது,

'இந்திய அரசியல் சட்டத்தின்படி குடியரசு தலைவர் இங்கிலாந்து அரசியல் சட்டத்தில் எப்படி மன்னர் செயற்படுகிறாரோ அதே மாதிரிச் செயற்படுவார். அவர் நாட்டின் தலைவர் என்றாலும் செயற்குழுப் பிரிவின் தலைவர் இல்லை. அவர் நாட்டின் பிரதிநிதியாக விளங்குகிறாரே தவிர ஆட்சி புரியவில்லை. அவர் நாட்டின் அடையாளச் சின்னமாக விளங்குகிறார். நிருவாகத்தில் குடியரசு தலைவரின் பங்கு அரசின் முடிவுகளைத் தெரியப்படுத்துவதற்குச் சடங்குகளோடு கூடிய ஓர் உபாயமாக இருப்பதுதான்', என்று கூறியுள்ளார். இந்த அபிப்பிராயங்களைப் பண்டித

ஜவஹர்லால் நேரு, சர். அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர், திரு L. M. முன்ஷி போன்றவர்கள் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். பண்டித நேரு 1959ஆம் ஆண்டு ஜூலை மாத நிருபர்கள் கூட்டத்தில் இந்த நிலையை விவரிக்கும் பொழுது கீழ்வருமாறு கூறினார். 'குடியரசு தலைவர் விஷயத்தில் அரசியல் சட்டத்தில் அவருக்கு உள்ள இடம் தர்க்கத்துக்கோ விவாதத்திற்கோ இடமில்லாமல் அமைந்துள்ளது. நமது அரசியல் சட்டம் குடியரசு தலைவரை இங்கிலாந்து மன்னர் அல்லது அரசியைப் போல் செய்துள்ளது. இப்படி இல்லாவிட்டால் அமைச்சரவை சட்ட சபைகளின் பொறுப்புகள் பாதிக்கப்படும். பாராளுமன்றம்தான் அதிகாரம் மிக்க ஸ்தாபனம். மக்கள் அமெரிக்காவில் உள்ள குடியரசுதலைவர் ஆட்சி முறையோடு நம் ஆட்சிமுறையைச் சேர்த்துக் குழப்பமடைகிறார்கள். நம் ஆட்சி முறை குடியரசு தலைவர் ஆட்சி முறை இல்லை-அமைச்சரவை ஆட்சி முறையாகும்', என்று கூறியுள்ளார்.

அரசியல் சட்டம் செயற்படும் பொழுது பிரதமர் திரு. நேரு விவரித்தபடி அரசியல் சட்டநிலை இருந்து இருக்கலாம். எனினும், இவ் விஷயத்தில் விவாதத்திற்கு இடமில்லாமல் இல்லை. குடியரசு தலைவரை இங்கிலாந்து மன்னருக்கு ஒப்பிடுவது தவறான வழியில் போவதாகும் என்ற கருத்தும் நிலவுகிறது. ஏனென்றால், இங்கிலாந்து மன்னருக்குச் சில விவரிக்க இயலாத சமூகத் தோற் றம் உள்ளபடியால் அது சட்டரீதியாகக்கூட இந்தியக் குடியரசு தலைவருக்குச் சிறிதும் பொருந்தாது. இங்கிலாந்து மன்னருக்கும் இந்தியக்குடியரசு தலைவருக்கும் சில இயற்கையாய் அமைந்த முக்கியமான மாறுபாடுகள் உள்ளன.

முதலில் இங்கிலாந்து மன்னரின் நிலை பாரம்பரியமாக அதாவது பரம்பரையாக உள்ள ஒன்று. ஆனால், இந்தியக் குடியரசு தலைவர் தேர்தல் கல்லூரி மூலம் தேர்வு செய்யப்பட்டு அரசியல் சட்டத்தின் சரத்துகளின் உள்நோக்கத்தின்படி பதவி வகிப்பவர். மன்னருக்கு மரியாதை செலுத்த வேண்டும் என்ற ஓர் உள் உணர்வால் உந்தப்பட்டு, மக்கள் இங்கிலாந்தில் விசுவா சத்துடன் நடக்கிறார்கள். இந்தியாவில் மக்களே தங்களுடைய பிரதிநிதிகளால் குடியரசுதலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள் வதால் விசுவாசத்துடன் இருக்கிறார்கள். மூன்றாவதாக இங்கி லாந்து நாட்டில் பாராளுமன்றம் அதிகாரங்களை மன்னரிட மிருந்து எடுத்துக் கொண்டது. இந்தியாவில் குடிமக்களே அதிகாரத்தைத் தங்களுடைய நன்மைக்கு உபயோகப்படுத்தக் குடியரசு தலைவரிடம் ஒப்படைத்துள்ளார்கள்.

இந்தியப் பிரதமர் திரு. ஜவஹர்லால் நேரு 1959–ஜூலை 7-ல் நிருபர்கள் மத்தியில் இந்தியக் குடியரசுதலைவர் இங்கிலாந்து மன்னரைப் போல் இருப்பவர் என்ற கருத்தைத் தெரிவித்தபொழுதே அப்பொழுது குடியரசுதலைவராக இருந்த திரு. டாக்டர் இராஜேந்திர பிரசாத் கேரள மாநிலத்தில் நிலவும் அரசியல் நிலையை நேரில் தெரிந்துகொள்ளக் கேரளப்பிரதேசக் காங்கிரஸின் தலைவர் திரு K. சங்கர் அவர்களுக்கும், பொதுக்காரியதரிசி டாக்டர் ஹென்றி ஆஸ்டினுக்கும், முதலமைச்சர் திரு E.M S நம்பூதிரிபாட்டுக்கும் தனித்தனியே சந்திக்கச் சந்தர்ப்பம் கொடுத்தது] நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது. இச் சம்பவம் குடியரசுதலைவர் சாதாரணமாகச் செய்யக்கூடியதுதான் என்றாலும் நவீனகாலங்களில் இங்கிலாந்து மன்னரோ அரசியோ இம்மாதிரி நடந்து கொள்வார் என்று நினைக்கக்கூட முடியாது.

இந்தியஅரசியல் சட்டப்படி அமைச்சரவை அரசு ஏற்படுத்தப் பட்டபோதிலும் ஒரு சிறப்புத் தகுதியுடைய தேசியத் தலைவரைக் கு டியரசுதலைவராகத் தேர்ந்தெடுத்தால் அவர் ஒரு தலையாட்டி பொம்மையாகவோ அல்லது பிரதமர் சொற்படி ஆடுபவராகவோ இருப்பார் என்று நினைக்க இடமில்லை. இந்தியாவிலே குடியரசு தலைவராக வரக்கூடியவர்களுக்கு முதிர்ந்த அரசியல் அனுபவமும் ஆற்றலும் அறிவும் அமைந்திருக்க வேண்டியது அவசியமாகிறது. எனவே, தனி மதிப்பும் தன்மையும் கொண்ட திரு இராஜேந்திர பிரசாத் அவர்களை அந்த உயர்ந்த பதவிக்குத் தேர்ந்தெடுத்தது சந்தர்ப்பச்சூழ்நிலைகளால் அன்று; அரசியலில் அவருக்குள்ள ஆழ்ந்த அனுபவமும் அவருடைய தனித்தன்மையும் தாம் காரணம்.

அவருக்குப் பிறகு குடியரசு தலைவராக வந்த டாக்டர் இராதாகிருஷ்ணனும் பெரிய அறிவாளியும் உலகப்புகழ் பெற்ற சிந்தனையாளரும் ஆவார். அவரும் சம்பிரதாயமாக உள்ளவையும் நவீனமாக உள்ளவையும் சேர்ந்த மனிதர்தாம்.

எனவே, இப்படிப்பட்ட உயர்ந்த மனிதர்களை இப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கும் பொழுது அவர்கள் ஆற்றலுக்குத் தகுந்த பாகத்தை அவர்கள் ஏற்றுச் செயற்படுவது தவிர்க்க முடியாதது. அதாவது பெயரளவில் குடியரசுதலைவராக இல்லாமலும், கோடிட்ட இடத்தில் கையொப்பமிடுபவராக இல்லாமலும் இருப்பது அவசியம். இந்திய அரசியல் சட்டம் இவ் விஷயத்தில் நல்ல அரசியல் மரபுகள் ஏற்பட உதவியாக இருப்பதுடன் குடியரசுதலைவரின் செல்வாக்கு வளர்ந்து அப் பதவிக்கு ஒரு

தனித்தன்மையை ஏற்படுத்த இடமளிக்கிறது. எனவே, இந்திய அரசியல் சட்டம் அமைச்சரவை அரசை உருவாக்கி விட்டதால் குடியரசுதலைவரின் அதிகாரங்களைப் பற்றி விமரிசிக்க இடமே இல்லை என்று நாம் ஒதுக்கி விடமுடியாது.

இவ் விஷயமாக நாம் விவாதிப்பதும் நடைமுறையில் உள்ள பழக்கத்தைத் திருத்துவதும் பாராளுமன்றத்தின் உயர்ந்த அதிகாரத்தைக் (Supreme Authority) குறைப்பதற்கு ஒப்பாகும் என்று நினைப்பதும் தவறு. ஏனெனில், அமைச்சரவை அரசு முறையில் பாராளுமன்றம் மிக உயர்ந்த அதிகாரங்களுக்கு இருப்பிடம் என்பது உண்மைக்குப் புறம்பான கூற்று. உதாரணமாக இங்கிலாந்து நாட்டின் பாராளுமன்றம் அமெரிக்க நாட்டின் பாராளுமன்றத்தைவிடச் (Congress) சக்தி வாய்ந்தது என்று நினைப்பது தவறு. அங்குக் குடியரசுதலைவர் ஆட்சிமுறை (Presidential rule) நடக்கிறது. இப்பொழுது இருக்கும் ஆட்சி முறையை மாற்றி இங்கிலாந்தில் உள்ளது போல் செய்ய வேண்டும் என்ற எண்ணமில்லை. மறைமுகமாகத் தேர்ந்தெடுக்கப்படும் குடியரசு தலைவரின் பொறுப்புகளையும் செல்வாக்கையும் நன்கு புரிந்து கொள்வதால் பாராளுமன்றத்தின் இறைமைக்கு ஒரு தீங்கும் நேர்ந்திடாது. பிரதமராகச் செயற்பட்ட ஒருவர் குடியரசுதலைவர் பதவி தம் தகுதிக்குக் குறைந்தது என்று நினைத்து விடாமல் இருக்கும் அளவுக்கு அப் பதவியின் பொறுப்பை அதிகப்படுத்துவது உசிதம்.

இந்திய அரசு சட்டம் 1935ல், ஆளுநர்-தலைவர் (Governor-General) 'தம் மனத்தில் பட்டதைச் செய்தல்' அல்லது தன் சொந்த முடிவின்படி நடத்தல், என்ற சொற்றொடர்கள் எந்தெந்த விஷயங்களில் அமைச்சரவையைக் கலக்க வேண்டும். எந்தெந்த விஷயங்களில் அமைச்சர்களைக் கலந்தாலோசிக்கத் தேவையில்லை என்று தெளிவுபடுத்தியுள்ளன. இந்திய அரசியல் சட்டம் மேற்கூறிய சொற்றொடர்களுக்கு இடமளிக்கவில்லை என்றாலும் குடியரசுதலைவர் சில விஷயங்களில் முக்கியமான அதிகாரங்களும் கடமைகளும் தம் பதவியினால் வரும் உரிமையின் அடிப்படையில் அவர் விரும்பினால் வகிக்கலாம் என்பது அரசியல் சட்டத்தின் சில சரத்துக்களிலிருந்து நமக்குத் தெளிவாகிறது.

இச் சந்தர்ப்பங்களையெல்லாம் விவரிப்பது முன்கூட்டியே சொல்லக்கூடாததை முன்கூட்டிச் சொல்வதற்கு ஒப்பாகும். ஓர் உதாரணத்திற்குக் கூற வேண்டுமானால் பிரதமரைக் கலக்காமல், ஓர் அமைச்சரின் முடிவை அமைச்சரவையின் தீர்மானத்திற்கு அனுப்பலாம். மேலும், அவரின் சொந்த அதிகாரத்தின்கீழ் மசோதாவை மறு பரிசீலனைக்குப் பாராளு

மன்றத்திற்கு அனுப்பிவைக்கலாம்; அல்லது பாராளுமன்றத்தின் பரிசீலனையில் இருக்கும் ஒரு விஷயம் பற்றி ஒரு குறிப்பு அனுப்பலாம்.

இன்னொரு முக்கியமான அரசியல் செய்கை பிரதமரைத் தேர்ந்தெடுப்பது. சாதாரணமாக, மக்கள் சபையின் பெரும்பாலான உறுப்பினர்களைக் கொண்ட அரசியல் கட்சியின் தலைவரைத்தான் பிரதமராகச் செயற்பட அழைப்பு விடுவார். ஆனல், சில சமயங்களில் இப்படிச் செய்ய இயலாமல் போகலாம். அனேக, அரசியல் கட்சிகள் தேர்தலில் போட்டியிட்டு, முடிவில் எந்த ஒரு கட்சிக்கும் பாராளுமன்றத்தில் பெரும்பாலான உறுப்பினர்களின் ஆதரவு கிடைக்காமல் போகலாம். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் பிரதமரைத் தேர்ந்தெடுப்பது குடியரசுதலைவரின் முடிவைப் பொறுத்துத்தான் இருக்க முடியும். எனவே, இந்திய அரசியல் சட்டத்தில் குடியரசு தலைவர் தம் மனத்திற்குப் பட்டபடி செயற்படும் சந்தர்ப்பங்கள் அனேகமுள்ளன.

அரசியல் சட்டத்தின் உள்நோக்கம் குடியரசுதலைவர் அரசு நிருவாகத்தில் அக்கறைகாட்டி அமைச்சர்களைத் தம் அறிவாற்றலால் ஊக்குவிக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அமைச்சரவைக் கூட்டத்தில் தலைமைதாங்கி நடத்தாவிட்டாலும், குடியரசு தலைவர் அமைச்சரவையின் நடவடிக்கைகளையும், எடுக்கப்பட்ட முடிவுகளையும் அமைச்சரவைமூலம் கிடைக்கும் கோப்பு ஏடுகள் (Files) மூலமும், இலாக்காக்களிடமிருந்து வரும் கோப்பு ஏடுகளிலிருந்தும் தெரிந்து கொள்கிறர். அமைச்சரவையின் பரிசீலனைக்கும் முடிவுக்கும் வரும் விஷயங்களின் பட்டியல் குடியரசுதலைவருக்கு முன்கூட்டியே அனுப்பப்படுகிறது. இதனல் சம்பந்தப்பட்ட அமைச்சர்களிடம் பட்டியலில் உள்ள விஷயங்கள் பற்றி விவாதிக்கலாம். அல்லது சம்பந்தப்பட்ட இலாக்காக்களிடமிருந்து விவரம் கேட்கலாம். அமைச்சரவையில் முடிவெடுக்கப்பட்டவற்றின் குறிப்பும் வெளி உறவு இலாக்காவின் தினசரிக்குறிப்பும் குடியரசுதலைவரின் பரிசீலனைக்கு அனுப்பப்படும். அதிகாரபூர்வமான அறிக்கையிலிருந்து சட்ட சபைகளின் தினசரி நடவடிக்கைகளையும் தெரிந்து கொள்கிறர். வேறு தகவல்கள் வேண்டுமானல் தமது அந்தரங்கச் செயலாளரைத் தருவிக்கச் சொல்கிறர். அரசியல் சம்பவங்களைப்பற்றி அவ்வப்பொழுது குடியரசு தலைவரின் அதிகாரிகள் அவருக்குத் தகவல்கள் கொடுக்கிறர்கள். சுருங்கக்கூறின் பிரதமர், நாட்டின் உள்ளேயும் வெளியேயும் நடக்கும் சம்பவங்களைக் குடியரசு தலைவருக்குக் கொடுப்பதுடன் அமைச்சரவையின் முடிவுகளையும் அரசு கொள்கையின் அம்சங்களையும் அவருக்கு விவரிக்கவேண்டும்.

அரசியல் சட்ட விதி எண் 78 குறிப்பாக, 'நாட்டின் நிருவாக சம்பந்தமாக அமைச்சரவை எடுக்கும் எல்லா முடிவு களையும் பிரதமர் குடியரசுதலைவருக்குத் தெரிவிப்பதுடன் சட்ட மாக்கவிருக்கும் விஷயங்கள் பற்றியும், நிருவாக சம்பந்தமாகக் குடியரசுதலைவர் விரும்பும் எல்லாத் தகவல்களையும் கொடுக்கக் கடமைப் பட்டுள்ளார்', என்று சொல்லுகிறது. இதில் உள்ள விதிப்படி (78) ஓர் அமைச்சரின் முடிவை அமைச்சரவையே பரி சீலனை செய்து முடிவு எடுக்க உத்தரவு போடலாம். மேலும், இவ் விதி குடியரசு தலைவரின் சுதந்திரமான, பொறுப்பு மிக்க நிலையை உணர்த்துவதுடன் அரசியல் சட்டத்தின்கீழ் அவர் ஆற்ற வேண்டிய பணிகளை எளிதாக்குகிறது. மேலும், அவர் கையொப்பமில்லாமல் எந்தக் காரியமும் செய்ய முடியாது. திடீர் என்றும் கண்டிப்பாக வும் கையொப்பமிட மறுக்காவிட்டாலும் கையொப்பமிடுவதைத் தாமதப்படுத்தலாம். இருப்பினும் அரசின் முடிவுக்கு அவர் சம் மதிக்குமுன் அவர் அறிவுரை வழங்கினல் அது கண்டிப்பாக ஏற்றுக் கொள்ளப்படும். மன்னரின் உரிமைகளும் கடமைகளும்என்ற தலைப் பில் திரு ஆஸ்குவித் (Mr. Asquith) என்பவர் 'மன்னர் தமக்குக் கிடைக்கும் எல்லாத் தகவல்களையும் அமைச்சர்களுக்குக்கொடுக்கக் கடமைப் பட்டுள்ளார். அமைச்சர்கள் தரும் ஆலோசனைகள் அல்லது அவர்களின் போக்குச் சரியானதென்று தோன்ருவிட் டால் மன்னர் ஆட்சேபிக்கலாம்; அல்லது வேறு வழியைப் பின் பற்ற ஆலோசனை கூறலாம். இப்படிப்பட்ட ஆலோசனைகளும் அறிவுரைகளும் மரியாதையுடன் அமைச்சர்களால் பெறப்பட்டு மிக்க கவனத்துடனும் மரியாதையுடனும் பரீசீலிக்கப்பட்டு முடி வெடுக்கப் படுகின்றன. மன்னரைத் தவிர வேறு யாரிடமிருந்து வந்தாலும் இந்த அளவுக்குக் கவனமாகப் பரிசீலிக்கப்படுவதில்லை', என்று கூறுகிருர். இதே அளவு கவனிக்கும் தன்மை இந்தியக் குடியரசுதலைவர் அனுப்பும் ஆலோசனைகள், தகவல்கள், ஆட்சேபனைகள் மேல் அமைச்சரவையும் பிரதமரும் கொடுக்க வேண்டும்.

இன்னுமொரு துறையிலும் குடியரசுதலைவரின் அதிகாரம் உணரப்படுவது, இணைந்த மாநிலங்களுக்கிடையே மாறுபட்ட அரசியல் கட்சிகள் நிருவாகப் பொறுப்பில் இருக்கும் பொழுது ஏற்படும் பூசல்கள், சண்டை சச்சரவுகள் காரணமாய் ஆகும். இச் சூழ்நிலையில் மத்திய அரசு பொறுப்பை ஏற்று நடத்தும் கட்சி மாநில அரசு பொறுப்பை ஏற்றுள்ள மாற்றுக் கட்சியுடன் கருத்து, கொள்கை வேற்றுமையின் அடிப்படையில் சச்சரவு ஏற்படலாம். இதைப் போன்ற சமயங்களில் குடியரசுதலைவரின் தனிப்பட்ட குணம் தகுந்த பரிகாரத்தைத் தரவல்லது.

ஒரு பொலிவுடன் விளங்கும், ஆக்கிரமிப்புத் தன்மையுடைய பிரதம அமைச்சர், தம்முடைய மயக்கமடையச் செய்யும் மக்களிடமுள்ள அமோக ஆதரவு, பிடிப்புக் காரணமாகக் குடியரசு தலைவரையே அடக்கி ஆளலாம். ஆனால், குடியரசுதலைவர் ஓர் உன்னதமான, குறிப்பிடத்தக்க தோற்றமும் ஆற்றலும் படைத்து நாட்டை நோக்கியிருக்கும் பெரிய பிரச்சினைகளை எளிதில் புரிந்து கொண்டு அவற்றைத் தம் நுண்ணறிவால் சமாளிக்கக் கூடியவராக இருந்தால் அரசு நிருவாகத்தில் ஓர் முக்கிய பாகத்தை மேற்கொண்டு அமைச்சர்களுக்கு எப்படிச்செயற்பட வேண்டும் என்று அதிகாரத்தின் பேரில் உத்தரவுகள் போடாமல் நாட்டின் நலத்தை மனத்தில் கொண்டு தம்முடைய அறிவு, அனுபவம், பாரபட்சமில்லாத முடிவுகளால் அமைச்சரவைக்கு உறு துணையாக இருக்கலாம் என்று சொல்வதில், எப்படியிருப்பினும் உண்மை இருக்கிறது.

காலஞ் சென்ற குடியரசு தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் பெயரளவில் தலைவராகவும் சாத்வீகமாகவும் இருக்கவில்லை. அவர் தமது பரந்த அறிவின் காரணமாகவும் பலதரப்பட்ட உலக அனுபவம் காரணமாகவும் நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் அவருடைய தியாகத்தின் அடிப்படையில் அவருக்கிருந்த செல்வாக்கின் காரணமாகவும் அரசு நிருவாகத்தில் திறமையோடு செயற்பட்டு, அமைச்சரவை அவருடைய அறிவுரைகளையும், ஆலோசனைகளையும் ஏற்கும்படி செயற்பட்டார். அமைச்சர்களை அவர் சந்தித்த பொழுது மனம் திறந்து பேசினார். அன்பான தன்மையின் காரணமாக அவருடைய கருத்துகளை யார் மேலும் திணிக்காமல் அவருடைய ஆலோசனையின் பேரில், அமைச்சரவை எடுத்த முடிவுகளை, மறு பரிசீலனை செய்ய உதவினார். நாட்டின் நலனைப் பற்றிய முக்கியமான விஷயங்கள் பரிசீலனைக்கு வரும்பொழுது அவர் தேவைப்பட்டபோதெல்லாம் தம் கருத்துகளை எழுதியே பிரதமருக்கு அனுப்பினார். குடியரசு தலைவரின் கடிதங்களும் அவற்றிற்குப் பிரதமரின் பதில்களும் அமைச்சர்களுக்கு அனுப்பப்பட்டன. இக் கடிதப் போக்குவரத்தைப் பற்றிப் பிரதமரே நிருபர்கள் கூட்டத்தில் கூறியுள்ளார். கூட்டுறவு, விவசாயம் மற்றும் அரசு விற்பனைக்கழகம் (State Trading Corp.) இவ்விரண்டிலும் அரசு கொள்கைக்கு மாறான கருத்து குடியரசுதலைவர் கொண்டிருந்ததால் இதைப்பற்றிப் பிரதமருக்குத் தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். மேலும், தேசிய ஒருமைப்பாடு மாநாடு கூட்டுவதற்குமுன், குடியரசு தலைவர் 20 பக்கக் குறிப்பைப் பிரதமருக்கு அனுப்பி வைத்தார். இந்தக் குறிப்பைப் பிரதமர் அம் மாநாட்டில் எல்லாருக்கும் வினியோகம் செய்யா

விட்டாலும் இக்குறிப்பிலிருந்தே பிரதமர் நேரு முழுமையாகத் தம் அபிப்பிராயங்களையும் ஆலோசனைகளையும் எடுத்துரைத்தார். டாக்டர் இராஜேந்திர பிரசாத்திற்குப் பிறகு குடியரசுதலைவராக வந்த டாக்டர் இராதாகிருஷ்ணன் அவருக்கே உரிய அழகிய முறையில் மக்களின் விருப்பங்களை, அபிப்பிராயங்களை, அடிக்கடி பொதுக் கூட்டங்களிலும் தனித்த உரையாடல்களிலும் குறிப்பிடுவார். பஞ்சாப் மாநில முதலமைச்சராக இருந்த திரு. கெய்ரான் அவர்கள் மீது சட்டசபை எதிர்க்கட்சி உறுப்பினர்கள் குற்றச்சாட்டுகளைக் குடியரசுதலைவரிடம் கொடுத்த பொழுது, அவர் நீதி விசாரணை நடத்தப் பிரதம அமைச்சருக்கு அபிப்பிராயம் தெரிவித்தார். பிரதமர் நேரு நீதி விசாரணைக்கு திரு எஸ். ஆர். தாஸ் என்ற நீதிபதியை நியமித்ததும் குடியரசு தலைவரின் விருப்பப்படிதான்.

குடியரசு தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் எந்த அளவுக்கு மத்திய அரசின் கொள்கையை உருவாக்குவதில் பங்கு கொண்டார் என்ற விவரம் சம்பந்தப்பட்ட கோப்பு ஏடுகளை ஆய்வாளர்களுக்குக் கிடைக்கச் செய்வதால்தான் தெரிந்து கொள்ள முடியும். குடியரசுதலைவருக்கும் பிரதமருக்கும் இடையே உள்ள மரியாதை அவர்களுக்குக் கட்சியிலே உள்ள செல்வாக்கு, பாராளுமன்றத்தில் இருவருக்கும் உள்ள செல்வாக்கு, அவர்களை எதிர்நோக்கி இருக்கும் சூழ்நிலை இவற்றைப் பொறுத்துக் குடியரசு தலைவரின் பொறுப்புகளும் கடமைகளும் மிக முக்கியத்துவமும் உபயோகமும் கூடியதாக அமையும்.

குடியரசுதலைவர் இந்திய நாட்டின் முதற் குடிமகன்; நாட்டின் முதல்வர்; இந்திய மக்களின் ஒருமைப்பாட்டிற்கு ஒரு சின்னமாக விளங்குகிறார். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர்களையும், மாநிலச் சட்டசபைகளின் உறுப்பினர்களையும் கொண்ட தேர்தல் கல்லூரியால் குடியரசுதலைவர் தேர்ந்தெடுக்கப் படுகிறார். இந்தப் பதவிக்கான தேர்தல் மறைமுகமாக நடந்தாலும் ஒரு தேசிய அடிப்படையைத் தருகிறது. எனவே, அரசியல் கட்சிகளின் பூசல்களுக்கும் குறுகிய குறிக்கோள்களுக்கும் எதிராக குடியரசுதலைவர் நாட்டின் எல்லாப் பகுதிகளைச் சேர்ந்த உறுப்பினர்களின் சார்பாக எந்த ஒரு விஷயத்தைக் குறித்தும் உரிமையோடு கூறலாம். குடியரசுதலைவர் பதவிக்கு நிற்கும் ஒருவர் ஏதாவதோர் அரசியல் கட்சியைச் சேர்ந்தவராக இருக்கலாம். எனினும், குடியரசுதலைவர் பதவியை ஏற்ற பிறகு இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்றத்தின் சபாநாயகர் போல நடுநிலை வகித்து ஒரு தலைப்பட்சமாக இல்லாமல் கட்சிகளின் நடுநாயகமாக நடந்து

கொள்ள வாய்ப்பிருக்கிறது. காலஞ் சென்ற குடியரசுதலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் தாம் கட்சிகளுக்கு அப்பாற் பட்டவர் என்று அடிக்கடி கூறியிருக்கிறார். டாக்டர் பிரசாத் மூன்று முறை காங்கிரஸ் கட்சியின் தலைவராகப் பணியாற்றிய ஒரு முதிர்ந்த காங்கிரஸ்காரராக இருந்தும் அவர் குடியரசு தலைவர் பதவியில் இருந்தபொழுது அக் கட்சி மாநாடுகளில் கலந்து கொள்ளவே இல்லை. இப்படியாக அவர் கட்சி அரசியலுக்குத் தொலைவில் இருந்து கொண்டு நாட்டை ஒன்றுபடுத்தும் எண்ணத் துடன் நடந்து கொண்டார். எனவே, கட்சிகளுக்கு அப்பால் இருக்கும் குடியரசுதலைவர் மக்களின் ஒருமைப்பாட்டிற்கும் பல மாநிலங்களின் இணைந்த முன்னேற்ற முயற்சிக்கும் ஒரு சின்னமாக விளங்குகிறார். அரசு பொறுப்பை ஏற்றுள்ள ஒரு கட்சி பதவி விலகி மறுதேர்தலுக்குப் பிறகு புது அரசு ஏற்படும் வரை தொடர்ந்து அரசு நிருவாகம் நடக்க எல்லாச் செயற்குழு அதிகாரங்களுக்கும் இருப்பிடமாகக் குடியரசுதலைவர் திகழ்கிறார்.

குடியரசுதலைவர் அரசியல் இயந்திரத்தின் ஒரு பாகமாக மாத் திரம் இல்லாமல் சமூக அமைப்பின் ஒரு முக்கிய பாகமாகவும் இருக்கிறார். எனவே, அரசு சம்பந்தப்பட்ட எல்லா வைபவங்க ளிலும் நாட்டின் சமூக வாழ்விலும் முக்கியப் பங்கு கொள்கிறார். சிறந்த வாழ்க்கையின் தலைமையில் இருப்பவராதலால் எந்தக் காரியத்திற்கும் குடியரசுதலைவரின் ஆதரவு, ஒரு பெரிய நிதியைப் போல மக்களின் ஒத்துழைப்பையும் நல்லவர்கள், பெரியவர் களின் உதவியையும் ஈட்டித் தருகிறது. இப்படிப்பட்ட தேசிய உணர்வை வேறு எவருமே கொடுக்க வல்லவர் அல்லர். அவர் பங்கு கொள்ளும் அடிக்கல் நாட்டுவிழா, போன்ற எல்லாச் சடங்குகளிலும் பலதரப்பட்ட மக்களை ஒன்று சேர்க்கிறது. அரசு என்பது எல்லா மக்களின் ஒத்துழைப்பின் அடிப்படையில் நடப்பதாகையால் அது ஒரு கூட்டுறவான அமைப்பு. சடங்கு களிலும் விழாக்களிலும் குடியரசுதலைவர் கலந்து கொள்வது அச் சம்பவங்களுக்கே ஒரு தனிப்பெருமையையும் முக்கியத்துவத் தையும் கொடுப்பதாக அமைகிறது. குடியரசு தலைவர் கலந்து கொள்ளும் கௌரவமான விழாக்கள் அவருடைய அரசு நிருவாக சம்பந்தமான கடமைகளைக் காட்டிலும் தரத்தில் குறைவானவை அல்ல.

குடியரசுதலைவர் இந்திய நாட்டின் சடங்குகள் நிறைந்த வைப வங்களில் கௌரவத்தின் ஊற்றாய்த் திகழ்கிறார். குடியரசுதலைவ ரால் பொதுமக்களும், காவல்துறை இராணுவத்தினர் போன்ற அரசு ஊழியர்களும், அவர்களுடைய சேவையைப் பாராட்டி கௌரவிக்கப்படும்பொழுது, அவர்கள் வாழ்க்கையிலே மறக்க

முடியாததாகவும் பெருமைப்படியாகவும் அமைகின்றன. அரசு விருதுகளும் கௌரவப் பட்டங்களும், உரிமை கொண்டாடும் வகுப்பினருக்கு அல்லாமல் தகுதி அடிப்படையில் எல்லா மக்களுக்கும் பாரபட்சமின்றி வழங்கப்படுகின்றன.

பாரத ரத்னு, பத்ம விபூஷண், பத்மபூஷண், பத்மஸ்ரீ போன்ற கௌரவப்பட்டங்கள் இலக்கிய, விஞ்ஞான மற்றும் கலைகளிலே பாடுபட்டு மேன்மை அடைந்தவர்களுக்குக் குடியரசு தலைவரால் வழங்கப்படுவன. இவ்வுயர்ந்த விருதுகள் அமைச்சர்களும் முக்கியமாகப் பிரதமரும், மாநில அரசுகளும் அனுப்பும் பெயர்களிலிருந்து தேர்ந்தெடுத்து ஒரு பட்டியல் தயார் செய்து குடியரசு தினம், சுதந்திரதினம் போன்ற முக்கிய நாள்களிலே குடியரசு தலைவரைக்கொண்டு வழங்கப்படுவன. பிரதமர் கொடுக்கும் பட்டியலைத் தவிரக் குடியரசுதலைவரும் அவர் யாரை இவ்விருதுகளுக்குத் தகுதி படைத்தவர் என்று நினைக்கின்றாரோ அவர்களுக்கும் கொடுக்கலாம்.

எப்படி இங்கிலாந்து நாட்டின் மன்னர் அந் நாட்டின் அரசியல் சட்டத்தின்படி சட்டசபைப் பிரிவுக்கும் செயற்குழுப் பிரிவுக்கும் 'ஓர் இணைக்கும் பாலமாக', 'சங்கிலித் தொடரின் வளையமாக' அமைந்துள்ளாரோ அதே போன்று இந்திய அரசியல் சட்டப்படி குடியரசு தலைவர் இரு பிரிவுகளையும் இணைக்கும் பாலமாக, சங்கிலியின் வளையமாக விளங்குகிறார். இந்திய அரசியல் சட்டத்தின் காவலராக இருந்து அரசு இயந்திரம் நல்லமுறையில் இயங்குவதற்கும் சிக்கல், சச்சரவுகள் இல்லாமல் நடப்பதற்கும் இரு பிரிவுகளுக்குமிடையில் பரஸ்பர நல்லெண்ணம், அமைதி, ஒரு பிரிவை இன்னொரு பிரிவு புரிந்துகொள்ளும் தன்மை, இவற்றை வளர்ப்பதற்கும் குடியரசு தலைவர் தம் பதவியின் பலத்தால் ஆவன செய்யலாம். சமயம் கிடைக்கும்பொழுது, அரசியல் தலைவர்களிடையே உள்ள வேற்றுமை உணர்ச்சி, கருத்து வேற்றுமை, பூசல்கள், இவற்றைத் தீர்க்க ஒரு நல்ல நடுவராகக் குடியரசு தலைவர் செயற்படலாம். அரசியல் தலைவர்கள் மோதலில் தலையிட்டுச் சுமுக நிலையை உருவாக்கப்பாடுபடுவது போன்ற நிகழ்ச்சிகள் சாதாரணமாக ஒரு நெருக்கடி நிலையில்தான் ஏற்படும்.

இரண்டு அரசு பிரிவுகளுக்கிடையில் ஏற்பட்ட கருத்து வேற்றுமையை மாற்றிச் சுமுக உறவுக்கு வழிசெய்த சம்பவங்கள் அரசியல் வரலாற்றில் இல்லாமல் இல்லை. இங்கிலாந்து நாட்டில் 1884-ல் வாக்குரிமையை விரிவு படுத்தி மறு வினியோகம் செய்வதில் இரண்டு சபைகளுக்கும் இடையே பலத்த கருத்து

வேற்றுமை இருந்த பொழுது இங்கிலாந்து அரசி விக்டோரியா தலையிட்டால் ஒருவாறு கருத்து வேற்றுமை அகற்றப்பட்டது. இதே போல 1914-ல், அயர்லாந்து நாடு அரசு நெருக்கடியிலும் சட்ட சபை மசோதா (Parliament Bill) விஷயத்திலும், பிரச்சினைகள் ஜார்ஜ்மன்னர் முயற்சியால் சுமுகமாக முடிந்தன.

குடியரசுதலைவர் வகிக்கும் மிக உயர்ந்த பதவியின் தன்மையாலும் அரசியல் கட்சிச்சார்பற்றவராக உள்ளதாலும் நாட்டின் வளர்ச்சி, நன்மை இவற்றில் அக்கறை கொண்டு இருப்பதன் காரணமாக, ஒரு நடு நிலையாளராக இருந்து, அரசு பிரிவுகளுக்கிடையே பூசல்கள் உருவானாலும் கட்சிகளின் தலைவர்களிடையே கடுமையான வேற்றுமை உணர்ச்சி நிலவிய பொழுதிலும், சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு நெருக்கடி கட்டங்களில் செயற்பட்டுத் தம் செல்வாக்கு, பதவியைக் கொண்டு மறுபடி சுமுக உறவு நிலை ஆவன செய்ய வேண்டும்.

மற்ற நாடுகளில் குடியரசுதலைவர் தம் நாட்டின் பெருமையைப் பிரதிடலிக்கிறார். வெளிநாடுகளுக்குக் குடியரசுதலைவரின் விஜயம், பரஸ்பர நல்லுறவை நாடுகளுக்கிடையே நிலை நாட்டவும் அமைதி காக்கவும், மரியாதையின் காரணமாகவும் அமையலாம். உதாரணமாக டாக்டர் பிரசாத் குடியரசுதலைவராக இருந்த பொழுது, நேப்பாளம், ஜப்பான், பர்மா, மலாயா, இந்தோனேஷியா, இந்தோசைனு, சிலோன், ரஷ்யா முதலிய நாடுகளுக்கு விஜயம் செய்தார். டாக்டர் இராதாகிருஷ்ணன் அமெரிக்கா, பிரிட்டன், நேபாளம் முதலிய நாடுகளுக்கு விஜயம் செய்து நல்லுறவைப் பலப்படுத்தினார். குடியரசு தலைவர் இராதாகிருஷ்ணன் சீன நாட்டின் ஆக்கிரமிப்பு விஷயமாக அமெரிக்கக் குடியரசு தலைவர் திரு. ஜான் கென்னடியுடன் மனம் திறந்து பேச்சுகள் நடத்தினார். அதேபோல டாக்டர் இராதாகிருஷ்ணனின் இங்கிலாந்து விஜயமும் இரு நாடுகளுக்கிடையே நிலவிய உறவை இன்னும் பலப்படுத்துவதாக அமைந்தது.

வெளி நாடுகளில் தூதர்களின் நியமனப்பத்திரங்களைக் குடியரசுதலைவர்தாம் பெறுகிறார். அவர்கள் இந் நாட்டிலே பதவிப் பொறுப்பை ஏற்குமுன் நியமனப் பத்திரங்களைக் குடியரசுதலைவருக்கு அளிக்கவேண்டும். குடியரசுதலைவர் அவற்றை ஏற்றுக் கொண்ட பிறகுதான் பதவியில் அமர முடியும். அந் நாடுகளின் வாழ்த்துகளைத் தூதர்களிடமிருந்து பெற்றுத் திரும்பத் தமது வாழ்த்துகளையும் தம் அரசு வாழ்த்துகளையும் இந் நாடுகளுக்கும் தூதர்கள் மூலமாக அனுப்புகிறார். அன்னிய நாட்டுத் தூதர்களை

தம் நாட்டுக்குடியரசுதினவிழா சுதந்திரதினவிழாவுக்கு அழைத்து விருந்து அளிக்கும் அரசியல் மரபு வளர்ந்து வருகிறது. இந்த விழாக்களிலும் விருந்துகளிலும் தூதராலயங்களின் பிரதமதூதர் தம் நாட்டுக்கும்இந்தியநாட்டுக்கும் உள்ள நல்லுறவை வளர்க்கும் வகையில் விருந்துகளில், இந்திய நாடு மற்றநாடுகளிடையே நல்லுறவையும் நேசமனப்பான்மையையும் வளர்க்கப் பாடுபடுவதைச் சுட்டிக்காட்டி வாழ்த்துக் கூறிக் கலந்து கொள்வார்கள். குடியரசு தலைவர் தகுந்த பதில் சொல்வார். இதைத்தவிர வெளிநாட்டுப் பிரதமர், குடியரசுதலைவர்கள் நம் நாட்டிற்கு வருகை தரும் பொழுதும் வெளிநாட்டுத் தூதர்கள் அழைக்கப்படுகிறார்கள். வருகை தரும் தூதர்கள் நாட்டிற்குச் சிநேக மனப்பான்மையுடன் உள்ள நாடுகளின் தூதர்களாகத்தாம் இருப்பார்கள். இதைத் தவிர, ஏதாவதொரு விஷயம் குறித்து குடியரசுதலைவரை தூதர்கள் சந்திக்க விரும்பினால் வெளிநாட்டு உறவு அமைச்சகம் மூலமாகத்தான் தொடர்பு கொள்ள வேண்டும். உடன்படிக்கை சம்பந்தமாகவோ அன்னிய நாட்டிற்கும் இந்திய நாட்டிற்கும் உள்ள கருத்து வேற்றுமை குறித்தோ குடியரசு தலைவருடன் தூதர்கள் விவாதிக்க முடியாது. இவ்விஷயங்களை வெளி உறவு இலாக்காவுடனே அமைச்சருடனேதான் பேசவேண்டும். அன்னிய நாட்டுத்தூதர்களின் பதவிக்காலம் முடியும்பொழுது வெளியுறவு அமைச்சகம் மூலமாகக் குடியரசு தலைவரிடமிருந்து பிரிவு உபசாரம் பெற்றுக் கொள்ளத் தூதர்களுக்கு அழைப்பு விடப்படுகின்றன. இதன்படி குடியரசு தலைவர் தூதரையும் அவர் மனைவியையும் தேநீர் விருந்துக்கு அழைக்கிறார். குடியரசு தலைவர் தேநீர் விருந்துக்குப் பிறகு வெள்ளிச்சட்டத்தில் தமது புகைப்படத்தை அவர்களுக்கு அன்பளிப்பாகத் தருவார். அவர்கள் இந்தச் சன்மானத்தை விலையுயர்ந்த பரிசாக ஏற்று நன்றியறிதலுடனும் மரியாதையுடனும் பெற்றுக் கொள்வார்கள்.

குடியரசுதலைவர் தமது புகைப்படத்தை வெகுமதியாகக் கொடுப்பது ஒரு சிறப்பான அம்சம் பொருந்தியது. நாட்டைப் பொறுத்தும் அதன் தூதரின் தகுதியை முக்கியத்துவத்தைப் பொறுத்தும் புகைப்படமும் அதன் சட்டமும் இருக்கும். இது விஷயமாக நன்றாக வரையறுக்கப்பட்ட விதிமுறைகள் உள்ளன.

மற்றநாட்டின் தலைவர்கள் நம்நாட்டிற்கு வருகை தரும் பொழுதும், பிரபல மேதைகள், பிரமுகர்கள் வரும்பொழுதும் குடியரசுதலைவர் வரவேற்று உபசரிப்பார். இப்படியாக இந்தியாவுக்கும் இதர நாடுகளுக்குமிடையே நல்லெண்ணம், நட்பு மனப்பான்மை நிலவ ஆவன செய்வார் குடியரசுதலைவர்.

# 15. குடியரசு தலைவரின் செயலகம்
## (Secretariat of the President)

அரசியல் சட்டத்தின் கீழ்ப் பல்வேறு காரியங்களையும் கடமைகளையும் இந்தியக் குடியரசு தலைவர் செய்கிறார். அவர் தம் அலுவலக வேலைகளையும் அரசியல் கடமைகளையும் எவ்வாறு கவனிக்கின்றார் என்பது ஒரு சிலருக்குத்தான் தெரிந்திருக்கிறது. ஒரு புத்தக வெளியீட்டு விழா அல்லது ஏதாவது ஒரு தொழிலகமோ அல்லது சங்கமோ விழாக் கொண்டாடும் பொழுது அதற்கு இந்தியக் குடியரசு தலைவரிடமிருந்து வாழ்த்துச் செய்தி வருகின்றது. பொது வாழ்வில் ஈடுபட்டவர்கள் அல்லது சமூக சேவையை உயிர் மூச்சாகக் கொண்டவர் பொது நலத்தொண்டர்களோ, தலைவர்களோ மரணம் அடைந்து விட்டால் அவரவர் குடும்பத்திற்கு இரங்கற் செய்தி குடியரசு தலைவரிடமிருந்து வருகிறது. இப்படிப்பலதரப்பட்ட அலுவல்களையெல்லாம் குறிப்பிட்ட காலத்தில் உடனுக்குடன் எவ்வாறு குடியரசுதலைவர் செய்கின்றார் என்பது சாதாரண மக்களுக்கு வியப்பாகக்கூட இருக்கும். இப்படிப் பட்ட காரியங்களை எதன் வாயிலாக நிறைவேற்றுகிறார் என்பதைப் புரிந்து கொண்டோமானால் அவருடைய உண்மையான நிலை நமக்குத் தெரியும். அவருடைய அலுவல்களனைத்தையும் அவர் கீழ்ப்பணியாற்றும் இரண்டுஅலுவலகங்கள்மூலமாக நிறைவேற்றிக் கொள்கிறார். ஒன்று இந்தியக் குடியரசுதலைவரின் சொந்த அலுவல்களைக் கவனித்துக் கொள்ளும் அலுவலகம் or செயலகம் (Personal secretariat of the President). இரண்டாவது இந்திய அரசின் அலுவலகம் (The regular machinery of the Govt. of India.)

இந்தியக் குடியரசுதலைவரின் தனிப்பட்ட செயலகம் தன்னகத்தே இரண்டு சுயமாக இயங்கும் அலுவலகங்களைக் (two Independent offices) கொண்டிருக்கிறது. ஒன்று இந்தியக் குடியரசு தலைவரின் செயலாளர் அலுவலகம்; மற்றது இந்தியக்

குடியரசு தலைவரின் இராணுவச் செயலாளரின் அலுவலகம். இவ்விரண்டு அதிகாரிகளின் கட்டுப்பாட்டிற்குந்தான் தனித் தனியே அவர்களின் அலுவலகங்கள் செயற்படுகின்றன. இவ் விரண்டு அலுவலகங்களும் ஒரு தனிப்பட்ட வகையைச் (Seperate Category) சார்ந்தவை. இவ்விரண்டு அலுவலகங்களும் அமைச் சகத்தின் கீழேயோ அவற்றுடன் இணைக்கப்பட்டோ செயற்படு வதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியக் குடியரசு தலைவருடைய செயலாளரின் அலுவலகத் தின் வேலைகளையும் கடமைகளையும் பற்றி இப்போது பார்ப்போம். இந்தியக் குடியரசுதலைவரின், செயலாளருடைய அலுவலகத்தின் கடமைகளும் பொறுப்புகளும் மிகப்பரவலாக உள்ளன. குடியரசு தலைவருக்கும் அமைச்சக இலாக்காக்களுக்கும் இடையே ஓர் 'இணைப்புப் பாலமாக' இந்த அலுவலகம் செயற்படுகின்றது. அதிகார பூர்வமான எல்லாக் கோப்பு ஏடுகளையும் (Files) குடியரசுதலைவரின் பரிசீலனைக்கும் உத்தரவுகளுக்கும் வைப்பதும், குடியரசுதலைவரின் உத்தரவுகளைச் சம்பந்தப்பட்ட அமைச்ச கத்திற்கோ இலாக்காவிற்கோ அனுப்பி வைப்பது போன்றவையும் இதன் முக்கியமான கடமைகளாகும். அரசின் கொள்கை சம்பந்தப் பட்ட எல்லாச் சொந்தக் கருத்துகளைக் கொண்ட அதிகாரபூர்வ மான கடிதங்களும், குடியரசு தலைவருக்கும் மாநில ஆளுநருக்கு மிடையே கடிதப் போக்குவரத்துகளும் குடியரசுதலைவரின் அலு வலகத்தில் (செயலகத்தில்) கவனிக்கப்படுகின்றன. இன்னும் தனியார்களிடமிருந்தும் வெளிநாட்டுத் தூதரகங்களிலிருந்தும் வரும் கடிதங்களைக் கவனிப்பது, குடியரசுதலைவரைப் பேட்டி காண வருபவர்களுக்கு ஏற்பாடுகளைச் செய்வது, புதிதாகப் பதவி யேற்கும் தூதர்களுக்கும் மற்றவர்களுக்கும் குடியரசுதலைவரைச் சந்திக்க நேரம் குறிப்பிடுவது, செய்திகள், விவரங்கள் கோரிவரும் கடிதங்களைக் கவனிப்பது, புத்தகங்களுக்கு முன்னுரை கோரிவரும் கடிதங்கள், குடியரசுதலைவரிடம் சமர்ப்பிக்கப்படும் மனுக்கள், விண்ணப்பங்கள் போன்றவற்றையெல்லாம் கவனிப்பது இவ்வலு வலகத்தின் பொறுப்புகளாகும். அரை அரசாங்க நிறுவனங் களான (Semi-Govt-Organisation) நல்வாழ்வுக்கும் நிவாரணத் திற்குமான இணைந்த குழு, (United Council for Relief of Welfare), இந்திய விஞ்ஞான நிறுவனம் (Indian Institute of Science) போன்ற வற்றிலிருந்தும் பொது நிறுவங்களான இந்தியச் செஞ்சிலுவைச் சங்கம் (Indian Red Cross Society), இந்தியச் சாரணர் இயக்கம் போன்றவற்றிலிருந்தும் இந்தியக் குடியரசுதலைவருக்குள்ள தொடர்பினால் ஏற்படும் கடிதப் போக்கு வரத்துகளையும் மனுக் களையும் இந்தக் குடியரசுதலைவருடைய செயலாளரின் அலுவலகம் கவனித்துக் கொள்ளும்.

குடியரசுதலைவரின் (சிவில்) செயலாளரின் அலுவலக அமைப்பு இவ்வலுவலகம் குடியரசுதலைவரின் கீழ் அவருடைய செயலாளரின் பொறுப்பில் இருக்கும். இந்திய அரசாங்கச் செயலாளரின் அந்தஸ்துடன், குடியரசுதலைவரின் செயலாளர் அரசின் மூத்த அதிகாரியாகச் செயற்படுவார். இந்த அலுவலகம் ஆறு பிரிவுகளைக் கொண்டது. இந்த ஆறு பிரிவுகளின் பொறுப்புகளும் கடமைகளும் கீழே விவரிக்கப்பட்டுள்ளன.

(1) மத்தியப் பதிவகம் (Central Registry)

இந்தப்பிரிவு, இந்தியக் குடியரசுதலைவருக்கு வரும் எல்லாக் கடிதங்களையும் பெறுவது, தட்டச்சுச்செய்வது (typing works), நூலகப்பணி புரிவது (Library work), தலைநகரின் அதிகார பூர்வமான விவரங்கள் அடங்கிய புத்தகம் தயார் செய்து வெளியிடுவது போன்ற இம்மாதிரியான அலுவல்களைக் கவனிக்கும்.

(2) பொதுப்பிரிவு (General Section)

பொதுமக்கள் தொடர்பு, சமூகநலன் போன்றவற்றைத் தவிர மற்ற ஆங்கிலத்திலுள்ள எல்லாக் கடிதங்கள் மேலும் நடவடிக்கை மேற்கொள்வது இதனுடைய முக்கியப் பொறுப்பாகும்.

(3) இந்தி மொழிப் பிரிவு (Hindi Section)

பொதுமக்கள் தொடர்பு, சமூகநலன் போன்றவற்றைத் தவிர மற்ற இந்தி மொழியிலுள்ள எல்லாக் கடிதங்கள் மேலும் நடவடிக்கை மேற்கொள்ளும்.

(4) பத்திரிகைத் தொடர்பு பிரிவு (Press attaches Section)

இந்தப்பிரிவு, பொதுமக்கள் தொடர்பு, விளம்பரம், குடியரசு தலைவரின் நடவடிக்கைகள், சொற்பொழிவுகள் குறித்த புகைப்பட விளம்பரம் உட்படப் பல அலுவல்களைக் கவனிக்கின்றது.

(5) பொது நலப் பிரிவு (Welfare Section)

நிவாரணத்திற்கும் பொதுநலத்திற்குமான இணைந்த குழு, (United Council for Relief & Welfare) செஞ்சிலுவை தூய. சான், சாரணர் போன்ற சங்கங்களில் (Red Cross, St. John & Boys Scouts Associations) குடியரசு தலைவருக்குள்ள தொடர்பு காரணமாக எழும் எல்லா வேலைகள் சம்பந்தப்பட்ட காரியங்களைக் கவனித்துக் கொள்வது இப்பிரிவின் தலையாய கடமையாகும்.

(6) அலுவலகப் பிரிவு (Establishment section)

இது அலுவலக நிருவாகத்தைக் கவனித்துக் கொள்ளும் தனித்து இயங்கும் ஒரு பிரிவு. இந்தியக் குடியரசு தலைவருடைய

செயலாளரின் அலுவலகத்தின் எல்லா அலுவலகங்களையும் கவனித்துக் கொள்ளும். இவ்வலுவலகத்துடன் மற்ற நிறுவனங்கள் இணைக்கப்பட்டோ அதற்குக் கீழ் இயங்கும்படியாகவோ செய்யப் படவில்லை. ஆகையால், இணைந்து செயற்படுதற்கான ஏற்பாடுகள் தேவையில்லை.

இதுவரை இந்தியக் குடியரசுதலைவருடைய செயலாளரின் அலுவலகம் எத்தனைப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு எவ்வகையான பொறுப்புகளை வகித்துச் செயற்பட்டு வருகின்றது என்று பார்த்தோம். இப்பொழுது இந்தியக் குடியரசுதலைவரின் இராணு வச்செயலாளரின் அலுவலகத்தின் கடமைகளையும் பொறுப்பு களையும் குறித்துப் பார்ப்போம். மிகப்பெரும் அளவிற்குப்பல்வேறு நிருவாகக் கடமைகளை இராணுவச் செயலாளரின் அலுவலகம் கவனிக்கின்றது. அவை :

(1) இராஷ்டரபதி பவனிலும் (Rashtrapati Bhawan) இந்தியப் பிரதமரின் மாளிகையிலும் நடக்கும் எல்லா விழாக்களுக்கும் அவை சரிவர நடக்கவேண்டிய ஏற்பாடுகள் செய்வது (தலை நகரிலுள்ள குடியரசு தலைவரின் அதிகாரபூர்வமான மாளிகை இராஷ்டரபதிபவன் என்று அழைக்கப்படுகிறது)

(2) குடியரசுதலைவரின் சொந்தப் பணியாளர்களை நியமனம் செய்வது (Personal staffs). கௌரவ சொந்தப் பணியாளர்களை நியமிப்பது (Honorary Personal staff)

(3) அரசாங்க விருந்தினர் சம்பந்தப்பட்ட எல்லா அலுவல் களையும் கவனித்துக் கொள்வது

(4) குடியரசுதலைவரின் அன்றாடம் நிர்ணயிக்கப்பட்ட சந்திப் புகளை ஒழுங்குபடுத்துவது, சந்திப்புக்கான நாள், நேரம் முதலிய விவரங்கள் அடங்கிய அட்டைகளைத் தயார் செய்து சம்பந்தப் பட்டவர்களுக்கு அனுப்பி வைப்பது.

5. குடியரசு தலைவரின் சுற்றுலாவுக்கான திட்டங்கள் தயார் செய்து சகல ஏற்பாடுகளையும் கவனித்துக் கொள்வது

6. பதவிப்பிரமாணம், அறிமுகச் சான்றிதழ்கள் பரிசளிப் பது, அரசாங்க விருந்துகள், வரவேற்புகள் போன்ற சடங்கு களோடு கூடிய எல்லாக் காரியங்களையும் கவனித்துக் கொள்வது, குடியரசு தலைவரின் மாளிகையில் சடங்குகளோடு கூடிய சிறப்புப் பரிசளிப்பு அல்லது தீரச் செயல்களுக்கான பரிசளிப்புப் போன்றவற்றிற்கான ஏற்பாடுகள் செய்வது.

7. இந்தியக் குடியரசு தலைவரின் மெய்காப்பாளர்களின் (Body Gaurds) பொது நிருவாகம், குடியரசு தலைவரின் பாதுகாப்பிற்காக அவரது மாளிகையில் இயங்கும் இராணுவப் பிரிவு (Regimental Units), காவல் துறையினர் (Police), அஞ்சல் நிலையம் (Post-office) போன்றவற்றையும் அங்குள்ள நடுநிலைப்பள்ளி இயங்கும் முறையையும் மேற் பார்வையிடுவது.

(8) புதுடில்லி, சிம்லா, மஹோரா முதலிய இடங்களிலுள்ள குடியரசு தலைவரின் தோட்டங்களை நேரிடையான கட்டுப்பாட்டுக்குள் வைத்துப் பராமரிப்பது, தோட்டத்தோடு சேர்ந்த நிலங்களைச் சாகுபடிக்குக் கொடுத்து வரும் வருவாயை அரசு வருவாய்க் கணக்கில் சேர்ப்பது, குடியரசு தலைவர் மாளிகைகளைச் சேர்ந்த மருந்தகம் (Dispensary), மோட்டார் வாகனம் பழுதுபார்க்கும் தொழிலகம் (Garage Workshops), குதிரை லாயங்கள் (Stables), குடியரசு தலைவரின் மாளிகையைச் சேர்ந்த அங்காடி, தொலைபேசிப் பிரிவு ஆகியவற்றில் அலுவல்களை மேற்பார்வையிடல்.

(9) குடியரசுதலைவர் நியமனம் செய்யும் அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்குவது, அவரின் ஆதரவை சம்பந்தப்பட்ட நபர்களுக்கு இயக்கங்களுக்குத் தெரிவிப்பது, பரிசுகள் வழங்குவது, அவருடைய சன்மானம், புகைப்படம் குடியரசுதலைவர் குறிப்பிடும் நபர்களுக்கு வழங்குவது சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பது.

(10) நாடு முழுவதிலுமுள்ள தனியார்களிடமிருந்தும், நிறுவனங்களிடமிருந்தும் வரும் மனுக்கள் நிதி உதவி கோரிவரும் விண்ணப்பங்கள் போன்றவற்றின் மேல் நடவடிக்கை மேற்கொள்வது,

(11) குடியரசுதலைவரின் மாளிகை நிருவாகம், குடியரசுதலைவரின் மாளிகையைச் சேர்ந்த இடங்களில் அவர் அலுவலர்களுக்குக் குடியிருப்பு வசதிகள் செய்து கொடுப்பது, இந்திய அரசு, பஞ்சாப் மாநில அரசு, இமாசலபிரதேச அரசு அதிகாரிகளுக்கு அலுவலகங்கள் நடக்கக் கட்டிடங்களையும், பணிபுரிபவர்கள் குடியிருக்கக் குடியிருப்புகள் வழங்குவது போன்றவற்றையும் கவனிப்பது.

(12) தரை மார்க்கமாகவும், நீர் மார்க்கமாகவும் ஆகாய மார்க்கமாகவும் குடியரசுதலைவர் சுற்றுலாவுக்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்வது.

(18) மாளிகையிலுள்ள சமையற்கூடம், மாளிகை வேலைகளைப் பராமரிக்கும்கூடம் (Catering and Household establishment) ஆகியவை சரிவர நடக்கின்றனவா என்பதைக் கவனிப்பது.

(14) குடியரசுதலைவரின் சம்பளம், படிகள், சம்பந்தமான எல்லாக் காரியங்கள், நன்கொடைப் பொருள்கள், நிதிகள் ஆகியவற்றின் நிருவாகத்தைக் கவனிப்பது.

(15) இந்தியப் பிரதமர் மாளிகையிலுள்ள சமையற்கூடம், வீட்டுவேலை பராமரிப்புக் கூடம் சரிவர இயங்க ஏற்பாடுகளைச் செய்வது, பிரதம அமைச்சர், இந்தியத் துணைக் குடியரசுதலைவர் (Vice President) இந்திய அரசின் மற்ற அமைச்சர்கள் ஆகியவர்கள் வழங்கும் விருந்துகள், நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட ஏற்பாடுகளைக் கவனித்துக் கொள்வது.

(16) மாளிகையில் நடைபெறும் எல்லாக் கலைநிகழ்ச்சிகள், சடங்குகளோடுகூடிய விழாக்கள் போன்றவற்றிற்கும் அழைப்புகள் வினியோகிப்பது, வரவேற்புகள், பரிசளிப்புகள் விருந்தினர்கள் நிகழ்ச்சி முடிந்து விடைபெறுவது முதலிய எல்லாவற்றிலும் சரியானபடி சம்பிரதாயங்கள் கடைப்பிடிக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை உறுதி செய்வது.

(17) குடியரசுதலைவரின் மாளிகைக்கு வருபவர்களின் விவரங்கள் கொண்ட பார்வையாளர் பதிவுப் புத்தகம் வைப்பது

(18) குடியரசுதலைவரின் மாளிகை, குடியரசுதலைவருக்கான பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்வது, இராணுவம் காவல்துறைப் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்வது.

(19) குடியரசுதலைவர் மாளிகை அலுவலர்களுக்கு அனுமதிச்சீட்டு வழங்குவது, குடியரசுதலைவர் மாளிகையில் அமைந்திருக்கும் மற்ற அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்கு அடையாள அனுமதிச்சீட்டு வழங்குவது அவற்றைப் புதுப்பிப்பது போன்றவற்றைச் செய்வது.

(20) இந்தியக் குடியரசுதலைவர் மாளிகையில் நடைபெறும் பல்வேறு நிகழ்ச்சிகளைக் குறித்தும், அந் நிகழ்ச்சியின்போது யார் என்ன வேலை செய்யவேண்டும் என்பதுபற்றியும் திட்டமிடுவது, விருந்தினர்கள் வருகை குறித்தும் அவர்களின் புறப்பாடு குறித்தும் குடியரசுதலைவரின் வெளிப்புற நடவடிக்கைகள் குறித்தும் பணியாளர்களுக்கு விவரங்கள் (Instructions) கொடுப்பது.

(21) குடியரசுதலைவர் மாளிகையில் நடைபெறும் மாநில ஆளுநர்களின் மாநாடு, அமைச்சரகக் கூட்டங்கள் (Cabinet Meetings), நிவாரணம் மற்றும் நலவாழ்வுக்கான இணைந்த குழு

(United Council for Relief and Welfare), செஞ்சிலுவைச் சங்கம் (Red Cross Society), தூய ஜான் ஆம்புலன்சு சங்கம் (St. John Ambulance Association), இந்துஸ்தானி பிரசார சபா (Hindustani Prachar Sabha) போன்றவற்றின் கூட்டங்கள் நல்லபடியாக நடக்கத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து கொடுப்பது.

(22) குடியரசுதலைவர் மாளிகையில் உள்ள திரை அரங்கு, (Cinema Theatre) வேட்டை சம்பந்தமான ஆயுதங்களின் பராமரிப்பை மேற்பார்வையிடுவது, குடியரசு தலைவரின் நூலகத்தைப் பராமரிப்பது.

(23) பல்வேறு நிகழ்ச்சிகளிலும், சம்பிரதாயமான சடங்கு களிலும் குடியரசுதலைவரின் பிரதிநிதியாக இராணுவச் செயலாளர் கலந்து கொள்வது. சில குறிப்பிட்ட நிகழ்ச்சிகளின் போது இராணுவச் செயலாளர் தலைநகரில் இல்லாமல் இருந்தாலோ அவரால் அப்படி உத்தரவு இடப்பட்டாலோ உதவி இராணுவச் செயலாளர் குடியரசுதலைவரின் பிரதிநிதியாக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வது.

(24) குடியரசு தலைவரின் கொடியை வாங்குவது, குறிப் பிட்ட கால இடைவெளிகளில் அவற்றை மாற்றி அமைப்பது (Periodical Replacement of Presidents Flag), மாளிகைக் கொடியைச் சரியான தருணத்தில் ஏற்றுவது, நாடு துக்கம் கொண்டாடும் பொழுது கொடியைத் தாழ்த்திப் பறக்கவிட ஏற்பாடு செய்வது, சரியாண தருணங்களில் பறக்கவிட வெளி நாட்டுக் கொடிகளை வாங்கிப் பத்திரப் படுத்தி வைக்கத் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்வது.

(25) குடியரசுதலைவர் மாளிகையையும், மொகலாயத் தோட்டங்களையும் (Moghul Gardens) பார்வையாளர்களுக்குச் சுற்றிக் காண்பிக்க ஏற்பாடுகள் செய்வது, குடியரசுதலைவர் விரும்பினால் பொதுமக்களுக்கும் மாளிகை, தோட்டங்களைச் சுற்றிக் காண்பிக்க ஏற்பாடுகள் செய்வது.

(26) புது டில்லியிலுள்ள குடியரசுதலைவர் மாளிகையிலும் சிம்லா, மஹாராவிலுள்ள குடியரசுதலைவரின் மாளிகையிலும் தீயணைப்புக்கருவிகளுக்கு ஏற்பாடு செய்வது, அவை நல்ல நிலையில் இருக்கின்றனவா என்பதைப் பரிசோதிப்பது தீயணைப்புக்கான ஏற்பாடுகளுக்குப் பயிற்சி அளிப்பது.

(27) இராணுவ இசைக் குழுவிற்கு (Army Brass Band) குடியிருப்பு வசதிகள் செய்து கொடுத்துக் குடியரசு தலைவரின் மாளிகையில் சடங்குகளோடு கூடிய சம்பிரதாயமான நிகழ்ச்சிகள் நடைபெறும் பொழுது இசைக்க ஏற்பாடுகள் செய்வது.

(28) குடியரசுதலைவர் மாளிகையிலுள்ள எல்லா அலுவலகங்களுக்கும் விருந்தினர்கள் அறைக்கும் தொலைபேசி இணைப்புகளுக்கு ஏற்பாடுகளைச் செய்வது.

(29) தலைநகரிலுள்ள குடியரசுதலைவர் மாளிகையில் இருக்கும் மாநில அறைகளில் (State Rooms) அந்தந்த மாநில அரசின் சொந்தமான கைத்தொழிற் பொருள்களைக் கொண்டு அலங்காரம் செய்வதை மேற்பார்வையிடுவது.

(30) மாளிகைப் பணியாளர்களுக்காகவும் அவர்களுடைய குடும்பத்தினர் குழந்தைகளுக்காகவும் விளையாட்டுப் போட்டிகள் நடத்துவது, கலைநிகழ்ச்சிகள், பொழுது போக்கிற்கான நிகழ்ச்சிகளை நடத்த ஏற்பாடுகள் செய்வது, எல்லாவகைப் பணியாளர்களும் சமூக வசதிகள் பெறுவதற்கான ஏற்பாடுகள் செய்து கொடுப்பது.

(31) குடியரசுதலைவர் மாளிகைகளைச் சேர்ந்த அங்காடிகளையும் (Estate Market Shops) சிற்றுண்டிச்சாலைகளையும் (Cafeterias) நிருவகிப்பதும் மேற்பார்வையிடுவது.

(32) தலைநகரிலுள்ள குடியரசுதலைவரின் மாளிகையையும் சிம்லாவில் உள்ள குடியரசுதலைவரின் மாளிகையையும் பார்வையிடப் பார்வையாளர்களுக்கு அனுமதி வழங்குவது.

(33) தலைநகரிலுள்ள குடியரசுதலைவர் மாளிகையில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சம்பந்தமாக வரும் பத்திரிகைக்காரர்களுக்கும் புகைப்படக்காரர்களுக்கும் அனுமதிச் சீட்டு வழங்குவது போன்ற பலதரப்பட்ட வேலைகளையும், குடியரசுதலைவரின் இராணுவச் செயலாளரின் அலுவலகம் கவனித்துக் கொள்கிறது. இத்தனை அலுவல்களையும் குடியரசுதலைவரின் இராணுவச் செயலாளரின் அலுவலகம் எத்தனைப் பிரிவுகளாகப் பிரிந்து கவனிக்கின்றது என்பதை இப்பொழுது பார்ப்போம்.

### இராணுவச் செயலாளரின் அலுவலக அமைப்பின் விவரங்கள்

இராணுவச் செயலாளரின் அலுவலகம் குடியரசுதலைவரின் நேரடிக் கட்டுப்பாட்டுக்குள் இருக்கிறது. இவ் வலுவலகத்தின்

நிருவாகப் பொறுப்பனைத்தும் இராணுவச் செயலாளரையே சாரும். இராணுவச் செயலாளரின் அலுவலகம் ஏழு பிரிவு களாகப் பிரிந்து தங்கள் கடமைகளை ஆற்றுகின்றன.

(1) பொதுப்பிரிவு : (General Section): குடியரசுதலைவரின் சொந்த அலுவலர்கள் நியமனம், கௌரவ அலுவர்கள் நியமனம், அலுவலர்களுக்கு அவர்களின் பொறுப்புகள், கடமைகள், கட்டுப் பாடுகள் சம்பந்தமான விவரங்கள் தருவது, குடியரசுதலைவரின் வெளிப்புற அலுவல்களை ஒழுங்குபடுத்துவது, மெய்காப்பாளர்கள் நியமன உத்தரவுகள் போடுவது, சன்மானங்கள் பரிசுகள், விருதுகள் வழங்குவது, மாளிகைப் பாதுகாப்பு ஏற்பாடுகளைக் கவனித்துக் கொள்ளது. சில்லறை மனுக்களைப் பரிசீலித்து முடிவு செய்வது, குடியரசு தலைவரின் மாளிகையைச் சேர்ந்த சொத்து களைப் பராமரிப்பது, குடியரசுதலைவர் மாளிகையில் பணிபுரிபவர் களுக்குக் குடியிருப்பு வசதி செய்து கொடுப்பது, வாழ்த்துச் செய்திகள் அனுப்புவது, அழைப்புகள் விடுவது, தொலைபேசி விவரங்கள் கொண்ட அட்டைகள் அச்சிடுவது, இராஷ்டரபதி பவனைச் சுற்றிப் பார்க்க அனுமதி வழங்குவது, மாளிகையில் பணி புரிபவர்களிடையேசீருடை அணியும் விதிகளை உருவாக்கி அமல் படுத்துவது. இரங்கல், அரசு துக்கத்துக்கான ஏற்பாடுகள் செய்வது, பத்திரிகைக்காரர்களுக்கு அனுமதிச்சீட்டு வழங்குவது. குடியரசு தலைவருக்கான முகவரித்தாள் தயார் செய்வது, மாளிகையில் உற்பத்தி செய்யப்படும் காய் கனிகளை விற்பனைக்கு ஏற்பாடு செய்வது போன்ற பல அலுவல்களை இப் பிரிவு கவனிக் கிறது. மேலும் தொலை பேசிகள் வைப்பது, மாளிகையில் கடைகளுக்கான ஏற்பாடுகள் செய்வது போன்றவைகளும் கவனிக் கப்படுகின்றன.

(2) கணக்கு, அலுவலகப் பிரிவு (Accounts of Establishment Section): இந்தப் பிரிவில் குடியரசுதலைவரின் சம்பளம், படி உரிமைகள் அல்லது சலுகைகள், ஒப்பந்தப்படி நிருவாகம், சுற்றுலா நிதி (S.C. & M. grant), அரசு உபசரிப்புக்குழு நிதி, மருந்தகம். எல்லாச் சிப்பந்திகளுக்கும் சம்பளப்பட்டுவாடா முதலியன கவனிக்கப்படுகின்றன. மாளிகைப் பணியாளர்களின் பிரயாணத் திற்கு முன் பணம் ஏற்பாடு செய்வது, குடியரசுதலைவர் மாளிகை யைச் சேர்ந்த சிப்பந்திகள் நிருவாகம் மற்றும் இராணுவச் செய லாளரின் அலுவலகம் இதர அலுவலகங்களின் நிருவாகம் உட்பட வேலை யாட்களுக்கு நன்கொடைக் கணக்கு வைத்தல், வேலைக்கு நியமனம் செய்வது, வேலை நீக்கம் செய்வது, பதவி உயர்வு, வரவு

செலவு கணக்கு தயாரிப்பு, ஓய்வு பெற்றவர்களுக்கு ஓய்வு கால ஊதியம் (Pension), ஓய்வுத் தொகை வழங்குவது, தோட்டப் பயிர் மூலம் வரும் வருமானத்தைக் கணக்கு வைத்தல் குடியரசுதலைவரின் சொந்தக் கணக்குகள் வைப்பது, ஸ்தலஸ்தாபன நிதி பராமரிப்பு, ஒப்பந்தக்காரர்களின் (Contractors) ஈட்டுத் தொகை கணக்கு தோட்டம், மோட்டார் வாகனப் பிரிவு, மற்றப் பிரிவுகளின் கணக்குகளை ஆய்வு செய்தல், பொதுக்கணக்குப் பரிசீலனைக் குழுவுக்கு உதவுவது, நிலையான நிதிக்குழு கூட்டங்களுக்கு உதவுவது, புகைவண்டிப் பயணத்திற்கான அனுமதிச்சீட்டுகள் (Warrant) அளிப்பது, பாராளுமன்றக்கேள்விக்குப்பதில் தயார் செய்வது, புது மோட்டார்வாகனங்கள் வாங்குவது போன்ற அலுவல்கள் கவனிக்கப்படுகின்றன.

(3) அழைப்பு விடும் பிரிவு (Invitation Section): குடியரசுதலைவர் மாளிகையில் நடக்கும் எல்லா வைபவங்களுக்கும் அழைப்பிதழ் தயார் செய்வது, அனுப்புவது, குடியரசுதலைவரின் தினசரி ஏற்பாடுகள், சுற்றறிக்கைகள், விருந்துகளுக்கு ஏற்பாடுகள், விருந்தினர்களுக்குச் சம்பிரதாயங்களைப் பற்றிய தக்க அறிவுரைகள் — குடியரசுதலைவர் மாளிகையில் தங்கும் விருந்தினர்களுக்கு வேண்டிய தகவல்கள் கொடுப்பது, யார் யாரை எப்படி வரவேற்பது என்பதற்கான விவரங்கள் வைப்பது (Warrant of precedences), மாளிகைக்கு வருகை தருபவர்கள் பட்டியல் தயார் செய்து வைப்பது, எல்லாத் துறையின் முக்கிய அதிகாரிகளின் விவரங்கள் அடங்கிய குறிப்புகள் வைப்பது போன்றவை. பொது ஸ்தாபனங்கள், குழுக்கள் பற்றிய விவரங்கங்கள் போன்றவற்றைக் கவனிப்பது இப்பிரிவின் வேலைகளாகும்.

(4) கம்ட்ரோலர் பிரிவு (Comptroller section): 4ஆம் பிரிவு (Class IV servants) அலுவலர்களின் கட்டுப்பாடு, உடை, விருந்திற்கு என்னென்ன தயார் செய்வது போன்ற விவரங்கள் முடிவு செய்வது, விருந்துகளில் வரவேற்பு ஏற்பாடுகளை மேற்பார்வையிடுதல், தினசரி உபயோகத்திற்கான மளிகை, ரொட்டி (Bread) முதலிய சாமான்கள் வாங்கும் வகையில் கணக்கு வைத்துக் கொள்வது, மாளிகையைச் சுற்றியுள்ள கூடாரங்களை நல்ல முறையில் வைத்துக் கொள்வது அல்லது அவற்றை உபயோகப்படுத்துவது, அரசுவிருந்தினர்களுக்குத் தங்கும் அறைகள் ஒதுக்குவது, காண்ட்ராக்டர்களுடன் ஒப்பந்தம் செய்து கொள்வது (குடியரசுதலைவரின் மாளிகைக்கும், பிரதமரின் மாளிகைக்கும் தேவையானவற்றை அவ்வப்போது செய்ய), அரசு உடைமைகளைப் பராமரிப்பது, கோட்டப் பொறியாளருடன்

சேர்ந்து மாளிகையைத் துப்புரவாக வைத்துக்கொள்வது குறித்த ஏற்பாடுகளைக் கூட்டாக மேற்பார்வையிடுவது, உணவுப் பொருள்கள் வாங்குவது, குடியரசுதலைவர் கொடி தயார் செய்து பறக்க விடுவது, அமைச்சரவைக் (CABINET) கேபினட் கூட்டங்களில் சிற்றுண்டி வழங்குவதை மேற்பார்வையிடுவது, அழைக்கப் பட்ட விருந்தினர்களின் வண்டிகள் ஓட்டுநருக்குச் சிற்றுண்டி வழங்குதல் முதலிய அலுவல்களைக் கவனிப்பது போன்றவை இப்பிரிவின் அலுவல்களாகும்.

(5) துணை கம்ட்ரோலர் அலுவலகப் பிரிவு (Deputy Comptroller's Section): இந்தப் பிரிவு பிரதமரின் மாளிகையில், எல்லா விஷயங்களையும் கவனித்துக் கொள்ளும். பிரதமரின் மாளிகையில் உணவு வகை தயார் செய்வது, பிரதமரின் விருந்தினர்கள் உபசாரம், வாகனவசதி, இருக்கை, மாதாந்தரச் செலவு கணக்குத் தயார் செய்வது, பிரதமரின் செலவு கணக்கு,அரசு விருந்தோம்பல், குழுவின் செலவு கணக்கைத் தனித்தனியாகப் பிரித்து இராணுவ காரியதரிசிக்கு அனுப்புவது முதலியவை இந்தப் பிரிவில் கவனிக்கப்படும்.

(6) சுற்றுலாப் பிரிவு (Tour section) : குடியரசுதலைவரின் சுற்றுலா விஷயமாகத் திட்டம் தீட்டி ஏற்பாடுகள் செய்து செயற்படுத்துவது, குடியரசுதலைவரின் தினசரி அலுவல்கள் விஷயமாகப் பட்டியல் தயார் செய்து அச்சிட்டு வைப்பது, குடியரசுதலைவரின் மாளிகையில் தங்கும், முக்கிய விருந்தினர்கள் பார்க்க வேண்டிய இடங்கள், செய்ய வேண்டிய காரியங்கள் முதலியவற்றைத் தயார் செய்து அவர்களுக்கு உதவியாக இருப்பது, புகைப்படங்கள், சுற்றுலாவின் ஞாபகச்சின்னமாக வைத்துக்கொள்ளும் பொருள்கள், போக்கு வரத்து ஏற்பாடுகள், எல்லா விருந்தினர்களுக்கும் வாகன வசதிகள் செய்து கொடுப்பது, பழைய சுற்றுலாக்களின் விவரங்களைச் சேகரித்துவைப்பது,மாநில அரசுகளுக்குக்குடியரசுதலைவரின் சுற்றுலா விஷயமாய் அறிக்கைகள் அனுப்பிச் சகல ஏற்பாடுகளையும் செய்யச்சொல்வது, சுற்றுலாவின்போது குடியரசுதலைவரின் பாதுகாப்பிற்கு விதிகள் தயார் செய்வது, குடியரசு தலைவர் மாளிகையின் அலுவலர்கள் வெளியூர்களுக்குப் போகப் புகைவண்டிப் பயணச்சீட்டுகள் ஆகாயவிமான ஏற்பாடுகள் செய்வது போன்றவை இந்தப்பிரிவில் கவனிக்கப்படும்.

(7) தோட்டப் பிரிவு (Garden Section) : காய்கறி, பழங்கள், பூக்கள் தோட்டங்கள் பராமரிப்பு, விவசாயத்திற்கு நிலம் ஒதுக்குவது, காய்கறி பழங்களை ஏலம் போட்டுக் கிடைத்த பணத்தை

அரசு கணக்கில் கணக்குப் பிரிவு மூலம் வரவு வைப்பது, பொது மக்கள் பார்வையிட ஏற்பாடுகள் செய்வது, மாளிகையில் அமைச்சகங்கள் நடத்தும் கூட்டங்கள், மாநாடுகளில் அலங்காரமாக வைக்கப் பூக்கள், செடிகள் வழங்குவது போன்ற வேலைகளை இப் பிரிவு கவனிக்கின்றது.

இராணுவக் காரியதரிசி காரியாலயத்தின் கீழ்ச் சில அலுவலகங்கள் (General Description of attached and Subordinate offices) சேர்க்கப்பட்டிருக்கின்றன. அப்பிரிவுகளைப்பற்றியும் அப்பிரிவுகளுக்குக் கொடுக்கப்பட்ட வேலைகளைப்பற்றியும் கீழே சொல்லப் பட்டிருக்கின்றன.

1. கோட்டப் பொறியாளர் அலுவலகம்: மூன்று உதவிப் பொறியாளர்களுடன் ஒரு கோட்டப் பொறியாளர் இங்குச் செயற்படுகிறார். குடியரசுதலைவரின் மாளிகைகள் (புதுடில்லி, சிம்லா, மஹோரா இடங்களில்) பராமரிப்பு, அலுவலர்கள் இருக்கைகள் முதலியன. அதிகாரிகள் தங்கும் (மாளிகைகள்) அதனுள்ளிருக்கும் மர, இரும்புச் சாமான்கள் பராமரிப்பு, மராமத்து, பிரதமரின் மாளிகையும் அதனைச் சேர்ந்த மாளிகைகளின் பராமரிப்பு, பஞ்சாப் அரசுக்கு வாடகைக்குக் கொடுக்கப் பட்ட அலுவலகங்கள், குடியிருப்புகளுக்கு வாடகை நிர்ணயித்து வசூல் செய்து அரசு கணக்கில் சேர்ப்பது, மின்சார வசதி குளிர் சாதன வசதி, தண்ணீர் வினியோகம், தீத்தடுப்பு ஏற்பாடுகள் முதலியன இங்குக் கவனிக்கப்படுகின்றன.

2. குடியரசுதலைவரின் மெய்காப்பாளர்கள் தலைவர் அலுவலகம் (President's Bodyguard Office): குடியரசு தலைவரின் மாளிகையில் நிரந்தரமாக அமைந்திருக்கும் இந்த மெய்காப்பாளர்களின் அலுவலகம், சடங்குகளுக்கும் சம்பிரதாயமான நிகழ்ச்சிகளுக்கும் பயன்படுத்தப்படும் ஒரு பிரிவு. இந்திய இராணுவத்தில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பிரிவாக இது செயற்படுகின்றது. இராணுவ சம்பந்தமான கடமைகளைத் தவிர, குடியரசு தலைவர் கலந்துகொள்ளும் எல்லா நிகழ்ச்சிகளிலும், அவருக்குப் பாதுகாப்பாக இந்த மெய்காப்பாளர்களும் உடன் செல்லுகிறார்கள். தேவைப்பட்டபொழுது இப்பிரிவு உள்நாட்டுப் பாதுகாப்பிற்கும் உபயோகப்படுத்தப்படும். அவசர நிலைக் காலங்களில் (Emergency periods) தயார் செய்யப்படும் படைப் பிரிவுகளுள் இதுவும் ஒன்று. இந்தப் பிரிவின் எல்லாச் செலவினங்களுக்கும் பாதுகாப்பு நிதியிலிருந்து நிதி வழங்கப்படுகின்றது. இந்தப் பிரிவின் தலைவர் ஓர் இராணுவ மேஜர் (Major) அந்தஸ்தில் உள்ளவர். இராணுவச்

செயலாளரின்கீழ் இவர் செயற்படுகிறார். இப்பிரிவில் உள்ள உதவி அதிகாரி ஓர் இராணுவ கேப்டன் (Captain) அந்தஸ்தில் உள்ளவர். இந்த மெய்காப்பாளர் பிரிவு இராணுவ விமான வீரர் பிரிவுடன் இணைக்கப்பட்டுள்ளது (Affiliated to the airborne troops of the army).

3. குடியரசுதலைவர் முகாமின் அஞ்சல் நிலையம்(President's camp Post Office) : ஓர் அஞ்சல் நிலையத்தின் பணி இங்கு நடக்கிறது. குடியரசு தலைவர் மாளிகைக்கும் அதனுள் இடம் பெற்றிருக்கும் பல்வேறு அலுவலகங்களுக்குமான அஞ்சலகத் தேவைகளை இது பூர்த்தி செய்கின்றது.

4. விசாரணை அலுவலகம் (Enquiry office) : இந்த அலுவலகம் ஒரு காவல்துறை அதிகாரியின் பொறுப்பில் இருக்கிறது. இந்த அதிகாரி ஓர் இன்ஸ்பெக்டர் அந்தஸ்தில் இருப்பவர். இவருக்கு உதவியாக இரண்டு உதவி இன்ஸ்பெக்டர்கள், ஒரு தலைமைக் காவல்காரர், சில காவல்காரர்கள் 2 காவல்காரக் குமாஸ்தாக்களைக்கொண்டு செயற்படுகிறது.

(1) குடியரசுதலைவரின் மாளிகைக்கு வரும் பார்வையாளர்களை குடியரசுதலைவரின் குடும்பத்தினரைக் காண, விருந்தினர்களைக் காண வருபவர்களை ஒழுங்குபடுத்தி அனுப்புவது, தோட்டங்களைப் பார்வையிட வருபவர்களை அழைத்துச்சென்று சுற்றிக் காட்டுவது.

(2) தாற்காலிக, நிரந்தர அனுமதிச் சீட்டுகளை வழங்குவது அல்லது அவற்றை அழிப்பது, வேலைக்குச் சேருபவர்களின் நடத்தையை விசாரித்துத் தகுதியைத் தெரிந்து கொள்வது.

(3) குடியரசு தலைவரின் மாளிகையிலும் அதற்கு வெளியிலும் பாதுகாப்புக்கான ஏற்பாடுகள் மேற்கொள்வது (டில்லியைப் பொறுத்த வரையில்)

(4) குடியரசுதலைவரின் மாளிகைக்கு வரும் அல்லது அங்கிருந்து அனுப்பப்படும் கடிதங்கள், பார்சல்கள், பாக்கெட்டுகள் ஆகியவற்றைப் பிரித்து உரிய இடங்களில் வினியோகம் செய்வது.

(5) குடியரசு தலைவரின் மாளிகையில் பெரிய விழாக்கள், சடங்குகள் நடக்கும்பொழுது போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவது, அதிகப்படியான காவல்துறை ஆள்களைத் தேவைக்கு ஏற்றாற்போல் வரவழைத்து உபயோகப்படுத்துவது ஆகியவை இந்த அலுவலகத்தின் பணிகளாகும்.

வெளி உறவுகள் : (External Relations) இந்தப் பிரிவின் அலுவல்களும் பொறுப்புகளும் இந்திய அரசின் எல்லா அமைச்சகங்களுடனும் மாநில அரசுகளுடனும் பொதுமக்களுடனும் தொடர்பு கொள்ள வாய்ப்பளிக்கின்றது.

இந்திய அரசின் அமைச்சகங்கள் : அமைச்சகங்கள் விருந்துபசாரம் நடத்துதல், குடியரசு தலைவருக்கான நிதி சன்மானம், படி, வெளிநாட்டிலிருந்து வரும் விருந்தினர்கள் தங்க ஏற்பாடுகள், பாதுகாப்புக்கான ஏற்பாடுகள், தோட்டங்கள், மருந்தகம், குடியரசு தலைவரின் சொந்த அலுவலர்கள் (இராணுவத்திலிருந்து) நியமனம், விசேஷ புகைவண்டி குடியரசு தலைவருக்கு ஏற்பாடு செய்தல் போன்றவற்றைக் கவனிக்கின்றது இப் பிரிவு.

மாநில அரசுகள் : குடியரசு தலைவரின் மாநில வருகை விஷயமான எல்லாக் காரியங்களுக்கும் அன்பளிப்பு, ஆதரவு ஈதல் போன்ற காரியங்களைக் கவனிப்பது மாநில அரசுப் பிரிவின் வேலை.

பொதுமக்கள் பிரிவு : குடியரசு தலைவரின் சமூக நடவடிக்கைகள், சம்பந்தமாக, குடியரசு மாளிகையில் தொடர்புள்ள முன்னணி நிறுவனங்களுக்கு நியமன உத்தரவுகள் வழங்குவது, (Award of President's Warrants of appointment to leading firms who have dealings with Rashtrapati Bhavan) பொதுக் கேளிக்கைகளுக்கு ஆதரவு, நாட்டிலுள்ள தனிப்பட்ட தகுதிவாய்ந்த நபர்களுக்கும், தகுதிவாய்ந்த நிறுவனங்களுக்கும், நிதி உதவிக்கான விண்ணப்பங்களைக் கவனித்தல் முதலியன.

N. B.—This Chapter is based on Descriptive Memoirs of Presidents' Secretariate, Published by the Govt. of India. Cabinet Secretariate (O & M Division), New Delhi.

# 16. இந்தியக் குடியரசுதலைவர்-ஒரு மதிப்பீடு

இந்தியத் துணைக்கண்டத்தின் குடியரசு தலைவர் ஒரு சக்தி வாய்ந்த தலைவர் தாமா? அதிகாரமற்ற அணிகலனா? என்ற கேள்விக்குத் திருப்திகரமான விடை நமது அரசியல் சட்டத்தின் விதிகளை நமக்குத் தெரிந்த அளவில் புரிந்து கொள்வதால் மட்டும் கிடைத்துவிடாது. நமது முயற்சி உபயோகமானதாக இருக்க, அரசியல் சட்டம் அமலுக்கு வந்த பிறகு அரசின் முக்கிய பிரிவுகள் கடந்த 27 ஆண்டுகளாக எவ்வாறு செயற்பட்டன என்பதைக் கூர்ந்து ஆராய்வதாக அமைய வேண்டும். பிரதிநிதித்துவக் குடியாட்சி அமைப்பைத் தேர்ந்தெடுத்ததற்கு முக்கிய காரணம் கொள்கையளவிலும் நிதி முறையிலும் (In theory and practice) அது ஒரு சிறந்த அரசியல் அமைப்பை உருவாக்கும் என்ற ஆழ்ந்த நம்பிக்கைதான். நாட்டின் நிருவாகத்தில் குடியரசுதலைவரின் பங்கைப்பற்றிய முக்கிய விவாதங்கள், நாடாளுமன்றம் ஒரு தலை சிறந்த சட்டமியற்றும் அமைப்பாகவோ அல்லது செயற்குழுப் பிரிவின் (Executive) கொள்கைகளையும் செயல்களையும் கட்டுப் படுத்தும் அங்கமாகவோ நல்ல முறையில் செயற்பட்டால், எழுந்திருக்க இடமில்லை. குடிமக்கள் ஆட்சியின் பிறப்பிடம் என்று கருதக் கூடிய இங்கிலாந்து நாட்டில் கூட, ஆட்சி செலுத்தும் வகையில் மிக உயர்ந்த அங்கம் நாடாளுமன்றம் என்ற நம்பிக்கை ஒரு பொருந்தாக் கற்பனையாகக் (Chimera) கரைந்து விட்டது. வயதின் அடிப்படையில் எல்லாக் குடிமக்களுக்கும் கொடுத்துள்ள வாக்குரிமையும் அதன் காரணமான இயந்திர அரசியலின், (Machine Politics) தோற்றமும், முழுமையாகவும், முடிவாகவும் அதிகார பீடத்தை மக்கள் சபையிலிருந்து (House of Commons) அரசியல் கட்சியின் செயற்குழுவுக்கு மாற்றிவிட்டிருக்கிறது. பிரதிநிதித்துவ முறைப்படி ஆட்சி நடத்தும் இங்கிலாந்து நாட்டிலும் இதர நாடுகளிலும், சட்டத்துறை (பாராளுமன்றம்) அரசியல் சட்டத்தின் ஒரு பெருமை வாய்ந்த பிரிவாகத் தாழ்த்தப்பட்டு,

ஆட்சி பீடத்திலுள்ள அரசியல் கட்சியின் தனிப் பெருந் தலைவராக விளங்கும் பிரதம அமைச்சருக்கே முதலிடம் அளித்துள்ளது. நாட்டின் முதலாளியாக அரசாங்கமும், அரசாங்கத்தின் முதலாளியாகப் பிரதம அமைச்சரும் இருக்கிறார்கள் என்ற கூற்றில் ஆழ்ந்த உண்மை பதிந்து உள்ளது.

எனவே, மேற்கூறியவை, 20ஆம் நூற்றாண்டின் பிரதி நிதித்துவக் குடியாட்சி அரசின் அசைக்க முடியாத, விவாதத்திற்கு அப்பாற்பட்ட உண்மைகள். ஆகையால், இந்திய அரசியல் சட்டத் தின் விதிகளை 18, 19ஆம் நூற்றாண்டுகளின் இங்கிலாந்து நாட்டு ஆட்சிமுறைக் கண்ணோட்டத்தில் பரிசீலிப்பது தவறாகும். நமது அரசியல் சட்டத்தை ஒரு புதிய கண்ணோட்டத்துடன் அணுகிப் பரிசீலிப்பது அவசியமாகிறது. ஏனெனில், மற்றக் குடிமக்கள் ஆட்சியை உடைய நாடுகளின் அனுபவங்களின் கண்ணோட்டத் திலும், நமது நாட்டின் கண்டிப்பான அரசியல் சூழ்நிலைகளையும் தேவைகளை மனத்தில் கொண்டும் இவ்வாறு ஆராய்வது சாலப் பொருந்தும். நாம் அணுகும் முறை நடைமுறையில் வரக்கூடிய தாகவும் நெகிழ்ச்சியுடையதாகவும் (Flexible) உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டதாகவும் இருப்பது அவசியம். அமெரிக்கஉள்நாட்டுப் போர் நடந்த பொழுது அரசியல் சட்டத்தின் வாசகத்தை ஒதுக்கி அதன் சாரத்தை முழுமையாகப் பாதுகாத்துக் குடிமக்கள் ஆட்சி முறையை அமெரிக்க நாட்டு மக்களுக்குப் பாதுகாத்து நாட்டு நிருவாகத்திறமையின் உச்சநிலைக்கு ஆபிரகாம் லிங்கன் என்ற மாபெரும் அமெரிக்கக் குடியரசு தலைவர் தம்மை உயர்த்திக் கொண்டார். நம் நாட்டு நிலைமை அமெரிக்க நிலைமையைவிட மேம்பட்டதாகும். ஒரு தனி நபரோ பலபேர் சேர்ந்த குழுவோ கொடுங்கோல் ஆட்சியைக் கடைப்பிடிக்க நமது அரசியல் சட்டம் சிறிதும் இடங்கொடுக்கவில்லை.

சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தை உருவாக் கியவர்கள் மாமேதைகள். இவர்கள் பல நாடுகளின் ஆட்சி முறையையும் அரசியல் சட்டங்களையும் அலசிப் பார்த்து நல்ல அம்சங்கள் என்று தோன்றியவற்றை நமது அரசியல் சட்டத்தில் அளிக்கத் தவறவில்லை. உதாரணமாக அரசியல் சட்டத்தின் முன்னுரை (Preamble), அடிப்படை உரிமைகள், மத்திய மாநில அரசுகளின் கடமைகள் (Directive Principle of State policy) போன்றவை எல்லாம் அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கானடா நாடுகளின் அரசியல் சட்டங்களிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. எனினும், முக்கியமான இடம் இங்கிலாந்து நாட்டு ஆட்சிமுறை அம்சங்களுக்குக் கொடுக்கப் பட்டதில் வியப்பொன்றும் இல்லை.

ஏனெனில், நாம் சுமார் 200 ஆண்டுகள் அவர்களின் ஆட்சியில் இருந்ததால் ஆங்கில நாட்டுப் பழக்க வழக்கங்களையும் அரசியல் மரபுகளையும் கடைப்பிடிக்கப் பழகி விட்டோம். நமது அரசியல் சிந்தனைகளும் ஆங்கில அரசியல் சிந்தனையையொட்டி இருந்த தற்கு, இருப்பதற்கு அதுவே காரணம்.

சக்தி வாய்ந்த மத்திய அரசுக்கு நமது அரசியல் சட்டம் வகை செய்கிறது. பரந்த சட்டமியற்றும், செயலாற்றும் அதி காரங்களைக் கொண்ட குடியரசு தலைவர் என்று அழைக்கப்படு பவரை அது உருவாக்கியுள்ளது. இந்திய அரசின் செயலாற்றும் அதிகாரங்களுக்கு உறைவிடம் குடியரசு தலைவர். அரசியல் சட்ட விதி எண் 53-ன்படி நேர்முகமாகவோ அவருக்குக் கீழ் உள்ள அதிகாரிகள் மூலமாகவோ அவர் செயற்படலாம். பிரதம அமைச்சரின் தலைமையில் உள்ள ஓர் அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே குடியரசு தலைவர் செயற்படுவார் என்று அரசியல் சட்ட விதி எண் 74 கூறுகிறது. அடுத்து வரும் விதியில் குடியரசு தலைவர் பிரதம அமைச்சரை நியமனம் செய்ய வேண்டும். இதர அமைச்சர்கள் பிரதமரின் பரிந்துரையின் பேரில் நியமனம் செய்யப்பட வேண்டும். குடியரசு தலைவருக்கும் அமைச்சரவைக்கும் இடையில் உள்ள விவகாரம் நீதி விசாரணைக்கு அப்பாற்பட்டது. அரசியல் சட்டத்தில் அமைச்சரவை மக்கள் சபைக்குக் கூட்டுப் பொறுப்புடன் விளங்க வகை செய்யப் பட்டுள்ளது.

இவ் விதிகளின் கருத்துகள் குறித்து நீண்ட காலமாக விவா தங்கள் இருந்து வருகின்றன. ஒரு சாராரின் கருத்துப்படி, இங்கிலாந்து நாட்டு மன்னரைப் போல் கௌரவம் மட்டும் வாய்ந்தது குடியரசு தலைவரின் பதவி. அரசியல் சட்டத்தின்படி, முக்கிய இடத்தைப் பெறுவது சட்ட சபைப் பிரிவுதான்; வேறெதுவும் இல்லை. அரசியல் நிர்ணய சபையில் வரைவு அரசியல் சட்டத்தை அறிமுகப்படுத்திய பொழுது டாக்டர் அம்பேத்கார் மேற்கூறிய கருத்தைத்தான் ஆதரித்தார். 'குடியரசுதலைவர்' என்ற பெயரைத் தவிர அமெரிக்க நாட்டின், குடியரசுதலைவருக்கும் இந்திய நாட்டுக் குடியரசுதலைவருக்கு மிடையே எந்தப் பொருத்தமும் இல்லை. இந்தியக் குடியரசு தலைவர் நாட்டின் தலைவர்; ஆனால், செயற்படுத்தும் பிரிவின் தலைவர் அல்லர். அவர் நம் நாட்டின் பிரதிநிதி எனினும் ஆளுபவர் அல்லர். நாட்டின் ஒற்றுமைக்கு இங்கிலாந்து நாட்டு மன்னரைப் போல ஒரு சிறந்த சின்னமாக விளங்குகிறார். நாட்டின் நிருவாக அமைப்பில் அமைச்சரவை எடுக்கும் முடிவுகளை

மக்களுக்குத் தெரியப்படுத்தும் ஒரு சம்பிரதாயமான உபாயம் அல்லது கருவியாகத்தான் அவர் பயன்படுகிறார்', என்று டாக்டர் அம்பேத்கார் கருத்துத் தெரிவித்தார்.

டாக்டர் அம்பேத்காரின் கோட்பாட்டை அரசியல் சட்ட மேதை சர் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரும் ஆதரித்துப் பேசுகையில் 'குடியரசு தலைவர் ஆட்சிபுரிவதைவிட அமைச்சரவை ஆட்சி எவ் வகையில் சிறந்தது, அம்முறை ஆட்சியை நாம்ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்', என்று விவரித்தார். குடியரசுதலைவர் ஆட்சியில் உள்ள கஷ்டநஷ்டங்களையும் அபாயங்களையும் அரசியல் நிர்ணய சபையில் விளக்கி 'நவீனச்சூழ்நிலையில் புதிதாக அமைக்கப்படும் குடிமக்கள் ஆட்சியில் சட்டசபைப்பிரிவுக்கும் செயற்படுத்தும் பிரிவுக்கும் நிரந்தரமான கருத்து வேற்றுமை, சச்சரவு, சண்டை தொடர்வது நல்லதன்று', என்றார். அமைச்சரவை ஆட்சி முறையின் சிறப்புகளை விளக்கும் பொழுது சட்டப்பிரிவிற்கும் செயற்குழுப்பிரிவிற்கும் இடையே உள்ள இடைவெளியை அகற்றும் ஒரு சிறு கோடுதான் (Hyphen) அமைச்சரவை என்றும் தற்காலச்சூழ்நிலையில் வளர்ந்து வரும் குடிமக்கள் ஆட்சிமுறைஅமைப்பில் இருபிரிவுகளும் ஒருமித்து செயற்படுவதில் ஒரு நல்ல பிணைப்பு இருப்பது அவசியம் என்றும் கூறினார். எல்லாவகையிலும், எந்தக்கண்ணோட்டத்தில் பார்ப்பினும் அமைச்சரவை ஆட்சி முறை குடியரசுதலைவர் ஆட்சிமுறையை விடத் தலைசிறந்தது என்பதை அவர் விரிவாக எடுத்துரைத்தார்.

அரசியல் நிர்ணய சபை விவாதங்களில் உயர்ந்த இலட்சிய வாதியாக இருந்த பண்டிதர் ஜவஹர்லால்நேரு அதிகாரங்களின் உறைவிடமாக இருப்பவர் குடியரசு தலைவர் அல்லர்; பிரதமர்தாம் என்று ஆணித்தரமாகக் கூறியுள்ளார். மேலும் அவர் 'இது விஷய மாகப் பரிசீலனை செய்ததில் எனக்கு முடிவாகத் தோன்றியது என்னவெனில் அமைச்சரவை அரசின் தன்மைக்கு ஏற்றாற்போல் எல்லா அதிகாரங்களும் அமைச்சரவையிடமும் சட்டசபைப்பிரிவி னிடமும் இருக்கவேண்டுமே தவிரக் குடியரசுதலைவரிடம் அன்று; அதே சமயத்தில் நமது குடியரசுதலைவரை பிரான்சு நாட்டின் குடியரசுதலைவரைப்போல ஓர் அலங்காரச் சின்னமாக வைக்கவும் இல்லை. எனவே, அதிகாரங்கள் கொடுக்கப்படாவிட்டாலும் இந்தியக் குடியரசுதலைவரின் பதவியை உரிமைகள் மிக்கதாகவும் கௌரவமானதாகவும் செய்துள்ளோம். அமெரிக்கக் குடியரசுதலை வரைப்போலப் பாதுகாப்புப்படைகளின் பிரதான தளபதியாக இந்தியக் குடியரசு தலைவரைச் செய்துள்ளோம்', என்று கூறினார். உயர்ந்த பதவியை வகிக்கும் குடியரசுதலைவர் உண்மையான அதிகாரங்கள் இல்லாத-ஆனால்நிறைந்த அதிகாரங்களைக்கொண்ட

பதவியை எப்படி வகிக்கமுடியும் என்று தெரியவில்லை. நாட்டின் அரசாங்கத்தில் மிக உயர்ந்த இடத்தை அமெரிக்கக் குடியரசு தலைவர் வகிப்பதற்கு முக்கியமான காரணம் அவர் பாதுகாப்புப் படைகளின் பெருந்தலைவராக உள்ளதுதான். இந்தியக்குடியரசின் தலைவர் ஓர் அதிகாரமற்ற-ஆனால், பெருமை வாய்ந்த தலைவராகத் திகழ்ந்தால் அவர் பாதுகாப்புப் படைகளின் பெருந்தலைவராக இருப்பதில் பொருளில்லை.

கருத்துகளைக் கோட்பாடுகளோடு ஆணித்தரமாகச் சொல்லக் கூடிய-ஆனால், செல்வாக்குக் குறைந்த ஒரு சாரார் குடியரசு தலைவரின் பதவி ஓர் அலங்காரமான சடங்குகளுக்காக ஏற்படுத்தப் பட்டது என்ற கருத்தை ஏற்க மறுக்கின்றனர். முதற் குடியரசு தலைவராகப் பணியாற்றிய டாக்டர் இராஜேந்திர பிரசாத் ‘வண்டியின் அச்சுப் போன்ற முக்கியத்துவம் வாய்ந்தது அப்பதவி’, என்று கூறுகிறார். அவர் ஒரு சிறந்த அறிவாளி; ஒரு சிறந்த வழக்கறிஞரும்கூட. அரசியல் நிர்ணய சபையின் தலைவராகவும் அதன்பின் சுதந்திர இந்தியாவின் குடியரசுதலைவராகவும் அவர் பணியாற்றி அரசியல் சட்ட நுணுக்கங்களை நன்றாகப் புரிந்து வைத்திருந்தார். அவரது நேர்மையும் விட்டுக்கொடுக்கும் மனப் பான்மையும் எல்லாரையும் வெகுவாகக் கவர்ந்தது. Dr. K. M. முன்ஷி அவரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அரசியல் சட்டத்தின் சாரத்தை அவருடைய மனோபாவம் உயர் கல்வி, உலக அனுபவம் இவற்றால் நன்கு புரிந்து வைத்திருந்தார், இந்தச் சிறப்புகள் திரு. ஜவஹர்லால் நேருவிடம் இருந்தன என்று சொல்ல முடியாது. டாக்டர் பிரசாத்திடம் மனோதிடம், திறமை, ஆழ்ந்த நூலறிவு இவை இருந்தபோதிலும், திரு நேருவுக்கு நாட்டில், மக்க ளிடத்தில் ஒரு பிடிப்பும் பிணைப்பும் இருந்த காரணத்தால் அரசியல் அமைப்பில் குடியரசு தலைவரின் பங்கு பற்றிய விவாதங்களில் அவ ரால் முன்னேற முடியவில்லை. எனினும், டாக்டர் பிரசாத் மனோ வலிமையையும் துணிச்சலையும் இழக்கவில்லை. அரசியல் சட்டத்தில் குடியரசு தலைவரின் அதிகாரங்களைப் பற்றிய விதிகள் சந்தேகமோ குழப்பமோ ஏற்படாத வகையில் திட்டவட்டமானதாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். இது விஷயமாக அரசியல் நிர்ணய சபையில் 1949ஆம் ஆண்டு மே மாதம் 23ஆம் நாள் டாக்டர் அம்பேத்காரிடம் விவாதம் ஒன்றைத் துவக்கினார். விவாதத்தின் பொழுது அமைச்சரவையின் ஆலோசனையின் பேரில்தான் குடியரசுதலைவர் செயற்பட வேண்டும் என்று சட்ட அமைச்சர் கூறியபொழுது அரசியல் சட்டத்தின் எந்த விதிகளில் அப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது என்று திரு. பிரசாத் வினவினார். உள் ளுணர்வாக உள்ளவற்றையெல்லாம் வெளிப்படையாக, தெளி

வாக விதிகளில் கூறும்படி வற்புறுத்தினர். அவருடைய ஆலோசனைக்கு அரசியல் நிர்ணய சபையில் பெரும்பான்மை ஆதரவு கிடைக்கவில்லை. டாக்டர் அம்பேத்கார் அவருடைய வினைக்களுக்குப் பதிலளிக்கையில் குடியரசு தலைவருக்கு அளிக்கப்படும் அதிகாரப் பத்திரத்தில் எல்லா விவரங்களும் காணப்படும் என்று சொன்னர். ஆனால், இறுதியில் நாட்டுத் தலைவருக்கு இப்படிப் பட்ட பத்திரம் கொடுக்கத் தேவையில்லை என்று முடிவெடுக்கப் பட்டது.

சில மாதங்களுக்குப் பிறகு மீண்டும் இப் பிரச்சினையை அரசியல் நிர்ணய சபையில் டாக்டர் பிரசாத் அவர்கள் கொண்டு வந்தார். அரசியல் சட்டத்தில் குறிப்பாக அமைச்சரவையின் ஆலோசனைப் படி தான் குடியரசுதலைவர் செயற்படவேண்டும் என்று இல்லா விட்டாலும் இங்கிலாந்து நாட்டில் எப்படி மன்னர் பிரதமரின் (அமைச்சரவையின்) ஆலோசனைப்படி நடக்கிருரோ அதே போன்று அமைச்சரவை ஆலோசனைப்படி குடியரசுதலைவர் நடக்கும் ஒரு நல்ல ஆரோக்கியமான அரசியல் மரபை ஏற்படுத்த வேண்டும் என்பதை ஒப்புக் கொண்டாலும் நம் நாட்டுச் சூழ் நிலையில் உருவாக்கப்பட்ட ஓர் அரசியல் சட்டத்திற்கு இத்தகைய ஓர் (ஆங்கில) அரசியல் மரபு பொருந்துமா என்ற சந்தேகம் அவருக்கு இருந்தேவந்தது நமது நாட்டில் சில ஆண்டுகளாகத் தான் குடியாட்சி அடிப்படையில் தேர்தல்கள் நடக்கின்றன. இங்கிலாந்து நாட்டைப் போல நீண்ட குடியாட்சி வரலாறு நமக்கு இல்லை. எனவே, உண்மையான அதிகாரங்கள் கிடைத் திருக்கும் தருணத்தில்,ஊழல்களால் ஏற்படும் அபாயங்கள் கற்பனை யல்ல; உண்மையே, என்று அவர் கூறினர், அரசியல் நிர்ணய சபையில் பேராசிரியர் K. T. ஷா போன்றவர்கள் இங்கிலாந்து நாட்டின் பிரதிநிதித்துவ மக்கள் சபையின் பெரும்பான்மை கட்சியின் ஆட்சி முறையை அப்படியே நாம் ஏற்றுக் கொள்வது முறையில்லை என்றும் அமெரிக்க நாட்டில் உள்ளது போல் தலைவர் முறை (Presidential form of Govt.) ஆட்சி தான் சிறந்தது என்றும் கருத்துத் தெரிவித்தார்கள். அமெரிக்க ஆட்சி முறையில் அரசாங் கத்தின் மூன்று பிரிவுகளும் தனித்தனியே சுதந்திரமாக இயங்கு வதால் அவை திறம்படச் செயற்பட வாய்ப்பு ஏற்படுகிறது. மேலும், அவர் பொது மேடைகளிலிருந்து, பகட்டான பேச்சாக வருவதைத் தவிர இலட்சியங்களுக்கு வேறு மதிப்பில்லை. இந்தியக் குடியரசின் தலைவர், குறிப்பாக நெருக்கடி காலங்களில் உறுதி யாகச் செயலாற்றப் போதுமான அதிகாரங்கள் அவருக்குக் கொடுக்கப்படவேண்டும் என்று வலியுறுத்தினர். டிசம்பர் 13, 1948 ஆம் ஆண்டு அவர் பேசும்பொழுது, குடியரசுதலைவர்

நாட்டுமக்களின் உண்மையான தலைவராகத் திகழ வயது வந்தவர்களால் அவர் தேர்ந்தெடுக்கப் படவேண்டும். இப்படித் தேர்ந்தெடுக்கப்படுவதால் குடியரசுதலைவருக்கும் பிரதமருக்குமிடையே எவ்வித சச்சரவும் வரும் என்ற சந்தேகத்திற்கே இடமில்லை. ஏனென்றால், நெருக்கடி காலத்தில் மட்டும்தான் குடியரசுதலைவர் பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படி நடக்காமல் தம்மனத்திற்குச் சரி என்று தோன்றிய விதத்தில் நாட்டின் நன்மையை உத்தேசித்துச் செயற்படுவார் என்று கூறினார். பிரதமர் சொற்படி நடக்கும் ஒரு குடியரசுதலைவரை அவர் விரும்பவில்லை.

1950-ஆம் ஆண்டு டாக்டர் பிரசாத் இந்தியக் குடியரசுதலைவராகப் பதவி ஏற்றபிறகு குடியரசுதலைவரின் அதிகாரங்கள் விஷயமாக மேல்மட்டத்தில் விவாதிக்கத் தொடங்கினார். அவர் பிரதமருக்கு அனுப்பிய குறிப்பு ஒன்றில் (Note) 'சாதாரணமாகக் கூறும்பொழுது பொதுவாக அமைச்சர்கள் தங்களுடைய ஆலோசனைகளைக் குடியரசுதலைவருக்குச் சமர்ப்பிக்க வேண்டும். ஆனால், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் சூழ்நிலைகளிலும் குடியரசு தலைவர் அமைச்சர்களின் ஆலோசனைப்படிதான் நடக்கவேண்டும் என்பது சரியானதுதானா என்பதில் சந்தேகம் இருக்கிறது. குடியரசு தலைவருக்கு அவர் விருப்பப்படி நடவடிக்கைகளை மேற்கொள்ள உரிமை உள்ளதா ? அப்படிச் செயற்படலாம் என்றால் அவர் மூன்று விதங்களில் செயற்படலாம் என்று ஆகிறது. (1) அமைச்சர்களின் ஆலோசனைக்கு முரண்பட்ட விதமாகச் செயற்படலாம் (2) அமைச்சர்களின் ஆலோசனைக்குக் காத்திராமல் ஆலோசனை கிடைக்குமுன் செயற்படலாம் (3) அமைச்சர் ள் ஆலோசனை கூற மறுத்தபின் செயற்படலாம். மேலும், அரசியல் சட்டத்தில் குடியரசுதலைவரைப் பாதுகாப்புப் படைகளின் தலைவராக ஆக்கியிருப்பதின் முழு உள் கருத்து என்ன என்பதை விவரிக்கும்படியும் கேட்டுக்கொண்டார். நீதித்துறை (Judiciary), தணிக்கைப்பிரிவு(Comptroller and Auditor-General of Accounts), அரசு அலுவலர் தேர்வுக்குழு (Public Service Commission), தேர்தல் ஆணையர் (Election Commissioner) இப்படிப் பலதரப்பட்ட அரசாங்கத்தின் உறுப்புகள் செயற்குழு அதிகாரத்திற்கு உட்படாதவைகளாக இருக்கின்றன. இவற்றிற்கும் குடியரசு தலைவருக்கும் உள்ள தொடர்பு என்னவென்றும் அவர் கேட்டிருந்தார். பாராளுமன்றம் நிறைவேற்றும் எல்லா மசோதாக்களுக்கும் குடியரசு தலைவர் தம் கையெழுத்தைத் தங்குதடையின்றிக் கொடுக்க வேண்டுமா என்று மற்றுமொரு முக்கியமான பிரச்சினையை எழுப்பினார். குடியரசு தலைவர் மக்கள் சபையின் அங்கத்தினர் அல்லர். ஆனால், பாராளுமன்றத்தினால்

மூன்றாவது அங்கமாக இருக்கிறார். சில சந்தர்ப்பங்களில் பாராளுமன்றம் அங்கீகரித்த மசோதாவை ஆமோதிக்காமல் மறு பரிசீலனைக்குத் திருப்பி அனுப்பிவிடக் குடியரசு தலைவரால் முடியும். பாராளுமன்றம் நிறைவேற்றிய எல்லா மசோதாக்களுக்கும் குடியரசு தலைவர் கண்டிப்பாகத் தம் அங்கீகாரத்தைக் கொடுத்தே ஆகவேண்டும் என்று கட்டாயப் படுத்தினால் அத்தகைய அங்கீகாரத்தில் எவ்வித மதிப்பும் சிறப்பும் இருக்க இடமில்லை. அத்தகைய ஒரு கட்டாயம் மாநிலச் சட்ட மன்றத்தைப் பொறுத்தவரை, அவர் கருத்தில், விரும்பத்தகாத ஒன்று. ஏனென்றால், மாநில அரசு ஆட்சியில் உள்ள அரசியல் கட்சி மத்திய அரசு ஆட்சியில் உள்ள அரசியல் கட்சிக்கு மாறுபட்ட கட்சியாக இருந்தால் மத்திய அமைச்சரவை மாநிலச் சட்டமன்றம் நிறைவேற்றும் மசோதாக்களுக்குக் குடியரசுதலைவர் தம் அங்கீகாரத்தைக் கொடுக்ககூடாது என்று குடியரசு தலைவருக்கு ஆலோசனை கூற மாநில அரசின் சட்டமியற்றும் அதிகாரத்திற்கு ஊறுவிளைவிக்கலாம். அல்லது மாநிலச் சட்டங்கள் செல்லுபடியாகாதபடி செய்துவிடலாம். ஆகையால், மசோதாக்களுக்கும் அங்கீகாரம்கொடுக்கும் அதிகாரத்தைக் குடியரசுதலைவர் தம்மிச்சையாகச்செலுத்தலாமா? அப்படிச் செய்யலாம் என்று வைத்துக் கொண்டால் எந்தெந்த மாநில மத்திய அரசுகள் மசோதாக்கள் மேல்அத்தகைய நடவடிக்கையைக் குடியரசுதலைவர் மேற்கொள்ள லாம்? கடைசியாக, அரசாங்கத்தின் ஒரு குறிப்பிட்ட கொள்கை அல்லது தீர்மானம் எவ்வாறு நிறைவேற்றப்பட்டது என்பதை புரிந்து கொள்வதற்காகத் தகவல்களையும் ஆலோசனைகளையும், அரசுக்கு எதிராக அன்று—பெறக் குடியரசுதலைவர், அரசாங்கத்தின் செயலாளர்களுடன் நேரடியாகத் தொடர்பு கொள்ள இயலுமா என்பதைப் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்பினார்.

மேற்கூறிய குடியரசுதலைவரின் அரசியல் சட்ட சந்தேகங்களும் இந்துக்கள் சம்பந்தமான மசோதாவும் சட்ட வல்லுநர்களின் பரிசீலனைக்கும் அனுப்பப்பட்டன. அப்பொழுது இருந்த அரசியல் நிர்ணய சபையே மக்கள் சபையாகச் செயற்பட்டதனால் அத்தகைய ஒரு மசோதாவை நிறைவேற்றச் சட்டபூர்வமான அதிகாரம் அதற்கு உள்ளதா என்று சந்தேகம்கொண்டார் திரு பிரசாத் ஒரு புரட்சிகரமான இந்து சமுதாயச்சட்டத்தை இயற்றப் பிரதிநிதித்துவம் இல்லாத மக்கள் சபைக்கு அதிகாரம் உள்ளதா? மிக முக்கியமான அச் சட்டம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட மக்கள் சபையால் தான் நிறைவேற்றமுடியும் என்பது அவர் கூற்று. அவர் தாம், அம்மசோதா மக்கள் சபையில் விவாதிக்கும் பொழுது கவனமாகப் பரிசீலித்துத் தமக்கு ஏற்படும்

கருத்துகளை மக்கள் சபை கவனத்திற்கு அனுப்புவதாகப் பிரதமரிடம் கூறினார். மேலும், அவர் அம் மசோதாவின் தகுதியைச் சீர்தூக்கிப்பார்க்கும் உரிமை தமக்கு உள்ளது என்றும் அன்னாரின் மனச்சாட்சிக்குப் பட்டதை அம் மசோதாவைப் பொறுத்தவரை செய்யப் போவதாகவும் அதனால் அரசுக்கு எவ்விதமான கஷ்டமும் வராது என்றும் கூறினார். பிரதமர் நேரு அவர்களும் குடியரசு தலைவர் எழுப்பிய பிரச்சினைகளைச் சட்ட நிபுணர்களின் பரிசீலனைக்கு விட்டுவிட்டு, குடியரசுதலைவருக்குக் கீழ்வரும் குறிப்பைத் தமது பதிலாக அனுப்பி வைத்தார். அக் குறிப்பில் குடியரசு தலைவரின் கூற்று ஒரு பக்கம் அவருக்கும், மறுபக்கம் அரசுக்கும் மக்கள் சபைக்குமிடையே சச்சரவை ஏற்படுத்த வல்லது என்றும், மக்கள் சபை தீர்மானங்களின் மேல் குடியரசுதலைவர் சச்சரவை எழுப்பினால் அது சட்டரீதியான அரசுக்கு மாசு ஏற்படுத்தும் என்றும் பிரதமர் குறிப்பிட்டிருந்தார்.

திரு. M.C. சதல்வாத் (Setalvad) தும், சர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும் குடியரசு தலைவர் எழுப்பிய சந்தேகங்களுக்கு விரிவான விளக்கங்கள் அனுப்பி வைத்தார்கள். இந்தியக் குடியரசு தலைவர் எல்லா வகையிலும் இங்கிலாந்து நாட்டு மன்னரைப் போல் உள்ளார். எனவே, எக்காரணத்தைக் கொண்டும் அமைச்சரவையின் ஆலோசனையில்லாமலோ மாறுபட்டோ அவர் செயலாற்ற முடியாது. அரசியல் சட்ட விதிகள் 53, 74, 75 மிக முக்கியத்துவம் வாய்ந்தவை. நாட்டின் ஆட்சியில் தனிப்பெரும் இடம் மக்கள் சபைக்குத்தான் அளிக்கப்பட்டிருக்கின்றது. வயது வந்த குடிமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்ட சபைதான் உண்மையான பிரதிநிதித்துவம் வாய்ந்த சபை; அப்படிப்பட்ட பிரதிநிதிகளின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள்தாம் அமைச்சரவையில் அங்கம் வகிக்கலாம். அரசியல் சட்ட விதி எண் 75 பிரிவு (3)-ல் கூறியபடி மக்கள் சபைக்கு அமைச்சரவை கூட்டுப் பொறுப்பாயிருப்பது ஒரு முக்கியமான அம்சம் என்றும் கூறினார்கள்.

விதி எண் 74 (1)-ல் வரும் சொற்றொடரான 'உதவி செய்ய' 'ஆலோசனை வழங்க' என்பன இந்திய அரசு சட்டம் 1935 (Govt. of India Act, 1935)-ல் இருந்து எடுக்கப்பட்டது. இதன் உண்மையான பொருள் அந்த ஆலோசனையை முடிவானதாகவும் திட்டவட்டமானதாகவும் தட்ட முடியாததாகவும் கொள்வது ஆகும். விதி எண் 74-ன் படி எல்லாக் காரியங்களிலும் குடியரசு தலைவர் அமைச்சரவையின் ஆலோசனைப்படிதான் நடக்க வேண்டும். விதி எண் 75-ன் படி அமைச்சரவையின் கூட்டுப்பொறுப்பு

மக்கள் சபைக்கு உண்டு. குடியரசுதலைவரின் பதவியைத் தேர்தலின் வாயிலாக நிறுவுவது இங்கிலாந்து மன்னரின் நிலைக்கு மாறுபட்டு இருப்பினும் குடியரசு தலைவர் ஒரு சட்ட ரீதியான தலைவர் என்பதில் எந்தச் சந்தேகமும் கிடையாது. மேலும், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் 'குடியரசு தலைவரின் நியமனம் தேர்தல் வாயிலாக என்று ஏற்படுத்தப்பட்டது அப்பதவிக்கு ஒரு தனிக் கௌரவத்தைத் தேடித் தருவதற்காக அல்லாது வேறு காரணங் களுக்காக அன்று', என்றார்.

குடியரசு தலைவர் எழுப்பிய மற்றப் பிரச்சினைகளைப் பற்றிக் கூறும்பொழுது அமைச்சரவையை ஒதுக்கி வைத்துக் குடியரசு தலைவர் தம்மிச்சையாகச் செயற்படச் சட்ட ரீதியாக அனுமதி இல்லை. அவர் மசோதாக்களுக்குத் தம்முடைய அங்கீகாரத்தைத் தராமல் இருக்க அதிகாரம் இல்லை. அமைச்சரவையின் சொற்படி தான் குடியரசுதலைவர் நடக்க வேண்டும் என்பதை உறுதிப் படுத்தும் வகையில் திரு. வால்டர் பேஜாட் இங்கிலாந்து நாட்டு மன்னரைப் பற்றிக் கூறியிருப்பதை, அதாவது இங்கிலாந்து அமைச்சரவை, பாராளுமன்றத்தில் மன்னரின் மரண சாசனத்தை நிறைவேற்றி அதை மன்னரின் கையொப்பத்தைப் பெற அவருக்கு அனுப்பி வைத்தால் அந்த மரண சாசனத்தில் கையொப்பம் இடுவதைத் தவிர மன்னருக்கு வேறு வழியில்லை என்பதை உதாரணமாக எடுத்துச் சொன்னார். அமைச்சரவை யின் ஆலோசனையை நிராகரித்துத் தம் இச்சைப்படி குடியரசு தலைவர் செயற்படத் துணிந்தால் அரசியல் சட்டம் உடைந்து விடும் என்ற கருத்தை அந்த இரு சட்ட வல்லுநர்களும் கொண் டிருந்தார்கள்.

இந்த இரு சட்ட மேதைகளின் கருத்து, சந்தேகத்திற்கிட மின்றி மதிப்பு வாய்ந்தது என்றாலும், குடியரசு தலைவரைப் பற்றிய பல முக்கியமான விதிகளைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பிய அனைவரையும் திருப்திப்படுத்தவில்லை. இச் சட்ட மேதைகளின் கருத்துக் கெதிராக, அரசியல் நிர்ணய சபையின் சில அங்கத்தினர்கள் குடியரசு தலைவர் நாட்டின் மிக உயர்ந்த பதவியை வகிப்பதால் உண்மையான சில அதிகாரங்கள் அவருக் குக் கண்டிப்பாகக் கொடுக்கப்பட வேண்டும் என்று வாதிட்டனர். குடியரசு தலைவர் அரசியல் சட்டத்தின் பாதுகாப்பாளர். அரசியல் சட்டத்தின் கூட்டாட்சித் தன்மையைப் பாதுகாக்க வேண்டியது அவரது தனிப்பட்ட பொறுப்பு என்று அவர்கள் எடுத்துச் சொன்னார்கள். அரசியல் அமைப்பை உருவாக்கியதில் பெரும் பங்கு கொண்ட காலஞ் சென்ற டாக்டர் K. M. முன்ஷி

தீர்மானமான முடிவுக்குப் பிறகுதான் குடியரசு தலைவரைப்பற்றிய விதிகள் ஏற்படுத்தப்பட்டன. பாராளுமன்றத்தின் சிருஷ்டிப் பொருளாகவோ, மத்திய அரசின் ஆட்சிப் பீடத்திலுள்ள அரசியல் கட்சியினால் நியமிக்கப்பட்டவராகவோ, அல்லது 1875ஆம் ஆண்டு ஃபிரான்சு நாட்டு அரசியல் சட்டத்தின்படி இருக்கும் ஃபிரான்சு நாட்டுக் குடியரசு தலைவராகவோ இருக்கக்கூடாது. அவர் சுயேச்சையாகச் செயற்படும் ஒரு சுதந்திர நாட்டின் அங்கம் என்றார்கள். அரசியல் நிர்ணய சபையினால் பாராளுமன்றத்திற்குப் புதிதாகக் கொடுக்கப்பட்ட அதிகாரங்களினால் அது தாறுமாறாக நடக்கவும் நாடு ஒரு தனிப்பட்ட அரசியல் கட்சியின் ஆதிக்கத்தில் நீண்டநாள்கள் உட்படவும் செய்யலாம் என்று அரசியல் நிர்ணய சபையில் பல கருத்துகள் உலவி வந்தன. அத்தகைய சந்தர்ப்பங்களில் பாராளுமன்ற அரசாங்கம் பாராளுமன்றத்தின் கொடுமை (அராஜகமாக Parliamentary Anarchy) யாக மாறுவதைத் தடுக்க வேண்டியது குடியரசு தலைவரின் தலையாய கடமையாகும். டாக்டர் முன்ஷி அவர்களுக்குக் குடியரசு தலைவரை ஒரு சர்வாதிகாரியாக மாற்ற வேண்டும் என்ற எண்ணமில்லை. ஆனால், குடியாட்சி வழியில் நாட்டின் வலுவிற்காகவும் முன்னேற்றத்திற்காகவும் வேண்டிய தேவையான அதிகாரங்களைக் கொண்டிருக்கும் ஓர் அரசியல் மேதையாக (Statesman) அவர் விளங்க வேண்டும் என்று கூறுகிறார். இதே கருத்தைத் திரு. சர் பனேகல் நரசிங்கராவ் (Sir Benegal Narasinga Rau) அவர்களும் கொண்டிருந்தார். திரு. இராவ் அவர்களும் குடியரசு தலைவர் இந்திய நாட்டின் ஒரு கௌரவமான பூஜ்யமாக இருப்பதை ஒப்புக்கொள்ள மறுக்கிறார். அரசியல் சட்ட விதி எண் 74 (2) அவர் எடுத்துக் கையாண்டிருக்கும் விதம் நன்றாகவும் தெளிவாகவும் அவர் கூறும் கருத்தை நிலைநாட்டுவதற்குப் போதுமானதாகவும் உள்ளது. குடியரசு தலைவருக்கு அமைச்சர்கள் குழுவால் வழங்கப்படும் ஆலோசனைகள் நீதிவிசாரணைக்கு அப்பாற்பட்டவை (Outside the purview of Judicial Review) என்று அந்த விதி கூறுகிறது. ஆகையால், திரு பனேகல் நரசிங்கராவ், 'அமைச்சரவையின் ஆலோசனைப்படி இல்லாமல் மாறுபட்ட வகையில் குடியரசு தலைவர் செயற்பட்டாலும் அத்தகைய ஒருசெயலும் நீதிவிசாரணைக்கு அப்பாற்பட்டதாகத்தான் இருக்கும்', என்று கூறுகிறார்.

இங்கிலாந்து அரசுமுறைபற்றித் திரு. சர் ஐவர் ஜென்னிங்சு (Sir Ivor Jennings) அவர்களுடைய கருத்தைத் திரு. செதல்வாத் அவர்களும் (Mr. Setalvad), திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அவர்களும், இந்தியக் குடியரசுதலைவரின் நிலைபற்றித் தங்களின் சொந்தக்கருத்துகளுக்குத் துணையாக எடுத்துக்காட்டியிருப்பினும்

திரு. ஐவர் ஜென்னிங்சு அவர்களே, வெஸ்ட் மினிஸ்டர் அரசு முறையை அதாவது ஆங்கிலேய அரசியல் முறையை (West Minister System) அப்படியே இந்திய அரசியலுடன் ஒப்பிட்டுப் பேசுவது அவ்வளவு பொருத்தமில்லை என்றும், அப்படி ஒப்பிட்டுப் பின்பற்றினல் மோசமான விளைவுகள் தவிர்க்கமுடியாததாகிவிடும் என்றும் கூறியிருக்கிருர். இங்கிலாந்து அரசுமுறைக்குப் பலம் கொடுப்பது முடியாட்சிதான். ஆனல், அத்தகைய பலம் இந்திய அரசுமுறைக்கு இல்லை. ஒரு வெடிகுண்டினல் இந்திய அரசியலமைப்பை அழித்துவிடலாம் என்று மேலும் அவர் எச்சரித்துள்ளார் (Sir Ivor Jennings says, the British System derives its Stability from the institution of monarchy while the constitution of India can be wiped out by an hydrogen bomb'). இந்திய அரசியலமைப்பு வெறும் சட்டப்படியான அதிகாரங்களைத்தான் கொண்டிருக்கிறது. நீண்டகாலப் பயிற்சியின் மூலம்தான் அரசியல் வழக்காறுகளும் அரசியல் மரபுகளும் வளர்க்கப்படவேண்டியிருக்கிறது என்று மேலும் அவர் கூறியிருக்கிருர். டாக்டர் திரு. பிரசாத் அவர்கள் இங்கிலாந்து நாட்டு அரசியல் மரபுகளை விசுவாசமாகக் கடைப்பிடித்தபோதிலும் இந்தமுறையில் தான் நாம் செயற்பட வேண்டும் என்று இந்திய அரசியல் சட்டத்தில் எந்த இடத்திலும் மேற்கோள் காட்டவில்லை என்றும், அவருக்குப் பிறகு குடியரசு தலைவர் பதவிக்கு வரும் நபர்களில் யாரேனும் ஒருவர் அன்னிய நாட்டு அரசியல் மரபுகள், எங்களுக்குத் தேவையில்லை; எங்கள் விருப்பப்படி 'சட்டப்படி' தான் நடப்போம் என்று கூறினல் அதுவும் ஏற்கப்பட வேண்டியது தான் என்று கூறினர்.

இந்திய அரசியல் சட்டம் பிரதமரின் அதிகாரங்களைச் சந்தேகமற விளக்கவில்லை. ஏனெனில், எழுதப்பட்ட அரசியல் சட்டத்தில் இதை விவரிப்பதில்லை, பொதுவாக. ஆனல், குடியரசு தலைவரின் கடமைகள், பொறுப்புகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்கள் நீதி நெறியில் இருந்து விலகிப் பொருளற்ற முறையில் உருவாக்கினர்கள் என்றும் கூறமுடியாது. எந்தச் சட்டமும் மாற்ற முடியாததன்று; எனினும், எழுதி உருவாக்கிய அரசியல் சட்டங்களை எளிதில் மாற்றுவது முறையாகாது. அரசியல் சட்டங்களின் முக்கியத்துவத்தைப் பற்றிக் கூறும் பொழுது அமெரிக்கத் தலைமை நீதி மன்றத்தின் நீதிபதி மார்ஷல் (Justice Marshall) அவர்கள் எழுதிய அரசியல் சட்டங்கள் அந் நாடுகளின் ஜீவாதார அடிப்படைச் சட்டமாகவும் மிகப்பெருமை வாய்ந்தவையாகவும் கருதப்படுவதால் அதற்குப் புறம்பான எந்த ஒரு சட்டசபை உருவாக்கிய சட்டமும் சட்ட விரோதமான செயலாகக் கருதப்படும் என்று கூறியிருக்கிருர்.

இக் கருத்து ஒவ்வோர் எழுதப்பட்ட அரசியல் சட்டத்திற்கும் பொருந்தும். எனவே, ஒரு சமூகத்தின் அடிப்படை உரிமைகளைச் சட்டசபை (Legislature) உருவாக்கிய எந்தச் சட்டமும் பாதிக்கின்றதா என்று பரிசீலிக்க நீதிமன்றங்களுக்கு அதிகாரம் உண்டு. இங்கிலாந்து, வட அமெரிக்கச் சட்டம் போன்ற (British, North American Act) சொந்த ஆட்சிக்கான அரசியல் சட்டநுதின் நுணுக்கங்களை விவரிக்கும்போது, மூலவாக்கியம் வெளிப்படையாக, ஒளிவுமறைவு இல்லாமல் இருந்தால், எதைச் செய்யச் சொல்கிறதோ அல்லது கூடாது என்கிறதோ அவை முடிவானவை என்ற லோர்பர்ன் பிரபுவின் (Earl Loreburn) கூற்றை டாக்டர் முன்ஷி எடுத்துகாட்டாகக் கூறி அதே மரபை நமது அரசியல் சட்டத்தில் கடைப்பிடித்து எதையும் குழப்பத்திற்கு இடமில்லாமல் தெளிவாகவே கூறி விட்டால் நல்லது. ('In the interpretation of a completely self-governing constitution, Earl Loreburn says, founded upon a written Organic instrument such as British North America Act of the text is explicit, the text is conclusive alike in what it directs and what it forbids') என்றார்.

டாக்டர் பிரசாத் அவர்கள், தம்முடைய அரசியல் நிலை குறித்து எடுத்த கருத்துகள் நிரூபிக்கப்பட முடியாதவை அல்ல என்று நம்புவதற்குத் தகுந்த காரணங்கள் இந்தவிதமாக இருந்தன. 1960-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 28-ஆம் நாள் இந்தியச்சட்ட நிறுவனத்தின் (Indian Law Institute) கூட்டத்தில் பேசும்பொழுது இந்தியக் குடியரசுதலைவரின் நிலைபற்றிய பிரச்சினையை உயர்மட்ட விவாதத்திற்கு மீண்டும் கொண்டு வந்தார். இங்கிலாந்து நாட்டுச் சூழ்நிலையையும் இந்திய நாட்டுச் சூழ்நிலையையும் விவரித்த டாக்டர் பிரசாத் அவர்கள இங்கிலாந்து நாட்டு முறைகளை எந்தவித மாற்றமும் இல்லாமல் அப்படியே நாம் ஏற்றுக் கொள்வது சரிதானா என்று வினவினார். இங்கிலாந்து நாட்டில் நேரத்திற்கு நேரம் அரசியல் வார்த்தைகளுக்குப் பொருள்கள் அல்லது விளக்கங்கள் சொல்லப் படுவதை நாமும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது அவ்வளவாக விரும்பத்தக்கதன்று என்றும் அக் கூட்டத்தில் குடியரசு தலைவர் பேசினார். இந்தப் பேச்சுப் பிரதம அமைச்சராக இருந்த திரு. நேரு அவர்களுக்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. பிரதம அமைச்சர் கேட்டுக் கொண்டதற்கிணங்க இந்தியத் தலைமை நீதிபதி அவருடைய பேச்சின் பிரதியை யாருக்கும் வழங்கவில்லை. கொடுக்கப்பட்டிருந்தால் ஒரு கருத்துப் புயலே வீசியிருக்கும்.

அரசியல் மரபுகளையும் வழக்காறுகளையும் புறக்கணித்து அரசியலமைப்பு விதியின்படி எங்கே அதிகாரச் சமநிலையைத் (Balance of Power) தமக்குச் சாதகமாகக் குடியரசு தலைவர் செய்து கொள்வாரோ என்ற பயம் பிரதம அமைச்சராய் இருந்த திரு. நேரு அவர்களுக்கு இருந்தது. திரு. இராஜேந்திர பிரசாத் அவர்களுக்குப் பிறகு பதவியேற்ற திரு. இராதாகிருஷ்ணன் ஒரு சட்ட வல்லுநரோ அல்லது ஓர் அரசியல்வாதியோ அல்லர். ஆனாலும், குடியரசு தலைவரின் நிலையை ஆங்கிலேய மன்னரின் நிலைக்கு ஒப்பிட்டுப் பேசுவதை ஏற்றுக்கொள்ள அவரால் முடியவில்லை. திரு. நேரு அவர்களின் உற்ற நண்பராக இருந்த போதிலும் 1962ஆம் ஆண்டு நடந்த இந்திய-சீனப் போரின் பொழுது அரசின் கவனக்குறைவை மிகக் கடுமையான வார்த்தைகளால் விமரிசித்தது பிரதம அமைச்சரை ஆச்சரியத்திலும் கோபத்திலும் ஆழ்த்தியது. குடியரசு தலைவர் பதவியின் பகட்டுக்கும் ஆடம்பரத்திற்கும், கௌரவத்திற்கும் மட்டும் ஒப்புக் கொள்ளக்கூடிய வேட்பாளரைத்தான் குடியரசுதலைவர் பதவியில் வைக்க வேண்டும் என்று மத்திய அரசை நீண்ட காலமாகத் தன்வசம் வைத்திருக்கும் அரசியல் கட்சியான காங்கிரசு கட்சி முடிவு செய்தது. அதுவே 1969ஆம் ஆண்டு அக் கட்சியின் பிளவுக்கும் வித்திட்டது. இதுவரை பதவி வகித்த குடியரசு தலைவர்கள் எல்லாருமே ஆளும் கட்சியின் வேட்பாளராகத் தான் இருந்திருக்கிறார்கள். தங்களுக்குள் குடியரசுதலைவரின் அரசியல் நிலை குறித்துக் கருத்து வேறுபாடுகள் மிகுதியாக இருந்தாலும் கட்சியின் கட்டுப்பாட்டுக்கு அடங்கி இன்றேல் ஓர் அரசியல் நெருக்கடி ஏற்பட்டது என்ற பெயர் வரக்கூடாது என்ற காரணத்தால் தங்கள் தங்கள் கடமையைக் குறிப்பிட்ட காலம்வரை பதவியில் இருந்து ஆற்றிவிட்டுப் போய் விட்டார்கள். ஆனால், ஒரு எதிர்க்கட்சியின் வேட்பாளர் குடியரசுதலைவர் பதவிக்கு வரும்பொழுது தமக்கு முன்னால் குடியரசுதலைவராகப் பதவி வகித்தவர்களின் பாதையிலேயேதான் இவரும் செல்வார் என்று உறுதியாக நம்மால் சொல்லமுடியாது.

மத்திய அமைச்சகத்தில் ஒரே அரசியல்கட்சி தொடர்ந்து நீண்டகாலமாக இருப்பதும் இதர அரசியல் கட்சிகள் ஒன்று சேர்ந்து ஒரு வலுவான எதிர்க்கட்சியாகத் தங்களை மாற்றிக் கொள்ளாததும் பாராளுமன்றத்தை ஒரே கட்சியின் சபையாக மாற்றிவிடும். அப்படி ஒரு நிலை வருமானால் அது பாராளுமன்ற அரசு முறையாக இல்லாமல் ஓர் அரசியல் கட்சியின் ஆட்சியாகச் சர்வாதிகாரமாகத்தான் மாறும். ஒரு தனிக் கட்சியின் சர்வாதிகாரப் போக்கைத் தடுக்கவல்ல ஒரு தனிப்பெரும் அதிகாரி

குடியரசுதலைவர் ஒருவர் தாம். குடியரசு தலைவர்தாம் நாட்டைக் கட்டுக்கடங்காத் தன்மைக்குச் செல்லாமலும் அதே சமயத்தில் சட்ட ரீதியான அரசின் பதவிக்கு எந்தத்தீங்கும் வராமலும் பார்த்துக் கொள்ளமுடியும். பல அரசியல் நிபுணர்களும் சட்ட மேதைகளும் பாராளுமன்ற அரசு பாராளுமன்றத்தின் அராஜக மாக மாறுவதிலிருந்து தடுக்கக்கூடிய ஒரே நபர், சட்டசபையின், மூன்றுவது அங்கமாக விளங்கும் குடியரசுதலைவர்தாம் என்ற கருத்தைக் கொண்டிருக்கிறுர்கள். மோசமடைந்து வரும் நிலை யைச் சரி செய்து முன்னேற்றப் பாதையில் நாட்டைக் கொண்டு செல்லக் குடியரசு தலைவருக்குப் போதிய அதிகாரம் உள்ளது என்று அவர்கள் மேலும் கூறுகிறுர்கள்.

அரசியல் சட்டம் உருவாக்கிய சுயேச்சையான பிரிவுகள் அரசியல் சட்டத்தை உண்டாக்கியவர்கள் நினைத்தபடி செயற்பட் டிருந்தால் இந்தப் பிரச்சினைக்கே இடமில்லாமல் போயிருக்கும். பாராளுமன்றத்திற்கு அமைச்சரவையின் மேலிருந்த கட்டுப் பாடும், ஆட்சியில் பாராளுமன்றத்தின் ஈடற்ற நிலையும் 1867-ஆம் ஆண்டில் திரு. டிஸ்ரேலி என்ற பிரதமர் கொண்டு வந்த சீர்திருத்தச் சட்டத்தால் இங்கிலாந்து நாட்டில் (Disraeli's Reform Act of 1867) தகர்க்கப்பட்டது. ஏனென்றுல், அளவு அதிகரிக்கப்பட்டதும் தரம் குறைந்து விட்டது. அரசு செயற் படும் விதத்தை விழிப்புடன் கண்காணித்து, தவறு செய்தால் கண்டித்து, பொறுப்பற்ற முறையில் செயற்பட்டாலும் அல்லது நாட்டின் நலனுக்கு ஊறு விளைவிப்பதாகவும் அதன் செயல் அமைந்தால் அதை மாற்றி அமைக்கவும் போன்ற பல கடமை களைக் கொண்டது ஒரு பிரதிநிதித்துவ சபை (பாராளுமன்றம்). அத்தகைய ஒரு பாராளுமன்றம் ஆட்சியில் அதாவது அமைச்ச ரவையில் உள்ளவர்களின் விருப்பத்திற்காகச் செயற்பட்டால் அது தனிக்கட்சியின் கூட்டமே ஒழிய உண்மையான பிரதிநிதிகளைக் கொண்ட பிரதிநிதித்துவ சபையாக இருக்க முடியாது. ஒன்றும் தெரியாதவர்களுக்கும் ஓரளவு கல்வியறிவு இல்லாதவர்களுக்கும் தங்கள் வாக்கின் உண்மையான மதிப்பை அறியாமல், அரசியல் மாறுதல்களையும், நிகழ்ச்சிகளையும் எடை போடாமல், அரசியல் கட்சிகளின் கொள்கைகள் இன்ன இன்ன என்று தெரியாமல் வாக்கை வீணடிக்கின்றனர். பாமரமக்களுக்கு ஓட்டுரிமை வழங்கு வதை மிகக் கடுமையாக எதிர்க்கிறுர் திரு. பேஜாட் (Bazehot) அவர்கள். ஓர் அறிவற்ற கும்பலின்மேல் நினைக்கமுடியாத அள விற்கு நம்பிக்கை வைப்பது மிகவும் அபாயகரமான ஒன்று என்று அவர் கருதினுர். தேர்தல் 'தொகுதி' அரசு, பிரதிநிதித்துவ அரசின் அழிவுக்கு அடிகோலும் என்று திட்ட வட்டமாக நம்பினுர் (He

feared that constituency government would spell the ruin of Parliamentary government). திரு. பேஜாட்டின் பயம் ஆதாரமற்றதன்று. அக் காலத்தில் அரசியல் கட்சியின் கண்டிப்பான கட்டுப்பாட்டில் கட்சியின் அங்கத்தினர்கள் இல்லை: சபைமுன் வரும் விஷயங்கள்மேல் அவர்கள் மனத்திற்கு எது நல்லது என்று பட்டதோ அவ்விஷயத்தின் தன்மையைப் பொறுத்துத் தம்மிச்சையாக அதன்மேல் வாக்களிக்க உரிமையிருந்தது. அக்காலத்தில் மனச்சாட்சி மலிவு விலையில் கிடைக்கக்கூடிய ஒரு பொருள் அன்று: தம்முடைய ஆதரவுக்கு அருகதையில்லாத சட்டம் என்று தோன்றினால் ஒரு சட்டசபை உறுப்பினர் தம் அரசுக்கு எதிராகக்கூட ஒரு சட்டத்தின் மேல் வாக்கு அளிக்கலாம். அக்காலத்தில் அரசியல் கட்சிகள் கூட்ட இணக்கமில்லாதபடி பிரிக்கப்படவில்லையாகையால் வாக்கெடுப்பில் ஆளுங்கட்சி தோற்றுவிட்டால் அந்தக் கட்சியின் அமைச்சரவை இராஜினாமா செய்வதில்லை. '1850-ஆம் ஆண்டு முதல் 1865-ஆம் ஆண்டு முடிய ஒவ்வொரு பாராளுமன்றக்கூட்டத் தொடரிலும் குறைந்தது 10 தடவைகளாவது அரசு தோற்கடிக்கப்பட்டிருக்கும், எனினும், இராஜினாமா செய்தது கிடையாது', என்கிறார் சர் கில்பர்ட் கேம்பியன் (Sir Gilbert Cambion) என்பவர்.

தற்காலத்தில் குடியரசு ஆட்சிகள் எல்லாக் குடிமக்களுக்கும் வாக்குரிமை அளிக்க விரும்புகின்றன. இங்கிலாந்து நாட்டில் அதிகப்படியான குடிமக்களுக்கு வாக்குரிமையைக் கொடுத்தது இயந்திர அரசியல் (Machine Politics) வளர்ச்சிக்கு உதவியது. இதனால் அரசியல் கட்சிகள்:கட்சி அமைப்பில் பலம் பொருந்தியவைகளாகவும் கட்சி உறுப்பினர்கள் மேல் ஆதிக்கம் செலுத்தவும் முற்பட்டன. இக் காரணத்தால் பாராளுமன்ற உறுப்பினர்கள் சுயேச்சையாகச் செயற்படும் தன்மையை இழந்து கட்சிச் செயற்குழு, கொறடா (Party whip) இவற்றின்கீழ் இருந்து அவற்றின் சொற்படி நடக்கவேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளானார்கள். எனவே, கட்சி மாறுபவர்கள் கட்சியிலிருந்து நீக்கப்பட்டு அவதிக்குள்ளாவார்கள் என்ற காரணத்தால் பாராளுமன்றத்தில் அதிகப்படியான உறுப்பினர்களைக் கொண்டு ஆட்சியிலுள்ள கட்சி 5 ஆண்டுகாலம் முழுமையாகப் பதவியில் இருந்து தவறு செய்தால் தண்டிக்கப்படுவோம் என்ற அச்சம் அகன்ற வகையில் சாதாரணமாகச் செயற்படும். தம் கட்சியின் நலன் அதிகரிக்கும் என்று தெரிந்தால் மட்டும் பதவியை இராஜினாமா செய்து பாராளுமன்றத்தைக் கலைத்து மறு தேர்தல் நடத்த ஆயத்தமாவார்கள். பாராளுமன்றத்தின் உள்ளேயும் வெளியேயும் எப்படி வேண்டுமானாலும் எதிர்க்கட்சிகள் ஆளுங் கட்சியின் தவறுகளைக்

கண்டித்துப் பேசினாலும் அடுத்த தேர்தல் வரும்வரை ஆளுங் கட்சியைப் பதவியை விட்டு இறக்கமுடியாது. இந் நிலையில் பாராளுமன்றம் ஒரு கட்சியின் மன்றம் என்ற நிலைக்கு வந்து விட்டது. வருடாவருடம் பாராளுமன்றம் ஆளுங்கட்சியின் செயல்களை விமரிசிக்கும் ஒரு குழுவாகப் பலம்குன்றி வருகிறது. சட்டமியற்றும் வகையிலும் அதன் அதிகாரங்கள் மிகவும் குறைந்து விட்டது. ஏனென்றால் அது ஆளுங்கட்சியின் முகவர் (Agent) போலத்தான் தன்னுடைய பாராளுமன்றக் கடமைகளைச் செய்கிறது.

இயந்திர அரசியல் வளர்ச்சியின் காரணமாகப் பிரதமர் ஒருவர் தாம் மிக்க நன்மை அடைந்தவராகத் திகழ்கிறார். பிரதமர் இன்று ஒரு சர்வாதிகாரியாகவும், பிரபுத்துவமுறை மன்னராகவும் (Federal Monarch) திகழ்கிறார். இன்று அமெரிக்கக் குடியரசு தலைவரைவிட அதிக பலம் பொருந்தியவராகவும் அமைச்சரவையிலுள்ள சகாக்கள், அவருக்குக்கீழ்ப் பணியாற்றும் ஊழியர்களாகவும் காட்சி அளிக்கிறார்கள். அமைச்சர்களின் கூட்டுப் பொறுப்பு என்பது கூட்டுக் கீழ்ப்படிதலாக மாறிச் சர்வவல்லமையுள்ள பிரதமரின் சொற்படி, மனச்சாட்சியை மறந்து, நடப்பவர்களாக இருக்கிறார்கள். இந்தக் கூற்றில் உண்மையில்லாமல் இல்லை. கடந்த உலகப்போருக்குப் பின்பு, பிரதம அமைச்சர்கள் சர்வாதிகாரத் தன்மையுடன் நடந்து கொண்டதற்குப் பல உதாரணங்களைத் தருகிறது இங்கிலாந்து நாடு. உலகப் போருக்குப் பிறகு சர்வாதிகாரத் தன்மையுடன் நடந்த பிரதமர்களுள் ஒருவர் ஹெராால்டு மாக்மில்லன் (Mr. Harold Macmillan). இவர் தம் சகாக்களுள் 7 பேரைக் கூப்பிட்டனுப்பி அவர்களைப் பதவி நீக்கம் செய்தார். 1962 ஆம் ஆண்டு ஜூலை மாதம் நடந்த இந்தச் சம்பவம் பிரதமர்களின் சர்வாதிகாரத் தன்மைக்கு ஓர் உதாரணம். பதவி நீக்கம் செய்யப்பட்ட எந்த ஓர் அமைச்சரும் பிரதம அமைச்சரின் இச் செயலை எதிர்த்துப் பேசவோ அறிக்கைவிடவோ செய்ய வில்லை. இப்படிப்பட்ட ஒரு சர்வாதிகாரம் பொருந்திய அதிகாரங்கள் பிரதம அமைச்சர்களின் கைகளில் குவிந்திருந் தாலும், இங்கிலாந்து நாட்டில் பிரதமர் ஒரு சர்வாதிகாரியாகச் செயற்பட முடியாது. எதிர்க்கட்சிகள் பிரதமரை மனம் போன போக்கில் செயற்பட விடமாட்டார்கள். விழிப்புடன் இருக்கும் இங்கிலாந்து நாட்டு மக்களின் அருவருப்பிற்கு ஆளானால் அடுத்து வரும் பொதுத்தேர்தலில் ஆளுங்கட்சி தோற்க நேரிடும். எவ்வளவு உயர்ந்த மனிதராக இருந்தாலும் இங்கிலாந்து நாட்டைப் பொறுத்தவரை எவரும் நிரந்தரமாக டௌனிங் தெரு, 10ஆம்

இலக்க வீட்டில் (No. 10, Downing Street) இங்கிலாந்து நாட்டுப் பிரதமரின் அதிகாரபூர்வமான இல்லம்) வசிக்க இயலாது. சர் வின்ஸ்டன் சர்ச்சில் (Sir Winston Churchill) போர்க் காலத்தில் மக்களின் புகழுக்குரியவராகத் திகழ்ந்தாலும் போருக்குப் பிறகு இங்கிலாந்து மக்கள் அவரைப் பிரதமராக மீண்டும் பதவியில் அமர்த்தவில்லை. கடந்த 100 வருடங்களில் இங்கிலாந்து நாட்டு அரசியலில் பல மாற்றங்கள் ஏற்பட்டு மன்னர், பிரபுக்கள் சபை (House of Lords) மட்டுமல்லாமல் மக்கள் சபையும் (House of Commons) அமைச்சரவையும் கூட (Cabinet) பேஜாட் கூறியிருப்பதைப் போல் அரசியல் அமைப்பின் ஒரு கௌரவமான அங்கமாக (Dignified part of the Constitution) மாறிவிட்டது.

எனவே, இந்தியாவிலும் உண்மையான மக்களின் இறைமை (Sovereignty) நம் நாட்டுப் பாராளுமன்றத்தில் உறைகிறது என்பதும், அமைச்சரவை, மக்கள் சபைக்குத் தன் செயல்களுக்கு பதில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறது என்பதும் உண்மைக்குப் புறம்பானவை என்றுதான் தோன்றுகின்றன. பாராளுமன்றக் குடியாட்சி அரசு செயற்படுகிறது என்று ஒப்புக்கொண்டாலும் உண்மையில் ஒரு பிரதமரின் ஆட்சிதான் நடைபெறுகிறது. இங்கிலாந்து நாட்டிலும், சுதந்திரம் பெற்ற கானடா (Canada), ஆஸ்திரேலியா (Australia) முதலிய நாடுகளிலும் பிரதமரின் அரசுதான் நடைபெறுகிறது. இப்படிப்பட்ட வளர்ச்சி தவிர்க்க முடியாது. அத்தகைய வளர்ச்சி முறையில்லாதது என்று சொல்வதிலும் பொருள் இல்லை. இந்திய அரசியல் அமைப்பில் விரும்பத்தகாத அம்சம் ஒன்று இருக்குமேயானால் அது பதவியில் இருக்கும் ஒரு நபர் தம் வாழ்நாள் முழுவதும் பிரதமராக இருக்க முயலுவது தான். பதவியில் இருப்பவர்கள் குடியாட்சி மரபிற்கு எதிராக அடுத்து வருபவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்காமல் பதவியில் ஒட்டிக் கொள்கிறார்கள். இந்திய வரலாற்றின் உண்மைகளுள் ஒன்று- இந்திய மக்கள் குடியாட்சி நிறுவனங்களுக்குப் (Democratic Institution) புதியவர்கள். மக்களின் ஏழ்மைத்தனம், படிப்பில்லாமை, சமூகச் சீர்கேடுகள், தலைவர்களை வானளாவப் புகழும் தன்மை (Hero worship) இவை மக்களின் அரசியல் அறிவு வளரப் பெருந் தடைகளாக உள்ளன. சுதந்திரம் பெற்றதும் திடீர் என்று உடனே எல்லாமக்களுக்கும் வாக்குரிமையைக் கொடுத்தது குடியாட்சி நிறுவனங்கள் செவ்வனே செயற்படுவதைக் கெடுத்துவிட்டது. இயந்திர அரசியல் வருவதற்கு முன்னால்கூட ஐரோப்பிய நாடுகளில் உள்ள பல சிந்தனையாளர்கள் எல்லா மக்களுக்கும்

வாக்குரிமை கொடுப்பதனுல் ஏற்படும் தொல்லைகள் பற்றிக் கவலை தெரிவித்தார்கள். சைபல் (Sybal) என்ற ஜெர்மன் நாட்டு எழுத்தாளர் பாமர மக்களின் வாக்குரிமை குடிமக்கள் ஆட்சிக்கு உலை வைக்கும் என்று நம்பிக்கையுடன் கூறினுர். திரு. C. K. ஆலன் (C. K. Allen) என்னும் நம் காலத்திய எழுத்தாளர் 'எல்லா மக்களுக்கும் வாக்குரிமை உள்ள நாட்டில் தேர்தல் காலத்தில் கையாளும் முறை அனேகமாக ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். மிகக் குறைந்த அறிவுள்ளவர்களுக்கு விண்ணப்பித்துக் கொள்வது, நியாயமான வாதத்திற்குப் பதில் பழமொழிகளை அள்ளி வீசிக் கவர்ச்சியாகப் பேசி அவர்களைக் கவர்வது, நேர்மைக்கும் நியாயத்திற்கும் புறம்பாக உண்மையான விஷயங்களை மறைத்து, மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய வகையில், பேசி மக்களை மயக்கிச் செயற்படுவது', என்கிருர். பிரதிநிதித்துவ ஆட்சியில் எல்லா மக்களுக்கும் வாக்குரிமை இல்லாத வேறு எந்தத் தேர்தல் முறையையும் கையாள முடியாது என்பது உண்மையென்ருலும் இம்முறையைப் பின்பற்றுவதால் ஏற்படும் தவிர்க்க முடியாத குறைகளிலிருந்து எந்தப் பாதுகாப்பும் கிடையாது. இந்தியக் குடிமக்கள் ஆட்சியிலுள்ள சில குறைகளைத் தவிர்க்க இங்கிலாந்து நாட்டில் உள்ளபடி கட்சி முறை (Party System) நன்ருக அமைக்கப்பட்டிருந்தால் போதுமானது. தற்போதுள்ள அரசியலில் அனேக மாறுதல்கள் ஏற்பட்ட போதிலும் இங்கிலாந்து நாட்டின் முடியாட்சி அமைப்பின் கவர்ச்சியான பலம் அந் நாட்டில் நிலவும் ஒப்பற்ற அரசியல் கட்சி ஆட்சி முறை தான். இக் கட்சி இரண்டாவது சார்லஸ் அரசு புரிந்த பொழுது ஏற்பட்டதாகும். அரசு அமைப்பதில் இது ஒரு முறையாக இருந்த போதிலும் எந்த அரசியல் கட்சியும் நிரந்தரமாக ஆட்சி நடத்த முடியாது. இங்கிலாந்து நாட்டு மக்களின் விழிப்புணர்ச்சி எந்த ஒரு கட்சியையும் ஆட்சி புரிவது அதன் தனிப்பட்ட உரிமை என்று கருத முடியாதபடி செய்துவிட்டது. மக்கள் விழிப்புடன் செயற்படுவதால் இங்கிலாந்து நாட்டுத் தேசிய அரசியலில் எதிர்க்கட்சிகளின் முக்கியத்துவம் பாதுகாக்கப்படுகிறது. சர் ஐவர் ஜென்னிங்சு (Sir Ivor Jennings) என்பவர் மக்கள் சபையின் முக்கியத்துவம் வாய்ந்த பகுதி எதிர்க்கட்சி தான் என்கிருர். அமெரிக்க நாட்டிலும் குடியாட்சி அமைப்பைப் பாதுகாத்துக் கொள்ள இரண்டு, மூன்று அரசியல் கட்சிகளைக் கொண்ட ஆட்சி முறையை ஆதரிக்கின்ருர்கள். இந்தியக் குடியாட்சி அமைப்பிலுள்ள மற்ருெரு பெரியகுறை சமபலம் வாய்ந்த இரண்டு அல்லது மூன்று அரசியல் கட்சிகளை உருவாக்கத் தவறியதுதான். சுதந்திரம் கிடைத்த பிறகு மத்திய அரசு ஆட்சி பீடத்தில் உள்ள ஒரே கட்சி காங்கிரஸ் தான்.

அக் கட்சி ஆட்சியில் நீடிக்க ஒரே தகுதி அல்லது உரிமை பலம் வாய்ந்த எதிர்க்கட்சிகள் இல்லாத தன்மைதான். அதிகரித்துக் கொண்டுவரும் ஊழல், மக்களிடையே கட்டுப்பாடு இல்லாத தன்மை, பாமர மக்களிடையே வளரும் ஏழ்மைத்தனம்—இவை காரணமாக 'ஜனநாயகம் பணநாயகத்தின் காலடியில் கிடக்கிறது'. சுதந்திரம் அடைந்த நாளிலிருந்து மக்களுக்குத் தலைவர்கள் எத்தனையோ வகையில் வாக்குறுதிகளை அள்ளி வீசுகிறார்களே தவிர இதுவரை சரிவர எதையும் செய்யவில்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. தேர்தல் காலத்தில் கூறப்படும் வாக்குறுதிகள் மறுதேர்தல் வரும்பொழுது சிறிது கவனிக்கப்படுகின்றது. நாட்டின் மாபெரும் பதவியிலுள்ள குடியரசு தலைவர் அரசியல் சட்டத்தின்கீழ் நிறைந்த அதிகாரங்களைப் பெற்றிருந்தும் அரசியல் சக்திகள் செயற்படும் விதத்தைக் கண்டும் காணுதபடி, சக்தியற்று எல்லாரையும்போல் நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். சுதந்திர இந்தியாவில் அரசியலில் ஊழல் ஊடுருவுவதை டாக்டர் பிரசாத் சுட்டிக்காட்டி அது காங்கிரஸ் ஆட்சியைப் புதைத்துவிடும் என்று சுட்டிக் காட்டிய பொழுது பண்டித நேரு ஆத்திரப்பட்டார்—உண்மை நிலையைப் புரிந்து கொள்ளாது. டாக்டர் பிரசாத் அழிவைத் தடுக்க இயலாது மனம் நொந்தார். டாக்டர் முன்ஷியிடம் இது பற்றிப் பேசும்பொழுது 'நாம் ஒரு பெரிய அரசியல் பரிசோதனையில் ஈடுபட்டிருக்கிறோம்; குடியரசு உருவான புதிதில் நான் ஒரு நெருக்கடி நிலையை உண்டாக்க விரும்பவில்லை', என்று கூறினார். டாக்டர் பிரசாத் குடியரசு தலைவராகப் பதவி வகித்ததால் ஏற்பட்ட அனுபவங்களையும் இந்திய அரசியல் பற்றிய தமது சொந்தக் கருத்துகளையும் ஒரு புத்தமாக வெளியிட (The years of Agony) நினைத்திருந்தார். ஆனால், அப் பணியைத் தொடங்குமுன் இறந்து போனார்.

டாக்டர் இராதாகிருஷ்ணன் டாக்டர் பிரசாத் அவர்களுக்குப் பின்பு குடியரசு தலைவராகப் பதவி வகித்தவர். அவர்கூட அவர் பதவிக் காலத்தில் அரசின் மேலிருந்த அதிருப்தியை இரகசியமாக வைத்துக்கொள்ளவில்லை. குடியரசு தினப் பேருரையில்—1967 ஆம் ஆண்டில் அவர் மத்திய மாநில அரசுகளின் எல்லா மட்டங்களிலும் ஊழல் அதிகரித்துள்ளதாகக் குற்றச் சாட்டுகள் அதிகமாக வருகின்றன என்றும், உடனடியாக நிலைமையைச் சரிசெய்ய முயலவேண்டும் என்றும் கூறினார். அவருக்குப் பின்வந்த டாக்டர் ஜாகீர் உசேனும் திரு. வி. வி. கிரியும் தேசிய முன்னேற்றம் ஊழலால் பாதிக்கப்படுவதைக் கடுமையாக விமரிசித்து ஆட்சி முறை மதிநுட்பத்துடன் அமைய வேண்டும் என்று அரசிற்கு எடுத்துச் சொன்னார்கள்.

இவர்களுடைய அறிவுரைகள் செவிடன் காதில் ஊதிய சங்காகத் தான் போய்விட்டது. அரசியல் சட்ட விதி எண் 368-ஐத் திருத்தி அமைக்கும் வகையில் உண்டாக்கப்பட்ட 24 ஆவது அரசியல் சட்டத் திருத்தத்தின்படி அரசியல் சட்டத்தின் எல்லா அம்சங்களையும், அடிப்படை உரிமைகள் உட்படத் திருத்தி அமைக்கப் பாராளுமன்றத்திற்குப் பரிபூரண உரிமை கொடுக்கப்பட்டதில், தமது அங்கீகாரத்தை இத் திருத்தச் சட்டத்திற்குக் கொடுப்பதில் சட்ட பூர்வமான பொறுப்பு (Statutory obligation) இருந்தும், குடியரசு தலைவர், பிரதமர் கோடிட்ட இடத்தில், சட்ட வல்லுநரைக் கலந்து அத்தகைய ஒரு சட்டத் திருத்தத்தினால் ஏற்படும் விளைவுகளைச் சீர்தூக்கிப் பார்க்காமல், கையெழுத்திட்டு விட்டார் என்று விஷயமறிந்த வட்டாரங்கள் தெரிவிக்கின்றன. பாராளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்டது என்ற ஒரே காரணத்திற்காக ஒரு சட்டத்திற்குக் கையெழுத்துக் கொடுத்து அச் சட்டத்தை அங்கீகரிப்பது என்றால் அதற்குக் குடியரசு தலைவர் என்ற ஒரு பதவியே தேவையில்லை என்று தான் சொல்ல வேண்டியிருக்கிறது. எத்தகைய சட்டம் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்டாலும், அந்தச் சட்டத்தால் ஏற்படும் நன்மைகள் என்ன? சமுதாயத்தில் எவ்வளவு பேர் அதனால் பாதிக்கப்படுவார்கள் அல்லது பயனடைவார்கள் என்று அலசிப் பார்த்து அச் சட்டத்தின் தகுதியைப் பொறுத்து அதற்கு அங்கீகாரம் கொடுக்கப்பட வேண்டும். இது ஒரு குடியரசு தலைவரின் சட்ட பூர்வமான கடமையாகும். பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட எந்தச் சட்டத்திற்கும் உடன் குடியரசுதலைவர் தம் அங்கீகாரத்தைக் கொடுக்க வேண்டும் என்று எந்த விதியும் அரசியல் சட்டத்தில் கூறவில்லை. இருந்தும் அரசியல் சட்டத்தில் உண்டாக்கப்படும், முக்கிய, புரட்சிகரமான மாறுதல்களுக்குக்கூட, (24-ஆவது திருத்தச் சட்டம் போன்று) குடியரசுதலைவர் சற்றும் காலதாமதம் செய்து ஆராயாமல் உடன் அங்கீகாரம் கொடுத்தது.கையெழுத்து இடுவதற்குத்தான் குடியரசு தலைவர் இருக்கிறார் என்று பத்திரிகைக்காரர்கள் கூறுவதில் உண்மையிருக்கிறது என்பதை நிரூபணம் செய்வது போல் அமைகிறது.

எனவே, குடியரசுதலைவரின் அதிகாரங்கள் என்னென்ன என்று நாட்டின் தேவைகளை மனக்கண்முன் நிறுத்தி ஆராய்வது மிக அவசியமாகிறது. நாட்டில் வளர்ந்துவரும் அரசியல் ஊழல்களைத் திரு. ஜெயப்பிரகாச நாராயணனைப் போன்ற சர்வோதயத் தலைவர்கள்கூட வெளிப்படையாகக் கூறிக் குற்றம் சாட்டியுள்ளனர். 'ஜனநாயகத்தையும், சோசியலிசத்தையும் விட்டு விட்டாலும் இந்தியநாடு ஓர் ஒழுக்க மறுமலர்ச்சி இன்றி வாழ

முடியுமா'? என்று மிகவும் துணிகரமாக வினவுகிறார். அமைச்சர் குழு பாராளுமன்றத்திற்கே பொறுப்பானது; வேறு எதற்கும் அது தன் செயலுக்குப் பொறுப்பானது இல்லை என்று கூறுவது இந்திய அரசியல் சூழ்நிலையில் அவ்வளவு பொருத்தமாக இல்லை என்று நாம் கூறலாம். இதற்கு முன் நாம் பார்த்தபடி, இங்கிலாந்து நாட்டிலேகூடக் குடியாட்சி அரசாங்கத்தைப் (Parliamentary Govt.) பிரதமரின் ஆட்சி (Prime ministerial Govt.) மாற்றி அமைத்தாலும் அங்குள்ள சிறந்த கட்சி முறை (Party System) பிரதமர் ஒரு சர்வாதிகாரியாக மாறாமல் பார்த்துக் கொள்வதுடன் பாராளுமன்றமும் பயனற்றதாக இல்லாதபடி பார்த்துக் கொள்கிறது. இதற்கு மாறாக இந்தியாவில் 25 ஆண்டுகளுக்கு மேல் பாராளுமன்றம் செயற்பட்டபோதிலும் அது ஒரே கட்சியின் ஆதிக்கத்தில் இருந்து வருகிறது. இதனால் செயற்குழு, சட்டத் துறைக்கு அதன் செயல்களுக்குப் பதில் சொல்லியாகவேண்டும் என்பது உண்மையில் ஒரு கட்சி தனக்குத்தானே பதில் சொல்லிக் கொள்வதற்கு ஈடாகும். எதிர்க்கட்சிகள் பலம் குறைந்து இருப்பதால் அவர்களின் கருத்துகளை ஆளுங்கட்சி உதாசீனம் செய்வதுடன் தனக்கு இருக்கும் உறுப்பினர்களின் பலத்தால் நியாயமான எதிர்ப்புகளையும் நிராகரித்துத் தன்னிச்சையாகச் செயற்படுவதற்கு இது வழி வகுக்கின்றது. பாராளுமன்ற விவாதங்களின் தரம் குறைந்து போவது, உறுப்பினர்களின் அலட்சியப் போக்குப் பல தடவைகளில் கூட்டத்தை நடத்துவதற்கு வர வேண்டிய நபர்களின் குறைந்தபட்ச எண்ணிக்கை (Quorum) கூட இல்லாமல்போவது, உறுப்பினர்களுக்குள் கைகலப்பு போன்றவை மிக மோசமான அளவிற்குப் பாராளுமன்றத்தின் கௌரவத்தையும் உபயோகத்தையும் குறைக்கின்றது. சபையில் நல்லொழுக்கம், மரியாதைக் குறைவை மக்கள் சபையின் சபாநாயகர் வெளிப்படையாகவே சொல்லும் அளவிற்கு இருக்கிறது. இக் காரணங்களால் குடியரசு தலைவர் பாராளுமன்றத்தின் மூன்றாவது சபையாகச் செயற்படுவது அவசியமும் அவசரமும் ஆகிறது. இந்தியக் குடியரசு தலைவரை இங்கிலாந்து மன்னருக்கு ஒப்பிட்டுப் பேசுவதைப் போலப் பிழையானது வேறு எதுவும் இல்லை என்று சொல்லத்தான் தோன்றுகிறது. ஏனெனில், இவ் விருவரின் கடமைகள் இரு நாடுகளும் எந்த அளவிற்கு வேறுபட்டிருக்கின்றவோ அந்த அளவுக்கு மாறுபட்டிருக்கின்றன. இங்கிலாந்து மன்னர் எந்தப் பிழையும் செய்ய முடியாது. ஏனெனில், அவருக்கு அதிகாரங்களே இல்லை. அப்படியே செய்திருந்தாலும் அது அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே செய்யப்பட்டிருக்கும். ஆனால், இந்தியக் குடியரசுதலைவர் குற்றம் சாட்டப்பட்டுப் (Impeachment) பதவி நீக்கம் செய்யப்படலாம். அரசியல்

சட்டத்தை உருவாக்கியவர்கள் இந்தியக் குடியரசு தலைவரை ஒரு யாகத்தில் பலியிடும் ஆடாகக் கருதாமையால்தான் ஆட்சியில் அவருக்குச் சில முக்கிய அதிகாரங்களை ஒதுக்கினார்கள். அமைச்சரவையிடமிருந்து ஒரு நேர்மையான திறமையான ஆட்சியையும் அவர்கள் பணியாற்றுவதில் நல்லொழுக்கத்தையும் உண்மையையும் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் கேட்கக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் கொடுக்கப்படவேண்டும். தேர்தல் சமயத்தில் வாக்களித்த வாக்குறுதிகளை ஆட்சிக் காலத்தில் நிறைவேற்றாவிட்டால் கடமையைச் செய்யத் தவறியவர்கள் என்று குற்றம் சாட்டி ஆட்சிப் பொறுப்பில் இருந்து நீக்கிவிடக் குடியரசு தலைவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டும். குடியரசு தலைவரே மக்களுக்கு ஆளுங்கட்சி கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற, வேறு ஒருவரை அமைச்சரவை அமைக்க அழைக்காமல், நேர்முக ஆட்சியை மேற்கொள்ளவேண்டும். இந்த 25 ஆண்டுகளில் எத்தனையோ மாநில அரசுகள் அரசியல் சட்ட விதி எண் 356–ன் கீழ்க் குடியரசு தலைவரின் நேர்முக ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. சுருங்கக்கூறின், மாநில அரசு நிருவாகத்தை நல்லமுறையில் அமைப்பதுதான் இதன் நோக்கம். குடியரசுதலைவரின் ஆட்சி ஏற்பட்ட மாநிலங்களில் நிருவாகம் திறம்பட நடந்தது என்று கொண்டால் அத்தகைய ஒரு திறமையான ஆட்சியை ஏன் நாடு முழுவதிற்கும் கொண்டு வரக்கூடாது? மேலும், குடியரசு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் நாட்டின் நலனில்அக்கறை கொண்டு செயற்படுகிறவராகவும், மக்களின் மரியாதைக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானவராகவும் இருக்கவேண்டும். நல்லொழுக்கத்திலும் ஆளும் திறமையிலும் சிறந்து விளங்குபவராகவும் இருக்க வேண்டும். திரு. பேஜாட் இங்கிலாந்து பிரதமர் திரு பால் மர்ஸ்டனைப்பற்றிக் (Palmerston) குறிப்பிடும்பொழுது அவரின் தோற்றமே ஒரு சக்தியாக இருந்தது என்கிறார். இனி வரப் போகிற இந்தியக்குடியரசு தலைவர்களும் இம்மாதிரி இருந்தால் நல்லது. திரு M. C. சதல்வாத் (M. C. Setalvad)தைத் தலைவராகக் கொண்ட ஆய்வுக்குழு நிருவாகச் சீர் அமைப்புக்குழுவிடம் மத்திய மாநில அரசுகளுக்கிடையே உள்ள உறவுகளைப் பற்றிக் கருத்துத் தெரிவிக்கும் பொழுது மாநில ஆளுநர்கள் மிகுதியான தகுதிகளைப் பெற்றிருக்கவேண்டும் என்கிறது. இந்த நிபுணர்குழு பொது நிருவாகத்திலும் தேசிய ஒருமைப்பாட்டை வளர்ப்பதிலும் ஆளுநர் திறம்படச்செயலாற்ற வேண்டும் என்றும் தேசிய ரீதியில் ஒப்பிடும்படி மாநில நிருவாகம் அமையவேண்டும் என்றும் பரிந்துரைத்தது. மேலும், ஆளுநரின் தகுதி திறமையைப் பற்றிக் கூறும் பொழுது, 'அறிவும், சக்தியும், தீர்ப்பும் உயர்ந்து இருத்தல்

வேண்டும்; அரசியல் சமூக சக்திகளை நன்கு புரிந்து செயற்பட வேண்டும்; புத்தி கூர்மை, மதிநுட்பம்,தைரியமாக ஒருகாரியத்தில் இறங்கும் குணம், பொறுமை ஆகியவை நிறைந்து அறிவுக் கடலாகத் திகழவேண்டும்; பொது அறிவும் ஆட்சிபுரிவதில் நிருவாகத் திறமையும் அரசியல் விஷயங்களும் நன்கு அமையவேண்டும்', என்று கூறியிருக்கிறது. இச் சிறந்த குணங்கள் ஓர் ஆளுநருக்கு இன்றியமையாததாக இருக்க வேண்டுமானால் ஒரு துணைக் கண்டத்தின் குடியரசுதலைவருக்கு இதைவிட எத்தனை சிறந்த குணங்கள் அம்சங்கள் இருக்க வேண்டும்? நாட்டின் நிருவாகத்தைத் திறம்படச்செய்ய இந்தப் பரந்த நாட்டில் ஒரு நல்லவரைத் தேர்ந்தெடுப்பது கடினமான காரியமில்லை. ஒரு மோசமான நெருக்கடியிலிருந்து நாட்டைப் பாதுகாக்க அரசியல் கட்சிக்கு வெளியில் இருந்து குடியரசுதலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டால் அரசியற் கட்சிகளின் இடையூறுகள் ஏதுமின்றிச் சுதந்திரமாகத் தமக்கு நல்லது என்று தோன்றியவற்றைச் செய்யக் குடியரசு தலைவருக்கு ஒரு வாய்ப்பு இருக்கிறது. எவ்வளவு தான் மேன்மையான சிறப்புகளைப் பெற்றிருந்த போதிலும் ஓர் அரசியல் கட்சியின் ஆதரவால் குடியரசு தலைவர் பதவிக்கு வந்தால் அவர் திறம்பட நாட்டு மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான வகையில் செயற்பட :முடியாது என்பது நம் அனுபவத்தில் கண்ட ஓர் உண்மை. கட்சியின் ஆதரவால் பதவிக்கு வந்த எந்தக் குடியரசு தலைவரும் ஆதரவு கொடுத்த கட்சிக்கு ஆதரவு கொடுப்பது ஓர் ஒழுக்கக் கடமையாக (Moral obligation) நினைத்துச் செயற்படுகிறார்கள். குடியரசு தலைவர் பதவி தேர்தலில் அரசியற் கட்சிகள் பங்கு கொள்ளாமல் செய்து விட்டால் அத்தகைய சங்கடங்களுக்குக் குடியரசு தலைவர்கள் ஆளாகாமல் சுதந்திரமாகத் தங்கள் கடமைகளைச் செயலாற்ற முடியும். V. B. குல்கர்னி (V. B. Kulkarni) என்பவர் ஒரு புதிய குடியரசு தலைவர் தேர்தல் முறையைப் பற்றி ஒரு கட்டுரையில் குறிப்பிட்டு இருக்கிறார். அவருடைய கருத்துகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

'இப்பொழுது நடை முறையில் உள்ளபடி தேர்ந்தெடுக்கப்பட்ட மாநிலச் சட்ட சபை உறுப்பினர்களும் பாராளுமன்றத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களும் கொண்ட ஒரு தேர்தல் கல்லூரியினால் குடியரசு தலைவர் தேர்ந்தெடுக்கப்படாமலும் அமெரிக்க நாட்டில் உள்ளதுபோல் மக்களால் தேர்ந்தெடுக்கப்படாமலும் இருக்க வேண்டும். ஏனெனில், இவ்விரண்டு விதத் தேர்தல்களிலும் அரசியல் கட்சி (ஆளுங்கட்சி) ஆதரிக்கும் நபரே தேர்ந்தெடுக்கப்படுவார். குடியரசு தலைவரின் பதவி அரசியல் செல்வாக்கிற்கும் பரிந்துரைக்கும் அப்பாற்பட்டதாக இருக்க

வேண்டும். ஆகையால், மாநிலங்களின் உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகளும் தலைமை நீதிமன்ற நீதிபதிகளும் சேர்ந்து ஒரு தேர்தல் கல்லூரியாகச் செயற்பட்டுக் குடியரசு தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இத்தகைய ஒரு தேர்தல் முறை சிறப்பு வாய்ந்த தாகத் தெரிகிறது. உண்மையான பிரதிநிதித்துவமுறை ஏற் படும் வரையிலும் அரசியலை உண்மையாகப் புரிந்து கொள்ளக் கூடிய மனப்பக்குவம் வரும் வரையிலும், அமைச்சரவை பாராளு மன்றத்திற்குப் பொறுப்பானதாக இருப்பதோடு அல்லாமல் குடியரசு தலைவருக்கும் பொறுப்பு வாய்ந்ததாக இருக்க வேண் டும். மத்திய அரசின் செயற்குழுவைத் தட்டிக் கேட்கக் குடியரசு தலைவரைவிட அதிகாரம் பொருந்திய வேறு ஒருவர் இல்லை. மேலே குறிப்பிட்டபடி நீதிபதிகளால் தேர்ந்தெடுக்கப்படும் குடியரசு தலைவர் தேசியத் தேவைகளைச் சிறந்தமுறையில் நிறைவு செய்வார்.

மேற்கூறிய ஆலோசனைகள் குடியாட்சிக்குப் புறம்பான வைகள் என்று ஒதுக்கித் தள்ளிவிடக்கூடாது. அது ஒரு தற்கால அரசுதானே ஒழிய நிரந்தரமாக அத்தகைய ஓர் ஆட்சி ஏற்பட வேண்டும் என்று கூறவில்லை. சுதந்திரம் கிடைத்த பின்பு நாட் டில் பல்வேறு அரசியற் கட்சிகள் தோன்றிவிட்டன. அவற்றுள் சில பிரிவினைக்கு வழி கோலுகின்றன. சுதந்திரம் கிடைத்ததி லிருந்து நாட்டு மக்களுக்கு நன்மைகள் பல புரிந்திட அரசியற் கட்சிகளே பெரும் முட்டுக்கட்டையாக இருக்கின்றன என்பது மறுக்கப்படாத உண்மை. அத்தகைய நிலைக்குக் காரணம் நாம் சிறந்த முறையில் கட்சிகளை அமைக்காமையே என்பதை ஒப்புக் கொண்டே ஆகவேண்டியிருக்கிறது. பல்வேறு கட்சி முறை யினுல் (Multi-Party System) ஃபிரான்சு நாட்டில் எவ்வாறு அர சாங்கங்கள் அடுத்தடுத்துக் கவிழ்ந்தன என்பதை ஃபிரான்சு நாட்டு வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் விளங்கும். இந்தியாவிலும் அத்தகைய பல்கட்சி முறையைக் கடைப்பிடித்தது வருத்தத்திற் குரிய ஒன்றுதான். இதனுல்தான் நமது தேசம் இன்னும் முன்னேற் றம் அடையாமல் அப்படியே இருக்கிறது. நமக்கு என்ன குறைவு? ஏன் முன்னேறவில்லை? ஆள் பலம் இல்லையா? நமக்கு நல்ல கல்வி முறைகள் இல்லையா? வாழ்க்கையில் வசதிகள் பெற இங்கு வாய்ப்புகள் இல்லையா? எது இல்லை? நாம் இந்தியத் துணைக் கண்டத்தில் இருக்கும் மிகப் பெரிய சமுதாயக் கூட்டம். நமக்குத் திறமை இருக்கிறது; வழிமுறைகளும் இருக்கின்றன. ஆனுல், நம்முடைய தேசிய உணர்வுகள் ஓங்கி அடங்கிவிட்டன. தேசிய உணர்வுகள் ஓங்கி இருந்த காலம் சுதந்திரம் அடைவதற்கு முன்னுல்

இருந்த காலம். தேசிய உணர்வுகள் மழுங்கி இருப்பதற்குக் காரணம் குறுகிய மனப்பான்மையுள்ள பல அரசியற் கட்சிகள் இந்திய மண்ணில் வேரூன்ற இடம்கொடுத்ததுதான். ஆகையால், இப்பொழுதுள்ள அரசியல் மரபுகளை யெல்லாம் மூட்டை கட்டி வைத்து நாடு முன்னேற அரசியற் கருத்து வேறுபாடுகளைக் களைந்து குடியரசு தலைவரினுல் ஆன அரசை ஐந்து ஆண்டுகளாவது ஏற்போம். அப்படி ஏற்பட்டால் ஓர் ஐந்து ஆண்டுகளாவது கட்சிப்பூசல்கள் ஒழியும். நாட்டில் உற்பத்தித் திறனும் அதிகரிக்கும். அரசியற்கட்சிகளின் உண்மையான மனப்போக்குகளை மக்கள் புரிந்து கொள்ளும் வரையில் ஆட்சி குடியரசு தலைவரின் கையில் இருக்கட்டும். பின்பு, ஓரளவு முன்னேற்றம் அடைந்துவிட்டது என்று ஆகிவிட்டால் பிரதம அமைச்சரின் தலைமையிலான அமைச்சரவை ஆட்சியை மீண்டும் ஏற்போம். குடியரசு தலைவரின் ஐந்து ஆண்டு நேரடி ஆட்சி நிருவாகச் சீர்கேடுகளைச் சீர்திருத்த அமையும் ஓர் ஆட்சி. ஐந்து ஆண்டுகளுக்காக ஏற்படுத்தப்பட்ட குடியரசு தலைவரின் ஆட்சி ஐந்து ஆண்டு முடிவில் நிரந்தர ஆட்சியாக அதாவது குடியரசு தலைவராக இருந்தவர் சர்வாதிகாரியாக மாறிவிட்டால் மக்களாட்சி என்ற சொல்லுக்கே இடமில்லாமல் போய்விடுமே என்று சிலர் அச்சப்படுவது நியாயமானதுதான். ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு குடியரசு தலைவர் தேர்தல் நடத்திப் பாராளுமன்றத்தில் அதிக உறுப்பினர்களைக் கொண்ட பெரும்பான்மைக் கட்சியின் தலைவரை அமைச்சரவை அமைக்க அழைக்கவேண்டும் என்றும், இதற்கு ஐக்கிய நாடுகள் சபை பொறுப்பாளராக (guardian) இருந்து இந்த ஏற்பாடு சரிவர நடக்க ஆவன செய்ய வேண்டும் என்றும் ஓர் ஏற்பாட்டை நாம் செய்துகொள்ளலாம்.

# APPENDIX I

*Functions Assigned to the President under the Constitution of India.*

**PROVISIONS** | **FUNCTIONS**

Art. 3, Proviso : Recommendation and assent to Bills providing for alteration, etc., of boundaries of States.

Art. 18, Clauses (3) and (4) : Consent to acceptance of foreign titles and gifts.

Art. 31, Clause (3) : Assent to pending Bills passed by State Legislatures, acquisition of property.

Art. 31, Clause (6) : Certification of Law enacted not more than 18 months, before and within three months of commencement of constitution.

Art. 53, Clause (2) : Supreme Command of Defence Forces.

Art. 60, Oath-taking before entering upon office.

Art. 72, Clause (1) : Grant of pardons, remissions and commutation of sentences, etc.

Art. 75, Clause (1) : Appointment of Prime Minister and other Ministers.

Art. 76, Clause (1) : Appointment of Attorney-General.

Clause (2) : Assignment of duties to the Attorney-General.

Art. 76, Clause (4) : Determination of remuneration of Attorney-General.

Art. 77, Clause (2) : Making of rules for authentication of orders, etc., executed by Union Government.

Clause (3) : Making of rules for transaction and allocation among Ministers of Business of Government.

Art. 78, (*b*): Calling for information from Prime Minister regarding affairs of administration and proposals for legislation.

Art. 80, Clause (1) (*a*): Nomination of 12 members of Rajya Sabha.

Art. 85, Clause (2): Summoning, Prorogation and Dissolution of Houses of Parliament.

Art. 86, Clauses (1) and (2): Addressing and sending message to Parliament.

Art. 87, Clause (1): Address to Parliament at commencement of every session.

Art. 95, Clause (1): Appointment of Acting Speaker of the Lok Sabha.

Art. 98, Clause (3): Making of rules for recruitment, etc., of Secretariat staff of Parliament.

Art. 99: Appointment of proxy before whom members of Parliament could take oath.

Art. 101, Clause (2): Making of rules concerning dual membership of Parliament and State Legislature.

Art. 103, Clause (1): Decision on questions as to disqualifications of members of Parliament.

Clause (2): Obtaining of opinion of Election Commission on such questions.

Art. 108, Clause (1): Notification of intention to summon Parliament in joint sitting for consideration on Bills on which there is disagreement.

Clause (3): Summoning of Parliament in joint sitting for above purpose.

Art. 111: Assent to Bills.

Proviso: Returning of Bills to Parliament for reconsideration.

Art. 112, Clause (1): Getting annual budget placed before Parliament.

Art. 113, Clause (3): Recommendation for demands for grants.

Art. 115, Clause (1): Getting demands for Supplementary grants placed before Parliament.

Art. 117, Clause (1): Recommendation for introduction of Money Bills.

Clause (3): Recommendation of Parliament for consideration of Bills involving expenditure from consolidated Fund.

Art. 118, Clause (3): Making of rules of procedure in regard to joint sittings, etc., of both Houses of Parliament.

Art. 123, Clause (1): Promulgation of Ordinances during recess of Parliament.

Clause (2) (*h*): Withdrawal of Ordinances.

Art. 124, Clause (2): Appointment of Judges of Supreme Court.

Clause (3) (*c*): Obtaining opinion as to whether a person is a 'distinguished jurist' for appointment as Judge of the Supreme Court.

Clause (4); Removal of a Judge of the Supreme Court.

Art. 124, Clause (6): Appointment of Proxy before whom Supreme Court Judges could take oath

Art. 126: Appointment of Acting Chief Justice of Supremet Court.

Art. 127, Clause (1): Consent to appointment of ad hoc Judges of Supreme Court.

Art. 128: Consent to attendance of retired Judges of Supreme Court Determination of allowances of such retired Judges.

Art. 130: Approval of alternative seats of Supreme Court.

Art. 142, Clause (1): Determination of manner of enforcement of decrees, etc , of Supreme Court.

Art. 143, Clause (1): Reference of questions of law etc. to Supreme Court.

Clause (2): Reference of certain disputes involving treaty, engagement, Sanad, etc., to Supreme Court for opinion.

Art. 145, Clause (1): Approval of rules of procedure of Supreme Court.

Art. 146, Proviso to Clause (1): Making of rules for consultation with Union Public Service Commission regarding appointment of officials of Supreme Court.

Proviso to Clause (2): Approval of rules governing salaries, etc., of officials of Supreme Court.

Art. 148, Clause (1): Appointment of Comptroller and Auditor-General.

Clause (2): Appointment of proxy before whom Auditor-General could take oath.

Clause (5): Making of rules regarding conditions of service of personnel of the Audit and Accounts Department and prescribing powers of Auditor-General.

Art. 150: Approval of form in which accounts shall be kept.

Art. 151, Clause (1): Getting Audit Report laid before Parliament.

Art. 155: Appointment of Governor of State.

Art. 160: Making of Provision for discharge of Governor's function in certain contingencies.

Art. 201: Assent to State Bills.

Proviso: Returning of State Bill to State Legislature for reconsideration.

Art. 213, Proviso: Instructions to Governor regarding Promulgation of Ordinances.

Art. 216: Determination of Constitution of High Courts.

Art. 217, Clause (1): Appointment of High Court Judges. Proviso (*b*) to Clause (1); Removal of High Court Judges.

Art. 222, Clause (1): Transfer of a Judge from one High Court to another.

Art. 223: Appointment of Acting Chief Justice.

Art. 224: Consent to appointment of additional and acting Judges at High Courts.

Art. 224-A: Consent to appointment of retired Judges at sitting of High Courts.

Art. 239: Administration of Union Territories.

Art. 254, Clause (2): Assent to inconsistency between Laws made by Parliament and laws made by the legistatures of States.

Art. 258, Clause (1): Entrust of Union function to States in certain cases.

Art. 263, Establishment of Inter State Council and defining its Organization and procedure.

Art. 267, Clause (1): Making of advances from contingency fund to meet unforeseen expenditure.

Art. 274, Clause (1): Prior recommendation of President required to Bills affecting taxation in which States are interested.

Art. 275, Clause (2): Issue of order in regard to grants from the Union to certain States.

Art. 280, Clause (1): Constitution of Finance Commission and appointment of chairman and four members thereof.

Clause (3) (*c*): Reference of any matter to the Finance Commission in the interests of sound finance.

Art. 281, Getting recommendations of Finance Commission laid before Parliament.

Art. 283, Clause (1): Making of rules for the administration of the Consolidated Fund and the Contingency Fund.

Art. 288, Clause (1): Making of provisions for regulation of taxes on water or electricity imposed by existing laws in states involving river valley projects.

Art. 288, Clause (2): Assent to Law made by State Legislature in regard to taxation in respect of water or electricity in certain cases. Consent to rules or orders under such law.

Art. 299, Clause (1): Authorization of persons for execution of contracts, etc.

Art. 304, Proviso: Sanction to introduction of Bill imposing restrictions on freedom of trade, etc., in State Legislature.

Art. 305: Saving of existing laws and laws providing for State monopolies.

Art. 309. Proviso: Direction of person to make rules regulating recruitment, conditions of service, etc., of Union Government Servants.

Art. 310, Clause (2): Making of provision for payment of compensation to servant on contract who is required to vacate his post before expiry of contract period.

Art. 311, Clause (2) (*c*): Taking of decision that person to be removed from service should not be given opportunity to explain in the interests of security of State.

Art. 315, Clause (4): Approval to Union Public Service Commission serving needs of a State.

Art. 316, Clause (1): Appointment of chairman and other members of Union Public Service Commission and Joint Commission.

Art. 316, Clause (1-A): Appointment of acting chairman of the Union Commission or Joint Public Service Commission.

Art. 317, Clause (1): Removal of chairman or a member of a Public Service Commission.

Clause (2): Suspension of chairman or member of Union or Joint Service Commission.

Clause (3) (*c*): Obtaining opinion before removal whether a chairman or a member of Public Service Commission is unfit to continue in office.

Art. 318: Making of regulations for determining number and conditions of service of the Union Commission and their staff.

Art. 320, Clause (3): Reference of matters to the Union Public Service Commission.

Art. 320, Proviso to Clause (3): Making of regulations specifying matters in which it shall not be necessary to consult a Public Service Commission

Art. 323, Clause (1): Getting annual report of Union Commission laid before Parliament.

Art. 324, Clause (2): Fixation of number of members of Election Commission and appointment of Chief Election Commissioner and other Election Commissioners.

Clause (4): Appointment of Regional Commissioners to assist Election Commission.

Clause (5): Determination of conditions of service and tenure of office of Election and Regional Commissioners.

Clause (6): Provisions of staff to Election Commission or Regional Commissioners.

Art 331: Nomination of not more than two Anglo-Indians to the house of the people in certain contingencies.

Art. 338, Clause (1): Appointment of Special Officer for Scheduled Castes and Scheduled Tribes.

Art. 338, Clause (2): Prescribing intervals at which Special Officer shall submit reports and getting such reports laid before Parliament.

Clause (3): Specification of certain additional Backward Classes to be included in Scheduled Castes and Tribes.

Art. 339, Clause (1): Appointment of commission to report on administration of Scheduled areas and welfare of Scheduled Tribes in certain States. Making of incidental or ancillary provisions in regard to the Commission.

Art. 340, Clause (1): Appointment of a commission to investigate conditions of Backward Classes.

Clause (2): Getting report of such commission laid before Parliament.

Art. 341, Clause (1): Specification by public notification of Scheduled Castes in relation to particular States.

Art. 342, Clause (1): Specification by public notification of Scheduled Tribes in relation to particular States.

Art. 343, Proviso to clause (2): Authorization of the use of Hindi during the 15-year period in addition to English and of Devanagari numerals for Union Official purposes.

Art. 344, Clause (1): Constitution of Commission on Hindi at the end of five and ten-year periods consisting of Chairman and other members representing different languages.

Clause (2) (*e*): Reference of any matter other than those specified in sub-clauses (*a*) to (*d*) to the Commission.

Clause (6): Issue of directions in accordance with report of Commission.

Art. 347: Direction as to official recognition of a State Language in State concerned.

Art. 348, Clause (2): Consent to use of Hindi or any other official language in High Courts.

Art. 349: Sanction to introduction of Bill or amendment relating to language to be used in High Courts, Acts, Bills, etc., during the 15-year period.

Art. 352, Clause (1): Proclamation of Emergency.

Clause (3): Obtaining satisfaction that there is imminent danger of war, external aggression, etc., for proclamation of emergency.

Art. 354, Clause (1): Direction as to application of provisions relating to distribution of revenues during the period of emergency.

Art. 356, Clause (1): Proclamation in case of failure of constitutional machinery in the State.

Sub-clause *(c)*, Clause (1): Making of provisions for suspension of parts of the Constitution relating to any body or authority in the State.

Art. 357, Clause (1) *(a)*: Exercise of power of the State Legislature conferred by Parliament, either directly or by delegation of such power to any other authority.

Clause (1) *(b)*: Making of laws conferring powers and imposing duties or authorising to conferring of powers and imposition of duties on Union or its Officers.

Clause (1) *(c)*: Authorisation of expenditure from Consolidated Fund of the State pending sanction by Parliament.

Art. 359, Clause (1): Suspension of enforcement of rights conferred by Part III during emergencies.

Art. 360, Clause (1): Proclamation of financial emergency.

Clause (3): Giving of additional directions to states to observe certain canons of financial propriety during such emergency.

Art. 360, Clause (4) *(a)* (ii): Consideration of money Bills etc., after they are passed by State Legislature.

Clause (4) *(b)*: Issue of direction as to applicability with specified allowances of Union servants during financial emergency.

Art. 364, Clause (1): Issue of direction as to applicability with specified modifications of certain laws to certain major ports or aerodromes.

Art. 365: Suspension of the constitution in respect of a State in case of failure by that State to comply with or to give effect to directions given by Union.

Art. 366, Clause (7): Determination of meaning of terms; 'corresponding Indian State', or 'corresponding State' in case of doubt.

Clause (22): Recognition of 'Ruler' of the State.

Art. 367, Proviso to clause (3): Declaring a state to be not a foreign State for specific purposes.

Art. 368: Assent to Bill amending constitution.

Art. 370, Clause (1) *(b)* (i): Declaration as regard certain matters with respect to Jammu and Kashmir.

Clause (1) *(b)* (ii): Specification of additional matters on which Parliament will have power to make laws for Jammu and Kashmir.

Clause (1) (*d*): Specification of exceptions and modifications as regards applicability of constitution to Jammu and Kashmir.

Clause (3): Declaration as regards extent and duration of applicability of Art. 370 to Jammu and Kashmir.

Art. 371, Clause (1): Provision for the constitution and functioning of the Regional Committees of the Legislative Assembly of the State in the Andhra Pradesh and Punjab.

Art. 371, Clause (2): Provision for special responsibility of the Governor of State of Maharashtra or Gujarat.

Art. 372, Clause (2): Issue of order making adaptations and modifications of existing laws.

Art. 373 : Making of order in respect of persons under preventive detention in certain cases.

Art. 376, Clause (2): Determination of period for which existing High Court Judges in Part B States could continue to function.

Art. 392, Clause (1): Direction as to Modification, adaptation, etc., of Constitution for specified period in transitional stage for purpose of removing difficulties.

SECOND SCHEDULE

Para 9 (4): Prescribing travelling facilities for Judges of Supreme Court.

FIFTH SCHEDULE

Para 4 (1): Direction as to establishment of Tribes Advisory Council in certain States.

Para 5 (4): Assent to regulations made by Governor for the Government of a Scheduled Area.

Para 6 (2): Issue of orders regarding specification, alteration of bounrdaries, etc., of Scheduled Areas.

SIXTH SCHEDULE

Para 18 (1) (*a*): Approval to notification by Governor of Assam applying certain provisions of Sixth Schedule to certain tribal areas specified in Part B of Table in paragraph 20.

Para 18 (2): Administration of above part B Tribal Areas through agency of Governor of Assam till issue of notifications mentioned above.

Para 19 (3): Assent to regulations made by Governor of Assam for Government of Tribal Areas in Assam.

# APPENDIX II

The promulgation of orders (S.R.O. 925 and 926)[1] by the President of India under Article. 356 of the constitution are reproduced below by way of illustrating the provisions of that article.

S.R.O. No. 925.

'Whereas I, Rajendra Prasad, President of India, have received a report from the Governor of the State of Punjab and am satisfied :that a situation has arisen in which the Government of the State cannot be carried on in accordance with provisions of the constitution of India. Now, therefore, in exercise of the powers conferred by Art. 356......... and of all other powers enabling me in that behalf, I hereby—

(*a*) assume to myself as President of India all functions of the Government of the said State and all powers vested or exercisable by the Governor of that state;

(*b*) declare that the powers of the Legislature of the said State shall be exercisable by or under the authority of Parliament ; and

(*c*) make the following incidental and consequential provisions which appear to me to be necessary or desirable for giving effect to the objects of this Proclamation, namely : –

(i) in the exercise of the functions and powers assumed to himself by virtue of clause (*a*) of this Proclamation; it shall be lawful for the President to act to such extent as he thinks fit through the Governor of the said State;

[1]*Gazette of India*, Extraordinary, dated 20-6-1951. Part II—Section 3.

(ii) the operation of the following provisions of the constitution in relation to that state is hereby suspended, namely :—

So much of clause (2) of Article 151 as relates to the laying of the reports before the Legislature of the State, Articles 163 and 164, Clauses (3) and (4) of Article 166, Articles 167 and 169, Articles 174 to 186 (both inclusive), Clause (3) of Article 187 so far as it requires consultation with the Speaker of the Legislative Assembly, Articles 188 and 189, Articles 193 to 198 (both inclusive), Articles 200 and 201, so much of Clause (3) to Article 202 as relates to salaries and allowances of the Speaker and the Deputy Speaker of the Legislative Assembly, Articles 208 to 212 (both inclusive), the proviso to Clause (1) and the Proviso to Clause (3) of Article 213, so much of Clause (2) of Article 323 as relates to the laying of the report with a memorandum before the Legislative of the State, Article 382, Article 384, and paragraphs 6 and 8 of the Second Schedule.

(iii) While this Proclamation is in force, it shall, notwithstanding anything in any law relating to elections, be unnecessary for an election to be held for the purpose of filling any casual vacancy in the Legislative Assembly of the State

(iv) Any reference in the Constitution to the Governor shall in relation to the said State be construed as a reference to the President, and any reference therein to the Legilature or Legislative Assembly of the State shall, in so far as it relates to the functions and powers thereof, be construed as a reference to Parliament, and in particular, the references in Article 213 to the Governor and to the Legislature or Legislative Assembly of the State shall be construed as references to the President and to Parliament respectively:

Provided that nothing herein shall affect the provisions of Articles 153, Articles 155 to 159 (both inclusive), Article 299 and paragraphs 1 to 4 (both inclusive) of the Second Schedule, or prevent the President from acting under sub-clause (1) of

this clause to such extent as he thinks fit through the Governor of the said State.

(v) Any reference in the constitution to Acts or Laws of, or made by, the Legislature of the State shall be construed as including a reference to Acts or Laws made, in exercise of the powers of the Legislature of the State, by Parliament by virtue of this Proclamation, or by the President or other authority referred to in sub-clause *(a)* of clause (1) of Article 357 of the Constitution and the Punjab General Clauses Act, 1898 (Punjab Act I of 1898) and so much of the General Clauses Act, 1897 (X of 1897), as applies to State Laws, shall have effect in relation to any such Act or Law as if it were an Act of the Legislature of the State'.

S.R.O. 926

'In pursuance of sub-clause (1) of clause *(c)* on this, the 20th day of June, 1951, by the President under Article 356 of the Constitution of India, the President is pleased to direct that all the functions of the Government of the State of Punjab and all the powers vested in or exercisable by the Governor of that State under the constitution or under any Law in force in that State, which have been assumed by the President by virtue of clause *(a)* of the said Proclamation, shall subject to the superintendence, direction and control of the President, be exercised by the Governor of the said State'.

# மேற்கோள் நூற்பட்டியல்
## (Bibliography)


*Aggarwal, S. N.,* 'Gandhian Constitution of Free India'.

*Aggarwala, R. N.,* 'National Movement and Consititutional Development in India'.

*Banerjee, A. C.,* 'The Making of the Indian Constitution'.

*Banerjee, A. C.,* 'The Constituent Assem bly of India'.

*Basu, D. D.,* 'Commentary on the Constitution of India; Constitutional Assembly Debates (12 Vols.), Gazette Notification, Extraordinary, 1950 onwards'.

*Jennings, W. I.,* 'Cabinet Government'.

*Jennings, W. I.,* 'Some Aspects of the Indian Constitution'.

*Keith, A. B.,* 'British Cabinet System'.

*Misra, K. N.,* 'The President of the Indian Republic'. .

*Mukherjee, Hiren.,* 'India and Parliament'.

*Nehru, Jawaharlal.,* 'Discovery of India'.

*Manager of Publication, Government of India,* Dr. 'Radha-krishnan's Speeches and Writings'.

*Manager of Publication, 'Government of India,* Dr. Rajendra Prasad's Speeches'.

*Rao, K. V.,* 'Parliamentaiy Democracy of India'.

*Siwach, J. R.,* 'The Indian Presidencv'.

